ஸ்ரீ:

பேருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் தொள்ளாயிரத்தறுபது திருநக்ஷத்ரபூர்த்தி

நிவேத ஸமர்ப்பண

# ஸ்ரீராமாநுஜ பக்தஹஸ்த பூஷணம்

---

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் மஹாவித்வான்

அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் தொகுத்தது.



சேலம்–2, ஜெமினி ஆர்ட் பிரஸ்ஸில் அச்சிடப்பட்டது.

கிடைக்குமிடம்: க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்–3.

பிங்கள ஹூ சித்திரையில் செய்ய திருவாதிரை

---

24–4–1977

1977 ] [ விலை ரூ. 7–00

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.

எம்பெருமானர் தொள்ளாயிரத்தறுபது திருநக்ஷத்ரபூர்த்தி

நினைவு மலரான

# ஸ்ரீராமாநுஜ பக்தஹஸ்த பூஷணம்

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் மஹாவித்வான்

அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் தொகுத்தது.



சேலம்-2, ஜெமினி ஆர்ட் பிரஸ்ஸில் அச்சிடப்பட்டது.

கிடைக்குமிடம்: க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3.

பிங்கள ௵ சித்திரையில் செய்ய திருவாதிரை

24-4-1977

1977] [விலை ரூ. 7-00



ஸ்ரீ காஞ்சி ப்ரதிவாதி பயங்கரம் ஜகதாசார்ய

மஹாமஹோபாத்யாய பத்மவிபூஷண

ஸ்ரீமத் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின்

"வியாக்கியான வாசஸ்பதி"



ஸ்ரீ பெரும்பூதூர் எம்பெருமானார்



ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீமத் வேதாந்தராமாநுஜ மஹாதேசிகன்
( ஸ்ரீமத் திருக்குடந்தையாண்டவன் )

இந்த மலர் வெளியீட்டுக்கு
உதவி புரிந்த மஹான்



ஸ்ரீமான் T. S. ராஜம் அவர்கள்
( சேர்மென் T. V. S. கம்பெனிகள் )

பிங்களவாண்டு முடிவுவரையில் இடையிடையே
ஸ்ரீபாஷ்யார்த்த விசேஷங்களைக்கொண்ட மலர்கள்
வெளிவந்து கொண்டிருக்கும். P. B. A.

— ஸ்ரீரஸ்து. —

# இந்த பூஷணத்திலுள்ள விஷயங்களுக்குச்

## சுருக்கமான அட்டவணை.



எம்பெருமானார் திருவடிகளே சரணம்.



சிறு குறிப்பு ;— இந்த பூஷணநூல் ஸ்வல்ப அவகாசத்தில் ஐந்து அச்சுக்கூடங்களில் பதிப்பிக்கப்பட்டதாதலால் சில பல தவறுகள் ஏற்பட்டிருக்கும் ; அறிஞர் அடைவுபடுத்திக்கொள்ள வேணும். **P. B. A**

## பொதுத்தனியன்கள்

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணர்ணவம்.
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதாம் முநிம்.
லக்ஷ்மீ நாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்,
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்.

யோ நித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே,
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.

மாதாபிதா யுவதயஸ் தநயா விபூதி:
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்,
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரி யுகளம் ப்ரணமாமி மூர்த்நா.

பூதம் ஸரச்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந்,
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிச்ராந்
ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.

---

## ஸ்ரீராமாநுச நூற்றந்தாதியின் தனியன்கள்

முன்னை வினையகல மூங்கிற் குடியமுதன்
பொன்னங் கழற்கமலப் போதிரண்டும் — என்னுடைய
சென்னிக் கணியாகச் சேர்த்தினேன் தென்புலத்தார்க்கு
என்னுக் கடவுடையேன் யான்.

நயந்தரு பேரின்பமெல்லாம் பழுதென்று நண்ணினர்பால்
சயந்தரு கீர்த்தி யிராமானுசமுனி தாளிணைமேல்
உயர்ந்த குணத்துத் திருவரங்கத்தமு தோங்குமன்பால்
இயம்புங் கலித்துறையந்தாதி யோதவிசை நெஞ்சமே

சொல்லின் தொகைகொண் டுனதடிப்போதுக்குத் தொண்டுசெய்யும்
நல்லன்பரேத்து முன்நாமமெல்லா மென்றன் நாவினுள்ளே
அல்லும் பகலு மமரும்படிநல் கறுசமயம்
வெல்லும்பரம விராமாநுச விதென் விண்ணப்பமே.

ஸ்ரீரஸ்து :

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீராமானுஜ பக்தஹஸ்த பூஷணத்தில்

## இராமானுச நூற்றந்தாதி - பொழிப்புரையுடன்

1. பூமன்னுமாது பொருந்திய மார்பன் * புகழ்மலிந்த
பாமன்னுமாற னடியணிந் துய்ந்தவன் * பல்கலையோர்
தாம்மன்ன வந்த விராமாநுசன் சரணாரவிந்தம்
நாம்மன்னிவாழ * நெஞ்சே சொல்லுவோமவன் நாமங்களே.

ஓ மனமே! தாமரைப்பூவில் பொருத்தமுடையளாயிருந்த பிராட்டி அப்பூவை விட்டு வந்து பொருந்துகைக் குறுப்பான போக்யதையை யுடைய திருமார்பை யுடையனான பெருமானுடைய திருக்கல்யாண குணங்கள் நிறைந்த தமிழ்ப் பாசுரங்களிலே பற்றுடையவரான நம்மாழ்வாருடையதிருவடிகளை ஆச்ரயித்து உஜ்ஜீவித்தவரும் பலபல சாஸ்த்ரங்களை ஓதின மஹான்கள் நிலைபெறும்படி (இவ்வுலகில்) வந்தவதரித்தவருமான எம்பெருமானாருடைய திருவடித்தாமரைகளை நாம் ஆச்ரயித்து வாழ்வதற்குறுப்பாக அவ்வெம்பெருமானாரது திருநாமங்களையே ஸங்கீர்த்தநம் பண்ணுவோம். ... ... ... *

2. கள்ளார்பொழில் தென்னரங்கன் * கமலப்பதங்கள் நெஞ்சில்
கொள்ளாமனிசரை நீங்கி * குறையல் பிரானடிக்கீழ்
விள்ளாதவன்ப னிராமாநுசன் மிக்க சீலமல்லால்
உள்ளாதென்னெஞ்சு * ஒன்றறியே னெனக்குற்ற பேரியல்வே.

தேன் நிறைந்த சோலைகளையுடைய தென் திருவரங்கத்திலே பள்ளி கொள்ளும் பெருமானுடைய தாமரை போன்ற திருவடிகளைத் தமது நெஞ்சிலே வையாத மனிதர்களை விட்டொழிந்து திருமங்கை மன்னனுடைய திருவடிகளிலே என்றும் விட்டு நீங்காத பக்தியையுடையரான எம்பெருமானாருடைய சிறந்த சீல குணத்தைத் தவிர வேறொன்றையும் எனது நெஞ்சானது நினைக்க மாட்டாது; (இவ்வாறாக) ஸித்தித்தவிதொரு சிறந்த ஸ்வபாவத்திற்கு ஒரு காரணத்தையும் அறிகின்றிலேன். ... ... ... ... *

3. பேரியல்நெஞ்சே அடிபணிந்தே னுன்னை * பேய்ப்பிறவிப்
பூரியரோடுள்ள சுற்றம் புலர்த்தி * பொருவருஞ்சீர்
ஆரியன் செம்மை யிராமாநுசமுனிக் கன்புசெய்யும்
சீரியபேறுடையார் * அடிக்கீ ழென்னைச் சேர்த்ததற்கே.

மிகவும் கம்பீரமான மனமே; உன்னை வணங்குகின்றேன்; (எதற்காக வென்னில்;) ஆஸுரப் பிறப்பையுடையவர்களான நீசர்களோடு (எனக்கு இருந்த உறவைப் போக்கடித்து ஒப்பற்ற குணங்களையுடையவரும் சிறந்த அநுஷ்டாநமுடையவரும் (ஆச்ரிதரோடு) ருஜுவாகப் பரிமாறுந்தன்மை வாய்ந்தவருமான எம்பெருமானார் திறத்தில் பக்தி பண்ணுவதையே பரம புருஷார்த்தமாகவுடையவர்களான கூரத்தாழ்வான்போல்வாருடைய திருவடிகளின் கீழே (பரம நீசனு

யிருந்த) என்னைக் கொண்டு சேர்த்த மஹோபகாரத்திற்காகவே (உன்னை அடி பணிந்தேன்.) ... ... ... ... *

4. என்னைப்புவியி லொருபொருளாக்கி * மருள்சுரந்த
முன்னைப்பழவினை வேரறுத்து * ஊழி முதல்வனையே
பன்னப்பணித்த விராமானுசன் பரன் பாதமுமென்
சென்னித்தரிக்க வைத்தான் * எனக்கேதுஞ் சிதைவில்லையே.

காலம் முதலிய ஸகல பதார்த்தங்களுக்குக் காரண பூதனான எம்பெருமானையே (எல்லாரும் விவேகித்து அநுஸந்திக்கும்படி (ஸ்ரீபாஷ்யமுகத்தாலே) அருளிச்செய்த ஸர்வோத்க்ருஷ்டரான எம்பெருமானார் இந்தப்பூமியிலே (அபதார்த்தமாய்க் கிடந்த) என்னை ஒரு பதார்த்தமாக்கி அஜ்ஞான மூலகங்களாய் மிகவும் அநாதிகளான (எனது) பாவங்களை வேரற நீக்கித் தமது திருவடிகளையும் எனது தலையிலே நான் உகந்து தரிக்கும்படியாக வைத்தருளினார்; இவ்வளவு மஹாப்ரஸாதம் பெற்றேனான பின்பு) அடியேனுக்கு எவ்விதமான ஹாநியும் இனி உண்டாக வழியில்லை. ... ... ... ... *

5. எனக்குற்ற செல்வ மிராமானுசனென்று * இசையகில்லா
மனக்குற்றமாந்தர் பழிக்கில்புகழ் * அவன் மன்னியசீர்
தனக்குற்றவன்பரவன் திருநாமங்கள் சாற்றும், என்பா
வினக்குற்றங் காண்கில்லார் * பத்தியேய்ந்த வியல்விதென்றே.

'நமக்குப் ப்ராப்தமான ஸம்பத்து எம்பெருமானாரே' என்று அத்யவஸாயங் கொண்டிருக்க மாட்டாத துஷ்டஹ்ருதயர்களான மனிசர் (இந்நூலைப் பழிப்பர்களாகில் (அன்னவர்களுடைய பழிப்பே இதற்குப்) புகழாய்விடும்; அவ்வெம்பெருமானுடைய நித்யஸித்தமான கல்யாண குணங்களுக்குத் தகுதியான அன்பையுடையவர்களான மஹான்கள் இந்நூலானது பக்தியோடு கூடின ப்ரவ்ருத்தியை யுடையதென்று திருவுள்ளம்பற்றி அவ்விராமாநுசனுடைய திருநாமங்களைச் சொல்லுகின்ற என்னுடைய (இந்தப்) பாசுர மாலைகளிலுள்ள குற்றங்களைக் காணமாட்டார்கள். ... ... ... ... *

6. இயலும்பொருளு மிசையத் தொடுத்து * ஈன்கவிகளன்பால்
மயல்கொண்டு வாழ்த்து மிராமானுசனை * மதியின்மையால்
பயிலும்கவிகளில் பத்தியில்லாத வென் பாவிநெஞ்சால்
முயல்கின்றனன் * அவன்றன் பெருங்கீர்த்தி மொழிந்திடவே.

விலக்ஷணரான கவிகள் ப்ரீதியினாலே சப்தமும் அர்த்தமும் நன்கு பொருந்தும்படியாகக் கவனம்பண்ணி வ்யாமோஹம் தலையெடுத்துத் துதிக்கும்படி நின்ற எம்பெருமானாரை வருணிக்கின்ற பாடல்களிலே பக்தியற்றதான என்னுடைய பாபிஷ்டமான நெஞ்சினாலே அவ்வெம்பெருமானாருடைய அளவற்ற கீர்த்திகளைப் பேசுவதாக புத்தியில்லாமையினாலே ப்ரவர்த்திக்கின்றேன். ... ... *

7. * மொழியைக்கடக்கும் பெரும்புகழான் * வஞ்சமுக் குறும்பாம்
குழியைக்கடக்கும் நம் கூரத்தாழ்வான் சரண்கூடியபின் *
பழியைக்கடத்து மிராமானுசன் புகழ்பாடி அல்லா
வழியைக்கடத்தல் * எனக்கினி யாதும் வருத்தமன்றே.

வாய்கொண்டு வருணிக்க முடியாதபடி வாசாமகோசரமான பெரிய புகழையுடையவரும் கல்விச்செருக்கு, செல்வச்செருக்கு, குலச்செருக்கு என்னும்

மூவகைக் குறும்புகளாகிற படுகுழியைக் கடந்திருப்பவரும் நமக்கு நாதருமான கூரத்தாழ்வானுடைய திருவடிகளை நான் ஆச்ரயித்த பின்பு ஸர்வபாப நிவர்த்தகரான எம்பெருமானாருடைய நற்குணங்களைப்பாடி ஸ்வரூபத்திற்குச்சேராத தீய வழிகளைத் தப்பிப் பிழைக்கையானது அடியேனுக்கு இனிமேலுள்ள காலமெல்லாம் கஷ்டத்தும் ப்ரயாஸ ஸாத்யமன்று ; எளிதேயாம். ... ... *

**8.** வருத்தும் புறவிருள்மாற்ற * எம்பொய்கைப்பிரான் மறையின்
குருத்தின் பொருளையும் செந்தமிழ்தன்னையுங்கூட்டி * ஒன்றத்
திரித்தன் றெரித்த திருவிளக்கைத் தன்திருவுள்ளத்தே
யிருத்தும் பரமன் * இராமாநுசனெம் மிறையவனே.

வருத்தத்தை யுண்டு பண்ணக்கூடிய பாஹ்ய விஷயங்களைப்பற்றின அஜ்ஞானமாகிற இருளைப் போக்குவதற்காக நமது குலத்தலைவரான பொய்கையாழ்வார் முற்காலத்தில் வேதாந்தங்களிற் பதிந்து கிடக்கும் பொருள்களையும் செந்தமிழ்ச் சொற்களையுங்கூட்டி இரண்டையும் ஒன்றுசேர ஒருதிரியாக்கி ஜ்வலிக்கச் செய்த(முதல் திருவந்தாதியாகிற)திருவிளக்கைத் தனது திருவுள்ளத்தே வைத்துக் கொண்டிரா நின்ற மஹாவைபவசாலியான எம்பெருமானார் நமக்கு ஸ்வாமி. ... *

**9.** இறைவனைக்காணு மிதயத் திருள்கெட * ஞானமென்னும்
நிறைவிளக்கேற்றிய பூதத்திருவடி தாள்கள் * நெஞ்சத்
துறையவைத்தாளு மிராமாநுசன் புகழோதும் நல்லோர்
மறையினைக்காத்து * இந்தமண்ணகத்தே மன்ன வைப்பவரே.

ஸர்வஸ்வாமியான எம்பெருமானை ஸாக்ஷாத்கரிப்பதற்கு உபகரணமான ஹ்ருதயத்திலுள்ள அஜ்ஞானமாகிற அந்தகாரமானது நசிக்கும்படியாக ஞானமாகிற பூர்ண தீபத்தை ப்ரகாசிப்பித்தருளி இரண்டாந் திருவந்தாதியை அருளிச் செய்த பூதத்தாழ்வாருடைய திருவடிகளைத் தமது திருவுள்ளத்திலே சாச்வதமாக ஸ்தாபித்து (அவற்றையே) அநுபவிக்கின்ற எம்பெருமானாருடைய திவ்ய குணங்களை இடைவிடாது அநுஸந்திக்கின்ற விலக்ஷண புருஷர்கள்தாம் இப்பூமண்டலத்திலே வேதங்களை ரக்ஷித்து என்றைக்கும் அழிவில்லாதபடி ப்ரதிஷ்டாபனம் பண்ணவல்லவர்கள். ... ... ... ... *

**10.** மன்னிய பேரிருள் மாண்டபின் * கோவலுள் மாமலராள்
தன்னொடு மாயனைக் கண்டமை காட்டும் * தமிழ்த் தலைவன்
பொன்னடி போற்று மிராமாநுசற் கன்பு பூண்டவர்தாள்
சென்னியிற் சூடும் * திருவுடையா ரென்றுஞ் சீரியரே.

ஒருவராலும் போக்க முடியாதபடி நிலைத்து நின்ற (அஜ்ஞாநமாகிற பெருத்த இருளானது முற்பட்ட ஆழ்வார்களிருவரும் ஏற்றின திருவிளக்காலே) நன்றாக நீங்கின பின்பு, திருக்கோவலூரில் ஆயனாரைப் பிராட்டியோடுகூட தாம் ஸேவித்தபடியை ("திருக்கண்டேன்" இத்யாதி ப்ரபந்த முகத்தாலே) வெளியிட்டருளின தமிழ்க்குத் தலைவரான பேயாழ்வாருடைய அழகிய திருவடிகளைப் புகழுமவரான எம்பெருமானார் திறத்தில் பக்தியையுடையவர்களினது திருவடிகளை சிரோ பூஷணமாகக் கொள்ளுஞ் செல்வமுடையோர் தாம் என்றைக்கும் ஸ்ரீமான்கள்.

**11.** சீரியநான்மறைச் செம்பொருள் * செந்தமிழா லளித்த
பாரியலும்புகழ்ப் பாண்பெருமாள் * சரணாம் பதுமத்
தாரியல்சென்னி யிராமாநுசன் தன்னைச் சார்ந்தவர்தம்
காரியவண்மை * என்னால் சொல்லொணாதிக் கடலிடத்தே.

சிறந்த நால்வேதங்களிலுள்ள செவ்விய பொருள்களை அழகிய தமிழ்ப் பாசுரங்களினால் அருளிச்செய்தவரும் பூமியெங்கும் பொருந்திய புகழையுடையவருமான திருப்பாணாழ்வாருடைய திருவடிகளாகிற தாமரைப் பூவாலே அலங்கரிக்கப்பட்ட திருமுடியையுடையரான எம்பெருமானாரை ஆச்ரயமாகப் பற்றினவர்களுடைய அநுஷ்டாந வைலக்ஷண்யமானது கடல் சூழ்ந்த இப்பூமியில் (இப்படிப்பட்ட வைபவமுடையதென்று) என்னால் சொல்லித் தலைக்கட்ட முடியாதது.

12. இடங்கொண்ட கீர்த்தி மழிசைக்கிறைவன் * இணையடிப்போ
தடங்கும்இதயத் திராமாநுசன் * அம்பொற்பாத மென்றுங்
கடங்கொண் டிறைஞ்சும் திருமுனிவர்க்கன்றிக் காதல்செய்யாத்
திடங்கொண்ட ஞானியர்க்கே * அடியேனன்பு செய்வதுவே.

பூமியெங்கும் வியாபித்த கீர்த்தியையுடையரான திருமழிசைப்பிரானுடைய உபயபாதாரவிந்தங்கள் குடிகொண்டிருக்கப்பெற்ற திருவுள்ளத்தையுடையரான எம்பெருமானாருடைய மிகவும் அழகிய திருவடிகளை எக்காலத்திலும் இதுவே நமக்கு ஸ்வரூபமென்கிற புத்தியோடே ஆச்ரயிக்கையாகிற செல்வத்தையுடையரான மஹான்களுக்குத் தவிர மற்றவர்களுக்கு அன்பு பூண்டிராத மிக்க உறுதியுடையரான ஞானிகளுக்குத்தான் அடியேன் பக்தனாயிருப்பேன். ... *

13. செய்யும் பசுந்துளவத் தொழில்மாலையும் * செந்தமிழிற்
பெய்யும் மறைத்தமிழ்மாலையும் * பேராத சீரரங்கத்
தையன் கழற்கணியும் பரன்தாளன்றி ஆதரியா
மெய்யன் * இராமாநுசன் சரணேகதி வேறெனக்கே.

(தொண்டரடிப்பொடியாழ்வாராகிற தம்மாலே) செய்யப்பட்டதாய் பசுமை தங்கிய திருத்துழாய் மயமாய் வேலைப்பாடுகளையுடைத்தான பூமாலைகளையும் அழகிய தமிழ்ப்பாஷையிலே உண்டாக்கப்பட்டதாய் வேதஸத்ருசமான திருமாலை திருப்பள்ளியெழுச்சியென்கிற திவ்யப்ரபந்தங்களாகிற சொல்மாலைகளையும் நித்ய ஸித்தமான கல்யாண குணங்களையுடையரான ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளிலே சாத்தினவரான தொண்டரடிப்பொடியாழ்வாராகிற பெரியவருடைய திருவடிகளைத் தவிர மற்றொன்றையும் விரும்பாத ஸத்யசீலரான எம்பெருமானாருடைய திருவடிகளே அடியேனுக்கு விலக்ஷணமான ப்ராப்ய வஸ்துவாம். ... *

14. கதிக்குப்பதறி * வெங்கானமுங் கல்லுங் கடலுமெல்லாம்
கொதிக்கத் தவஞ்செய்யுங் கொள்கையற்றேன் * கொல்லிகாவலன்சொல்
பதிக்குங்கலைக் கவிபாடும் பெரியவர் பாதங்களே
துதிக்கும்பரமன் * இராமாநுச னென்னைச் சோர்விலனே.

குலசேகரப் பெருமாளாலே அருளிச்செய்யப்பட்டதாய் சாஸ்திரச் சொற்கள் அமையப்பெற்றதான பெருமாள் திருமொழிப்பாசுரங்களைப் பாடுகின்ற பெரியோர்களது திருவடிகளையே ஸ்தோத்ரம் செய்பவராய் உத்க்ருஷ்டரான எம்பெருமானார் என்னை விட்டு நீங்குகிறாரில்லை; (ஆதலால்) ப்ராப்ய லாபத்துக்காக விரைந்து அத்யுஷ்ணமான காடுகளிலும் மலைகளிலும் கடல்களிலும் நின்றுகொண்டு எல்லா அவயவங்களும் கொதிக்கும்படியாகத் தபஸ்ஸு பண்ணும் ஸ்வபாவத்தை விட்டொழித்தேன். ... ... ... *

15. சோராதகாதல் பெருஞ்சுழிப்பால் * தொல்லைமாலை யொன்றும்
பாராதவனைப் பல்லாண்டென்று காப்பிடும் * பான்மையன்தாள்
பேராத வுள்ளத் திராமாநுசன்றன் பிறங்கியசீர்
சாராமனிசரைச் சேரேன் * எனக்கென்ன தாழ்வினியே?

ஒருநாளும் குறைவுபடாத ப்ரேமத்தில் பெருஞ்சுழிப்படுகையாலே நித்ய னை எம்பெருமான் படியைச் சிறிதும் நிரூபியாமல் அவ்வெம்பெருமானை நோக்கி பல்லாண்டு பல்லாண்டென்று மங்களாசாஸநம் பண்ணுகையையே நித்ய ஸ்வ பாவமாகவுடையரான பெரியாழ்வாருடைய திருவடிகள் விட்டகலாத திருவுள் ளத்தை யுடையரான எம்பெருமானாருடைய மிக்க திருக்குணங்களை தங்களுக்கு அநுபாவ்யமாகக் கொள்ளாத மநுஷ்யர்களைப் பற்றமாட்டேன்; இப்படிப்பட்ட உறுதி பிறந்த பின்பு அடியேனுக்கு என்ன குறை? ... ... ... *

**16.** தாழ்வொன்றில்லா மறைதாழ்ந்து * தலமுழுதுங் கலியே
ஆள்கின்றநாள் வந்தளித்தவன் காண்மின் * அரங்கர்மௌலி
சூழ்கின்ற மாலையைச் சூடிக்கொடுத்தவள் தொல்லருளால்
வாழ்கின்றவள்ளல் * இராமாநுச னென்னும் மாமுனியே.

ஸ்ரீரங்கநாதனுடைய திருமுடியிலே சாத்தக்கடவதான பூமாலையைத் தனது திருக்குழலிலே அணிந்து வாஸிதமாக்கிக் கொடுத்தவளான ஆண்டா ளுடைய அவ்யாஜமான அருளாலே வாழ்பவரும் உதாரருமான ஸ்ரீராமாநுஜ முனியானவர் (எப்படிப்பட்டவரென்றால்) ஒரு குறையுமில்லாதிருந்த வேதமானது (குத்ருஷ்டிகளாலே) இழிவுபெற பூமியெங்கும் கலியே ஸாம்ராஜ்யம் பண்ணுகிற காலத்திலே இங்கே வந்தவதரித்து (அந்த வேதத்தை உத்தரிப்பித்து உலகத்தை) ரக்ஷித்தருளினவர். ... ... ... ... ... *

**17.** முனியார்துயரங்கள் முந்திலும் * இன்பங்கள் மொய்த்திடினுங்
கனியார்மனம் கண்ணமங்கை நின்றானை * கலைபரவும்
தனியானையைத் தண்டமிழ்செய்த நீலன்றனக் குலகி
னினியானை * எங்க ளிராமாநுசனை வந்தெய்தினரே.

ஸகல சாஸ்த்ரங்களாலும் துதிக்கப்படுகிற அத்விதீயமான மத்தகஜம் போன்ற திருக்கண்ண மங்கையிலே நிற்கும் பத்தராவிப் பெருமானைக் குறித்து இவ்வுலகில் ஸம்ஸார தாபஹரமான திவ்யப்ரபந்தத்தைச் செய்தருளின திருமங்கையாழ்வார் பக்கல் ப்ரேமமுடையவராய் எங்களுக்குத் தலைவரான எம்பெருமானாரை வந்து பணிந்த மஹான்கள் தாபத்ரயம் செறிந்தாலும் வருத்தப் படமாட்டார்கள்; ஸுகங்கள் செறிந்தாலும் களிப்படையமாட்டார்கள். ... *

**18.** எய்தற்கரிய மறைகளை * ஆயிர மின்தமிழாற்
செய்தற்குலகில் வருஞ் சடகோபனை * சிந்தையுள்ளே
பெய்தற்கிசையும் பெரியவர் சீரை யுயிர்களெல்லாம்
உய்தற் குதவும் * இராமாநுசனெம் உறுதுணையே.

அதிகரிக்க முடியாத (அளவற்ற) வேதங்களை இனிய தமிழாகிய ஆயிரம் பாசுரங்களினால் அருளிச்செய்வதற்காக இவ்வுலகில் வந்துதித்த நம்மாழ்வாரை தமது ஹ்ருதயத்தினுள்ளே த்யானிப்பதற்கு இணங்கின ஸ்ரீமதுரகவிகளுடைய ஜ்ஞாநாதி குணங்களை ஸகலாத்மாக்களும் உஜ்ஜீவிக்குமாறு உபகரித்தருளா நிற்கிற எம்பெருமானார் எமக்கு உற்றதுணை. ... ... ... *

**19.** உறுபெருஞ் செல்வமுந் தந்தையுந் தாயும் * உயர்குருவும்
வெறிதருபூமகள் நாதனும் * மாறன் விளங்கியசீர்
நெறிதருஞ் செந்தமிழாரணமே யென்றிந் நீணிலத்தோர்
அறிதரநின்ற * இராமாநுச னெனக் காரமுதே.

சிறந்த பெரிய ஸம்பத்தும் மாதா பிதாக்களும் ஸதாசார்யனும் மணம் மிக்க பூவைப் பிறப்பிடமாகவுடைய பெரிய பிராட்டியாருக்குக்கொழுநனான ஸர்வேச்வரனும் (ஆகிய எல்லாம்) நம்மாழ்வார் (தமக்கு) ப்ரகாசித்த பகவத் குணங்களின் அடைவே அருளிச்செய்த செந்தமிழ் வேதமேயென்று இப்பெரிய உலகிலுள்ளார் யாவரும் அறியும்படி நின்ற எம்பெருமானார் அடியேனுக்கு பரமபோக்யர். ... *

**20.** ஆரப்பொழில் தென்குருகைப்பிரான் * அமுதத் திருவாய்
ஈரத்தமிழி னிசையுணர்ந்தோர்கட்கு * இனியவர்தஞ்
சீரைப்பயின்றுய்யுஞ் சீலங்கொள் நாதமுனியை நெஞ்சால்
வாரிப்பருகும் * இராமாநுசனென்றன் மாநிதியே.

சந்தனச் சோலைகளையுடைய அழகிய திருக்குருகூரிலே (அவதரித்த) மஹோபகாரரான ஆழ்வாருடைய பரமபோக்யமான திருப்பவளத்தில் பிறந்த ஈரச் சொல்லாகிய திருவாய்மொழியின் இசையை அறிந்தவர்களுக்கு இஷ்டர்களாயிருப்பவர்களுடைய குணங்களை அப்யஸித்து ஸத்வத பெறும் சீலத்தையுடையரான நாதமுனிகளைத் தம் திருவுள்ளத்தாலே அபிநிவேசத்தோடு அனுபவிக்கின்ற எம்பெருமானார் எனக்கு அக்ஷயமான நிதி. ... ... ... *

**21.** நிதியைப்பொழியும் முகிலென்று * நீசர்தம் வாசல்பற்றித்
துதிகற்றுலகிற் றுவள்கின்றிலே னினி * தூய்நெறிசேர்
எதிகட்கிறைவன் யமுனைத் துறைவ னிணையடியாம்
கதிபெற்றுடைய * இராமாநுச னென்னைக் காத்தனனே.

பரிசுத்தமான அனுட்டானமுடைய யதிகளுக்கு தலைவரான ஆளவந்தாருடைய உபய பாதங்களாகிற ப்ராப்யத்தை பெற்று (அதனாலே) உலகத்தார்க்கெல்லாம் ஸ்வாமியாயிருக்கிற எம்பெருமானார் என்னை ரக்ஷித்தருளினார்; (ஆன பின்பு இனிமேல், "நிதிகளை வர்ஷிக்கிற மேகமே!" என்று ஸ்தோத்திரங்களைப் பண்ணிக்கொண்டு இவ்வுலகத்தில் நீசராயிருப்பவருடைய வாசலைப் பற்றி நின்று வருந்தமாட்டேன். ... ... ... ... *

**22.** கார்த்திகையானுங் கரிமுகத்தானும் * கனலும் முக்கண்
மூர்த்தியும் மோடியும் வெப்பும் முதுகிட்டு * மூவுலகும்
பூத்தவனேயென்று போற்றிட வாணன் பிழைபொறுத்த
தீர்த்தனையேத்தும் * இராமாநுச னென்றன் சேமவைப்பே.

ஸுப்ரஹ்மண்யனும் கணபதியும் (அவர்களுக்குத் துணையாய் வந்த) அக்நியும் சிவனும் துர்க்கையும் ஜ்வரதேவதையும் முதுகுகாட்டி ஓடிப்போன பின்பு (அநந்யகதியான பாணாஸுரனானவன்) "மூன்று உலகங்களையும் திருநாபிக் கமலத்திலே உண்டாக்கின பெருமானே!" (என்னைக் காத்தருள்) என்று போற்ற (அந்த) பாணாஸுரனுடைய அபராதத்தை க்ஷமித்தருளின பாவநனான ஸர்வேச்வரனை நித்யம் துதிக்கின்ற எம்பெருமானார் எனக்கு ஆபத்தநம்.

**23.** வைப்பாய வான்பொருளென்று * நல்லன்பர் மனத்தகத்தே
எப்போதும் வைக்கு மிராமாநுசனை * இருநிலத்தில்
ஒப்பாரிலாத வுறுவினையேன் வஞ்ச நெஞ்சில் வைத்து
முப்போதும் வாழ்த்துவன் * என்னாமிதுவவன் மொய்புகழ்க்கே?

விலக்ஷண பக்தியுடையவர்கள் "எம்பெருமானார்தாம் நமக்கு ஆபத்ரக்ஷகமான அக்ஷயதநம்" என்று கொண்டு தங்கள் ஹ்ருதயத்திலே எப்போதும்

த்யாநிப்பதற்கு விஷயமான எம்பெருமானாரை இந்தப் பெரிய வுலகத்திலே ஒப்பற்ற மஹாபாபியான அடியேன் (என்னுடைய) க்ருத்ரிமமான நெஞ்சிலே வைத்து ஸர்வகாலமும் ஏத்தா நின்றேன்; மிகப் பெரிய அவரை நீசனாகிய நான் வாழ்த்துகையாகிற இது அவ்வெம்பெருமானாருடைய சிறந்த கீர்த்திக்கு என்னாகுமோ? [அவத்யமாமோ?] ... ... ... ... *

**24.** மொய்த்தவெந் தீவினையால் பல்லுடல்தோறும் மூத்து * அதனால்
எய்த்தொழிந்தேன் முனநாள்களெல்லாம் * இன்று கண்டுயர்ந்தேன்
பொய்த்தவம் போற்றும் புலைச்சமயங்கள் நிலத்தவியக்
கைத்தமெய்ஞ்ஞானத்து * இராமாநுச னென்னும் கார்தன்னையே.

கீழ்க்கழிந்த அநாதிகாலமெல்லாம் பலபல சரீரங்கள் தோறும் ஆத்மாவை மொய்த்துக் கொண்டிருக்கிற அதிக்ரூரமான கர்மத்தாலே கிழத்தனம் வருமளவும் வாஸஞ்செய்து அத்தாலே மிக்க பரிதாபமடைந்தேன்; கபடமான அனுஷ்டானங்களை நடத்திப் போருகிற நீச மதஸ்தர்கள் இந்நிலவுலகத்திலே வேரற்றொழியும்படி நிரஸித்தருளின உண்மை ஞானமுடையரான எம்பெருமானாகிற காளமேகத்தை இன்று அடியேன் ஸேவிக்கப் பெற்று சிறந்தவனானேன். ... ... *

**25.** காரேய் கருணை யிராமாநுச * இக்கடலிடத்தில்
ஆரே யறிபவர் நின்னருளின்தன்மை * அல்லலுக்கு
நேரேயுறைவிடம் நான் நீயென்னை யுற்றபினுன்
சீரேயுயிர்க்குயிராய் * அடியேற்கின்று தித்திக்குமே.

மேகத்தையொத்த கருணையையுடைய எம்பெருமானாரே! அடியேன் துக்கங்களுக்கு நேரே வாஸஸ்தானமாயிருப்பவன்; இப்படிப்பட்ட அடியேனை தேவரீர் தாமாகவே ஸ்வீகரித்தருளின பின்பு தேவரீருடைய கல்யாண குணங்களே ஆத்மாவுக்குத் தாரகமாய் அடியேனுக்கு இன்று ரஸியா நின்றது; தேவரீருடைய க்ருபையின் ஸ்வபாவத்தை கடல் சூழ்ந்த இப்பூமண்டலத்தில் அறியக் கூடியவர்கள் ஆருளர்? ஆருமில்லை. ... ... ...

**26.** திக்குற்றகீர்த்தி யிராமாநுசனை * என்செய்வினையாம்
மெய்க்குற்றம்நீக்கி விளங்கிய மேகத்தை * மேவும் நல்லோர்
எக்குற்றவாள ரெதுபிறப் பேதியல்வாக நின்றார்
அக்குற்ற மப்பிறப்பு * அவ்வியல்வே நம்மையாட்கொள்ளுமே.

என்னாலே செய்யப்பட்ட வினையாகிற நிலைநின்ற தோஷங்களைப் போக்கி (இவனுடைய தோஷங்களைப் போக்கப் பெற்றோமென்னும் மகிழ்ச்சியாலே உஜ்வலரான பரம உதாரராய் திசைகள் தோறும் விரிந்த புகழை யுடையரான எம்பெருமானாரை பொருந்தியிருக்கின்ற விலக்ஷணர்கள் யாதொரு குற்றத்தையுடையராகவும் யாதொரு ஜன்மத்தை யுடையராகவும் யாதொரு சரிதையை யுடையராகவும் முன்பு நின்றார்களோ, அந்தக் குற்றமும் அந்த ஜன்மமும் அந்த சரிதையுமே நம்மை அடிமைப்படுத்திக் கொள்ளவற்று. ... ... ... *

**27.** கொள்ளக் குறைவற்றிலங்கி * கொழுந்துவிட் டோங்கியவுன்
வள்ளற்றனத்தினால் வல்வினையேன் மனம் நீபுகுந்தாய் *
வெள்ளைச் சுடர்விடுமுன் பெருமேன்மைக் கிழுக்கிதென்று
தள்ளுற்றிரங்கும் * இராமாநுசவென் தனி நெஞ்சமே.

எம்பெருமானாரே !, கொள்ளக் கொள்ளக் குறையாமல் தானே விளங்கி மேன்மேலும் இளகிப் பதித்து வளர்ந்திருப்பதான தேவரீருடைய ஔதார்ய குணத்தாலே மஹா பாபியான எனது நெஞ்சிலே (தேவரீருடைய பெருமை பாராதே) வந்து புகுந்தருளிற்று ; (வஸிஷ்டன் சண்டாள க்ருஹத்தில் புகுந்தாற்போலே) புகுந்தவிது. பரிசுத்தமாய் விளங்கா நின்றுள்ள தேவரீருடைய ப்ரபாவத்திற்கு அவத்யாவஹம் என்று எனது துணையற்ற நெஞ்சானது தளர்ந்து ஈடுபடா நின்றது.

28. நெஞ்சில்கறைகொண்ட கஞ்சனைக் காய்ந்தநிமலன் * நங்கள்
பஞ்சித்திருவடிப் பின்னைதன் காதலன் * பாதம்நண்ணா
வஞ்சர்க்கரிய விராமாநுசன் புகழன்றி யென்வாய்
கொஞ்சிப் பரவகில்லாது * என்னவாழ்வின்று கூடியதே.

நெஞ்சிலே கல்மஷத்தையுடையனாயிருந்த கம்ஸனை முடித்த ஹேய ப்ரத்யநீகனாய், ஆச்ரிதர் பக்கல் அபிமாநமுடையனாய் பஞ்சுபோல் மெல்லிய திருவடிகளை யுடையளான நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனான கண்ணபிரானுடைய திருவடிகளை ஆச்ரயியாத ஆத்மாபஹாரக் கள்வர்களுக்கு துர்லபரான எம்பெருமானாருடைய குணங்களை யொழிய (மற்றொன்றை) என் வாக்கானது குலாவி ஏத்தமாட்டாது ; இன்று (எனக்கு) நேர்ந்த வாழ்ச்சியானது ஆச்சரியமானது. ... ... ... ... *

29. கூட்டும் விதியென்று கூடுங்கொலோ ?* தென்குருகைப்பிரான்
பாட்டென்னும் வேதப்பசுந்தமிழ் தன்னைத் * தன்பத்தியென்னும்
வீட்டின்கண்வைத்த விராமாநுசன்புகழ் மெய்யுணர்ந்தோ
ரீட்டங்கள்தன்னை * என்னாட்டங்கள் கண்டின்ப மெய்திடவே.

நம்மாழ்வாருடைய பாசுரங்கள் என்று ப்ரஸித்தமாய் வேதரூபமாய் செந்தமிழாயிருக்கிற திருவாய்மொழியை தம்முடைய பக்தியாகிற மாளிகையிலே ஸ்தாபித்தருளிய எம்பெருமானாருடைய கல்யாண குணங்களை உள்ளபடி அறிந்திருக்குமவர்களுடைய கோஷ்டிகளை என் கண்களானவை ஸேவித்து ஸுகிக்கும் படியாக அமைக்கவல்ல (அவருடைய) க்ருபையானது என்றைக்கு வாய்க்குமோ?

30. இன்பந்தரு பெருவீடுவந் தெய்திலென் ?* எண்ணிறந்த
துன்பந்தரு நிரயம்பல சூழிலென் ?* தொல்லுலகில்
மன்பல்லுயிர்கட் கிறையவன் மாயனென மொழிந்த
அன்பனனகன் * இராமாநுச னென்னை யாண்டனனே.

'அநாதியான இவ்வுலகத்தில் நித்யரான எல்லா ஆத்மாக்களுக்கும் சேஷியானவன் விஷ்ணுவே, என்று (ஸ்ரீபாஷ்ய முகத்தாலே) அருளிச்செய்த பரமகாருணிகராய் நிர்த்தோஷரான எம்பெருமானார் என்னை அடிமைகொண்டருளினார் ; (ஆன பின்பு) ஆநந்தாவஹமான மோக்ஷம் வந்து ஸித்தித்தாலென்ன ? அளவற்ற துக்கங்களைக் தருகிற பல நரகங்கள் வந்து சூழ்ந்து கொண்டால்தான் என்ன ? ... ... ... ... *

31. ஆண்டுகள்நாள் திங்களாய் * நிகழ்காலமெல்லாம் மனமே !
ஈண்டுபல்யோனிகள் தோறுழல்வோம் * இன்றோ ரெண்ணின்றியே
காண்டகு தோளண்ணல் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப்
பூண்ட வன்பாளன் * இராமாநுசனைப் பொருந்தினமே.

நெஞ்சமே !, நாள்களாகவும் மாதங்களாகவும் வருஷங்களாகவும் (இப்படி) நடந்து செல்லுகிற ஸர்வ காலங்களிலும் திரண்டு பலவகைப்பட்ட யோனிகள் தோறும் தட்டித் திரிந்த நாம், இன்று ஒரு நினைவுமில்லாதிருக்கச் செய்தே (அகஸ்மாத்தாக) கண்ணாரக் காணத்தக்க தோள்களையுடைய ஸ்வாமியான பேரருளாளனுடைய திருவடிகளில் அன்பு பூண்ட எம்பெருமானாரைச் சேரப் பெற்றோம். (என்ன பாக்கியம் !) ... ... ... *

**32.** பொருந்தியதேசும் பொறையுந்திறலும் புகழும் * நல்ல
திருந்தியஞானமுஞ் செல்வமுஞ் சேரும் * செறுகலியால்
வருந்திய ஞாலத்தை வண்மையினால் வந்தெடுத்தளித்த
அருந்தவன் * எங்க ளிராமாநுசனை யடைபவர்க்கே.

தரும நெறியைத் திரஸ்கரிக்கின்ற கலியினாலே துக்கப்பட்ட பூமியை தமது நிர்ஹேதுக க்ருபையாலே வந்து உத்தரித்து ரக்ஷித்தவரும் சரணாகதியென்கிற அரிய தபஸ்ஸை அநுஷ்டித்தவரும் எமக்கு ஸ்வாமியுமான எம்பெருமானாரை ஆச்ரயிக்குமவர்களுக்கு ஸ்வரூபாநுரூபமான தேஜஸ்ஸும் க்ஷமாகுணமும் ஜிதேந்த்ரியத்வமாகிற பலமும் கீர்த்தியும் பரம விலக்ஷணமான அறிவும் பக்தியாகிற ஸம்பத்தும் தானே வந்துசேரும். ... ... ... *

**33.** அடையார்கமலத் தலர்மகள் கேள்வன் * கையாழியென்னும்
படையொடு நாந்தகமும் படர்தண்டும் * ஒண்சார்ங்கவில்லும்
புடையார் புரிசங்கமு மிந்தப்பூதலம் காப்பதற்கென்று *
இடையே யிராமாநுச முனியாயின விந்நிலத்தே.

தளங்கள் நெருங்கிய தாமரைப் பூவிற் பிறந்த பெரிய பிராட்டியார்க்கு வல்லபனான எம்பெருமானுடைய திருக்கையிலே (விளங்காநின்ற) திருவாழியென்கிற திவ்யாயுதத்தோடே நாந்தகவாளும் ரக்ஷணத்தொழிலிலே பரந்திரா நின்ற கதையும் அழகிய ஸ்ரீசார்ங்கமென்கிற வில்லும் ‘ஒரு பக்கத்துக்குத் தானே ஆபரணமாய்ப் போரும்படியான அழகிய ஸ்ரீபாஞ்சஜந்யமும் (ஆக இப்பஞ்சாயுதாழ்வார்கள்) இந்தப் பூமியை ரக்ஷிக்கைக்காக இப்பூமண்டலத்திலே எம்பெருமானார் பக்கலிலே ஆயினர். ... ... ... *

**34.** நிலத்தைச் செறுத்துண்ணும் நீசக்கலியை * நினைப்பரிய
பெலத்தைச் செறுத்தும் பிறங்கியதில்லை * என்பெய்வினைதென்
புலத்தில் பொறித்த வப்புத்தகச்சும்மை பொறுக்கியபின்
நலத்தைப் பொறுத்தது * இராமாநுசன்தன் நயப்புகழே.

எம்பெருமானாருடைய கல்யாண குணங்களானவை பூலோகத்தை ஹிம்ஸித்துத் தின்கிற நீசனான கலிபுருஷனுடைய இவ்வளவென்று நினைக்க முடியாதபடி அளவற்றதான பராக்ரமத்தைத் தொலைத்தவளவிலும் பிரகாசிக்கவில்லை ; (பின்னை எப்போது பிரகாசித்தன ? என்னில் :) என்னாலே செய்யப்பட்ட பாவங்களை யமலோகத்திலே எழுதிவைத்த அந்தப் புஸ்தகக் கட்டுகளை கொளுத்திவிட்ட பின்பு விளக்கம் பெற்றன. ... ... ... *

**35.** நயவே னொருதெய்வம் நானிலத்தே * சிலமானிடத்தைப்
புயலே யெனக்கவி போற்றிசெய்யேன் * பொன்னரங்கமென்னில்
மயலேபெருகு மிராமாநுசன் மன்னு மாமலர்த்தா
ளயரேன் * அருவினையென்னை யெவ்வாறின் றடர்ப்பதுவே.

வேறொரு தெய்வத்தை விரும்பமாட்டேன் ; இவ்வுலகில் சில நீச மனிதர் களைக் குறித்து 'மேகம்போலே வர்ஷிக்கிற உதாரனே!' என்று (அறிவாதமாகச்) சொல்லி கவிகள் கட்டி ஸ்தோத்ரம் செய்யமாட்டேன் ; 'திருவரங்கம்' என்று சொன்னவாறே அளவற்ற வ்யாமோஹத்தை யடைகின்ற எம்பெருமானுருடைய பொருந்திய சிறந்த திருவடித் தாமரைகளை மறக்கமாட்டேன் ; (ஆனபின்பு) கொடிய பாவங்கள் என்னை இன்று முதலாக எப்படி ஆக்ரமிக்கக்கூடும்? ... *

36. அடல்கொண்ட நேமிய னாருயிர்நாதன் * அன்றாரணச்சொற்
கடல்கொண்ட வொண்பொருள் கண்டளிப்ப * பின்னுங் காசினியோர்
இடரின்கண் வீழ்ந்திடத்தானு மவ்வொண்பொருள் கொண்டவர்பின்
படருங்குணன் * எம்இராமாநுசன் படியிதுவே.

(ஆச்ரித விரோதிகளை அழிக்கவல்ல) மிடுக்கையுடைய திருவாழியை ஏந்தினவனும் ஸகல ஆத்மாக்களுக்கும் சேஷியான எம்பெருமான் அர்ஜுநனுக்கு ஸாரதியாயிருந்த அக்காலத்தில் வேதங்களாகிற கடலில் மறைந்து கிடந்த நல்ல அர்த்தங்களை ஆராய்ந்து கீதாமூலமாக) உபதேசிக்க அதற்குப் பின்பும் பூமியிலுள்ள வர்கள் ஸம்ஸார துக்கத்தில் அழுந்திக்கிடக்க (எம்பெருமானுகிற தாமும்) (முன்பு ஸர்வேச்வரனருளிச்செய்த) அந்தச் சிறந்த அர்த்தங்களைக்கொண்டு அந்த ஸம்ஸாரிகளைப் பின்தொடரும் சீலமுடையர் ; அஸ்மத் ஸ்வாமியான எம்பெருமானுருடைய ஸ்வபாவம் இது. ... ... *

37. படிகொண்ட கீர்த்தி யிராமாயணமென்னும் பத்திவெள்ளம் *
குடிகொண்ட கோயிலிராமாநுசன் குணங்கூறும் * அன்பர்
கடிகொண்ட மாமலர்த்தாள் கலந்துள்ளங் கனியுநல்லோ
ரடிகொண்டு கொண்டுகந்து * என்னையு மாளவர்க்காக்கினரே.

உலகமெங்கும் பரந்த புகழையுடைத்தான ஸ்ரீராமாயணமென்கிற பக்தி ஸமுத்திரம் நித்யவாஸம் பண்ணுகிற திவ்ய ஸ்தாநமாயிருக்கிற எம்பெருமானு ருடைய திருக்குணங்களைப் பேசுகின்ற பக்திமான்களுடைய மணம்மிக்குச்சிறந்த பாதாரவிந்தங்களில் நெஞ்சு பொருந்தி ஸ்நேஹித்திருக்கிற மஹாநுபாவர்கள் (இவ்வாத்ம வஸ்துவானது உடையவர்க்கு சேஷப்பட்டதென்கிற) மூலப்பொருளைத் தெரிந்து கொண்டு ஆதரித்து அடியேனையும் அவ்வெம்பெருமானுர்க்கு ஆட்படுத்தினுர்கள். ... ... ... ... *

38. ஆக்கியடிமை நிலைப்பித்தனை யென்னையின்று * அவமே
போக்கிப் புறத்திட்ட தென்பொருளாமுன்பு ?* புண்ணியர்தம்
வாக்கிற்பிரியா விராமாநுச நின்னருளின் வண்ணம்
நோக்கிற் றெரிவரிதால் * உரையாய்இந்த நுண்பொருளே.

(ஸ்வாமிந்!) (நெடுநாளாக அஹங்காரியாய்க்கிடந்த) என்னை இன்றைத் தினத்தில் ஒரு பொருளாக்கி சேஷத்வத்தில் நிலை நிறுத்தினீர் ; இன்று இப்படி செய்தருளின தேவரீர்) முற்காலமெல்லாம் வீணுகப்போக்கி வெளிவிஷயங்களிலே தள்ளி விட்டு வைத்தது என்ன நிமித்தமாக? (தேவரீரை இடைவிடாது அநுபவிக் கும்) பாக்கியசாலிகளுடைய வாக்கை விட்டுப்பிரியாத எம்பெருமானுரே! தேவரீருடைய திருவருளிருக்கும் பரிசு நோக்குமளவில் அறிய முடியாததாயிரா நின்றது ; இந்த ஸூக்ஷ்மமான விஷயத்தை தேவரீரே அருளிச்செய்யவேணும்

39. பொருளும் புதல்வரும் பூமியும் * பூங்குழலாருமென்றே
மருள்கொண் டிளைக்கும் நமக்கு நெஞ்சே !* மற்றுள்ளார்தரமோ ?
இருள்கொண்ட வெந்துயர்மாற்றித் தன்னீறில் பெரும்புகழே
தெருளுந் தெருள்தந்து * இராமாநுசன் செய்யும் சேமங்களே.

த்ரவ்யம் என்று சொல்லிக்கொண்டும் புத்திரர்கள் என்று சொல்லிக் கொண்டும் க்ஷேத்ரமென்று சொல்லிக்கொண்டும் அழகிய குழலையுடைய ஸ்திரீகள் என்று சொல்லிக்கொண்டும் (அர்த்த புத்திராதிகளையே விரும்பி) அறிவு கெட்டு வருந்திக் கொண்டு கிடக்கிற நமக்கு அஜ்ஞாநத்தோடு கூடிய க்ரூரமான துக்கங்களை போக்கடித்து தம்முடைய முடிவில்லாத சிறந்த கல்யாண குணங்களையே சிந்திக்கக் கடவதான ஞானத்தை அளித்தருளி எம்பெருமானார் செய்கிற க்ஷேமங்களானவை ஓ மனமே! மற்ற பேர்களுக்குச் செய்கிற மாதிரியோ ? [அல்ல ; விலக்ஷணம் என்றபடி] ... ... ... ... *

40. சேமநல்வீடும் பொருளுந் தருமமும் * சீரியநற்
காமமுமென்றிவை நான்கென்பர் * நான்கினுங் கண்ணனுக்கே
ஆமதுகாம மறம்பொருள் வீடிதற் கென்றுரைத்தான்
வாமனன் சீலன் * இராமாநுச னிந்தமண்மிசையே.

(அனைவர்க்கும்) க்ஷேம ரூபமான சிறந்த மோக்ஷம் அர்த்தமும் தர்மமும் மிகவுஞ் சிறந்த காமமும்-ஆக இப்படி சொல்லப்பட்டுள்ள இவை நான்கு புருஷார்த்தங்கள் என்று (வைதிகர்) கூறுவர்கள் இந்த நான்கு புருஷார்த்தங்களுள் காமமாவது எம்பெருமான் விஷயத்திலேயே உண்டாமது ; தர்ம அர்த்த மோக்ஷங்கள் மூன்றும் இந்தக் காம புருஷார்த்தத்திற்கு சேஷபூதங்கள் என்று வாமநாவதாரம் செய்த பெருமானோடு ஒத்த சீலத்தை யுடையரான எம்பெருமானார் இவ்வுலகத்தில் அருளிச்செய்தார்.

41. மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து * எங்கள் மாதவனே
கண்ணுறநிற்கிலும் காணகில்லா * உலகோர்க ளெல்லாம்
அண்ண லிராமாநுசன் வந்துதோன்றிய வப்பொழுதே
நண்ணரு ஞானந் தலைக்கொண்டு * நாரணற்காயினரே.

நமக்கு நாதனான திருமால்தானே இப்பூமியிலுள்ள (மநுஷ்யாதி) யோனிகள் தோறும் அவதரித்து, எல்லாருடைய கண்ணுக்கும் தன்னை இலக்காக்கிக் கொண்டு நின்ற விடத்திலும் (அவனை நம்முடைய நாதனென்று) காணமாட்டாதிருந்த இவ்வுலகத்தாரெல்லாரும் ஸர்வஸ்வாமியான எம்பெருமானார் இங்கே வந்தவதரித்தவுடனே பெறுதற்கரிதான ஞானம் அதிகரிக்கப்பெற்று ஸ்ரீமந்நாராயணனுக்கு சேஷப்பட்டனர்.

42. ஆயிழையார் கொங்கை தங்கும் * அக்காதலளற்றழுந்தி
மாயுமென்னாவியைவந்தெடுத்தா னின்று * மாமலராள்
நாயக னெல்லாவுயிர்கட்கும் நாத னரங்கனென்னுந்
தூயவன் * தீதிலிராமாநுசன் தொல்லருள் சுரந்தே.

லக்ஷ்மீபதியான பெரியபெருமாள் ஸகல ஆத்துமாக்களுக்கும் சேஷி என்று உபதேசிப்பவரும் பரமபரிசுத்தரும் எவ்வகைக் குற்றமுமில்லாதவருமான எம்பெருமானார், —(என்னசெய்தாரென்றால்) அழகிய ஆபரணங்களணிந்த ஸ்த்

களுடைய கொங்கைத்தடத்தில் தங்கும் ஆசையாகிற சேற்றிலே அழுந்தி நசித்துப் போகிற என் ஆத்மாவை இன்று நிர்ஹேதுக க்ருபை பண்ணிவந்து உத்தரித்தருளினர்.

43. சுரக்குந் திருவுமுணர்வும்* சொலப்புகில் வாயமுதம்
பரக்கு மிருவினை பற்றறவோடும்* படியிலுள்ளீர்!
உரைக்கின்றன னுமக்கியா னறஞ்சீறு முறுகலியைத்
துரக்கும் பெருமை* இராமாநுசனென்று சொல்லுமினே.

இப்பூமியிலுள்ளவர்களே! நான் உங்களுக்கு (ஒரு ஹிதம்) சொல்லுகிறேன்; (என்னவென்றால்) தர்மமார்க்கத்தில் சீற்ற முடைத்தாய் ப்ரபலமான கலியை ஓட்டிவிடும் எம்பெருமானாருடைய திருநாமத்தைச் சொல்லுங்கள்; (அப்படி சொன்னால்) பக்திப் பெருஞ்செல்வமும் ஞானமும் மேன்மேலும் பெருகும்; அந்தத் திருநாமத்தைச் சொல்லத் தொடங்கும் போதே வாக்கிலே அம்ருதரஸம் வியாபிக்கும்; மஹாபாபங்கள் அடியோடே போய்விடும்.

44. சொல்லார் தமிழொரு மூன்றும்* சுருதிகள் நான்குமெல்லை
யில்லா வறநெறியாவுந் தெரிந்தவன்* எண்ணருஞ்சீர்
நல்லார்பரவு மிராமாநுசன் றிருநாமம் நம்பிக்
கல்லாரகலிடத்தோர்* எதுபேறென்று காமிப்பரே.

விசாலமான இப்பூமியிலுள்ளவர்கள், சொல்நிரம்பிய இயல் இசை நாடகம் என்கிற ஒப்பற்ற முத்தமிழையும் நான்கு வேதங்களையும் கணக்கில்லாத தரும சாஸ்த்ரங்களையும் மற்றும் எல்லாக்கலைகளையும் அறிந்தவராயும், எண்ணமுடியாத குணங்களையுடையவராயும் ஸத்துக்களால் துதிக்கப்படுபவராயுமிருக்கிற எம்பெருமானாருடைய திருநாமத்தை (என் வார்த்தையை) நம்பிக்கற்கின்றார்களில்லை; (ஸ்ரீராமநுஜ நாமஸங்கீர்த்தநமே புருஷார்த்தமென்று அறியாதவர்களாய்) நமக்குப் புருஷார்த்தம் ஏது? என்று கேட்டுக்கொண்டிருக்கிறார்கள் ஐயோ!

45. பேறொன்றுமற்றில்லை நின்சரணன்றி* அப்பேறளித்தற்
காறொன்றுமில்லை மற்றச்சரணன்றி* என்றிப்பொருளைத்
தேறுமவர்க்குமெனக்கு முனைத்தந்த செம்மை சொல்லால்
கூறும்பரமன்று* இராமாநுச! மெய்ம்மை கூறிடிலே.

எம்பெருமானாரே! தேவரீருடைய திருவடிகளைத் தவிர உபேயம் வேறொன்றுமில்லை; தேவரீர் திருவடிகளாகிற அந்த உபேயத்தைத் தருவதற்கு அத்திருவடிகள் தவிர வேறு உபாயம் ஒன்றுமில்லை; என்கிற இவ்வுண்மைப் பொருளை தெளிவாகத் தெரிந்துகொண்டிருக்கிற மஹான்களுக்கும் (இந்தத் தெளிவு சிறிதுமில்லாத) எனக்கும் (வாசி பாராமல் ஸமமாகவே) தேவரீரைக் காட்டிக் கொடுத்த செம்மைக் குணமானது உண்மை சொல்லில் வாய்கொண்டு சொல்லத் தரமன்று [அநுபவித்து உருகுமித்தனை.]

46. கூறுஞ்சமயங்க ளாறுங்குலைய* குவலயத்தே
மாறன்பணித்த மறையுணர்ந்தோனை* மதியிலியேன்
தேறும்படியென் மனம்புகுந்தானைத் திசையனைத்தும்
ஏறுங்குணனை* இராமாநுசனை யிறைஞ்சினமே.

மனம்போனபடி சொல்லிக்கொண்டிருக்கிற ஆறு பாஹ்ய மதங்களும் தலை மடக்கும்படி இப்பூமண்டலத்திலே நம்மாழ்வார் அருளிச்செய்த தமிழ் வேதத்தை கற்று அறிந்தவராயும் ஜ்ஞாநஹீநனான நானும் தெளியும்படியாக என் ஹ்ருதயத்திலே வந்து புகுந்தவராயும் எல்லா திக்குகளிலும் பரவிய திருக்குணங்களையுடையவராயுமிருக்கிற எம்பெருமானாரை வணங்கிறோம். ... ... *

**47.** இறைஞ்சப்படும் பரனீசனரங்கனென்று * இவ்வுலகத்
தறம்செப்புமண்ணலிராமாநுசன் * என்னருவினையின்
திறஞ்செற்றிரவும் பகலும்விடாதென்றன்சிந்தையுள்ளே
நிறைந்தொப்பறவிருந்தான் * எனக்காரும் நிகரில்லையே.

'எல்லாராலும் வணங்கத்தக்க பரதெய்வம் (எதுவென்றால்) ஈசனாகிய ஸ்ரீ ரங்கநாதனேயாம்' என்று இப்பூமண்டலத்திலே ஸாக்ஷாத் தர்மத்தை அருளிச்செய்யுமவராய் ஸர்வஸ்வாமியான எம்பெருமானார் என்னுடைய போக்கமுடியாத கர்மஸமூகத்தைப் போக்கி ஸர்வ காலத்திலும் என் ஹ்ருதயத்தினுள்ளே பரிபூர்ணராகி (இவ்விருப்புக்கு ஒப்பில்லாதபடி எழுந்தருளியிருக்கிறார்; இப்படிப்பட்ட அருளைப் பெற்ற எனக்கு ஒப்பாவார் ஆருமில்லை.

**48.** நிகரின்றிநின்றவென் நீசதைக்கு * நின்னருளின்கணன்றிப்
புகலொன்றுமில்லை யருட்குமஃதேபுகல் * புன்மையிலோர்
பகரும்பெருமை யிராமாநுசவினி நாம்பழுதே
அகலும் பொருளென் * பயனிருவோமுக்கு மானபின்னே.

மஹான்கள் பேசவேண்டும்படியான பெருமையையுடைய எம்பெருமானாரே! என்னுடைய ஒப்பற்ற தாழ்மைக்கு தேவரீருடைய க்ருபையினிடத்தில் தவிர வேறு எவ்விடத்திலும் ஒதுங்க இடமில்லை; தேவரீருடைய அந்த க்ருபைக்கும் (என்போல்வாருடைய) அந்தத் தாழ்மையே சரணம்; (ஆக இவ்வகையாலே) அடியேனால் தேவரீருக்குப் பயன், தேவரீரால் அடியேனுக்குப் பயன் என்று ஸித்தமானபின்பு இனிமேலும் வியர்த்தமாக பிரிந்திருக்கைக்குக் காரணம் என்ன? *

**49.** ஆனதுசெம்மையறநெறி * பொய்ம்மையறுசமயம்
போனதுபொன்றி இறந்ததுவெங்கலி * பூங்கமலத்
தேனதிபாய்வயல் தென்னரங்கன்கழல் சென்னிவைத்துத்
தானதில்மன்னும் * இராமாநுச னித்தலத்துதித்தே.

தாமரைப் பூக்களிலுண்டான மகரந்தமானது ஆறாகப் பெருகப்பெற்ற கழனிகளையுடைய ஸ்ரீரங்கத்திலே எழுந்தருளியிருக்கிற பெரிய பெருமாளுடைய திருவடிகளை சிரஸாவஹித்துக்கொண்டு தாம் அத்திருவடிகளிலேயே ப்ரவணராயிருக்கிற எம்பெருமானார் இப் பூமியிலே திருவவதரித்ததனால் ருஜுவான தர்ம மார்க்கமானது ஸத்தை பெற்றது; பொய்யே நிறைந்து கிடக்கின்ற அறுசமயங்களும் நாசமடைந்தன; கொடிய கலியுகமும் மாண்டது. ... ... ... *

**50.** உதிப்பனவுத்தமர் சிந்தையுள் * ஒன்னலர் நெஞ்சமஞ்சிக்
கொதித்திட மாறிநடப்பன * கொள்ளைவன்குற்றமெல்லாம்
பதித்தவென் புன்கவிப் பாவினம்பூண்டன பாவுதொல்சீர்
எதித்தலைநாதன் * இராமாநுசன்றன் னிணையடியே.

உலகமெங்கும் பரவின நித்ய கல்யாண குணங்களையுடையவரும் யதிகளுக்குத் தலையான நாயகருமான எம்பெருமானாருடைய திருவடியிணைகள் (எப்படிப்பட்டவை யென்றால்) உத்தமாதிகாரிகளுடைய திருவுள்ளங்களிலே ப்ரகாசிப்பவை ; ப்ரதிபக்ஷிகளுடைய நெஞ்சானது பயப்பட்டுப் பரிதபிக்கும்படி மாறிமாறியிட்டு நடக்குந் தன்மையுடையன ; அபாரமான வலிய தோஷங்கள் யாவும் அழுந்திக் கிடக்கிற என்னுடைய க்ஷுத்ரமான கவனமாகிய பாசுரங்களை ஸ்தோத்ரமாகப் பெற்றுக்கொண்டவை. ... ... ... *

**51.** அடியைத்தொடர்ந்தெழு மைவர்கட்காய் * அன்றுபாரதப்போர்
முடியப்பரிநெடுந் தேர்விடுங்கோனை * முழுதுணர்ந்த
அடியர்க்கமுத மிராமாநுசனென்னை யாளவந்திப்
படியிற்பிறந்தது * மற்றில்லைகாரணம் பார்த்திடிலே.

முற்காலத்தில் திருவடிகளை அவலம்பித்து செருக்கிக் கிளர்ந்த பஞ்சபாண்டவர்களுக்காக [பக்ஷபாதம் பூண்டு] பாரத யுத்தத்திலே (துரியோதநாதிகள்) மாளும்படியாக குதிரைபூண்ட பெரிய தேரை நடத்தின ஸர்வேச்வரனை (ஸ்வரூப ஸ்வபாவங்களில் ஒன்றுங் குறையாதபடி) பூர்த்தியாகத் தெரிந்துகொண்ட பாகவதர்களுக்கு பரமபோக்யரான எம்பெருமானார் இப் பூமண்டலத்தில் வந்து அவதரித்தது (எதற்காகவெனில்) அடியேனை ஆட்கொள்ளுகைக்காகவேயாம் ; ஆராய்ந்து பார்க்குமளவில் இது தவிர வேறொரு காரணமுமில்லை. ... ... ... *

**52.** பார்த்தானறுசமயங்கள்பதைப்ப * இப்பார்முழுதும்
போர்த்தான்புகழ்கொண்டு புன்மையினே னிடைத்தான்புகுந்து *
தீர்த்தானிருவினை தீர்த்தரங்கன்செய்ய தாளிணையோ
டார்த்தான் * இவையெம்மிராமாநுசன்செய்யு மற்புதமே.

(எம்பெருமானாரானவர்) (வேதபாஹ்யங்களான) ஆறுதர்சநங்களும் துடிக்கும்படியாக திருக்கண் செலுத்தினார் ; இப்பூமண்டலம் முழுவதையும் (தமது) கீர்த்தியினாலே மூடிவிட்டார் ; நீசனான அடியேன் பக்கலிலே தாமாகவே (நிர்ஹேதுக க்ருபையினால்) வந்து புகுந்து பெரிய பாவங்களை போக்கியருளினார் ; பாவங்களை போக்கினதுமன்றியில் ஸ்ரீரங்கநாதனுடைய அழகிய திருவடிகளோடே (என்னை) அந்வயிப்பித்தார் ; ஆகிய இக்காரியங்களெல்லாம் எமக்கு ஸ்வாமியான எம்பெருமானார் செய்தருளின ஆச்சரியச் செயல்களாம். ... ... *

**53** அற்புதன்செம்மை யிராமாநுசன் * என்னையாளவந்த
கற்பகங்கற்றவர் காமுறுசீலன் * கருதரிய
பற்பலுயிர்களும் பல்லுலகியாவும் பரனதென்னும்
நற்பொருள்தன்னை * இந்நானிலத்தேவந்து நாட்டினனே.

என்னை ஆட்கொள்வதற்காக அவதரித்த உதாரரும் ஞானிகள் ஆசைப்படும் படியான சீலகுணத்தை யுடையவரும் ஆச்சரிய சேஷ்டிதங்களை யுடைய வரும் ருஜுவாயிருக்குந் தன்மை பொருந்தியவருமான எம்பெருமானார் .— நினைக்கவும் முடியாதபடி எண்ணிறந்திருக்கிற ஆத்ம வர்க்கங்களும் (அவ்வாத்மாக்களுக்கு இருப்பிடமான) அளவிறந்த எல்லா வுலகங்களும் எம்பெருமானுடைய சொத்துக்களாம்—என்கிற ஸாரார்த்தத்தை இவ்வுலகத்திலே வந்தவதரித்து ஸ்தாபித்தருளினார். ... ... ... ... ... *

**54.** நாட்டிய நீசர் சமயங்கள் மாண்டன * நாரணனைக்
காட்டியவேதம் களிப்புற்றது * தென்குருகைவள்ளல்
வாட்டமிலா வண்டமிழ்மறைவாழ்ந்தது மண்ணுலகில்
ஈட்டியசீலத்து * இராமாநுசன் தன்னியல்வுகண்டே.

இப்பூலோகத்தில் மேன்மேலும் திரட்டிக்கொண்ட சீல குணத்தையுடைய ரான எம்பெருமானாருடைய ஸ்வபாவத்தை பார்த்து, (துஷ்ட யுக்திகளாலே) நிலை நிறுத்தப்பட்டிருந்த க்ஷுத்ர மதங்களெல்லாம் ஒழிந்தன; ஸ்ரீமந்நாராயணனைப் பிரதிபாதித்த வேதங்களானவை (நமக்கு இனி ஒரு குறையுமில்லையென்று) செருக் கடைந்தன; அழகிய திருக்குருகூரில் அவதரித்த உதாரரான ஆழ்வார் (அருளிச் செய்த) ஒரு குறையுமற்ற சிறந்த தமிழ் வேதமான திருவாய்மொழி வாழ்வு பெற்றது. ... ... ... *

**55.** கண்டவர் சிந்தைகவரும் கடிபொழில் தென்னரங்கன் *
தொண்டர்குலாவு மிராமாநுசனை * தொகையிறந்த
பண்டருவேதங்கள் பார்மேல்நிலவிடப் பார்த்தருளும்
கொண்டலை மேவித்தொழும் * குடியாமெங்கள் கோக்குலமே.

கணக்கில்லாத ஸ்வரப்ரதாநங்களான வேதங்கள் இப்பூமியிலே ஓங்கி வளரும்படி செய்தருளினவரும் பரம உதாரரும், கண்டவர்களின் நெஞ்சைக் கவர் கின்ற மணமிக்க சோலைகள் சூழ்ந்த தென்னரங்கத்திற்குத் தலைவரான பெரிய பெருமாளுக்கு அடிமைப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களால் கொண்டாடப்படுபவருமான எம்பெருமானாரை பொருந்தி ஆச்ரயிக்கிற குலம் எங்களுக்கு ஸ்வாமியாகக் கூடிய குலமாம். ... ... ... ... *

**56.** கோக்குலமன்னரை மூவெழுகால் * ஒருகூர்மழுவால்
போக்கியதேவனைப் போற்றும் புனிதன் * புவனமெங்கு
மாக்கிய கீர்த்தி யிராமாநுசனை யடைந்தபின், என்
வாக்குரையாது * என்மனம் நினையாதினி மற்றொன்றையே.

க்ஷத்ரியகுலத்து அரசர்களை இருபத்தொரு தலைமுறையளவும் கூர்மை பொருந்திய ஒரு மழுவாலே (பரசுராமாவதாரத்தில்) தொலைத்தருளின எம்பெரு மானை துதிக்கின்ற பரம பரிசுத்தரும், உலகமெங்கும் பரவின புகழை யுடையவரு மான எம்பெருமானாரை ஆச்ரயித்த பின்பு மேலுள்ள காலமெல்லாம் வேறு எந்த விஷயத்தையும் எனது வாக்கானது சொல்லமாட்டாது; எனது மனமும் நினைக்க மாட்டாது. ... ... ... ... *

**57.** மற்றொருபேறு மதியாது * அரங்கன் மலரடிக்கா
ளுற்றவரேதனக் குற்றவராக் கொள்ளுமுத்தமனை *
நற்றவர்போற்று மிராமாநுசனை இந்நானிலத்தே
பெற்றனன் * பெற்றபின் மற்றறியேனொரு பேதைமையே.

ப்ரயோஜநாந்தரங்களை கணிசியாமல் அழகிய மணவாளனுடைய திருவடித் தாமரைகளுக்கு அடிமைப்பட்டவர்களையே தமக்கு ஆத்ம பந்துக்களாக திருவுள்ளம் பற்றுகிற உத்தமபுருஷராயும் ப்ரபந்நர்களாலே புகழப்பட்டவராயுமிருக்கிற

எம்பெருமானாரை இந்த லோகத்திலே அடியேன் ஆச்ரயிக்கப்பெற்றேன்; ஆச்ரயித்த பின்பு (வேறு விஷயங்களை விரும்புகை முதலிய) எவ்வித அஜ்ஞாந கார்யமும் அறியமாட்டேன். ... ... ... ... *

58. பேதையர்வேதப் பொருளிதென்றுன்னி * பிரமநன்றென்
றோதிமற்றெல்லா வுயிருமஃதென்று * உயிர்கள்மெய்விட்
டாதிப்பரனோ டொன்றாமென்று சொல்லுமவ் வல்லலெல்லாம்
வாதில்வென்றான் * எம்மிராமானுசன் மெய்ம்மதிக்கடலே.

(வேதத்தைப் பிரமாணமாகக் கொள்ளாத) அவிவேகிகள் 'நாங்கள் சொல்லுகிற இதுதான் வேதத்தின் அர்த்தம்' என்று நிரூபித்துக்கொண்டு 'பரப்ரஹ்மமானது எல்லாவற்றினும் விலக்ஷணம்' என்று சொல்லி 'அந்த ப்ரஹ்மந்தவிர மற்ற எல்லா ஜீவராசிகளும் அந்த ப்ரஹ்மமே என்று சொல்லி 'ஜீவாத்மாக்கள் தேஹத்தை விட்டபின்பு ஸர்வகாரண பூதனான பரமபுருஷனோடே ஐக்கியத்தை யடைகின்றன' என்று சொல்லுகிற அந்த கோலாஹலங்களை யெல்லாம் தத்வஜ்ஞாநக்கடலாகிய ஸ்வாமி எம்பெருமானார் வாதத்தில் நிரஸித்து வெற்றி பெற்றார். ... ... ... ... *

59. கடலளவாய திசையெட்டினுள்ளும் * கலியிருளே
மிடைதரு காலத்திராமானுசன் * மிக்கநான்மறையின்
சுடரொளியால் அவ்விருளைத்துரந்திலனேல் * உயிரை
யுடையவன் நாரணனென்றறிவாரில்லை யுற்றுணர்ந்தே

நான்கு ஸமுத்ரங்களை எல்லையாகவுடைய எல்லாவிடங்களிலும் கலிபுருஷனாகிற அந்தகாரமே நெருங்கிக் கிடந்த காலத்தில் எம்பெருமானார் திருவவதரித்து நான்கு வேதங்களின் அளவற்ற தேஜஸ்ஸைக் கொண்டு அந்த கலிதோஷத்தைப் போக்கியிராமற் போனால் 'எல்லா ஆத்மாக்களுக்கும் சேஷி ஸ்ரீமந்நாராயணனே' என்று யாரும் தெரிந்து கொண்டிருக்கமாட்டார்கள். ... ... *

60. உணர்ந்தமெய்ஞ்ஞானியர் யோகந்தொறும் * திருவாய்மொழியின்
மணந்தருமின்னிசை மன்னுமிடந்தொறும் * மாமலராள்
புணர்ந்தபொன்மார்பன் பொருந்தும்பதிதொறும் புக்குநிற்கும்
குணந்திகழ்கொண்டல் * இராமானுசனெங் குலக்கொழுந்தே.

ஆத்மகுணங்களால் விளங்குபவரும் (ஔதார்யத்தில்) காளமேகத்தை ஒத்தவரும் எங்கள் குலத்துக்குத் தலைவருமான எம்பெருமானார் (எங்கே எழுந்தருளி யிருப்பரென்றால்) கற்றுணர்ந்த தத்வஞானிகளுடைய கோஷ்டிகளெங்கும், திருவாய்மொழியினுடைய பரிமளம் மிக்க இனிய இசையுள்ள இடங்களெங்கும் பிராட்டி நித்யவாஸம் பண்ணுகிற அழகிய மார்பையுடைய திருமால் எழுந்தருளியிருக்கிற திவ்ய தேசங்களெங்கும் எழுந்தருளியிருப்பர். ... ... *

61. கொழுந்துவிட்டோடிப் படரும்வெங்கோள்வினையால் * நிரயத்
தழுந்தியிட்டேனை வந்தாட்கொண்டபின்னும் * அருமுனிவர்
தொழுந்தவத்தோ னெம்மிராமானுசன் தொல்புகழ் சுடர்மிக்
கெழுந்தது * அத்தால் நல்லதிசயங்கண்ட திருநிலமே.

அருமையான நிஷ்டையையுடைய மஹான்களாலே ஸேவிக்கப் பெற்றவராயும் ப்ரபத்தியாகிற தபஸ்ஸையுடையவராயுமிருக்கிற ஸ்வாமி எம்பெருமானாருடைய நித்யமான கல்யாண குணங்கள் —, மேன்மேலும் அதிகமாகப் பெருகுகின்ற க்ரூரமாய் ப்ரபலமான துஷ்கர்மத்தாலே ஸம்ஸாரமாகிற நரகத்திலே அழுந்திக்கிடந்த என்னை வந்து ஆட்படுத்திக்கொண்ட பின்பும் ஒளி குன்றுதே முன்னினும் விசேஷமாக விளங்கா நின்றன ; அதைக்கண்டு விசாலமான இப்பூமண்டலம் மிக்க ஆச்சரியங் கொண்டது. ... ... ... ... *

**62.** இருந்தேனிருவினைப் பாசங்கழற்றி * இன்றுயானிறையும்
வருந்தேனினியெம் மிராமாநுசன் * மன்னுமாமலர்த்தாள்
பொருந்தாநிலையுடைப் புன்மையினோர்க்கொன்றும் நன்மைசெய்யாப்
பெருந்தேவரைப்பரவும் * பெரியோர்தம் கழல்பிடித்தே.

ஸ்வாமி எம்பெருமானாருடைய சிறந்த திருவடித்தாமரைகளில் சேராத ஸ்வபாவத்தையுடையவர்களான நீசர்களுக்கு ஒருவிதமான உபகாரமும் செய்யாத பெரிய பெருமானை போற்றுகின்ற ஆழ்வானுகிற மஹானுடைய திருவடிகளை இன்று ஆச்ரயித்தேனுன பின்பு புண்ணியம் பாவமென்று இரண்டு வகையான கரும பாசங்களினின்று விடுபட்டவனுனேன் ; இப்படி நிர்மலனுகப் பெற்ற அடியேன் இனிமேல் கொஞ்சங்கூட வருத்தப்படமாட்டேன். ... ... *

**63.** பிடியைத்தொடருங் களிறென்ன * யானுன்பிறங்கியசீர்
அடியைத் தொடரும்படி நல்கவேண்டும் * அறுசமயச்
செடியைத்தொடரும் மருள்செறிந்தோர் சிதைந்தோடவந்திப்
படியைத்தொடரும் * இராமாநுச மிக்கபண்டிதனே.

பாஹ்யமான ஆறு மதங்களாகிற புதர்களிலே படிவதற்குக் காரணமான அவிவேகம் நிறைந்த மூடர்கள் பங்கமடைந்து வெருவி ஓடும்படியாக இப்பூமியிலே வந்து அவதரித்து (நம்போல்வரை விஷயீகரிப்பதற்குப்) பின் தொடர்கின்ற மஹாபண்டிதரான எம்பெருமானுரே! யானைப் பேடையைப் பின்பற்றித் திரிகின்ற ஆண் யானைபோல அடியேன் ஸௌந்தரியம் முதலிய குணங்கள் விளங்குகின்ற தேவரீரது திருவடிகளைப் பின்பற்றும்படி கிருபை செய்தருளவேணும். *

**64.** பண்டருமாறன் பசுந்தமிழ் * ஆனந்தம் பாய்மதமாய்
விண்டிடவெங்கள் இராமாநுசமுனிவேழம் * மெய்ம்மை
கொண்டநல்வேதக் கொழுந்தண்டமேந்திக் குவலயத்தே
மண்டிவந்தேன்றது * வாதியர்காளுங்கள் வாழ்வற்றதே.

எங்களுக்கு விதேயமான ஸ்ரீராமாநுஜ முனியாகிற மத்தகஜமானது நம்மாழ்வார் இசைகளாலே அருளிச்செய்த செந்தமிழான திருவாய்மொழியில் விளைந்த ஸந்தோஷம் பெருகுமதநீராக ஒழுகப்பெற்று ஸத்யவாதியான நல்ல வேதமாகிற பெரிய தடியைத் தூக்கிக்கொண்டு இப்பூமண்டலத்திலே உங்களை நெருக்கிக்கொண்டு வந்து மேலிடா நின்றது ; துர்வாதிகளே! உங்களுடைய பிழைப்பு போயிற்று. ... ... ... ... *

**65.** வாழ்வற்றது தொல்லைவாதியர்க்கு * என்றும் மறையவர்தம்
தாழ்வற்றது தவம் தாரணிபெற்றது * தத்துவநூல்
கூழற்றது குற்றமெல்லாம்பதித்த குணத்தினர்க்கந்
நாழற்றது * நம்மிராமாநுசன் தந்தஞானத்திலே.

ஸ்வாமி எம்பெருமானார்! அருளின ஞானத்தினால் நெடுநாளாக இருந்த தூர்வாதிகளுக்கு வாழ்ச்சி அற்றுப் போயிற்று; வைதிகர்களுடைய குறை இனி ஒரு நாளும் இல்லாதபடியாயிற்று. பூமண்டலமானது பாக்கியம் பெற்றது; தத்வ பரமான சாஸ்திரங்கள் ஸந்தேஹமற நிச்சயமான பொருளைத் தெரிவிப்பவை யாயின. பல்வகைக் குற்றங்களும் நிறைந்த ஸ்வபாவத்தையுடைய ஜனங்களுக்கு அந்தக் குற்றங்கள் தீர்ந்தன, ... ... ... *

**66.** ஞானம்கனிந்த நலங்கொண்டு * நாடொறும் நைபவர்க்கு
வானங்கொடுப்பதுமாதவன் * வல்வினையேன்மனத்தில்
ஈனங்கடிந்த விராமாநுசன் தன்னையெய்தினர்க்கு அத்
தானங்கொடுப்பது * தன்தகவென்னும் சரண்கொடுத்தே.

திருமால் மோக்ஷம் அளிப்பது (எப்படிப்பட்டவர்களுக்கென்றால்) ஞானம் பக்திரூபமாகப் பரிபக்வமாகி அந்த பக்தியினால் நித்தியம் உருகுகிறவர்களுக்கே யாம்; மஹாபாபியான எனது ஹ்ருதயத்திலிருந்த கல்மஷங்களைப் போக்கடித்த எம்பெருமானார் தம்மைப் பற்றினவர்களுக்கு அந்த மோக்ஷ ஸ்தானத்தை அளிப்பது (எவ்விதமாக வென்றால்) தம்முடைய க்ருபையாகிற ஸ்தானத்தை (அவர் களுக்குக் கைம்முதலாகக்) கொடுத்து, [தமது திவ்ய க்ருபையாலே.] ... *

**67.** சரணமடைந்த தருமனுக்கா * பண்டுநூற்றுவரை
மரணமடைவித்தமாயவன் * தன்னை வணங்கவைத்த
கரணமிவையுமக்கன்றென்று இராமாநுச னுயிர்கட்கு
அரணங்கமைத்திலனேல் * அரணார்மற்றிவ்வாருயிர்க்கே.

தன்னைச் சரணம் பற்றின தர்ம புத்ரருக்காக முற்காலத்திலே துரியோதனன் முதலிய நூறு பேர்களை சாகும்படி செய்த எம்பெருமான் தன்னை வழிபடுவதற்காகவே ஏற்படுத்திவைத்த இந்திரியங்களாம் இவை; உங்களுக்கு உரிமைப் பட்டவையல்ல; இவ்வாறாக உபதேசித்து எம்பெருமானார் ஆத்மாக்களுக்கு ரக்ஷையைக் கற்பித்திலராகில் இந்த அருமையான ஆத்மாக்களுக்கு வேறு ரக்ஷகராவார் ஆர்? (ஆருமில்லை.) ... ... ... *

**68.** ஆரெனக்கின்று நிகர்சொல்லில் * மாயனன்றைவர் தெய்வத்
தேரினில்செப்பிய கீதையின்செம்மை * பொருள்தெரியப்
பாரினில்சொன்ன விராமாநுசனைப் பணியும்நல்லோர்
சீரினில்சென்றுபணிந்தது * என்னாவியும் சிந்தையுமே.

ஆச்சர்ய சேஷ்டிதங்களையுடைய எம்பெருமான் முற்காலத்தில் பஞ்ச பாண்டவர்களுடைய தெய்வத்தன்மை பொருந்திய தேரின்மீது (இருந்துகொண்டு) அருளிச்செய்த பகவத்கீதையினுடைய ஸ்வரஸமான அர்த்தத்தை (அனைவரும் எளிதாகத்) தெரிந்து கொள்ளும்படி இப்பூமியிலே (கீதா பாஷ்ய முகத்தாலே) அருளிச்செய்த எம்பெருமானாரை ஆச்ரயித்திருக்கிற விலக்ஷண புருஷர்களுடைய கல்யாண குணங்களிலே எனது ஆத்மாவும் மநஸ்ஸும் சென்று சேர்ந்து விட்டன; சொல்லுமளவில் இக்காலத்தில் எனக்கு ஆர் ஒப்பாவார்? ... ... *

**69.** சிந்தையினோடு கரணங்கள்யாவும் சிதைந்து * முன்னாள்
அந்தமுற்றாழ்ந்ததுகண்டு * அவையென்றனக் கன்றருளால்
தந்தவரங்கனும் தன்சரண்தந்திலன் தானதுதந்து *
எந்தையிராமாநுசன் வந்தெடுத்தனனின்றென்னையே.

ஸ்ருஷ்டிக்கு முற்காலத்தில் சிந்தையும் இந்திரியங்களுமெல்லாம் அழிந்து உபஸம்ஹாரத்தை யடைந்து அசேதந ப்ராயமாயிருப்பதைப் பார்த்து (அப்படி அசேதந ப்ராயராய்க் கிடந்தவர்களில் ஒருவனான) எனக்கு அந்த கரணகளேபரங்களை அக்காலத்தில் க்ருபையாலே உண்டாக்கின எம்பெருமானும் தனது திருவடிகளைக் காட்டிக் கொடுத்து உஜ்ஜீவிப்பிக்கவில்லை (அக்குறை நீங்க) ஸ்வாமி எம்பெருமானார் தாமாகவே வந்து அந்தத் திருவடிகளைத் தந்தருளி இன்று என்னை ஸம்ஸாரத்தில் நின்றும் உத்தரிப்பித்தார். ... ... ... *

70. என்னையும் பார்த்தென்னியல்வையும்பார்த்து * எண்ணில்பல்குணத்த
உன்னையும்பார்க்கில் அருள்செய்வதேநலம் * அன்றியென்பால்
பின்னையும்பார்க்கில் நலமுளதேயுன் பெருங்கருணை
தன்னையென்பார்ப்பர் * இராமாநுசா உன்னைச் சார்ந்தவரே.

எம்பெருமானாரே! (ஒரு குணமுமில்லாமல் குற்றமே நிறைந்திருக்கிற) என்னையும் நோக்கி (இனிமேலும் எவ்வித நன்மையும் ஸம்பாதித்துக் கொள்ள முடியாமலிருக்கிற) என்னுடைய தன்மையையும் நோக்கி எண்ணிறந்த பல திருக்குணங்களையுடைய தேவரீரையும் நோக்குமளவில் (இப்போதுபோல எப்போதும்) அருள் செய்திருப்பதே நல்லது; இதுவொழிய மேலும் ஆராயுமளவில். என்னிடத்தில் ஏதாவது நன்மையுண்டோ? (சிறிதும் இல்லை) (நன்மையொன்றுமில்லாவிடில் நம் அருள் செய்யலாகாதென்று திருவுள்ளம் பற்றினால்) தேவரீரை ஆச்ரயித்தவர்கள் தேவரீருடைய க்ருபையைப்பற்றி என்ன நினைப்பர்கள் (இளப்பமாக நினைப்பார்களோ.) ... ... ... *

71. சார்ந்ததென்சிந்தை யுன்தாளிணைக்கீழ் * அன்புதான்மிகவும்
கூர்ந்ததத் தாமரைத்தாள்களுக்கு * உன்தன் குணங்களுக்கே
தீர்ந்ததென்செய்கை முன்செய்வினைநீ செய்வினையதனால்
பேர்ந்தது * வண்மை யிராமாநுசா! எம்பெருந்தகையே.

ஔதார்யமுடையரும் எமக்கு ஸ்வாமியும் பெருந்தன்மையுடையருமான எம்பெருமானாரே! எனது நெஞ்சு தேவரீருடைய உபயபாதங்களின் கீழ் அமர்ந்துவிட்டது; பக்தியும் அந்தத் திருவடித் தாமரைகள் விஷயத்திலேயே மிகவும் அதிகரித்தது எனது செயலும் தேவரீருடைய திருக்குணங்களுக்கே அற்றுத் தீர்ந்தது. முன்னே செய்த பாவங்களெல்லாம் தேவரீர் செய்தருளின (கடாக்ஷமாகிற) காரியத்திலே தொலைந்து போயின. ... ... *

72. கைத்தனன்தீய சமயக்கலகரை * காசினிக்கே
உய்த்தனன்தூய மறைநெறிதன்னை * என்றுன்னியுள்ளம்
நெய்த்தவன்போ டிருந்தேத்தும் நிறைபுகழோருடனே
வைத்தனனென்னை * இராமாநுசன்மிக்க வண்மைசெய்தே.

எம்பெருமானார் தமது ஔதார்ய குணத்தை அதிகமாகக் காட்டி, துஷ்ட மதங்களிலிருந்துகொண்டு கலஹஞ்செய்கிறவர்களை ஒழித்துவிட்டார்; பரிசுத்தமான வேதமார்க்கத்தை பூமியிலே ஸ்தாபித்தருளினார்; என்று அநுஸந்தித்து நெஞ்சு கனிந்து அந்த ப்ரீதியோடே கூடியிருந்து (அவரை) ஸ்தோத்ரம் பண்ணுகிற புகழ் நிறைந்த மஹான்களோடே (என்னையும் ஒருவனாக எண்ணும்படி) என்னை வைத்தருளினார். ... ... ... *

73. வண்மையினாலும் தன்மாதகவாலும் * மதிபுரையும்
தண்மையினாலு மித்தாரணியோர்கட்கு * தான்சரணாய்
உண்மைநன்ஞான முரைத்தவிராமா நுசனையுன்னும்
திண்மையல்லாலெனக்கில்லை * மற்றோர்நிலை தேர்ந்திடிலே.

தம்முடைய ஔதார்ய குணத்தாலும் பரமக்ருபையாலும் சந்திரனை யொத்த திருவுளக் குளிர்ச்சியாலும் இப்பூமியிலுள்ளவர்களுக்கு தாமே ரக்ஷகராய்க் கொண்டு யதார்த்தமாய் விலக்ஷணமான ஞானத்தை உபதேசிக்கிற எம்பெருமானாரை சிந்திப்பதாகிற அத்யவஸாயமொன்று தவிர ஆராயுமளவில் அடியேனுக்கு வேறொரு அத்யவஸாயமில்லை. ... ... ... *

74. தேரார்மறையின் திறமென்று * மாயவன் தீயவரைக்
கூராழிகொண்டு குறைப்பது * கொண்டலனையவண்மை
ஏரார்குணத்தெம் மிராமாநுசனவ்வெழில்மறையில்
சேராதவரைச் சிதைப்பது * அப்போதொரு சிந்தைசெய்தே.

(இப்பாவிகள்) வேதஞ் சொல்லுகிற வழியை நிரூபித்தறிகிறதில்லையென்று பாவிகளை எம்பெருமான் தண்டிப்பது கூர்மையான தனது திருவாழியாலே; மேகம் போன்ற ஔதார்ய குணமுடையவரும் (மற்றும்பல) நல்ல குணங்களுடையவருமான ஸ்வாமி எம்பெருமானார் அந்த சிறந்த வேதத்தில் அந்வயியாதவர்களை பங்கப்படுத்துவது (எப்படியென்றால்) அப்போதைக்கப்போது ஒவ்வொரு யுக்தியைக் கொண்டாம். ... ... ... ... *

75. செய்த்தலைச்சங்கம் செழுமுத்தமீனும் * திருவரங்கர்
கைத்தலத்தாழியும் சங்கமுமேந்தி * நங்கண்முகப்பே
மொய்த்தலைத்துன்னை விடேனென்றிருக்கினும் நின்புகழே
மொய்த்தலைக்கும்வந்து * இராமாநுசவென்னை முற்றுநின்றே.

வயல்களில் சங்குகளானவை அழகிய முத்துக்களை உண்டாக்குமிடமான திருவரங்கமாநகரில் எழுந்தருளியிருக்கும் பெருமாள் தமது திருக்கையிலே திருவாழி திருச்சங்குகளைத் தரித்துக்கொண்டு நமது கண்ணெதிரில் வந்து நெருங்கி புத்தியைக் கெடுத்து 'உன்னை விடமாட்டேன்,' என்று இருந்தாலும் எம்பெருமானாரே! தேவரீருடைய திவ்ய குணங்களே என் பக்கல் வந்து சூழ்ந்துகொண்டு ஆகர்ஷிக்கின்றன. ... ... ... ... *

76. நின்றவண் கீர்த்தியும் நீள்புனலும் * நிறைவேங்கடப்பொற்
குன்றமும் வைகுந்தநாடும் குலவிய பாற்கடலும் *
உன்றனக் கெத்தனை யின்பந்தரு முன்னிணைமலர்த்தாள்
என்றனக்குமது * இராமாநுச இவை யீந்தருளே.

எம்பெருமானாரே! நிலைநின்ற பெரும் புகழும் அதிகமான நீர்ப்பெருக்கும் நிறைந்துள்ள திருவேங்கடமென்னும் அழகிய திருமலையும் ஸ்ரீவைகுண்டமாகிய திருநாடும் கொண்டாடத்தக்க திருப்பாற்கடலும் தேவரீருக்கு எவ்வளவு ஆனந்தத்தை விளைக்குமோ தேவரீருடைய உபய பாதாரவிந்தங்கள் எனக்கும் அவ்வளவு ஆநந்தத்தை யுண்டாக்கும்; இப்படிப்பட்ட திருவடிகளை அடியேனுக்குத் தந்தருளவேணும். ... ... ... ... *

**77.** ஈந்தனனீயாதவின்னருள் * எண்ணில்மறைக்குறும்பைப்
பாய்ந்தனனம்மறைப்பல்பொருளால் * இப்படியனைத்தும்
ஏய்ந்தனன் கீர்த்தியினா லென்வினைகளை வேர்பறியக்
காய்ந்தனன் * வண்மை யிராமானுசற்கென் கருத்தினியே.

(இதற்கு முன்பு ஒருவர்க்கும்) அருளாத விலக்ஷணமான க்ருபையை அடியேனுக்குச் செய்தருளினவரும் எண்ணிறந்த வேத விரோதி மதங்களை அந்த வேதங்களின் அர்த்தங்களையே கொண்டு கண்டித்தவரும், தமது கீர்த்தியாலே இப்பூமியெங்கும் வியாபித்தவரும் எனது கருமங்களை வேரோடே அறும்படி போக்கினவரும் ஔதார்யமே வடிவுகொண்டவருமான எம்பெருமானாருக்கு இன்னமும் (செய்யத்தக்கதாகத்) திருவுள்ளத்தில் ஏதேனுமுண்டோ? ... *

**78.** கருத்தில்புகுந்துள்ளில்கள்ளங்கழற்றி * கருதரிய
வருத்தத்தினால் மிகவஞ்சித்து * நீயிந்தமண்ணகத்தே
திருத்தித்திருமகள் கேள்வனுக்காக்கியபின் என்னெஞ்சில்
பொருத்தப்படாது * எம்மிராமானுச! மற்றோர் பொய்ப்பொருளே.

எம்பெருமானாரே! தேவரீர் நெஞ்சால் நினைக்க முடியாத பரிச்ரமங்கள் பட்டு என்னை நன்றாக ஏமாற்றி (எனது) நெஞ்சிலே வந்து புகுந்து உள்ளேயிருந்த ஆத்மாபஹார தோஷத்தைப் போக்கி சிக்ஷித்து இந்த லோகத்திலே திருமாலுக்கு ஆளாம்படி பண்ணின பின்பு (இதற்கு மாறான) வேறு எந்த தப்பு விஷயமும் என் மனத்தில் பொருந்தமாட்டாது. ... ... ... *

**79.** பொய்யைச்சுரக்கும் பொருளைத்துரந்து * இந்தப்பூதலத்தே
மெய்யைப்புரக்குமிராமானுசன்நிற்க * வேறுநம்மை
உய்யக்கொள்ள வல்லதெய்வமிங்கியாதென் றுலர்ந்துஅவமே
ஐயப்படா நிற்பர் * வையத்துள்ளோர் நல்லறிவிழந்தே.

இப்பூமியிலே பொய்யான விஷயத்தையே மேன்மேலும் வெளிப்படுத்துகிற (புறமதத்தவர்களின்) அர்த்தங்களைக் கண்டித்து ஸத்யத்தை ரக்ஷிக்கிற எம்பெருமானார் எழுந்தருளியிருக்கும்போது (இவரைக்கணிசியாமல்) இப்பூமியிலுள்ளவர்கள் 'நம்மை உஜ்ஜீவிக்கச் செய்யக்கூடிய வேறு ஏதாவது தேவதை இவ்வுலகில் உண்டோ?' என்று (விசாரித்துக்கொண்டு) மன வருத்தத்தாலே உடம்பு உலர்ந்து (எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்றிருக்கையாகிற) நல்ல ஞானம் பெறாமல் வீணாக ஸம்சயப்படா நின்றார்கள். ஐயோ! ... *

**80.** நல்லார்பரவு மிராமானுசன் * திருநாமம் நம்ப
வல்லார்திறத்தை மறவாதவர்கள் யவர் * அவர்க்கே
எல்லாவிடத்திலு மென்றுமெப் போதிலுமெத்தொழும்பும் *
சொல்லால்மனத்தால் கருமத்தினால் செய்வன் சோர்வின்றியே.

ஸத்துக்களாலே கொண்டாடப்படுகிற எம்பெருமானாருடைய திருநாமத்தை (தங்களுக்குத் தஞ்சமாக நம்பியிருக்க வல்லவர்களுடைய படிகளை மறவாமல் எப்போதும் சிந்திப்பவர்கள் யாரோ; அப்படிப்பட்ட ஸ்ரீராமாநுஜ பக்த பக்தர்களுக்கே ஸகல தேசங்களிலும் ஸகல அவஸ்தைகளிலும் ஸகல காலங்களிலும் ஸகலவித கைங்கரியங்களையும் மனமொழி மெய்களென்னும் த்ரிகரணங்களாலும் பிரியாதே யிருந்து செய்வேன். ... ... ... *

**81.** சோர்வின்றியுன்றன் துணையடிக்கீழ் * தொண்டுபட்டவர்பால்
சார்வின்றிநின்ற வெனக்கு * அரங்கன்செய்ய தாளிணைகள்
பேர்வின்றியின்று பெறுத்து மிராமாநுச வினியுன்
சீரொன்றிய கருணைக்கு * இல்லைமாறு தெரிவுறிலே.

தேவரீருடைய உபயபாதங்களின் கீழே சோராமல் அடிமைப்பட்டவர்கள் விஷயத்தில் பொருத்தமில்லாமலிருந்த எனக்கு இன்றைத்தினத்தில் பெரிய பெருமாளுடைய சிவந்த திருவடியிணைகளை ஒருகாலும் விட்டு நீங்காதபடி சிரோபூஷணமாகத் தந்தருளின எம்பெருமானாரே! இப்படியான பின்பு ஆராயுமளவில் சிறந்த திருவருளுக்கு ஒப்பு இல்லை. ... ... ... *

**82.** தெரிவுற்றஞானம் செறியப்பெறாது * வெந் தீவினையால்
உருவற்றஞானத் துழல்கின்ற வென்னை * ஒருபொழுதில்
பொருவற்ற கேள்வியனாக்கி நின்றானென்ன புண்ணியனோ
தெரிவுற்றகீர்த்தி * இராமாநுசனென்னும் சீர்முகிலே.

தெளிவான ஞானத்தைச் சேரப்பெறாமல் மிகவுங் கொடிதான கருமத்தாலே உபயோகமற்ற ஞானத்தை யுடையனாய் (ஒன்றிலும் நிலையில்லாமல்) திரிகிற என்னை ஒரு க்ஷணகாலத்தில் ஒப்பற்ற பஹுச்ருதனாக ஆக்கியருளினவரும் ப்ரஸித்தமான புகழையுடையவரும் (ஔதார்யத்தில்) சிறந்த மேகமென்னத் தக்கவருமான எம்பெருமானார் என்ன தார்மிகரோ? [ஒப்பற்ற தர்மிஷ்டரென்றபடி]

**83.** சீர்கொண்டு பேரறம்செய்து * நல்வீடு செறிதுமென்னும்
பார்கொண்ட மேன்மையர் கூட்டனல்லேன் * உன்பதயுகமாம்
ஏர்கொண்ட வீட்டை யெளிதினிலெய்துவ னுன்னுடைய
கார்கொண்ட வண்மை * இராமாநுசா! இது கண்டுகொள்ளே.

எம்பெருமானாரே! சமம் தமம் முதலிய குணங்களை யுடையராய் சிறந்த தருமமாகிய சரணாகதி யோகத்தை யநுஷ்டித்து பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தை அடைந்திடுவோம் என்றிருக்கிற ப்ரஸித்தமான ப்ரபாவத்தையுடைய ப்ரபந்நர்களுடைய கோஷ்டியில் நான் சேர்ந்தவனல்லேன்; தேவரீருடைய உபய பாதங்களாகிற பரம விலக்ஷணமான மோக்ஷத்தை ஸுலபமாக அடைந்திடுவேன்; (ஔதார்யத்தில்) மேகத்தை வென்றிருக்கிற தேவரீருடைய ஔதார்யம் இப்படிப்பட்டது; தேவரீரே இதனைக் கண்டு கொள்ளலாம். [அடியேன் சொல்லவேணுமோ?] ... ... ... ... *

**84.** கண்டுகொண்டே னெம்மிராமாநுசன்றன்னைக் காண்டலுமே *
தொண்டுகொண்டே னவன் தொண்டர்பொற்றாளில் *என் தொல்லை வெந்நோய்
விண்டுகொண்டே னவன் சீர்வெள்ளவாரியை வாய்மடுத் தின்று
உண்டுகொண்டேன் * இன்னமுற்றனவோதி லுலப்பில்லையே.

ஸ்வாமி எம்பெருமானாரை இன்று (உள்ளபடி) தெரிந்து கொண்டேன்; இப்படி தெரிந்து கொண்டவளவிலே அவரது பக்தர்களுடைய அழகிய திருவடிகளில் அடிமைப்பட்டேன்; (அதனால்) எனது பழைய காடுவினைகளை நீக்கிக் கொண்டேன். அவருடைய கல்யாண குண ப்ரவாஹமாகிற கடலை வாயார அநுபவிக்கப் பெற்றேன்; இப்படியாக இன்னமும் நான் பெற்ற நன்மைகளை சொல்லத்தொடங்கினால் (அதுக்கு) ஒரு முடிவு கிடையாது. ... ... *

85. ஓதியவேதத்தி னுட்பொருளாய் * அதனுச்சி மிக்க
சோதியைநாத னெனவறியா துழல்கின்ற தொண்டர் *
பேதைமைதீர்த்த விராமாநுசனைத் தொழும் பெரியோர்
பாதமல்லாலென்றன் னாருயிர்க்கு * யாதொன்றும் பற்றில்லையே.

அந்த வேதங்களின் முடிவாகிய உபநிஷத்துக்களிலே மிகவும் விளங்குபவனாயுமுள்ள ஸ்ரீமந்நாராயணனை ஸர்வ சேஷியென்று தெரிந்து கொள்ளாமல் கண்டவிடங்களிலும் அடிமை செய்து திரிகின்ற பாமரர்களுடைய அவிவேகத்தை போக்கடித்த எம்பெருமானாரை ஸேவிக்கின்ற மஹான்களுடைய திருவடிகள் தவிர எனது அருமையான ஆத்மாவுக்கு வேறு ஏதேனும் புகலிடமில்லை. ... *

86. பற்றா மனிசரைப்பற்றி * அப்பற்று விடாதவரே
உற்றாரென வுழன்றோடி நையேனினி * ஒள்ளியநூல்
கற்றார்பரவு மிராமாநுசனைக் கருது முள்ளம்
பெற்றாரெவர் * அவரெம்மை நின்றாளும் பெரியவரே.

உபயோகமற்ற மநுஷ்யர்களைப்பற்றி அந்தப்பற்றுதலைவிடாமல் அவர்களையே உறவினராகக்கொண்டு அவர்கள் பின்னே அலைந்து அவர்களிட்ட காரியங்களைச் செய்ய ஓடி இனிமேல் துவளமாட்டேன்; சிறந்த சாஸ்த்ரங்களைக் கற்றவர்களாலே கொண்டாடப்படுகிற எம்பெருமானாரை அநுஸந்திக்கும்படியான நெஞ்சையுடையோர் யாவரோ, அந்த மஹான்களே நம்மை சாச்வதமாக அடிமை கொள்ளும் மஹாத்மாக்கள். ... ... ... ... *

87. பெரியவர்பேசிலும் பேதையர் பேசிலும் * தன்குணங்கட்கு
உரியசொல்லென்று முடையவனென்றென்று * உணர்வில் மிக்கோர்
தெரியும்வண்கீர்த்தி யிராமாநுசன் மறை தேர்ந்துலகில்
புரியுநன்ஞானம் * பொருந்தாதவரைப் பொரும் கலியே.

ஞானசக்திகளால் நிறைந்த மஹான்கள் பேசினாலும் ஒன்றுந் தெரியாதவர்கள் பேசினாலும் தனது திருக்குணங்களுக்கு ஏற்ற சொற்களை எப்போதும் உடையவரென்று பலகாலுஞ் சொல்லி சிறந்த ஞானிகள் அநுஸந்திக்கிற திவ்ய கீர்த்தியையுடையரான எம்பெருமானார் வேதங்களை ஆராய்ந்து இவ்வுலகத்தில் உபதேசித்தருளின நல்ல ஞானத்தில் சேராதவர்களை கலிபுருஷன் பிடிப்பன். ... *

88. கலிமிக்க செந்நெல் கழனிக்குறையல் * கலைப்பெருமான்
ஒலிமிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து * அதனால்
வலிமிக்கசீய மிராமாநுசன் மறைவாதியராம்
புலிமிக்கதென்று * இப்புவனத்தில் வந்தமை போற்றுவனே.

நிலவளம் மிகுந்த செந்நெல்கழனிகளையுடைய திருக்குறையலூரில் அவதரித்த சாஸ்த்ர மென்னும்படியான திவ்யப்ரபந்தங்களை யருளிச் செய்த பெருமை வாய்ந்த திருமங்கையாழ்வாருடைய அதிசயித்த இசையையுடைய பெரிய திருமொழியை அநுபவித்து தமது திருவுள்ளம் பூரித்து அத்தால் மிடுக்கு அதிகரித்த சிங்கம் போன்ற எம்பெருமானார், வேதத்தில் துர்வாதங்கள் பண்ணுகிற குத்ருஷ்டிகளாகிற புலிகள் அதிகமாய்விட்டனவென்று (அவற்றைத் தண்டிப்பதற்காக இவ்வுலகில் அவதரித்த படியை) புகழ்ந்திடக்கடவேன். ... *

89. போற்றரும் சீலத்திராமாநுச * நின்புகழ் தெரிந்து
சாற்றுவனேல் அதுதாழ்வதுதீரில் * உன்சீர் தனக்கோர்
ஏற்றமென்றே கொண்டிருக்கிலுமென் மனமேத்தி யன்றி
ஆற்றகில்லாது * இதற்கென்னினைவா யென்றிட் டஞ்சுவனே.

புகழ்ந்து தலைக்கட்ட முடியாத சீல குணத்தையுடைய எம்பெருமானாரே; தேவரீருடைய திருக்குணங்களை உணர்ந்து பேசவேணுகில் (நீசனாகிய நான் பேசுகிறவது) (தேவரீருக்கு) அவத்யமாம்; அப்படி நான் பேசுவது தவிர்ந்தால் தேவரீருடைய திருக்குணங்களுக்கு மேன்மையாகும் என்று நான் தெரிந்து கொண்டிருந்தாலும் எனது நெஞ்சானது (தேவரீருடைய திருக்குணங்களைப்) புகழ்ந்தல்லது தரித்திருக்கமாட்டாது; இவ்விஷயத்திலே தேவரீர் என்ன நினைக்குமோ வென்று பயப்படுகின்றேன். ... ... ... *

90. நினையார் பிறவியை நீக்கும்பிரானை * இந்நீணிலத்தே
எனையாள வந்த விராமாநுசனை * இருங்கவிகள்
புனையார்புனையும் பெரியவர் தாள்களில் பூந்தொடையல்
வனையார் * பிறப்பில் வருந்துவர்மாந்தர் மருள்சுரந்தே.

ஸம்ஸாரத்தை யொழிக்கும் உபகாரகராயும் இப்பெரிய பூமியிலே என்னை அடிமை கொள்வதற்கே அவதரித்தவராயுமுள்ள எம்பெருமானாரை சிந்தியாதவர்களாயும் (அவர் விஷயமாக) நல்ல பாடல்களைப் பாடாதவர்களாயும் ஏதோ பாக்கியத்தாலே) பாடல்களைப் பாடுகிற மஹான்களின் திருவடிகளில் புஷ்ப மாலைகளை ஸமர்ப்பியாதவர்களாயுமுள்ள மனிசர்கள் அஜ்ஞானம் அதிகமாகப் பெற்று ஸம்ஸாரத்திற் கிடந்து துன்பப்படுவர்கள். ... ... ... *

91. மருள் சுரந்தாகம வாதியர்கூறும் * அவப்பொருளாம்
இருள் சுரந்தெய்த்த வுலகிருள்நீங்க * தன்னீண்டியசீர்
அருள் சுரந்தெல்லா வுயிர்கட்கும்நாத னரங்கனென்னும்
பொருள் சுரந்தான் * எம் மிராமாநுசன் மிக்கபுண்ணியனே.

(சிவன் சொன்ன) சைவ ஆகமத்தைப் பிரமாணமாகக்கொண்டு வாதம் பண்ணுகிற பாசுபதர்கள் அஜ்ஞானம் அதிகரிக்கப்பெற்று (சிவனுடைய பரத்துவ விஷயமாகச்) சொல்லுகிற நீசமான அர்த்தங்களாகிற இருள் மேலிட்டு (அதனால்) கெட்டுப்போன உலகத்தவர்களுடைய அஜ்ஞாநாந்தகாரமானது போகும்படியாக தம்முடைய விலக்ஷணமான க்ருபையைப் பெருக்கி 'எல்லாப் பிராணிகளுக்கும் ஸ்வாமி ஸ்ரீரங்கநாதனே' என்கிற அர்த்தத்தை வெளியிட்டவரான ஸ்வாமி எம்பெருமானார் சிறந்த புண்யாத்மா. ... ... ... *

92. புண்ணியநோன்பு புரிந்துமிலேன் * அடிபோற்றி செய்யும்
நுண்ணருங்கேள்வி நுவன்றுமிலேன் * செம்மைநூற் புலவர்க்கு
எண்ணருங்கீர்த்தி யிராமாநுச இன்று நீபுகுந்தென்
கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் * நின்றவிக்காரணம் கட்டுரையே.

நல்ல சாஸ்த்ரங்களைக் கற்றுக் கவி சொல்ல வல்லவர்களுக்கும் அளவிட முடியாத கீர்த்தியையுடைய எம்பெருமானாரே! புண்ணியமான ஒரு விரதத்தையும் அடியேன் அநுஷ்டிக்கவில்லை; தேவரீருடைய திருவடிகளை வாழ்த்துகைக்கு உறுப்பான ஸௌக்ஷ்மமாய் அருமையான சரவணத்தை (செய்யவேணுமென்று

வாயாலே) சொல்லவுமில்லை (இப்படியிருக்க;) இன்று அடியேனது கண்ணினுள்ளேயும் நெஞ்சினுள்ளேயும் புகுந்து எழுந்தருளியிருப்பதற்குக் காரண மருளிச் செய்யவேணும். ... ... ... ... ... *

93 கட்டப்பொருளை மறைப்பொருளென்று * கயவர் சொல்லும்
பெட்டைக்கெடுக்கும் பிரானல்லனே * என்பெருவினையைக்
கிட்டிக்கிழங்கொடு தன்னருளென்னு மொள்வா ளுருவி
வெட்டிக்களைந்த * இராமாநுச னென்னும் மெய்த்தவனே.

அடியேன் பக்கல் வந்து நெருங்கி தம்முடைய கிருபையாகிற அழகிய வாளை உறையில் நின்றுங் கழற்றி (அதனால்) எனது மஹா பாபங்களை வேரோடே அறுத்தொழித்த எம்பெருமானாரென்கிற மாமுனிவர் (எப்படிப்பட்டவரென்னில்) துஷ்டர்களான குத்ருஷ்டிகள் தப்பான அர்த்தங்களை வேதங்களின் அர்த்தமாகக் கொண்டு சொல்லுகிற பிரட்டுப் பேச்சுகளை கண்டித்தொழித்த மஹாநுபாவரன்றோ.

94. தவந்தருஞ் செல்வும் தகவுந்தரும் * சரியாப்பிறவிப்
பவந்தருந் தீவினை பாற்றித்தரும் * பரந்தாமமென்னும்
திவந்தரும் தீதிலி ராமாநுசன்தன்னைச் சார்ந்தவர்கட்கு
உவந்தருந்தேன் * அவன்சீரன்றி யானென்று முள்மகிழ்ந்தே.

எவ்வகை குற்றமும் அற்றவரான எம்பெருமானார் தம்மை வந்து அடைந்தவர்களுக்கு சரணாகதி நிஷ்டையைக் கொடுத்தருள்வர்; பக்தியாகிற செல்வத்தையும் தமது அருளையும் கொடுத்தருள்வர்; நிவர்த்திக்க முடியாத ஜந்ம ஸம்ஸாரங்களை உண்டாக்குகின்ற கொடுவினைகளை போக்கடித்தருள்வர்; பரமபதமென்று சொல்லப்படுகிற வானுலகத்தை அளிப்பர்; (ஆனபின்பு) அடியேன் அவ்வெம்பெருமானாருடைய திருக்குணங்களைத் தவிர்த்து வேறென்றையும் மனக்காதலோடே விரும்பி அநுபவிக்கமாட்டேன். ... ... *

95. உண்ணின் றுயிர்களுக் குற்றனவேசெய்து * அவர்க்குயவே
பண்ணும் பரனும் பரிவிலனும்படி * பல்லுயிர்க்கும்
விண்ணின் தலைநின்று வீடளிப்பானெம் மிராமாநுசன்
மண்ணின் தலத்துதித்து * உய்மறைநாலும் வளர்த்தனனே.

எல்லா ஆத்மாக்களுக்கும் அந்தர்யாமியா யிருந்துகொண்டு ஹிதமானவற்றையே நடத்திக்கொண்டு அவ்வாத்மாக்களுக்கு உஜ்ஜீவநத்தையே பண்ணிக்கொண்டிருக்கிற எம்பெருமானும் (ஆத்மாக்களிடத்தில் எம்பெருமானாரைப் போல்) ப்ரீதி யுடையவனல்லன் என்ன வேண்டும்படியாக ஸகல ஆத்மாக்களுக்கும் மோக்ஷத்தை அருள்வதற்காக ஸ்வாமி எம்பெருமானார் ஸ்ரீவைகுண்டத்தில் நின்றும் இப் பூதலத்திலே அவதரித்து எல்லார்க்கும் உஜ்ஜீவந ஹேதுவான நான்கு வேதங்களையும் குறைவின்றி வளரச் செய்தருளினர். ... *

96. வளரும்பிணிகொண்ட வல்வினையால் * மிக்க நல்வினையில்
கிளருந்துணிவு கிடைத்தறியாது * முடைத் தலையூன்
தளருமளவும் தரித்தும் விழுந்தும் தனிதிரிவேற்கு
உளரெம்மிறைவர் * இராமாநுசன் றன்னை யுற்றவரே.

அளவற்ற துன்பங்களை யுண்டாக்கவல்ல கொடிய கருமங்களாலே பரம தர்மமான சரணாகதியில் மஹா விச்வாஸம் கிடைக்காததனால் கெட்ட நாற்றங்களுக்கு இருப்பிடமான சரீரம் கட்டுக்குலையும் வரையில் ஒருவாறு தரித்திருந்தும் (சப்தாதி விஷயங்களிலே) போய் விழுந்தும் துணையின்றித் திரிகிற எனக்கு ஸ்வாமிகள் (யாரென்றால்) நம் எம்பெருமானாரை ஆச்ரயித்த மஹான்கள் இருக்கிறார்கள். ... ... ... ... ... *

97. தன்னையுற்றுட்செய்யும் தன்மையினேர் * மன்னு தாமரைத்தாள்
தன்னையுற்றுட்செய்ய வென்னையுய்த்தா னின்று * தன்தகவால்
தன்னையுற்றுரன்றித் தன்மையுற்று ரில்லை யென்றறிந்து
தன்னையுற்றுரை * இராமாநுசன் குணம் சாற்றிடுமே.

எம்பெருமானரானவர், தம்மைப்பற்றி யிருப்பாருண்டேயொழிய தம்மைப் பற்றி யிருப்பவர்களுடைய குண கீர்த்தனம் பண்ணும் ஸ்வபக்த பக்தர்கள் ஒருவருமில்லை யென்று திருவுள்ளம்பற்றி அடியேனை இன்றையதினத்தில் தமது அருளாலே (என்ன செய்தாரென்றால்) தம்மையடைந்து கைங்கரியம் பண்ணும் ஸ்வபாவமுடையவரான ஸ்வபக்தர்களுடைய ஒன்றோடொன்று சேர்ந்த திருவடித் தாமரைகளை நான் அடைந்து ஆட்செய்யும்படி வைத்தருளினர். ... ... *

98. இடுமேயினிய சுவர்க்கத்தில் * இன்னம் நரகிலிட்டுச்
சுடுமேயவற்றைத் தொடர்தரு தொல்லை * சுழல்பிறப்பில்
நடுமேயினிநம் மிராமாநுசன் நம்மை நம்வசத்தே
விடுமேசரண மென்றல் * மனமேநையல் மேவுதற்கே.

நம் எம்பெருமானர். உமது திருவடிகளே சரணமென்று நாம் சொல்லிவிட்டோமானல் (சிலர்க்கு) இனிதாகத் தோற்றுகிற ஸ்வர்க்கத்திலே நம்மைக் கொண்டு சேர்த்திடுவரோ? அல்லது நரகத்திலே கொண்டு தள்ளி தஹிக்கச் செய்வரோ? அந்த ஸ்வர்க்க நரகங்களைத் தொடர்ந்து கிடக்கிற அநாதியாயும் சுழன்று வருவதாயுமுள்ள ஜன்மத்திலே நிறுத்துவரோ மேலுள்ள காலங்களில் நம்மை நாம் போகிற வழியே விட்டு வைப்பரோ? (இவை செய்யமாட்டாரான பின்பு) ஓ நெஞ்சே! பேறு பெறும் விஷயமாக நீ கரையவேண்டா. ... *

99. தற்கச் சமணரும் சாக்கியப்பேய்களும் * தாழ்சடையோன்
சொற்கற்ற சோர்பரும் சூனியவாதரும் * நான்மறையும்
நிற்கக் குறும்புசெய் நீசரும்மாண்டனர் நீணிலத்தே.
பொற்கற்பகம் * எம்மிராமாநுச முனி போந்தபின்னே.

தர்க்கம் பண்ணுகிற சமணர்களும் பேய்ப்போலே பிடித்தபிடி விடாதே நிற்கிற பௌத்தர்களும் ருத்ரனுடைய சொல்லாகிய சைவாகமத்தைக் கற்ற தாமஸர்களான சைவர்களும் சூந்யவாதிகளும் நாலு வேதங்களும் விளங்கிக் கொண்டிருக்கச் செய்தே (அவற்றுக்குச் சேராத) அபார்த்தங்களைப் பண்ணுகிற குத்ருஷ்டிகளும் ஒழிந்தார்கள்; (எப்போது? என்றால்) சிறந்த கல்ப வ்ருக்ஷம் போலே உதாரரான ஸ்வாமி எம்பெருமானர் விசாலமான இப்பூமியிலே திருவவதரித்த பின்பு. ... ... ... ... *

100. போந்ததென்னெஞ்சென்னும்பொன்வண்டு * உனதடிப்போதிலொண்சீ
ராந்தெளிதேனுண் டமர்ந்திட வேண்டி * நின்பாலதுவே
ஈந்திடவேண்டு மிராமாநுச இதுவன்றி யொன்றும்
மாந்தகில்லாது * இனி மற்றென்றுகாட்டி மயக்கிடலே.

எம்பெருமானரே! எனது நெஞ்சாகிற அழகிய வண்டானது தேவரீருடைய திருவடித் தாமரைகளில் அழகிய குணங்களாகிற தேனைப்பருகி நித்யவாஸம் பண்ண விரும்பி தேவரீரிடத்தில் வந்து சேர்ந்தது; அத்திருகுணங்களையே அளித்தருளவேணும்; இத்திருகுணங்களைத் தவிர வேறொன்றையும் (நெஞ்சு) புஜிக்கமாட்டாது; இப்படியான பின்பு வேறொரு விஷயத்தைக் காட்டி மயக்கவேண்டா. ... ... ... ... ... *

**101.** மயக்கு மிருவினை வல்லியிற்பூண்டு * மதிமயங்கித்
துயக்கும் பிறவியில் தோன்றியவென்னை * துயரகற்றி
உயக்கொண்டு நல்கு மிராமாநுசவென்ற துன்னை யுன்னி
நயக்குமவர்க் கிதிழுக்கென்பர் * நல்லவரென்று நைந்தே.

“அஜ்ஞானத்தை விளைக்கவல்ல புண்ய பாபமென்னும் இரு கருமங்களாகிற விலங்கில் அகப்பட்டுக்கொண்டு அறிவு கெட்டு ப்ரமிக்கச் செய்கிற ஸம்ஸாரத்திலே பிறந்த அடியேனை துக்கங்களைப் போக்கி உஜ்ஜீவிக்கச் செய்து அருள் செய்கின்ற எம்பெருமானாரே!” என்று தேவரீருடைய பாவநத்வத்தைப் பேசுகையாகிற இது தேவரீரை அநுஸந்தித்து உருகி எப்போதும் ஆசையுடனிருப்பவர்களுக்கு தகாதது என்று ஸத்துக்கள் சொல்லுவர்கள். ... *

**102** நையும் மனமுன் குணங்களையுன்னி * என்னாவிருந்தெம்
ஐய னிராமாநுச னென்றழைக்கும் * அருவினையேன்
கையுந் தொழுங் கண்கருதிடுங்காணக் கடல்புடைசூழ்
வையத்திதனில் * உன்வண்மை யென்பாலென் வளர்ந்ததுவே.

(எம்பெருமானாரே!) எனது நெஞ்சானது தேவரீருடைய திருக்குணங்களைச் சிந்தித்து கரைகின்றது; எனது வாக்கானது நிலைநின்று எமக்கு ஸ்வாமியான எம்பெருமானாரே! என்று அழைக்கின்றது மஹாபாபியான என்னுடைய கைகளும் அஞ்ஜலி பண்ணுகின்றன; கண்களானவை (தேவரீரை) ஸேவிக்க ஆசைப்படுகின்றன; சுற்றிலும் கடல் சூழப்பெற்ற இப்பூமண்டலத்திலுள்ள தேவரீருடைய ஔதார்யகுணம் அடியேனிடத்து (இவ்விதமாக) வளர்ந்ததற்குக் காரணம் யாதோ? ... ... ... ... ... *

**103.** வளர்ந்தவெங்கோப மடங்கலொன்றாய் * அன்று வாளவுணன்
கிளர்ந்தபொன் னாகம் கிழித்தவன் * கீர்த்திப் பயிரெழுந்து
விளைந்திடுஞ் சிந்தை யிராமாநுச னென்றன் மெய்வினைநோய்
களைந்து நன்ஞானமளித்தனன் * கையிற் கனியென்னவே.

முன்னொரு காலத்தில் கடுமையான கோபம் மேலிடப்பெற்ற ஒரு நரசிங்க மூர்த்தியாகி வாளையுடைய ஹிரண்யாஸுரனது செருக்கினால் நிறைந்திருந்த பொன்போன்ற மார்பைக் கிழித்துப் போகட்டவனான எம்பெருமானுடைய திருப்புகழ்களாகிற பயிர் வளர்ந்து விளையப்பெற்ற திருவுள்ளத்தையுடையரான எம்பெருமானார் எனது உடலைப்பற்றியிருக்கிற வினைநோய்களை யெல்லா மொழித்து கையிலுள்ள நெல்லிக்கனிபோலே ஸ்பஷ்டமாக விலக்ஷணமான ஞானத்தைத் தந்தருளினார் ... ... ... ... *

**104.** கையிற்கனியென்னக் கண்ணனைக் காட்டித்தரிலும் * உன்றன்
மெய்யிற்பிறங்கிய சீரன்றி வேண்டிலன் யான் * நிரயத்
தொய்யிற்கிடக்கினும் சோதிவிண் சேரினும் இவ்வருள் நீ
செய்யிற்றரிப்பன் * இராமாநுச என்செழுங் கொண்டலே.

(ஔதார்யத்தில்) விலக்ஷணமான மேகம்போன்ற எம்பெருமானாரே! (தேவரீர்) எம்பெருமானை உள்ளங்கை நெல்லிக்கனிபோலே காட்டிக் கொடுத்தாலும் (தேவரீருடைய திருமேனியில் விளங்குகிற ஸௌந்தர்யம் முதலிய குணங்களைத் தவிர வேறொன்றிலும் நான் விரும்பமாட்டேன்; ஸம்ஸார நரகக் குழியில் அழுந்திக் கிடந்தேனாகிலும் சோதிமயமான பரம பதத்தை அடைந்தேனாகிலும் (தேவரீருடைய திருமேனியழகை அநுபவித்திருக்கைக்கு உறுப்பான) கிருபையை தேவரீர் செய்தருளினால்தான் (ஸம்ஸாரத்திலோ மோக்ஷத்திலோ) கால்பாவி நிற்பேன். ... ... ... ... ... *

**105.** செழுந்திரைப் பாற்கடல் கண்டுயில்மாயன் * திருவடிக்கீழ்
விழுந்திருப்பார் நெஞ்சில் மேவுநன்ஞானி * நல்வேதியர்கள்
தொழுந்திருப் பாத னிராமானுசனைத் தொழும்பெரியோர்
எழுந்திரைத் தாடுமிடம் * அடியேனுக் கிருப்பிடமே.

அழகிய அலைகளையுடைய திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிரா நின்ற ஸர்வேச்வரனுடைய திருவடிகளின் கீழே விழுந்து கிடக்கும் மஹான்களுடைய ஹ்ருதயத்திலே பொருந்தி யெழுந்தருளியிருக்கிற சிறந்த ஞானியாயும் நல்ல வைதிகர்களால் ஸேவிக்கப்பட்ட திருவடிகளை யுடையராயுமிருக்கிற எம்பெருமானாரை ஸேவிக்கின்ற மஹாத்மாக்கள் உடம்பு இருந்தவிடத்தில் இராமல் கிளர்ந்து கோஷித்துக்கொண்டு கூத்தாடும் இடம் அடியேன் வஸிக்குமிடமாகும். *

**106.** இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் * மாலிருஞ்சோலையென்னும்
பொருப்பிடம் மாயனுக்கென்பர் நல்லோர் * அவைதன்னொடும் வந்
திருப்பிடம் மாய னிராமானுசன் மனத்தின்றவன்வந்
திருப்பிடம் * என்ற னிதயத்துள்ளே தனக்கின்புறவே.

ஸர்வேச்வரனுக்கு வாஸஸ்தானம் (எவையென்றால்) பரமபதமும் திருவேங்கடமலையும் திருமாலிருஞ் சோலையென்கிற திருமலையும் (ஆகிய இவை யாம்) என்று ஸத்துக்கள் சொல்லுவர்கள். (இவற்றை இருப்பிடமாகவுடைய) ஸர்வேச்வரன் அந்த ஸ்ரீவைகுண்டம் முதலியவற்றோடே கூட வந்து எழுந்தருளி யிருப்பது எம்பெருமானாருடைய திருவுள்ளத்திலேயாம்; அவ்வெம்பெருமானார் தாம் இப்போது வந்து தமக்கு ஆநந்தமாக எழுந்தருளியிருப்பது அடியேனுடைய ஹ்ருதயத்தினுள்ளேயாம். ... ... ... ... *

**107.** இன்புற்றசீலத் திராமானுச * என்றுமெவ்விடத்தும்
என்புற்றநோ யுடல்தோறும் பிறந்திறந்து * எண்ணரிய
துன்புற்று வீயினும்சொல்லுவ தொன்றுண்டுன் தொண்டர்கட்கே
அன்புற்றிருக்கும்படி * என்னையாக்கியங் காட்படுத்தே.

ஆநந்த பூர்ணராய் யெழுந்தருளி யிருக்கிற ஸௌசீல்ய குணமுடைய எம்பெருமானாரே! தேவரீரிடத்தில் அடியேன் விஜ்ஞாபிக்க வேண்டிய விஷயம் ஒன்றுண்டு; (அஃது என்னவென்றால்) எலும்பிலே உறைந்து நலியக்கூடிய வியாதிகளுக்கு இருப்பிடமான சரீரங்களிலெல்லாம் பிறப்பதும் இறப்பதுமாகி எண்ணமுடியாத துன்பங்களை யநுபவித்து முடிந்து போனாலும் எல்லாக் காலங்களிலும் எல்லாவிடங்களிலும் தேவரீருடைய பக்தர்கள் விஷயத்திலேயே பக்தனா யிருக்கும்படி அடியேனைச் செய்தருளி அந்த பக்தர்களிடத்தில் (அடியேனை) ஆட்படுத்தி யருளவேணும். (இதுவே அடியேனுடைய வேண்டுகோள்) ... *

**108.** அங்கயல் பாய்வயல் தென்னரங்கன் * அணியாகமன்னும்
பங்கய மாமலர்ப் பாவையைப்போற்றுதும் * பத்தியெல்லாம்
தங்கியதென்னத் தழைத்துநெஞ்சே நந்தலைமிசையே
பொங்கிய கீர்த்தி * இராமானுசனடிப் பூமன்னவே.

ஓ மனமே! பக்தியெல்லாம் நம்மிடத்திலே குடிகொண்டதென்று சொல்லும்படியாக வீறுபெற்று, பரந்த புகழையுடையரான எம்பெருமானாருடைய திருவடித் தாமரைகள் நமது தலைமேலே நித்யவாஸம் பண்ணும்படியாக, (நாம் செய்ய வேண்டிய காரியம் என்னவென்றால்) அழகிய கயல் மீன்கள் பாய்கிற கழனிகள் சூழ்ந்த தென்னரங்கத்தில் உறையும் எம்பெருமானுடைய அழகிய திருமார்பிலே நித்யவாஸம் பண்ணுகிறவளாய் சிறந்த தாமரைப் பூவில் பிறந்த பதுமை போன்றவளான ஸ்ரீமஹாலக்ஷ்மியை வாழ்த்துவோம். ... ... *

ஸ்ரீ:

ஸ்ரீராமாநுஜ பக்தஹஸ்த பூஷணத்தில்

# 2. ஆர்த்திப் பிரபந்தம்

## மணவாள மாமுனிகள் அருளிச்செய்தது

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியார் இயற்றிய பொழிப்புரையுடன் கூடியது.

இந்த ஆர்த்திப்பிரபந்தம் மாமுனிகள் தமது சரமதசையிலே யருளிச்செய்ததென்றும், திருமேனியிலே நோவு சாத்தியிருந்து ததஸஹிஷ்ணுதையாலே அருளிச்செய்ததென்றுப் சிலர் சொல்லிப்போருவது தத்துவமன்று. நம்மாழ்வார் *பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமிந்நின்ற நீர்மை யினியா முறாமை* என்றும், *எண்ணாராத் துயர்விளைக்குமிவை யென்னவுலகியற்கை!-பணி கண்டாய்சாமாறே* என்றும் *இருள்தருமா ஞாலத்துளினிப்பிறவி யான் வேண்டேன்* என்றுமிங்ஙனே பல பாசுரங்கள் அருளிச்செய்தது எப்படி ப்ரக்ருதிமண்டலத்தில் ஜிஹாஸையினாலேயோ அப்படியேதான் மணவாளமாமுனிகளும் இப்பிரபந்தமருளிச்செய்தது. திருநாட்டுக்கெழுந்தருள்வதற்குப் பலவாண்டுகட்கு முன்னமே இது அருளிச்செய்தார்.

**109** வாழி யெதிராசன் வாழி யெதிராசன்
வாழியெதி ராசனென வாழ்த்துவார்—வாழியென
வாழ்த்துவார் வாழியென வாழ்த்துவார் தாளிணையில்
தாழ்த்துவார் விண்ணோர் தலை.

எம்பெருமானார்க்கு மங்களாசாஸனம் செய்பவர்கள் யாவரோ, அவர்களுக்கும் மங்களாசாஸனம் செய்பவர்கள் யாவரோ, அவர்களுக்கும் மங்களாசாஸனம் செய்பவர்கள் யாவரோ அவர்கள் நித்யஸூரிகளால் கொண்டாடப் படுவர்களென்கை.

**110** இராமா நுசாய நமவென்று சிந்தித்
திராமா னுசரோ டிறைப்போழு—திராமாறு
சிந்திப்பார் தாளிணையிற் சேர்ந்திருப்பார் தாளிணையை
வந்திப்பார் விண்ணோர்கள் வாழ்வு.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: என்று அநவரதம் சிந்தித்திருக்க ப்ராப்தம். அங்ஙனே சிந்தித்திருக்க இயலாவிடினும் அங்ஙனே சிந்தித்திருப்பாருடைய ஸஹவாஸமாவது செய்ய ப்ராப்தம். அப்படிப்பட்ட அத்யவஸாய முடையவர்கள் விண்ணோர்களினும் மேம்பட்டவராவர் என்றதாயிற்று. இரா — இராமல்; மாறு சிந்திப்பார் என்னவுமாம்.

**111** தந்தைநற்றாய் தாரம் தனயர் பெருஞ்செல்வம்
என்றனக்கு நீயே யெதிராசா—இந்தநிலை
கோராத விவ்வுடலை யின்றே யறுத்தருளப்
பாராத தென்னோ பகர்

"சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத்தாய் தந்தையு மவரே யினியாவாரே" என்று நம்மாழ்வார் எம்பெருமானையே எல்லாமுமாகக் கொண்டார்; "மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ் ஸர்வம் யதேவ" என்று நம்மாழ்வாரையே எல்லாமுமாகக் கொண்டார் ஆளவந்தார். அப்படியன்றிக்கே எம்பெருமானாரையே எல்லாமுமாகக் கொள்ள வேணுமென்பது மணவாளமாமுனிகளின் அத்யவஸாயம். ஆனாலும் இந்த அத்யவஸாயத்திற்கு இந்த ப்ராக்ருத தேஹத்தோடிருப்பு பிரதிபந்தகமாயிருத்தலால் இதனையுடனே தவிர்த்தருள வேணுமென்று இரக்கிறார்.

**112** இந்த வுடற்சிறைவிட் டெப்பொழுது யானேகி
அந்தமில்பே ரின்பத்து ளாகுவேன்—அந்தோ!
இரங்கா யெதிராசா என்னையினி யுய்க்கை
பரங்கா ணுனக்குணர்ந்து பார்.

"பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமான நிலைமை சிறைக் கூடத்திலே கிடந்து துவள்வதொக்கும். இப்படிப்பட்ட சிறையில் நின்று விடுபட்டு "அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை" என்னும்படியான பேற்றை அடியேன் எப்போது பெற்றவனுவேன்? எதிராசரே! தேவரீர் திருவுள்ள மிரங்காவிடில் இப்பேறு பாவியேனுக்குக் கிட்டுமோ? அடியேனுடைய உஜ்ஜீவனம் உம் அதீனமன்றோ என்றாராயிற்று. இரங்காய்—இரங்கியருள வேணும் என்றுமாம்.

**113** தன்புதல்வன் கூடாமல் தான்புசிக்கும் போகத்தால்
இன்புறுமோ தந்தை யெதிராசா—உன்புதல்வன்
அன்றோ வுரையாய்யான் ஆதலா லுன்போகம்
நன்றோ வெனையொழிந்த நாள்.

'தேசாந்தரகதனான புத்ரன் பக்கலிலே பித்ரு ஹ்ருதயம் கிடக்குமாபோலே' என்ற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியைத் திருவுள்ளம்பற்றி முன்னடிகள் அருளிச்செய்தபடி. ஸம்பந்நனான பிதாவானவன் புத்திரனோடு கூடியன்றோ போகங்களைப் புசித்து மகிழ்வன்; புத்திரனைவிட்டுப் பிரிந்து தான் தனியே ஒரு போகம் புசித்து மகிழமாட்டானன்றோ; அதுபோல, ஸ்வாமிந்! உமக்குப் புத்திரனாகிய அடியேனை விட்டுத் தேவரீர் தனியே "கட்டெழில் வானவர்போக முண்பாரே" என்னும்படியான போகத்தையனுபவித்துக் களித்திருக்க ப்ராப்தி யுண்டோ? என்னையுங் கூட்டிக் கொண்டு தனுநுபவஞ் செய்வதன்றோ பாங்கு என்றாராயிற்று.

**114** வேம்புமுற்றக் கைப்பு மிகுவதுபோல் வெவ்வினையேன்
தீம்புமுற்றுந் தேகமுற்றிச் செல்லுங்கால்—ஆப்பரிசால்
ஏற்கவே சிந்தித் தெதிராசா வவ்வுடலைத்
தீர்க்கவே யானவழி செய்.

ஸ்வாமிந்! வேம்பு முற்ற முற்றக் கசப்பு முற்றுவதுபோல அடியேனது தேஹமும் முற்ற முற்றப் பாவங்களே முற்றிவாராநின்றன. இது அஸஹ்யமாயிருத்தலால் இவ்வுடல் தொடர்பைத் தீர்க்குமுபாயம் தேவரீரே செய்தருளத் தக்கது.

115 அன்னை குடிநீ ரருந்திமுலை யுண்குழவி
தன்னுடைய நோயைத் தவிராளோ—என்னே!
எனக்கா யெதிராசா வெல்லாநீ செய்தால்
உனக்கது தாழ்வோ வுரை.

பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதகத்திலே "ருக்ணே தோகே ஸ்வ இவ ஜநநீ த்த்கஷாயம் பிபந்தீ" என்றருளிச் செய்கைதயடியொற்றி முன்னடிகள் அருளிச் செய்தபடி. தன் குழந்தையின் நோய்தீர்வதற்காகத் தாய் தானே கஷாயம் முதலியன குடித்தலாகிற ஔஷதஸேவை பண்ணுவதென்கிற ஒரு முறையுண்டாம். அதுபோல *இப்பிறவியென்னும் நோயிலேயகப்பட்டுத் துடிக்கின்ற வெனக்கு இந் நோய் தீரத்தக்க வுபாயங்களைத் தேவரீரே யனுட்டித்து அடியேனை நோய்தீர்ந்தவ னாகச் செய்தால் இது முறையாகாதோ? என்னைக் குழந்தையாகக் கொண்டிருக் கின்ற வுமக்கு இதுவன்றோ உற்றது என்றாராயிற்று: குடிநீர்—கஷாயம்.

116 தன்குழவி வான்கிணற்றைச் சார்ந்திருக்கக் கண்டிருந்தாள்
என்பதன்றோ வன்னைபழி யேற்கின்றாள்—நன்குணரில்
என்னாலே யென்னாச மேலு மெதிராசா
உன்னாலே யாமுறவை யோர்.

"ப்ரஜையைக் கிணற்றின் கரையில் நின்றும் வாங்காதொழிந்தால் தாயே தள்ளின ளென்னக்கடவதிறே" என்கிற ஸ்ரீவசனபூஷண ஸ்ரீஸூக்தியைத் திருவுள்ளம் பற்றி முன்னடிகள் அருளிச் செய்கிறபடி. கிணற்றின் கரையிலே குழந்தை யிருக்கின்ற தைக் கண்ட தாயானவள் அப்போதே யோடிச்சென்று கிணற்றின் கரையின் நின்றும் அக்குழந்தையை அப்பாற்படுத்திற்றிலளாகில், குழந்தை கிணற்றிலே விழுந்தவளவில் "தாய் அப்போதே சென்றெடுத்திருந்தால் குழந்தை விழுந் திருக்குமோ? கிணற்றின் கரையிலிருப்பதை இவள் அநுமதிபண்ணியிருக்கையாலே யன்றோ விழுந்தது; ஆனபின்பு இவளன்றோ தள்ளினாள்" என்று லோகப் பழிசொல் லும் அன்றியும், அந்தத் தாய் தானும் 'நானே யன்றோ தள்ளினேன்! என்று சொல்லிக் கதறுவள். ஆகவே, ஸ்வாமிந்! என்னுடைய நாசத்தை நானே விளைத்துக்கொண்டே னெனினும் உமக்கும் நமக்கு முண்டானவுறவை ஆராய்ந்து பார்க்குமிடத்து எனது நாசத்திற்கு தேவரீரே காரணமென்னும்படி பழி உமது தலையிலேயாகு மன்றோ? அங்ஙனாகாதபடி பார்த்துக்கொள்வீர் என்றாராயிற்று.

117 கூபத்தில் வீழுங் குழவியுடன் குதித்தவ்
வாபத்தை நீக்குமந்த வன்னைபோல்—பாபத்தால்
யான்பிறப்பே னேலுமினி யெந்தை யெதிராசன்
தான்பிறக்கு மென்னையுய்ப்ப தா.

இந்த ஸம்ஸார ஸாகரத்திலே கிடந்து துவள்கின்ற வும்மைக் கரையேற்றவேணு மானால் இந்த ஸம்ஸாரத்திற் பிறவாத வொருவர் அதற்கு சக்தராக வேணுமே யல்லது உம்மைப்போலவே ஸம்ஸாரக்கடலில் ஒருகால் விழுந்து துவண்டவரான ஸ்ரீ ராமாநுஜர் உம்மைக் கரையேற்ற எங்ஙனம் சக்தராவர்? என்று சிலர் கேட்ப

தாகக் கொண்டு அதற்கு விடையிறுக்கிறார் இப்பாசுரத்தினால். கிணற்றில் விழுந்த குழந்தையை யெடுத்துப் பிழைப்பிப்பதற்காகத் தாயும் உடன் குதித்தால் அந்தக் குதிப்பு எதற்காகவென்று நோக்கவேண்டாவோ? 'குழந்தையும் கிணற்றில் விழுந்தது, தாயும் கிணற்றில் விழுந்தாள், என்னவாசி?' என்று சொல்லுவாருண்டோ? அதுபோல பாபத்தினால் இப்பிறவிக்கடலில் விழுந்த, விழுகின்ற, விழப்போகின்ற என்போல்வாரை உத்தரிப்பிக்கைக்காகவன்றோ எதிராசர்தாமும் இப்பிறவிக் கடலிலே ஒக்கக் குதித்தது என்கிறார். நமது பிறவி கருமத்தினால்; அவருடைய அவதாரம் கருணையினால் என்றதாயிற்று. கூபம்—வடசொல்.

118 பூமகள்கோன் தென்னரங்கர் பூங்கழற்குப் பாதுகமாய்த்
தாமகிழுஞ் செல்வச் சடகோபர்—தேமலர்த்தாட்
கேய்ந்தினிய பாதுகமா மெந்தையிராமாநுசனை
வாய்ந்தெனது நெஞ்சமே! வாழ்.

எம்பெருமானுடைய திருவடி நிலையான நம்மாழ்வார்க்குத் திருவடி நிலையான எம்பெருமானாரை ஆச்ரயித்து உஜ்ஜீவிக்குமாறு நெஞ்சுபோல்வாரான தொண்டரை விளித்து அருளிச் செய்தாராயிற்று.

119 உன்னை யொழிய வொருதெய்வம் மற்றறியா
மன்னுபுகழ்சேர் வடுகநம்பி—தன்னிலையை
என்றனக்கு நீதந் தெதிராசா வெந்நாளும்
உன்றனக்கே யாட்கொள் ளுகந்து

“வடுகநம்பி ஆழ்வானையுமாண்டானையும் இருகரையரென்பர்” என்பது ஸ்ரீவசனபூஷண ஸ்ரீஸூக்தி. ஆழ்வார் திருவடிகளில் ஸ்ரீமதுரகவிகள் இருந்தாப்போலே வடுகநம்பிகள் 'ப்ராப்யப்ராபகங்களிரண்டும் எம்பெருமானார் திருவடிகளே என்றிருப்பர்' என்று ப்ரஸித்தம். கூரத்தாழ்வானும் முதலியாண்டானும் எம்பெருமானார் திறத்திலே மிகவும் ப்ரவணர்களாயிருந்தாலும் அவர்கள் பெருமாள் பக்கவிலுஞ் சென்று பல்காட்டுவது ப்ரவணராய்ப் போருவதாமிவ்வளவைக்கொண்டு அவர்களையும் வடுகநம்பி குறைகூறுவராம். ஆகவே வடுகநம்பியின் சரமபர்வ நிஷ்டை அத்விதீயமென்பது நாடறிந்தது. அவருடைய நிஷ்டாவிசேஷம் தமக்குமுண்டாம்படி கடாக்ஷித்தருள வேணுமென்று இப்பாட்டில் பிரார்த்திக்கிறபடி.

120 தேசந் திகழுந் திருவாய்மொழிப்பிள்ளை
மாசில் திருமலையாழ் வாரென்னை—நேசத்தால்
எப்படியே யெண்ணிநின்பால் சேர்த்தா ரெதிராசா
அப்படியே நீசெய் தருள்.

யதிராஜ விம்சதியில் “ஸ்ரீமந் யதீந்த்ர! தவ திவ்ய பதாப்ஜ ஸேவாம் ஸ்ரீசைலநாத கருணாபரிணாமதத்தாம்” என்றருளிச் செய்தது இப்பாசுரத்திற்குச் சேர அநுஸந்தேயம். ஸ்வாமிந்! தேவரீருடைய திருவடிகளை நானாகக் கண்டிலேன். அடியேனது ஆசார்யர் காட்டிக்கொடுத்தருளினதால் கண்டேனத்தனை. காட்டிக்கொடுத்த

வருடைய திருவுள்ளம் தேவரீரறியாததன்று; அது நிறைவேறுமாறு கடாக்ஷித்தருள வேணுமென்கிறார். தேசம்—தேஜஸ் என்றுமாம். தேஜஸ்வியான திருவாய்மொழிப் பிள்ளையென்க.

121 எதிராசன் வாழி யெதிராசன் வாழி
எதிராசன் வாழியென்றென் றேத்திச்—சதிராக
வாழ்வார்கள் தாளிணைக்கீழ் வாழ்வார்கள் பெற்றிடுவர்
ஆழ்வார்கள் தங்க ளருள்.

எம்பெருமானார் திருவடி ஸம்பந்தம் பெற்றார்க்கல்லது ஆழ்வார்களின் திருவருள் பலியாதென்கை.

122 அதிகார முண்டே லரங்க ரிரங்காரோ
அதிகார மில்லாதார்க் கன்றோ—எதிராசா!
நீயிரங்க வேண்டுவது நீயுமதி காரிகளுக்
கேயிரங்கி லென்செய்வோம் யாம்.

இராமானுச நூற்றந்தாதியில் *ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடொறும் நைப வர்க்கு வானங்கொடுப்பதுமாதவன்* என்று எம்பெருமான் போக்யர்களுக்கே அருள் செய்பவனென்று சொல்லி உடனே 'இராமானுசன் தன்னையெய்தினர்க்கு அத்தானங் கொடுப்பது தன் தகவென்னுஞ் சரண் கொடுத்து' என்று எம்பெருமானாருடைய க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யத்வம் அழகாகப் பேசப்பட்டது. அதைத் திருவுள்ளம் பற்றி இப்பாசுரமருளிச் செய்கிறபடி. அடியேன்போன்ற அநதிகாரிகளுக்கும் தேவரீர் அருள் செய்தாலன்றோ எம்பெருமானிற்காட்டில் தேவரீர்க்கு ப்ரஸித்தமாயுள்ள வைலக்ஷண்யம் தேறுவது என்றாராயிற்று. என் செய்வோம் யாம்—இனிமேல் அதிகாரம் ஸம்பாதித்துக்கொள்ள எம்மாலாகுமோ? என்றபடி. தேவரீரை விட்டு வேறொருவரை ஆச்ரயிக்கத் தானாகுமோ? என்றபடியுமாம்.

123 எம்பெரு மானார் திருவடிக ளேசரணம்
என்பதுவே நாவுரைக்கு மித்தாலென்—அன்பவர்பால்
இப்போ தளவும்யா னென்றுங்காண் கின்றிலேன்
எப்போதுண் டாவ தினி.

கீழ்ப்பாட்டில் அதிகாரமில்லாதவராகத் தம்மைச் சொல்லிக்கொண்டாரே அதை நிலைநாட்டுகிறாரிப்பாட்டில் 'எம்பெருமானார் திருவடிகளே சரணம்' என்றே ஓய்வின்றிச் சொல்லிக்கொண்டிருக்கின்றீரே, இதைவிட வேறு அதிகார ஸம்பத்து வேணுமோ? நீர் அதிகாரியேயாவீர்; அநதிகாரியல்லீர்—என்று சிலர் சொல்ல அதற்கு விடை கூறுகின்றார்; பொரிபுறந்தடவின உக்திமாத்திரமேயென்பக்கலுள்ளது; ப்ரேமங்கனிந்து சொல்லுகின்றிலேன். அப்படிச் சொன்னாலன்றோ அதிகார ஸம்பத்து உள்ளதாவது. இதுகாறும் ப்ரேமமுண்டானதாகத் தெரியவில்லை; இனிமேலா அது உண்டாகப்போகிறது! இல்லை ஆகவே அநதிகாரிகளிடத்துச் செல்லக்கூடிய தேவரீரது கருணையைச் செலுத்தியருள்வதே நன்றுஎன்றாராயிற்று.

124 ஆகாத தீதென் றறிந்தும் பிறர்க்குரைத்தும்
ஆகாத தேசெய்வ னுதலால்—மோகாந்தன்
என்றுநினைத தென்னை யிகழே லெதிராசா!
என்றுன் னடிசேர்வன் யான்.

இன்னது செய்யத் தகுந்தது; இன்னது செய்யத் தகாதது என்று அடியேன் விவேகித்தறிந்து அதைப் பிறர்க்கும் உபதேசித்துப் போருகின்றேனாகிலும் ஸ்வானுஷ்டானத்தில் வந்தவாறே பிசகிப்போகின்றேன், சாஸ்த்ர நிஷித்தங்களான கிருத்யங்களையே செய்து போருகின்றேன். ஆதலால் இவன் மோஹாந்தன் என்று தேவரீர் கைவிடப் போதுமான நிலைமை என் பக்கலுளதாயினும் அங்ஙனம் கைவிடலாகாது, என்றவாறே 'கைவிடுவேனல்லேன்' என்று எம்பெருமானார்பணிக்க, ஸ்வாமிந்! எப்போது அடியேனைத் திருவடி சேர்த்துக்கொள்வதாகத் திருவுள்ளம் பற்றி யிருப்பதென்கிறாராயிற்று. **மோகாந்தன்**—தற்சம வடசொல். விஷயாந்தர வ்யாமோஹத்தினால் கண் தெரியாதவன் என்றபடி.

125 பொல்லாங் கனைத்தும் பொதிந்துகொண்டு நன்மையிலொன்
றில்லா வெனக்கு மெதிராசா!—நல்லார்கள்
நண்ணுந் திருநாட்டை நான்தருவே னென்றநீ
தண்ணென் றிருக்கிறதென் னுன்.

"எனக்கும் திருநாட்டை நான் தருவேனென்ற நீ" என்று இப்பாட்டில் கூறியிருப்பதனால் எம்பெருமானார் மணவாளமாமுனிகளை நோக்கி உமக்கு நான் திருநாடு தருவேன் என்று ப்ரதிஜ்ஞை செய்தருளினதாகத் தெரியவருகின்றது. "எம்பெருமானார் திருவடி ஸம்பந்தம் பெற்றார்க்கெல்லாம் முத்திச்செல்வம் குறைபற்றது" என்று சரணாகதிகத்யாநுஸந்தானத்தினன்று தொடங்கி ஒரு ப்ரஸித்தி யிருத்தலால் அதுகொண்டு இங்ஙனே பணிக்கின்றாரென்றுங் கொள்ளலாம்.

126 என்று விடிவதெனக் கெந்தா யெதிராசா!
ஒன்று மறிகின்றி லேனுரையாய்—குன்றாமல்
இப்படியே யிந்தவுயிர்க் கென்று மிருளேவிளைக்கும்
இப்பவமாம் நீண்ட விரவு

இந்த ஸம்ஸாரமென்னும் காளராத்திரியானது அகவிருளை வளர்த்துக்கொண்டு ஓய்வின்றிச் செல்கின்றதே; பொழுதுவிடியும்நாள் இல்லையா? அது எந்நாளென்றறிகின்றிலேன்; இன்ன நாளென்று தேவரீரே குறிப்பிட்டால் அறியிருப்பேனென்கை. **பவம்**—ஸம்ஸாரம்; வடசொல்.

127 அல்லும் பகலும்யா னுக்கை வழியுழன்று
செல்லுமதுன் தேசுக்குத் தீங்கன்றோ—நல்லார்கள்
தந்தனயர் நீசர்க்காட் செய்யச் சகிப்பரோ
எந்தை யெதிராசா விசை.

பெரியாழ்வார் "உனக்குப் பணி செய்திருக்குந் தவமுடையேன் இனிப்போ யொருவன் தனக்குப்பணிந்து கடைத்தலை நிற்கை நின்சாயையழிவு கண்டாய்" என்றருளிச் செய்தபுடையிலே இப்பாசுர மருளிச்செய்கிறபடி. ஸ்வாமிந்! தேவரீருக்குத் தொண்டுசெய்து கிரியக் கடமைப்பட்டிருக்கு மடியேன் இப்பொல்லா வாக்கைக்குத் தொண்டுசெய்து திரிவேனாயின் இது எனக்குத் சகுமெனினும் தேவரீருடைய தேஜஸ்ஸுக்கு அவத்யமாய் முடியுமன்றோ? ராஜபுத்ரன் நீசர்கட்கு ஆட்செய்திருக்கு மிருப்பை மஹாராஜன் பொறுத்திருக்க வல்லவனோ? இதை யாராய்ந்து அடியேனைக் கைக்கொண்டருள வேணுமென்றாராயிற்று.

128 போம்வழியைத் தருமென்னுமின்பமெல்லாம்
புசித்து வழி போயமுத விரசையாற்றில்
நான் முழுகி மலமற்றுத் தெளிவிசும்பை
நண்ணிநலக் திகழ்மேனி தன்னைப் பெற்றுத்
தாமமரர் வந்தெதிர்கொண டலங்கரித்துச்
சற்கரிப்ப மாமணி மண்டபத்துச் சென்று
மாமலராள் கோன்மடியில் வைத்துகக்கும்
வாழ்வுநமக் கெதிராச னருளும் வாழ்வே.

திருவாய்மொழியில் (3—9—3) "ஒழிவொன்றில்லாத" என்கிற பாசுரத்திலே "போம்வழியைத்தரும் நங்கள் வானவரீசனை" என்றருளிச்செய்தார் நம்மாழ்வார்; 'பரமபதத்தைத் தரும்' என்று சொல்லவேண்டியிருக்க அங்ஙனம் சொல்லாது "போம் வழியைத் தருமென்கையாலே பரமபத ப்ராப்தியிற்காட்டிலும்அர்ச்சிராதி மார்க்கத்திற் செல்வதுதானே பரம ப்ரயோஜனமென்றும் அந்த ஆனந்தம் மிகப் பெரிதென்றும் காட்டிற்றுகிறது. அப்படிப்பட்ட இன்பமெல்லாம் புசித்துக் கொண்டே அர்ச்சிராதி மார்க்கத்திற் சென்று விரஜாநதியிற் குடைந்தாடி ப்ராக்ருத தோஷங்களெல்லாங் கழிந்து திருநாட்டைக்கிட்டி திவ்யதேஹத்தைப்பெற்று அவ்விடத்து ஸத்காரங்களையும் லபித்து எம்பெருமானது மடிமீதேறி வாழப்பெறுவதே வைகுந்தச் செல்வமாகும்; இச்செல்வம் எம்பெருமானார் திருவருளடியாகவே கிடைப்பதொன்று என்றாராயிற்று. ஸ்வாமிந்! இச்செல்வத்தைத் தேவரீர் அருள் செய்யவேணுமென்கை.

129 திருமலை யாழ்வார் திருவாய் மொழிப்பிள்ளை சீரருளால்
தருமதி கொண்டவர் தம்மையுத் தாரகராகவெண்ணி
இருமனமே யவர்க்கா யெதிராச ரெமைக்கடுகப்
பரம பதந்தனிலேற்றுவ ரென்ன பயம் நமக்கே.

நெஞ்சே! நமக்கென்று வகுத்த ஆசாரியர் திருவாய்மொழிப்பிள்ளையாவர்; அவரது திருவருளால் பெற்ற ஞானத்தைக் கொண்டு அவருடைய அபிமானமே உத்தாரகமென்று நீ அத்யவஸாயங் கொண்டிரு; அவர்க்காக எம்பெருமானார் பேறு தந்தருள்வரென்று நாம் கவலையற்றிருக்க ப்ராப்தம் என்றாராயிற்று.

130 தீதற்றஞானத் திருவாய் மொழிப்பிள்ளை சீரருளால்
ஏதத்தை மாற்று மெதிராசர் தம்பி மானமென்னும்
போதத்தை யேறிப் பவமாம் புணரி தனைக்கடந்து
கோதற்ற மாதவன் பாதக் கரையைக் குறுகுவனே.

அஸ்மதாசார்யருடைய நிர்ஹேதுக க்ருபையாலே எம்பெருமானாருடைய அபிமானத்திற்கிலக்காகி எம்பெருமானடிசேரப் பெறுவது திண்ணமென்றதாயிற்று.

போதம் பவம் — வடசொற்கள்.

131 அடியார்கள் குழாங்க ளழகோலக்க மிருக்க
ஆனந்த மயமான மாமணி மண்டபத்துப்
படியாது மில்படுக்கை யாயிருக்கு மனந்தன்
பணமணிக ளம்மிலொளி மண்டலத்தி னிடையில்
வடிவாரு மாமலராள் வலவருகு மற்றை
மண்மகளு மாய்மகளு மிடவருகு மிருக்க
நடுவாக வீற்றிருக்கும் நாரணனைக் கடுக
நானனுப விக்கும்வகை நல்கெனெதிராசா.

ஆழ்வார் "அடியார்கள் குழாங்களை உடன்கூடுவதென்றுகொலோ" என்று பாரித்து "அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை" என்று அடியார்கள் குழாங்களிடையே இருக்கப் பெற்றதையே பரமபுருஷார்த்தமாக அருளிச் செய்ததனால் இங்கு அடியார்கள் குழாங்களழகோலக்கமிருக்க' என்று முந்துறவருளிச் செய்தார். திருநாட்டில் திவ்யாஸ்தான மண்டபத்தில் திவ்ய ஸிம்ஹாஸனத்திலே திவ்யமஹிஷீ பரிவ்ருதனாய் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீவைகுண்டநாதனைக் கடுக அடியேன் அனுபவிக்கும்படி செய்தருளவேணுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று.

132 இந்தவுடல் விட்டிரவி மண்டலத் தூடேகி
இவ்வண்டங் கழித்திடையி லாவரண மேழ்போய்
அந்தமில்பாழ் கடந்தழகார் விரஜைதனிற் குளித்தங்
கமானவனு ளொளிக்கொண்ட சோதியும் பெற்றமரர்
வந்தெதிர் கொண் டலங்கரித்து வாழ்த்தி யழைத்த
வைகுந்தம் புக்குமணி மண்டபத்துச்சென்று
நந்திருமா லடியார்கள் குழாங்களுடன் கூடும்
நாளெனக்குக் குறுகும்வகை நல்கென் னெதிராசா.

சரீரத்தை விட்டு ஆத்மா உத்க்ரமித்தகாலம் தொடங்கிப் பரமபுருஷார்த்தப்ராப்திபர்யந்தமான பேற்றின் வரிசைகள் இப்பாட்டில் அருளிச்செய்யப்பட்டன. இத்தகைய பேறுகளை விரைவில் அடியேன் பெறுமாறு அருள் புரியவேணுமென்று பிரார்த்தித்தாராயிற்று.

133 என்றுநிரே துகமாக வென்னையபி மானித்து
யானுமதறிந் துனக்கே யாயிருக்கும் வகைசெய்தாய்
அன்றுமுத லின்றளவு மனவரதம் பிழையே
யடுத்தடுத்துச் செய்வ தநுதவிப்ப தினிச் செய்யேன்

என்றுன்னை வந்திரப்ப தாமென் கொடுமைகண்டு
மிகழாதே யிரவுபக லடிமைகொண்டு போந்தாய்
இன்றுதிரு நாடுமெனக் கருளவெண்ணு கின்றாய்
இனிக்கடுகச் செய்தருள வேண்டுமெதிராசா! (25)

ஸ்வாமிந்! அடியேனைத் தேவரீர் அங்கீகரித்தருளினவன்று தொடங்கி இன்றளவும் நான் பிழைசெய்வதும் அநுதபித்து க்ஷமைவேண்டுவதும் மீண்டுப் பிழைசெய்வதும் அநுதபித்து க்ஷமைவேண்டுவதுமாயிருந்து வருகின்றேன். இப்படியிருந்தும் என்னைக் கொண்டு பல கைங்கர்யங்கள் செய்வித்துக்கொண்டீர்; இவ்விபூதியில் கைங்கர்ய மேயன்றி அவ்விபூதியில் நித்ய கைங்கர்யமும் கொண்டருளத் திருவுள்ளம் பற்றி யிருக்கின்றீரென்பதையு மறிவேன். அதில் காலவிளம்பம் வேண்டாவென்று ப்ரார்த்திக்கின்றேனைத்தனை யென்கிறார். 'நிர்ஹேதுகம்' என்னும் வடசொல் நிரேதுகமெனத் திரிந்தது. (25)

134 தென்னரங்கர் தமக்காமோ? தேவியர்கட் காமோ?
சேனையர்கோன் முதலான சூரியர்கட் காமோ?
மன்னியசீர் மாறனருள் மாரிதமக் காமோ?
மற்றுமுள்ள தேசிகர்கள் தங்களுக்கு மாமோ?
என்னுடைய பிழைபொறுக்க யாவருக்கு முடியும்?
எதிராசா வுனக்கன்றி யானொருவர்க் காகேன்
உன்னருளா லெனக்குருசி தன்னையு முண்டாக்கி
ஒளிவிசும்பி லடியேனை யொருப்படுத்து விரைந்தே. (26)

மஹாக்ருபாளுக்களாகப் புகழ்பெற்றவர்களான எம்பெருமான் பிராட்டிமார்கள் நித்யஸூரிகள் ஆழ்வார்கள் ஆகிய இவர்களில் ஒருவர்க்கும் பொறுக்கவொண்ணாத படி அபசாரங்களை அளவறச் செய்திருக்குமடியேனை ஸ்வாமிந்! தேவரீரே க்ஷமைக்கு இலக்காக்கிப் பரபக்தி பரஜ்ஞான பரம பக்திகளையும் விளைத்துக் காலதாமதமின்றித் திருநாடுசேர்த்தருள வேணுமென்றாராயிற்று. (26)

135 இவ்வுலகி லினியொன்று மெண்ணாதே நெஞ்சே!
இரவுபக லெதிராச ரெமக்கினிமே லருளும்
அவ்வுலகை யலர்மகள்கோ னங்கிருக்கு மிருப்பை
யடியார்கள் குழாங்கடமை யவர்களுறு பலத்தை
இவ்வுயிரு மதுக்கிட்டுப் பிறந்திழந்து கிடந்த
தெனுமத்தை யென்றுமதுக் கிடைச்சுவராய்க் கிடக்கும்
வெவ்வினையால் வந்தவுடல் விடும்பொழுதை விட்டால்
விளையுமின்பந் தன்னை முற்றும் விடாமலிருந்தெண்ணே. (27)

"நோபஜநம் ஸ்மரந் இதம் சரீரம்" என்று உபநிஷத்தில் ஓதினபடியே இவ்வுலகில் சரீரா நுபந்தியான வொன்றையும் சிந்தைசெய்யாமல் பரமபதா நுபவங்களையே சிந்திக்குமாறு தம் திருவுள்ளத்திற்கு உரைத்தாராயிற்று. (27)

136 பண்டுபல வாரியரும் பாருலகோ ருய்யப்
பரிவுடனே செய்தருளும் பல்கலைக டம்மைக்
கண்டதெல்லா மெழுதியவை கற்றறிந்தும் பிறர்க்குக்
காதலுடன் கற்பித்துங் காலத்தைக் கழித்தேன்
புண்டரிகை கேள்வனுறை பொன்னுலகு தன்னில்
போகநினை வொன்றுமின்றிப் பொருந்தியிங்கே யிருந்தேன்
எண்டிசையு மேத்துமெதி ராசனரு ளாலே
எழில்விசும்பே யன்றியிப்போ தென்மன மெண்ணாதே. (28)

"தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" (2444) என்று திருமழிசைப்பிரானருளிச் செய்தபடியே பூர்வாசார்ய க்ரந்தங்களைக் கொண்டே பல்படியாலும் போது போக்கியிருந்தேனாதலால் "இச்சுவை தவிர யான்போ யிந்திரலோகமாளு மச்சுவை பெறினும் வேண்டேன்" என்றே இதுகாறுமிருந்தேன்; இப்போது திருநாட்டிலனுபவங்களுக்கு ஆசைப்படுமாறு எம்பெருமானாரது திருவருளைப்பெற்றேன் என்றாராயிற்று. (28)

137 சாறுவாகமத நீறுசெய்து சமணச்செடிக்கனல் கொளுத்தியே
சாக்கியக் கடலை வற்றுவித்துமிகு சாங்கியக்கிரி முறித்திட
மாறுசெய்திடு கணாதவாதியர்கள் வாய்தகர்த்தற மிகுத்துமேல்
வந்த பாசுபதர் சிந்தியோடும் வகை வாதுசெய்த வெதிராசனார்
கூறுமாகுரு மதத்தொ டோங்கிய குமாரிலன்மத மவற்றின்மேல்
கொடிய தர்க்கசரம் விட்டபின் குறுகி மாயவாதியரை வென்றிட
மீறி வாதில்வரு பாற்கரன்மத விலக்கடிக்கொடி யெறிந்துபோய்
மிக்க யாதவ மதத்தை மாய்த்த பெருவீரர் நாளுமிக வாழியே (29)

அனேக துர்மதங்களை யொழித்து துர்வாதிகளை வென்றவரான எம்பெருமானார் நித்யஸ்ரீர் நித்யமங்களமாக விளங்கவேணுமென்று மங்களாசாஸனம் பண்ணினாராயிற்று. குருமதமென்பது ப்ராபாகரமதம். குமாரிலன் மதமென்பது பாட்டமதம்.

138 சீராரு மெதிராசர் திருவடிகள் வாழி
திருவரையிற் சாத்திய செந்துவராடை வாழி
ஏராருஞ் செய்யவடி வெப்பொழுதும் வாழி
இலங்கிய முந்நூல்வாழி யிணைத்தோள்கள் வாழி
சோராத துய்ய செய்ய முகச்சோதி வாழி
தூமுறுவல் வாழி துணைமலர்க் கண்கள் வாழி
ஈராறு திருநாம மணிந்த வெழில் வாழி
இனிதிருப்போ டெழில் ஞான முத்திரை வாழியே. (30)

"ஆசாரியன் சிச்சனாருயிரைப் பேணுமவன், தேசாரும் சிச்சன் அவன் சீர்வடிவை ஆசையுடன் நோக்குமவன்" என்று உபதேசரத்தினமாலையில் அருளிச்செய்தபடியே ஆசார்யனுடைய திவ்யமங்கள விக்ரஹமே அஸ்மதாதிகளுக்குப் பரமோத்தேச்யமாதலால் நமக்கு நித்யானுஸந்தேயமாக எம்பெருமானாருடைய திவ்யாவயவங்களுக்கு மங்களாசாஸனம் செய்தருளினாராயிற்று. (30)

**139** அறுசமயச் செடியதனை யடியறுத்தான் வாழியே
அடர்ந்துவருங் குதிட்டிகளை யறத்துறந்தான் வாழியே
செறுகலியைச் சிறிதுமறத் தீர்த்துவிட்டான் வாழியே
தென்னரங்கர் செல்வமுற்றுந் திருத்திவைத்தான் வாழியே
மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்தான் வாழியே
மாறனுரை செய்த தமிழ் மறைவளர்த்தோன் வாழியே
அறமிகுநற் பெரும்பூதூ ரவதரித்தான் வாழியே
அழகாரு மெதிராச ரடியிணைகள் வாழியே (31)

**எம்பெருமானாருடைய திவ்யசேஷ்டிதங்களுக்கு மங்களாசாஸனம்செய்தருளுகிறபடி. சாக்ய உலூக்ய அக்ஷபாத க்ஷபண கபில பதஞ்சலி மதங்களாறும் அறுசமயங்களெனப்படும். வேறுவகையாகவுஞ் சொல்வதுண்டு. வேதங்களைப் பிரமாணமாக வொப்புக் கொண்டே அவற்றில் அபார்த்தம் செய்பவர்கள் குதிருஷ்டிகளாவர். மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்தது வேதார்த்த ஸங்க்ரஹம் ஸ்ரீபாஷ்யம் முதலிய திவ்யக்ரந்தங்களாலும் உபதேசமுகத்தாலும். *வான்திகழுஞ்சோலை மதிளரங்கர் வண்புகழ்மே லான்ற தமிழ்மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன்* என்றதை யடியொற்றி மாறனுரை செய்த தமிழ்மறைவளர்த்தோனென்றது.** (31)

**140** சங்கரபாற்கரயாதவ பாட்ட பிரபாகரர் தங்கள்மதம்
சாய்வுறவாதியர் மாய்குவரென்று சதுமறை வாழ்ந்திடுநாள்
வெங்கலியிங்கினி வீறுநமக்கிலை யென்றுமிகத்தளர்நாள்
மேதினிநஞ்சுமை யாறுமெனத் துயர்விட்டு விளங்கியநாள்
மங்கையராளி பராங்குசமுன்னவர் வாழ்வு முளைத்திடுநாள்
மன்னியதென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள்
செங்கயல்வாவிகள் சூழ்வயல்நாளும் சிறந்த பெரும்பூதூர்ச்
சீமானிளையாழ்வார் வந்தருளியநாள் திருவாதிரை நாளே. (32)

**சங்கராதி மதாந்தரஸ்தர்களின் அபார்த்தங்களைக் கண்டித்து வேதாந்த யதார்த்த ஸ்தாபனம் பண்ணுகைக்காகவும், கலிபுருஷஸாம்ராஜ்யத்தை சிதைப்பதற்காகவும் பூபாரமாயிருக்கின்ற துஷ்டர்களை யெல்லாம் ஸஜ்ஜனமாக்கிப் பூதேவியை மகிழ்விப்பதற்காகவும், பராங்குசபரகாலாதிகளான ஆழ்வார்களின் அருளிச்செயல்களை மிகவளர்த்து அவர்களையுகப்பிக்கைக்காகவும் திவ்யதேசஸமுத்தாரத்திற்காகவும் எம்பெருமானார் திருவவதரித்தாரென்றதாயிற்று.** (32)

**141** இன்னமெத்தனை காலமிந்த வுடம்புடன் யானிருப்பன்
இன்ன பொழுதுடம்பு விடுமின்னபடியதுதான்
இன்னவிடத்தே யதுவுமென்னு மிவை யெல்லாம்
எதிராசா நீயறிதி யானிவையொன் றறியேன்
என்னை யினியிவ்வுடம்பை விடுவித்துன் னருளால்
ஏராரும் வைகுந்தத்தேற்ற நினைவுண்டேல்
பின்னைவிரையாமல் மறந்திருக்கிறதென் பேசாய்
பேதைமை தீர்த்தென்னை யடிமைகொண்ட பெரியோனே. (33)

இவ்விபூதியில் அடியேன் இன்னமும் இருக்கக்கூடிய நாள் இவ்வளவென்றும் இன்ன போதிலே இன்னவிடத்திலே இன்னபடியாக அடியேனுக்கு தேஹாவஸானமாகுமென்றும் எல்லாம் தேவரீர் அறியவல்லீர்; அடியேனுக்கு இவையொன்றும் தெரியாது. இவ்வழுக்குடம்பைப் போக்கித் திருவடி சேர்த்துக் கொள்ளத் திருவுள்ளமுண்டாகில் உபேக்ஷித்துக் காலதாமதம் செய்வது என்னே? என்றாராயிற்று. (33)

142 முன்னைவினை பின்னைவினை யாரத்தமென்னும்
மூன்றுவகையான வினைத்தொகையனைத்தும் யானே
என்னையடைந்தோர் தமக்குக் கழிப்பனென்னுமரங்கர்
எதிராசா! நீ யிட்ட வழக்கன்றோ சொல்லாய்
உன்னையல்லதறியாத யானிந்த வுடம்போடு
உழன்றுவினைப்பயன் புசிக்கவேண்டுவதோன்றுண்டோ?
என்னுடைய விருவினையை யிறைப்பொழுதில்மாற்றி
ஏராருமவைகுந்தத் தேற்றிவிடாய் நீயே (34)

"ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்கிற சரமச்லோகத்திலே "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்றதில் விவக்ஷிதமானதை ஒன்றரையடிகளில் அருளிச் செய்கிறார். முன்னை வினையாவது பூர்வாகம்: ஆச்ரயிப்பதற்கு முன்னே அறிந்துமறியாமலுஞ் செய்த பாவங்கள். பின்னைவினையாவது உத்தராகம்: ஆச்ரயித்தபிறகு ப்ரக்ருதிவாஸனையினால் ப்ராமாதிகமாக நேரும் பாவங்கள், ஆரத்தமாவது ப்ராரப்த கருமம்—பலன் கொடுக்க ஆரம்பித்த கருமங்களென்றபடி. என்றிப்படி மூவகைப்பட்ட தீவினைகளையும் என்னடியார்க்கு நானே தவிர்ப்பேனென்று சரமச்லோகமுகத்தாலேயருளிச்செய்தவர் திருவரங்கநாதர்; அவர் தேவரீர்க்கு ஸர்வாத்மநா விதேயரென்பது ப்ரஸித்தம்; அப்படியிருக்க, தேவரீரையே புகலென்று பற்றின வடியேன் இன்னமும் கருமபலன்களை யனுபவித்துக்கொண்டிருக்க தேவரீர் பார்த்துக் கொண்டிருப்பது தகுதியோ? ப்ராப்யபூமியிலே யென்னைக்கொண்டுபோய்ச் சேர்த்தருளவேணுமென்றாராயிற்று. யதிராஜவிம்சதியில் "ச்ருத்யக்ரவேத்ய" இத்யாதிச் ச்லோகம் இப்பாசுரத்திற்குச் சார்பாக அநுஸந்தேயம். (34)

143 அருளாலேயடியேனை யபிமானித்தருளி
அகவரதமடிமைகொள்ள நினைத்து நீயிருக்க
மருளாலேபுலன்போக வாஞ்சைசெயுமென்றன்
வல்வினையை மாற்றியுன்பால் மனம்வைக்கப்பண்ணாய்
தெருளாருங் கூரத்தாழ்வானு மவர்செல்வத்
திருமகனார்தாமு மருளிச்செய்த நீசைத்
திரளானவத்தனையுஞ் சேரவுள்ள வென்னைத்
திருத்தியுய்யக்கொள்ளும் வகை தேருமெதிராசா! (35)

கூரத்தாழ்வான் பட்டர் முதலானோர் தங்களுடைய ஸ்தவங்களிலே அபரிமிதமாக நைச்யாநுஸந்தானம் செய்துகொண்டிருக்கிறார்கள், ஆனால் அந்த நைச்யம் அவர்களிடத்தில் உண்மையாகச் சிறிதுங்கிடையாது. அவர்கள் தாம் ஏறிட்டு அநுஸந்தித்துக்கொண்ட அந்த நைச்யமெல்லாம் வடிவெடுத்தவன் அடியேன்; இப்படிப்

பட்ட வென்னைத் தேவரீர் ஏற்கெனவே அபிமானித்தருளி அத்தாணிச் சேவகங் கொள்ளத் திருவுள்ளம்பற்றியிருந்தும் அடியேன் ப்ராக்ருத போகங்களிலேயே யீடுபட்டிருக்கும்படியான பாவியாயிரா நின்றேன்; இந்நிலையை மாற்றியருள வேணு மென்றாராயிற்று "வாசாமகோசரமஹாகுண தேசிகாக்ர்ய" என்ற யதிராஜ விம்சதி ச்லோகம் பின்னடிகட்குச் சேர அநுஸந்திப்பது (35)

**144** வாசனையிலூற்றமோ மாளாதவல்வினையோ
ஏதென்றறியேனெதிராசா!—தீதாகும்
ஐம்புலனிலாசை யடியேன் மனந்தன்னை
வன்புடனே தானடரும வந்து. (36)

"இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:" என்கிற கீதைக்குச் சார்பாகப் பின்னடிகள் அமைந்துள்ளன. முதலடியில் 'வாதனை' என்றும் பாடமுண்டு. (36)

**145** இன்றளவுமில்லாத வதிகாரம் மேலுமெனக்
கென்றுளதாம் சொல்லா யெதிராசா!—குன்று
வினைதொடரை வெட்டிவிட்டு மேலைவைகுந்தத்
தெனைக்கடுக வேற்றுத தென்? (37)

அடியேனைத் திருநாட்டிலேற்றுகைக்கிடான அதிகார ஸம்பத்து இதுகாறுமில்லாதது இனியொருகால் விளையப்போகிறதென்று நினைக்க ப்ரஸக்திதானுமில்லை; ஆகவே விரோதி பாபவர்க்கங்களைத் தேவரீர் தாமே நிர்ஹேதுகக்ருபையினால் வெட்டிக்களைந்து வீடு பெறுவிப்பது தலம் என்றாராயிற்று. (37)

**146** அஞ்சி லறியாதா ரைம்பதிலும் தாமறியார்
என்சொ லெனக்கோ வெதிராசா!—நெஞ்சம்
உளதா னொழிந்தவற்றை யேயுகக்க வின்றும்
அனுதாபமற்றிருக்கையால். (38)

"அஞ்சிலறியாதார் ஐம்பதிலுமறியாரே" என்றொரு பழமொழியுண்டு. அதற்குத் தாமேயிலக்கென்று நைச்யாநுஸந்தானமாக அருளிச் செய்கிறபடி. எனக்கு இத்தனை வயதாகியும் செய்த குற்றங்களுக்காக அநுதாபமும் தோன்றவில்லையே யென்கிறார். (38)

**147** வேம்புகறியாக விரும்பினர் கைத்ததென்று
தாம்பொகடாதே புசிக்குந் தன்மைபோல்—தீம்பனிவ
னென்றுகினைத் தென்னை யிகழா ரெதிராசர்
அன்றறிந்தங் கீகரிக்கை யால். (39)

வேம்பையே கறியாகச் சமைத்துண்ணுமவர்கள் அதன் கைப்பைப் பரமபோக்யமாகக் கொள்பவர்களேயன்றி ஐயோ! கைக்கின்றதே யென்று வெறுக்குமவர்களல் லவோ; அதுபோல் பாவியேனுடைய தோஷங்களையே பரம போக்யமாகக் கொண்டு அங்கீகரித்தருளின தேவரீர் இன்று தீம்புகண்டு இகழ்வது தகுதியன்றே யென்றார்

148 அவத்தே பொழுதை யடியேன் கழித்திப்
பவத்தே யிருக்குமது பண்போ — திவத்தே யான்
சேரும் வகையருளாய் சீரா ரெதிராசா!
போருமினி யிவ்வுடம்பைப் போக்கு. (40)

சீர்மை பொருந்திய எம்பெருமானாரே! தேவரீருடைய குணாநுபவங்களுக்கு இட்டுப் பிறந்த அடியேன் பொழுதைப் பாழாகப்போக்கி இந்த ஸம்ஸாரத்திலேயே கிடப்பது தகுதியோ? அடியேன் திருநாடு சேரும்படி யருள்புரியவேணும்; இதுவரை ஸம்ஸாரத்தில் சிறையிருந்ததுபோதும்; இனி இவ்வழுக்குடம்பைத் தவிர்த்தருள்க.

149 என்னைப்போல் பிழைசெய்வா ரிவ்வுலகி லுண்டோ?
உன்னைப்போல் பொறுக்கவல்லா ருண்டோ? — அனைத்துலகும்
வாழப் பிறந்த வெதிராச மாமுனிவா!
ஏழைக் கிரங்கா யினி. (41)

உலகமெல்லாம் உஜ்ஜீவிப்பதற்கென்றே அவதரித்த எம்பெருமானாரே! இந்நிலவுலகத்தில் என்னைப்போல் அபசாரப் படுபவர்கள் வேறு யாரேனுமுளரோ? தேவரீரைப்போல் அவ்வபசாரங்களை க்ஷமிக்க வல்லார் வேறு சிலருளரோ? இனி ஏழையான அடியேன் மீது இரங்கியருளவேணும். (41)

150 ஐம்புலன்கள் மேலிட் டடரும் பொழுதடியேன்
உன்பதங்க டம்மைநினைந் தோலமிட்டால் — பின்பவைதாம்
என்னையட ராம லிரங்கா யெதிராசா!
உன்னையல் லாலெனக் குண்டோ? (42)

எம்பெருமானாரே! பஞ்சேந்திரியங்களானவை என்னை ஆக்ரமித்துக் கொள்ளும்போது அவற்றுக்கு ஆற்றாத அடியேன் தேவரீருடைய திருவடிகளைச் சிந்தித்துக் கூப்பிட்டால் அதன்பிறகும் அவ்விந்திரியங்களானவை அடியேனை மேலிடாதபடி இரக்ஷைசெய்தருள்கின்றீரில்லையே; எனக்கு தேவரீரைத் தவிர வேறு ரக்ஷகருளரோ?

151 இந்த வுலகிற் பொருந்தாமை யேதுமில்லை
அந்தவுல கிற்போக வாசையில்லை — இந்நிலைக்
கெப்படியே தான் தருவ ரெந்தை யெதிராசர்
ஒப்பில் திருநா டுகந்து. (43)

த்யாஜ்ய பூமியில் ஜிஹாஸையும் ப்ராப்யபூமியில் ப்ராவண்யமுமில்லாதவெனக்கு எம்பெருமானார் தாம் என் செய்வர்! என்று ஒருவாறு ஸமாஹிதராகிறார். (43)

152 மாகாந்த நாரணனார் வைகும் வகையறிந்தோர்க்கு
ஏகாந்த மில்லை யிருளில்லை — மோகாந்தர்
இவ்விடமே காந்தமிரு ளென்றுபய மற்றிருந்து
செய்வர்கடாம் பாவத் திறம். (44)

இப்பாசுரத்தில் எம்பெருமானாருடைய திருநாமம் ஸ்பஷ்டமாக இல்லையாயினும் முன்னடிகட்கு எம்பெருமானாரும் அவருடைய திருவடி பணிந்தவர்களுமே விஷய

பூதராவர்கள் எம்பெருமான் எங்கு முளனாய்க்கொண்டு எதையும் எளிதிலுணர் கின்றானென்கிற தெளிவுடையவர்கள் 'இது ஏகாந்தமானவிடம், இது இருள் செறிந்தவிடம்' என்று ஓரிடத்திலும் ஒரு பாவச்செயலும் செய்யத் துணியார்கள்; அப்படிப்பட்ட தெளிவில்லாத அவிவேகிகள் தாம் ஸர்வேச்வரனுடைய ஸர்வவியாபகத்வத்தையறியமாட்டாதே அவனையும் வஞ்சித்துவிடலா மென்றெண்ணி ஏகாந்த ஸ்தலங்களிலும் இருள்மிக்க விடங்களிலும் பாவங்களைச் செய்துபோருவர்கள்—என்றவிது, எம்பெருமானுடைய திருவருளால் எம்பெருமானுடைய ஸர்வவ்யாப்தியை யறிந்தவர்களே! நீங்கள் ஏகாந்தத்திலும் பாவச்செயல் செய்யாதிருக்க வேணுமென்று ஹிதோபதேசமருளியபடி. (44)

153 நாராயணன் திருமால் நாரம்நாமென்னுமுறை
ஆராயில் நெஞ்சே யநாதியன்றோ—சீராரும்
ஆசாரியனாலே யன்றோநா முய்ந்ததென்று
கூசாம லெப்பொழுதுங் கூறு. (45)

"திருமாலே! நானுமுனக்குப் பழவடியேன்" என்றும் "நன்றாகநானுன்னை யன்றியிலேன்கண்டாய், நாரணனே! நீ யென்னையன்றியிலை" என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமானுக்கும் சேதநர்களுக்கு முண்டான உறவு அநாதியேயானாலும் இந்த வுறவையறிவித்து மஹோபகாரஞ்செய்தவர் ஆசார்யரேயாதலால் அந்த ஆசாரியர் பக்கலிலேயே நாம் செய்ந்நன்றி குன்றாதிருக்கவேணு மென்றாராயிற்று. (45)

154 திருவாய்மொழிப்பிள்ளை தீவினையோந்தம்மைக்
குருவாகி வந்துய்யக் கொண்டு—பொருவில்
மதிதானளித்தருளும் வாழ்வன்றோ நெஞ்சே!
எதிராசர்க்காளானோம் யாம். (46)

பகவானோடுண்டான உறவை யறிவதிற்காட்டிலும் ஆசார்ய ஸம்பந்தத்தையறிவதே சிறந்தது. ஆசார்யரென்கிற சொல்லுக்கு எம்பெருமானார் தாம் இலக்கு. அப்பரமாசாரியரோடு நமக்குண்டான வுறவையறிவித்த மஹோபகாரகர் திருவாய்மொழிப்பிள்ளை—என்று ஸ்வாசாரியன் பக்கலிலே பெருநன்றிபாராட்டினாராயிற்று

155 இராமாநுசாயநமவென் றிரவும் பகலும் சிந்தித்
திராமாநுசர்களிருப்பிடந் தன்னி லிறைப்பொழுதும்
இராமாநுசரவர்க்கெல்லா வடிமையுஞ் செய்யவெண்ணி
இராமாநுசர்தம்மை மாநுசரா வெனக்கொளலெண்ணுவதே. (47)

எம்பெருமானார் திருவடிகளை தஞ்சமென்றிருக்கவேண்டியது கடமை; அப்படியிருக்கில்லாதவர்கள் எங்குவர்த்திக்கின்றார்களோ அங்கு கொடிப்பொழுதும் தங்கலாகாது. அப்படித் தங்காமலிருப்பவர்களுக்கே நாம் ஸகலவித கைங்கரியங்களும் செய்யத்தகும். அங்ஙனம் செய்யாதவர்கள் மானிடவரல்லரென்றே கொள்ளத் தகுவர் என்றாராயிற்று. (47)

156 எண்ணாதென்னெஞ்ச மிசையாதென்நா விறைஞ்சாதுசென்னி
கண்ணுறனவை யொன்றுங் காணலுறு கலியார்நலிய

வொண்ணுதவண்ண முலகளித்தோ னெதிராசனடி
நண்ணுதவரை யரங்கேசர் செய்தநலம் நமக்கே. (48)

ஸ்ரீரங்கநாதர் நமக்கொரு பெருநன்மை செய்தருளியிருக்கின்றார்; அஃது என்ன வெனில் எம்பெருமானார் பக்கலில் விமுகராயுள்ளவர்களை நெஞ்சால் நினையாமலும் வாயால் சொல்லாமலும் தலையால் வணங்காமலும் கண்ணால் காணாமலும் இருக்கின்றோமே. இதுதான். கலியார் என்றது கோபத்தினாலாகிய சொல்வடிவம். (48)

157 நந்தாநரகத்தழுந்தாமை வேண்டிடில் நானிலத்தீர்!
எந்தாதையான வெதிராசனை நண்ணுமென்றுமவன்
அந்தாதிதன்னை யநுசந்தியுமவன் தொண்டருடன்
சிந்தாகுலங்கெடச் சேர்ந்திரு முத்திபின் சிந்திக்குமே. (49)

ஸம்ஸாரபந்தம் அடியோடுவேரறுவதற்கு மூன்று உபாயங்களருளிச்செய்கிறாரிதில் எம்பெருமானாரைப் பணிதல். அவர் விஷயமான ப்ரபந்நகாயத்ரி யென்று ப்ரஸித்தமான நூற்றந்தாதியைச் சிந்தனை செய்தல். ஸ்ரீராமாநுஜ பக்தர்களோடு ஸஹவாஸஞ் செய்தல். (49)

158 அவத்தே யருமந்த காலத்தைப்போக்கி யறிவின்மையாலிப்
பவத்தே யுழல்கின்ற பாவியர்காள்! பலகாலம் நின்று
தவத்தே முயல்பவர் தங்கட்கு மெய்தவொண்ணுதவந்தத்
திவத்தே யுமைவைக்கும் சிந்தியும் நீரெதிராசரென்றே. (50)

"தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்று திருமழிசைப் பிரானும், "முன்னவராம் நம்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம் முழுதும் நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம்" என்று (மேலே) தாமும் பணித்தபடியே காலத்தைப் போக்க வேண்டியிருக்க அநர்த்தமான காலத்தைப் பழுதே போக்கி அறிவுகெட்டு இந்த ஸம்ஸாரக் கடலிலேயே மாறி மாறிப் பலபிறப்பும் பிறந்து திரிகின்ற பாவிகளே! "ஊன்வாட வுண்ணாதுயிர்காவலிட்டு உடலிற் பிரியாப்புலனைந்தும் நொந்து தாம் வாடவாடத் தவம் செய்வார்க்கும் பெறுதற்கரிதான பரமபதத்தை எம்பெருமானாரொருவரே அளித்தருளவல்லவர் என்பதையறிந்து அவரது திருநாமத்தையே சிந்தித்து வாழ்ந்துபோங்கள் என்கை.

159 என்றுளனீச னுயிருமன்றேயுண் டிக்காலமெல்லாம்
இன்றளவாகப்பழுதே கழிந்த திருவினையால்
என்றிழவின்றி யிருக்கு மென்னெஞ்ச மிரவுபகல்
கின்று தவிக்கு மெதிராசா! நீயருள்செய்த பின்னே. (51)

எம்பெருமானாரே! எம்பெருமான் என்று முதலாக வுள்ளானோ அன்று முதலாகவே ஜீவாத்மாவுண்டு; இவ்வநாதி காலமெல்லாம் இப்போதளவும் ப்ரபலகருமத்தினால் வீணாகவே கழிந்து போயிற்று; என்கிற அநுதாபங்கூட இல்லாமலிருக்கின்ற என் மனமானது தேவரீர் கிருபை செய்தருளினது முதலாக இரவும் பகலும் இடைவிடாது அநுதாபங் கொள்ளாநின்றது. (51)

160 கனககிரிமேல் கரியமுகில் போல,
வினதைசிறுவன் மேற்கொண்டு—தனுவிடும்போ
தேராரரங்க ரெதிராசர்க்காக வென்பால்
வாரா முன்னிற்பர் மகிழ்ந்து.

**சரமஸமயத்தில் வாய்க்கக்கூடிய பரமலாபத்தை மநோரதிக்கிருரிப் பாட்டில்.**

161 இதத்தாலேதென்னரங்கர் செய்கிறதென் றறிந்தே
யிருந்தாலுந் தற்கால வேதனையின் கனத்தால்
பதைத்தாவோ வென்னுமிந்தப் பாவவுடம்புடனே
பலநோவுமநுபவித்துப் பவத்திருக்கப்போமோ?
மதத்தாலே வல்வினையின் வழியுழன்று திரிந்த
வல்வினையேன் றன்னை யுனக்காளாக்கிக் கொண்ட
இதத்தாயும் தந்தையுமா மெதிராசா வென்னை
இனிக்கடுக இப்பவத்தினின் றுமெடுத்தருளே. (53)

**"ஹரிர் து:க்காநி பக்தேப்யோ ஹிதபுத்த்யா கரோதி வை" என்கிறபடியே எம்பெருமான் செய்யும் ஹிம்சைகள் ஹிதபுத்தியினாலேயேசெய்யுமவையென்று சாஸ்த்ரார்சித்தம் தெளிந்திருந்தாலும், இந்த ஸம்ஸார மண்டலத்தில் படும் துக்கம் பொறுக்க வொண்ணாமையாலே தாம் பதறுகிறபடியை விண்ணப்பஞ் செய்தாராயிற்று.**

162 இன்னுமெத்தனைநா ளிவ்வுடர்புடன்
இருந்துநோவுபடக் கடவேனையோ!
என்னையிதினின் றும விடுவித்துநீர்
என்றுதான் திருநாட்டினு ளேற்றுவீர்?
அன்னையுமத்தனு மல்லாதசுற்றமும்
ஆகியென்னை யளித்தருள்நாதனே!
என்னிதத்தை யிராப்பகலின் றியே
ஏகமெண்ணு மெதிராச வள்ளலே! (54)

**மாதா பிதாக்களாயும் மற்றுமுண்டான வுறவுகளாயும் இருந்துகொண்டு என்னை ரக்ஷித்தருளா நின்ற ஸ்வாமியே! இரவுபகலென்கிற வாசியில்லாமல் எப்போதும் என்னுடைய ஹிதமொன்றையே சிந்திக்கின்ற மஹோதாரரான எம்பெருமானாரே! தேவரீருக்கு ஆட்பட்ட பின்பும் எவ்வளவு காலம் இந்ததேஹத்தோடிருப்பேன்?**

163 தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப்பெற்றோம்
திருவரங்கம் திருப்பதியே யிருப்பாகப்பெற்றோம்
மன்னியசீர் மாறன்கலை யுணவாகப்பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப்பெற்றோம்
முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம்
முழுதும் நமக்கவை பொழுது போக்காகப்பெற்றோம்.
பின்னையொன்றுதனில் நெஞ்சுபோராமற் பெற்றோம்
பிறர்மினுக்கம் பொறாமையில்லாப் பெருமையும் பெற்றோமே.

மாக எம்பெருமானார் என்று அவர்க்கு விருதுசாத்தினார். எம்பெருமான் கருணைக்கடலென்று கேட்டிருந்தோமத்தனை, அதை இவர் பக்கலிலே இன்று ஸாக்ஷாத்கரிக்கப் பெற்றோமாதலால் இவர்க்கு இந்த விருது ஏற்கும் என்று திருவோலக்கத்திலே விவரணமும் செய்தருளினார். 'எமக்கெல்லார்க்கும் தலைவர்' என்கிற பொருளையுடைய எம்பெருமானாரென்கிற சொல் ஸ்வாமிக்கே ஏற்குமது. பரம கருணை பொருந்தியவரே தலைவராயிருக்கத் தகுமாதலாலும் அந்தப் பரமகருணை இராமாநுசர் திறத்திலேயே ஸகலருமறிய ஸாக்ஷாத்க்ருதமாதலாலும்.

220 **ஆழ்வானையும் ஆண்டானையும்பற்றின இதிஹாஸம்.** [ஸ்வாமி திருக்கோட்டியூர் நம்பி திருவடிகளிலே சரம ச்லோகார்த்தம் கேட்டபோது ஆழ்வானுமாண்டானும் தண்டும் பவித்ரமுமாக உடனிருந்து கேட்டதாகவே கீழ் அறிவிக்கப்பட்டது. ஆனால் இவ்விடத்து வரலாறு குருபரம்பரா ப்ரபாவத்தோடு சிறிது மாறுபடுதலால் அதில் காண்கிறபடியாகவும் இங்கு எழுதப்படுகிறது] ஸ்வாமி தண்டும் பவித்ரமுமான இவ்விருவருடனேயிருந்து நம்பி பக்கலிலே கேட்டது திருமந்திரப்பொருள் என்று வைத்துக்கொள்ளுவது. பிறகு அவர்க்கு சரமச்லோகார்த்தத்தையும் உபதேசித்தருளத் திருவுள்ளங்கொண்ட நம்பிகள் 'எம்பெருமானாரே! உமக்கு இன்னமுமொரு சரம ரஹஸ்யார்த்த விசேஷம் சொல்லுவதாக எண்ணியிருக்கிறோம்: இப்போது கோயிலுக்குச் சென்று பின்பு ஏகாந்தமாக நீர் ஒருவருமே வாரும்' என்றருளிச்செய்ய, அப்படியே ஸ்வாமி அப்போது கோயிலேற வெழுந்தருளி மீண்டுமொரு கால் தனித்து நம்பிகளின் ஸ்ரீ பாதத்திலே சென்று தெண்டனிட்டுநிற்க, நம்பி இவர் கையைப் பிடித்துக் கொண்டுபோய் ஏகாந்தமாக மேல்தளத்திலேயேறிப் படிக்கதவை மூடியெழுந்தருளியிருந்து ஒருவர்க்குஞ் சொல்லாதபடி தம் திருவடிகளைத் தொடுவித்துச் சூளுறவுகொண்டு நிர்ஹேதுக க்ருபையாலே பரம ரஹஸ்யமான சரமச்லோகப் பொருளையருளிச் செய்து, இதை அநதிகாரிகளுக்கு இடாதபடி பேணிக்கொண்டு போரும் என்று நியமித்தருள, எம்பெருமானார் அடியேன் அப்படிப்பட்டவர்களுக்குச் சொல்லேன்; கூரத்தாழ்வானொருவர்க்குச் சொல்லாதிருக்க வொண்ணாதேயென்ன 'ஆகில் ஒரு ஸம்வத்ஸரம் சுச்ரூஷை கொண்டு சொல்லும்' என்று நியமித்தருள, ஸ்வாமியும் விடைபெற்றுக் கோயிலேறவெழுந்தருளினார்.

221 அப்போது ஆழ்வான் அவர் திருவடிகளிலே தண்டனிட்டு நிற்க, உடையவரும் வாராய் ஆழ்வான்! சரமச்லோக பரம ரஹஸ்யார்த்தத்தை நம்பிகள் எனக்கு உபதேசித்தருளி இவ்வர்த்த விசேஷத்தை ஒருவர்க்கும் செவிப்படாதபடி பேணிக்கொண்டிருக்குமாறு நியமித்தருளினபோது ஆழ்வானொருவர்க்கு மாத்திரம் அடியேன் இதனை வெளியிடாதிருக்க மூடியாதேயென்று நான் விண்ணப்பஞ்செய்ய, ஆழ்வானுக்கு இவ்வர்த்தம் கேட்க அதிகாரமுண்டேயாகிலும் பல்வகையாலும் அவருடைய அத்யவஸாயத்தைப் பரீக்ஷித்தறிந்து ஒரு ஸம்வத்ஸரம் சுச்ரூஷை கொண்டு சொல்லும் என்று நியமித்தருளினார் என்று ஆழ்வானை நோக்கியருளிச்செய்ய, அதுகேட்ட ஆழ்வானும் *மின்னின்னிலையில மன்னுயிராக்கைகள்* என்ற பாசுரத்தைத் திருவுள்ளம் பற்றி ஒரு ஸம்வத்ஸரம் இவ்வுடலுக்கு நிலையுண்டோ இல்லையோவென்று வியாகுலப்பட்டு ஆலோசித்து இவ்வர்த்த விசேஷத்தைப் பெற்றாலல்லது தரித்திருக்க முடியாத தன்மையாலே ஆசார்யனது திருமாளிகை வாசலிலே ஒரு மாஸம் பட்டினி கிடக்கை ஸம்வத்ஸர சுச்ரூஷையோடொக்குமென்று சாஸ்த்ரமுண்டென்றறிந்து அங்ஙனமே மாஸோபவாஸம் கிடந்து அவ்வர்த்த விசேஷத்தைப் பெற்றார்.

222 பிறகு முதலியாண்டானும் வந்து தொழுது ப்ரார்த்திக்க, நான் ஆழ்வானொருவர்க்கே சொல்ல நியமனம் பெற்றுவந்தேன். நீர் நம்பிபக்கலில் சென்று கேளுமென்று விடைகொடுத்தருள, அவரும் திருக்கோட்டியூரேறச் சென்று ஆறுமாஸம் காத்திருந்தும் அருள் பெறுமலிருந்து ஒருநாள் கனக்க ப்ரார்த்திக்கையில்—'முக்குறும்பும் போனால் எம்பெருமானார் தாமே ப்ரஸாதிப்பர், போய்க்கேளும்' என்று விடை தந்தனுப்பிவிட ஆண்டானும் கனத்த ஆர்த்தியோடே உடையவர் திருவடிகளிலே வந்து விழ மிகவும் உகப்போடே ஆண்டானுக்கும் அதையுபதேசித்தருளினார்.

**223. திருமாலையாண்டானிடத்துத் திருவாய்மொழி கேட்டல் :** சிலகாலைக்குப் பின்பு திருக்கோட்டியூர்நம்பி கோயிலுக்கெழுந்தருளித் தம்முடைய ஸப்ரஹ்மசாரியான திருமாலையாண்டானை எம்பெருமானரிடத்தே கொண்டு நிறுத்தி இவர் பக்கலிலே திருவாய்மொழிக்கு அர்த்தம் கேளுமென்று ஸ்வாமிக்கு நியமித்துத் தாம் புறப்பட்டெழுந்தருளினார். அன்று தொடங்கித் திருவாய்மொழி காலக்ஷேபம் நடந்துவாரா நின்றது. ஆண்டான் ஆளவந்தார் திருவடிகளிலே கேட்ட அர்த்தங்களை யருளிச்செய்து வருகையில் எம்பெருமானர் ஆங்காங்குச் சில அர்த்தவிசேஷங்களையும் யோஜநா விசேஷங்களையும் பணித்துவர, இவர் விச்வாமித்ர ஸ்ருஷ்டியாக ஸ்வச்சந்தமாய் ஏதோ சொல்லிவருகின்றாரென்று திருவுள்ளம் புண்பட்ட ஆண்டான் இடையிலே காலக்ஷேபத்தை நிறுத்திவிட, இதையறிந்த திருக்கோட்டியூர் நம்பி கோயிலேற வந்து ஆண்டானை விசாரிக்கையில் உடையவர் சொன்ன சில மாறுபொருள்களை யெடுத்துரைத்து மநஸ்தாபஹேதுவை விளக்க, அப்போது நம்பி சொன்னபடி—'இவ்வர்த்தமும் ஆளவந்தாரருளிச்செய்ய நாம் கேட்டிருக்கிறோம்; ஸாந்தீபநி பக்கலிலே க்ருஷ்ணன் வேதமோதினைப்போலே காணும் உம்மிடத்திலே உடையவர் திருவாய்மொழி கேட்கிறதும்; ஆளவந்தார் திருவுள்ளத்திலுள்ள அர்த்தமொழிய இவர்க்கு வேறொன்றும் தோன்றாது காணும், இவர்க்கு நீர் அஜ்ஞாத ஜ்ஞாபகம் பண்ணுவதாக நினையாதேயிருக்க ப்ராப்தம்' என்று

**224.** பிறகு நம்பி அவ்வாண்டானையும் பெரிய நம்பியையும் கூட்டிக்கொண்டு உடையவர் மடத்தேற வெழுந்தருள, ஸ்வாமியும் உள்ளம் பூரித்துத் தொழுது நிற்க, பெரிய நம்பியும் திருக்கோட்டியூர் நம்பியும் திருமாலையாண்டானை நோக்கி 'திருவாய்மொழி விட்டவிடம் தொடங்கி நீரே பலகால் அநுவர்த்தித்தாகிலும் ப்ரபந்தத்தைத் தலைக்கட்டும்' என்று நியமித்தருள, அன்று தொடங்கி அப்படியே நடந்துபோந்தது. 'ஆளவந்தார்க்கு நான் ஏகலவ்யன் காணும்'' என்று இடையிடையே ஆண்டானை நோக்கி உடையவர் அருளிச்செய்யும் படியாயிருந்தது. ஆளவந்தார் பக்கலில் கேளாத அர்த்தங்களும் இங்கே கேட்கப்பெற்றோமென்று ஆண்டானும் போர உகக்கும்படியாயிற்று.

**225. ஸ்வாமி மாதுகரத்தை நிறுத்திக் கிடாம்பியாச்சானைப்பணிகொள்ளுதல்:** ''தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே'' என்கிறபடியே ஸ்ரீரங்கநாத திவ்யாலய ஸாம்ராஜ்ய நிர்வாஹதுரந்தரராய் ஸ்வாமி வாழ்ந்தருளுங்காலத்திலே கோயில் கைங்கர்யபரர்கள் ஸதாசாரமில்லாமலிருக்கக்கண்டு அவர்களைத் திருத்திப் பணிகொள்ளத் திருவுள்ளம்பற்றி நெருக்கிக்கொண்டு போரா நிற்கையில், அவர்களிலே சிலர் 'இவர் கோற்கீழே நம்மால் குடிவாழ முடியாது; இவரை மாய்ப்பதே நலம்' என்று கொண்டு ஸ்வாமி மாதுகரத்திற் கெழுந்தருளு மிடத்து விஷங்கலந்த ப்ரஸாதமிடும்படி ப்ரபல நிர்ப்பந்தத்தாலே செய்விக்க, அப்படியே ஒரு நாள் கிடைத்த ப்ரஸாதத்தின் தீமையை யறிந்து அதைத் திருக்காவேரியிலே கரைத்திட்டு அன்றுதொடங்கிச் சிலநாள் வரையில் உபவாஸமாகவே யெழுந்தருளியிருக்க, இதைத் திருக்கோட்டியூர் நம்பி கேட்டருளி அப்போதே புறப்பட்டுக் கோயிலுக்கெழுந்தருளி, ஸ்வாமியினுடைய சிஷ்யவர்க்கங்களிலே கிடாம்பியாச்சானொருவரே திருமேனிக்கு மிகவும் பரிவரான இங்கரர் என்றறிந்து அவரைத் திருமடைப்பள்ளிக் கைங்கர்யத்திலே நியமித்து மீண்டெழுந்தருளினார். அன்றுமுதலாக ஆச்சானே ஸ்வாமி திருவுள்ளத்திற்குப் பாங்கான பரிசாரகராக இருந்துவந்தார். வேதாந்த வாசிரியர் 'எதிவரனார் மடைப்பள்ளி வந்த மணமெங்கள் வார்த்தையுள் மணனியதே'' என்ற பாசுரத்தினாலும் *இதி யதிராஜ மஹாநஸ பரிமள பரிவாஹவாஸிதாம்* என்ற ச்லோகத்தினாலும் இவ்வரலாற்றை ஸூசிப்பித்தருளினார்.

**226. யஜ்ஞமூர்த்தியைத் திருத்தி அருளாளப்பெருமாளெம்பெருமானாக ஆட்கொள்ளுதல் :** யஜ்ஞமூர்த்தி யென்னுமொரு மாயாவாதி ஸம்ந்யாஸி எம்பெருமானருடைய வைபவங்களைக் கேட்டு அவரோடே தர்க்கித்து வெற்றிபெற வேணுமென்று விரும்பிக் கோயிலிலே ஸ்வாமி மடத்திலே வந்து ஸேவித்து 'நான் கேட்கிற கேள்விகளுக்கெல்லாம் நீர் விடைகூறவேணும்; த்ருப்திகரமாக விடைபெற்றேனாகில் உமக்கு சிஷ்யனாகக்கடவேன்' என்று சொல்ல ஸ்வாமியும்

இசைந்தருள, பதினேழு நாள்வரையில் வெற்றி தோல்வியின்றியே வினாவிடை செல்லாநிற்க, முடிவில் உத்தரமருளிச் செய்யவேண்டிய பொறுப்பு ஸ்வாமிபக்கலிலே வந்துநின்று விஷயம் தோன்றாமேயிருக்கையில் நாளைக்கு ஆகிறது' என்று சொல்லி ஸபாவிஸர்ஜநமாயிற்று. பிறகு ஸ்வாமியின் திருவுள்ளம் மிகவும் வியாகுலப்பட்டு, தம் திருவாராதனமான பேரருளாளரைத் திருவடி விளக்கி அமுது செய்யப்பண்ணி 'ஆழ்வார் தொடங்கி ஆளவந்தாரளவாக இத்தனை காலம் ஒரு குறையுமின்றியே விளங்கிவந்த இந்த தரிசனம் இன்று அடியேனால் பங்கமடையக் கடவதோ? இப்படியும் ஒரு லீலை கொண்டாடத் திருவுள்ளமாயிற்றோ?' என்று விண்ணப்பஞ் செய்து தாம் அமுது செய்யாமலே கண்வளர்ந்தருளினார்.

227. அன்றிரவு பேரருளாளர் கனவிலே யெழுந்தருளிக்காட்சி தந்து மாயாவாதியின் வாயடங்கும்படியான சில அர்த்த விசேஷங்களை ஸ்புரிக்கச்செய்து மறைய, ஸ்வாமியும் சிற்றஞ் சிறுகாலே யெழுந்து பரமஸந்துஷ்டராய் நித்யாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ப்ரஸன்ன கம்பீரராய் விசாரகோஷ்டிக்கு எழுந்தருள, அவ்வளவிலேயே யஜ்ஞமூர்த்தி இன்று நமக்குத் தோல்வியே திண்ணமென்று நிச்சயித்து அப்போதேயெழுந்து ஸ்வாமி திருவடிகளிலே ஸாஷ்டாங்க ப்ரணாமம் பண்ணி நின்று 'அடியேனை அங்கிகரித்தருளவேணும்,' என்று கைகூப்பிப் பிரார்த்திக்க, மேலே விஷய விசாரம் நடைபெறவேண்டியிருக்க இதுவென்?' என்று ஸ்வாமி கேட்க; அதற்கு யஜ்ஞமூர்த்தி "ஸ்வாமின்! தேவரீருக்குப் பெரியபெருமாள் ப்ரத்யக்ஷமானபின்பு தேவரீரென்றும் பெருமாளென்றும் வாசியுண்டோ? இனி அடியேன் தேவரீர் ஸந்நிதியில் வாய்திறந்து ஒரு வார்த்தை சொல்ல ப்ராப்தியில்லை; இந்த ஆத்மா இதுவரையில் அநர்த்தப் பட்டது போதும்; இனியும் அநர்த்தப்படாதபடி நோக்கியருளவேணும்" என்று கனக்க ப்ரார்த்தித்து ஸ்வாமியின் இசைவும் பெற்று அப்போதே ஏகதண்டத்தை முறித்தெறிந்து ப்ராயசித்த பூர்வகமாய் சிகாயஜ்ஞோபவீதங்களையும் பஞ்சஸம்ஸ்காரங்களையும் பெற்று முக்கோல்பிடித்த முனியாகி சாஸ்த்ரப்படி ஆசார்யனுடைய நாமத்தையே வஹிக்க விரும்பி பிரார்த்தித்தார்.

228. ஸ்வாமியும் பேரருளாளனுடைய ப்ரஸாதமடியாகவே இவர் ஆட்பட்டாரென்கிற உபகார ஸ்ம்ருதி உலகப்ரஸித்தமாம்படி அருளாளப் பெருமாளெம் பெருமானார் என்று திருநாமம் சாத்தியருளினார். உடனே அவரை யழைத்துக் கொண்டு போய்ப் பெரியபெருமாளை ஸேவிக்கப்பண்ணிச் சிறப்புகளும் பெறுவித்து, அன்று முதலாகவே திருப்பல்லாண்டு தொடங்கி நாலாயிரமும் ஓதுவித்து, மற்றும் தத்வசிக்ஷைகளும் செய்தருளினார்.

229. அக்காலத்திலே, அனந்தாழ்வான் எச்சான், தொண்டனூர்நம்பி, மருதூர் நம்பி என்றுமிவர்கள் எம்பெருமானார் திருவடிகளிலே ஆச்ரயிக்க வேணுமென்று வர, ஸ்வாமி அவர்களை அருளாளப் பெருமாளெம்பெருமானார் திருவடிகளிலே ஆச்ரயிப்பித்தருளினார் அப்போது அவர் அஞ்சி நடுங்கி அவ்வடியார்களை நோக்கி "குரங்கின் கழுத்திலே பனங் காயைக் கட்டினாற்போலே ஸ்வாமி செய்தருளினாராகிலும், நீங்கள் ஸ்வாமிதிருவடிகளே சரண மென்றிருங்கள்" என்று நியமித்தருளினார்.

230. அனந்தாழ்வான் திருமலையில் வழுவிலாவடிமைக்கு நியமனம் பெறுதல்: எம்பெருமானார் பகவத் விஷய காலக்ஷேபம் நடத்தி யருளுகையில் *ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி யென்கிற திருவாய்மொழி நடவாநிற்க, கோஷ்டியில் திருமுன்பேயிருந்த சிஷ்யர்களை நோக்கி ஆழ்வார் *திருவேங்கடத் தெழில்கொள் சோதி யெந்தை தந்தை தந்தைக்கு ஒழிவில் கால மெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்* என்று பாரித்த குறைதீரத் திருவேங்கட முடையான் பரிஸரத்திலே யிருந்து நித்ய கைங்கர்யம் பண்ண விருப்பமுடையார் ஆரேனுமுளரோ?' என்று வினவியருள, *குளிரருவி வேங்கடமாகையாலே எல்லாரும் குளிர்க்கு அஞ்சி விடை கூறாதிருக்க, அனந்தாழ்வான் எழுந்து அடியேனுக்கு நியமித்தருள வேணும்' என்றார். அதுகேட்டு உகந்த எம்பெருமானார் நீரொருவரே ஆண்பிள்ளை என்று பேரவும் கொண்டாடித் தழுவியருளி விடை கொடுத்தருளினார்.

231 அது முதலாக அனந்தாண்பிள்ளை என்று அவர்க்கு ப்ரஸித்தியாயிற்று. அன்றே அவர் திருமலைக்கு விடைகொண்டு திருவேங்கடமுடையானைத் திருவடி தொழுது திருநந்தவனஞ் செய்து அதற்கு இராமாநுசன் என்று திருநாமஞ்சாத்தி அநேகவிதமான கைங்கரியங்களை அற்புதமாக நடத்திக் கொண்டிருக்கையில் அதை நேரில் கண்டு மகிழவேணு மென்கிற திருவுள்ளம் எம்பெருமானார்க்குண்டாக பகவத்விஷய காலக்ஷேபத்தை விரைவாக நடத்திச் சாத்தியருளினார்.

232. உடையவர் திருமலையாத்திரையும் திருமலைநம்பியிடம் ஸ்ரீராமாயணம் கேட்டலும் : பெருமாள்கோயில் திருமலை முதலான சில திருப்பதிகளை ஸேவித்துவரப் பெரிய பெருமாளிடத்தில் விடைபெற்றுக்கொண்டு சிஷ்யவர்க்கங்களுடனே புறப்பட்ட எம்பெருமானார் வழியடைவே திருப்பதிகளையெல்லாம் தொழுதுகொண்டு திருமலையடிவாரத்தே திருப்பதியிற் சேர்ந்து திருமலையை மிதித்தேறத் திருவுள்ளம் பற்றாமல் கீழேயேயிருந்து விடுவதாகத் திருவுள்ளம்பற்றி யிருக்கையில் அனந்தாழ்வான் முதலானோர் இதையறிந்து வந்து இப்படியும் திருவுள்ளம் பற்றலாமோ? நாங்களும் இனித் திருமலையை விட்டு இங்கேதான் படுகாடு கிடக்க வேண்டும் போலும்' என்ன; அதையே திருமலையப்பனுடைய வியமனமாகக்கொண்டு புறப்பட்டுத் திருமலைமேலெழுந்தருளிக் கோனேரியிலே நீராடி அப்பனைக் கண்களாரளவும் நின்று ஸேவித்து அனந்தாழ்வானுடைய திருப்பணிகளையும் கடாக்ஷித்து உள்ளம் பூரித்து "வளர்த்த தனால் பயன்பெற்றேன் வருகவென்று அவரை மிகவுகந்து மூன்றுநாள் அவ்விடத்தில் அமுது செய்யாமலே யெழுந்தருளியிருந்து விடைபெற்றுக்கொண்டு கீழேயிறங்கி மாதுலரான திருமலை நம்பி திருமாளிகையிலேயே ஒரு ஸம்வத்ஸரமிருந்து :இதிஹாஸச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தின் விசேஷார்த்தங்களை அதிகரித்தார்,

233 உடையவர் எம்பாரைப் பெற்றுக்கொண்டு காஞ்சீபுரி வருதல் : உடையவர் ஸ்ரீ ராமாயண காலக்ஷேபம் முடித்துப் புறப்படுகையில் மாதுலரான திருமலை நம்பி உவவப்பின் மிகுதியினால் இவர்க்கு ஏதாவது கொடுக்கவேணு மென்கிற பாரிப்புத்தோற்ற இருக்கையில் அதனையறிந்த உடையவர் 'ஸ்வாமிக்கு அடியேன் ஸமர்ப்பிக்க வேண்டியதுபோக, அடியேனுக்கு ஸ்வாமி கொடுப்பதென்று ஒன்றுண்டோ? அப்படி ஒன்று கொடுக்கத் திருவுள்ளமாகில் நம் கோவிந்தப் பெருமானைத் தந்தருள வேணும்' என்று விண்ணப்பஞ் செய்ய; நம்பியும் அதற்கிசைந்து உடனே கோவிந்தப் பெருமானை (எம்பாரை) அழைத்து கோவிந்தா! இனி நம்முடையவரை அநுவர்த்தித் திருப்பாயாக' என்று சொல்லி உதகதாரா பூர்வமாகக் கொடுத்தருளினார். வெகு ஆனந்தத்துடன் உடையவர் அவரைக் கூட்டிக் கொண்டு திருக்கடிகை முதலான திவ்ய தேசங்களை ஸேவித்துக்கொண்டு கச்சிப்பேரருளாளன் திருவடிவாரத்தில் வந்து சேர்ந்தார்.

234 எம்பார் திரும்பவும் திருப்பதிக்குச் சென்று மீளுதல் : கோவிந்தப் பெருமானுடன் கச்சியில் வாழ்ந்திருக்கையில், ஸ்வாசார்யரான திருமலை நம்பியைப் பிரிந்த கிலேசத்தினால் உடம்பு வெளுத்து முகம் உருவியிருந்தார் கோவிந்தர், அதுகண்ட உடையவர் அவருடைய கருத்தை யறிந்து 'கோவிந்தரே! திருப்பதிக்குச் சென்று நம்பியை ஸேவித்து வாரும்' என்று இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்களைக் கூட்டி யனுப்பிவிட்டுத் தாம் திருக்கச்சி நம்பியுடனே பேரருளாளனை ஸேவித்துக் கொண்டிருந்தார். திருப்பதிக்குச் சென்ற எம்பார் அங்குத் திருமலைநம்பி திருமாளிகை வாசலிலே தெண்டன் ஸமர்ப்பித்துநிற்க, அங்குள்ளார் அவரைக்கண்டு உள்ளே சென்று நம்பிக்கு அறிவிக்க, அவரும் திருவுள்ளங் கலங்கி 'பித்தனைப் போகச் சொல்லுங்கோள்' என்ன: 'இத்தனை தூரம் சிரமப்பட்டு வந்தவரை யழைத்து ஸேவையும் ஸ்ரீபாத தீர்த்தமும் தளிகை ப்ரஸாதமும் தந்தருள வேண்டாவோ?' என்று தேவிகள் சொல்லவும் 'விற்ற பசுவுக்குப் புல்லிடுவாருண்டோ? என்று சொல்லி விமுகராயேயிருந்து விட்டார் • நம்பிகள். இப்படியாகவே கோவிந்தப்பெருமாள் அங்கு நசையற்றுத் திருவாசலிலே தெண்டனிட்டு அந்த ஸ்ரீவைஷ்ணவர்களிருவரோடு கூடவே பெருமாள் கோயிலில் உடையவரிடம் வந்து

சேர நாளடைவில் எல்லாருமாய்த் தென்னரங்கம் சென்று சேர்ந்தனர். கோவிந்தப்பெருமாள் வைராக்யம் முற்றி ஸம்ந்யாஸாச்ரமத்தை ஸ்வீகரித்து ஆசார்யருடைய நாமைகதேசமாக எம்பார் என்கிற திருநாமத்தைப் பெற்று உபய வேதாந்த க்ரந்த பரிச்ரமத்திலே தலை சிறந்து வாழாநின்றார்.

**235. ஸ்ரீபாஷ்யமருளிச்செய்ய முயலுதல் :** எம்பெருமானார் ப்ரஹ்மஸூத்ரத்திற்கு ஸ்ரீபாஷ்யம் ஸ்வாமி செய்தருளி ஆளவந்தார் திருவுள்ளக் குறையை நீக்கக்கருதி அதற்காக பகவத் போதாயந மஹர்ஷியின் வ்ருத்தி க்ரந்தத்தைக் கடாக்ஷிக்கத் திருவுள்ளமாய் அந்த ஸ்ரீகோசம் காச்மீர மண்டலத்தில் சாரதாபீடத்தி லுள்ளதென்றுணர்ந்து ஆழ்வான் முதலானோரையுங்கூட்டிக்கொண்டு யாத்திரை யடைவிலே அங்கேற எழுந்தருளித் தம்முடைய வைபவங்களைக்காட்டி வசீகரிக்கப்பட்ட ஸரஸ்வதீ பாண்டாரத் தலைவரிடத்தில் நின்றும் அந்த போதாயந வ்ருத்திக்ரந்தத்தை வாங்கி அங்கேயிருந்து கடாக்ஷித்துக்கொண்டிருந்தார். மஹாமேதாவியான ஆழ்வானும் தாம் ஒருபக்கத்தில் வீற்றிருந்து இரண்டாவது அத்யாயம் முதலாக மேலுள்ள பகுதியை யெல்லாம் கடாக்ஷித்து நெஞ்சில் தேக்கிக் கொண்டார். உடையவர் முதலத்யாயம் கடாக்ஷித்துத் தலைக்கட்டினவுடனே அங்குள்ள புறமதத்து வித்வான்களின் துர்ப்போதனையினாலே மனம் மாறின ஸரஸ்வதீ பாண்டாரத் தலைவர் அந்த ஸ்ரீகோசத்தை நிர்ப்பந்தித்துவாங்கி உள்ளே வைத்திட, குறையும் காணப்பெற்றிலோமே! என்று உடையவர் சிந்தித்திருக்க அதுகண்ட ஆழ்வான் மேற்பகுதிகளைத் தாம் பார்த்துத் தரித்துக்கொண்டிருக்கிறபடியை விஜ்ஞாபித்து ஸ்வாமியைத் தேற்றினார். பிறகு பயணகதியிலே தென்னரங்கத் திருப்பதி சேர்ந்து ஆழ்வானை உசாத்துணையாகக் கொண்டு ஸ்ரீபாஷ்யமிட்டருளித் தலைக் கட்டினார் இதற்கு ஸங்க்ரஹமாக வேதாந்த தீபம், வேதாந்த ஸாரம் என்னுமிரண்டு க்ரந்தங்களையு மருளிச்செய்தார்.

**236. சோழ ராஜனுடைய உபப்லவத்திற்கு அஞ்சி ஸ்வாமி மேல்நாட்டுக்கெழுந்தருளல் :** ஆழ்வான் உடையவர்க்கு உசாத் துணையாயிருந்து தர்சந நிர்வாஹம் பண்ணியருளுகிற காலத்திலே, ராஜேந்த்ர சோழபுரத்தில் அரசாண்டுவந்த குலோத்துங்க சோழ ராஜன் துஷ்ட சைவனுகையாலே கள்ளப் பொய்ந் நூல்களை மெய்ந்நூலாகக் கொண்டு தானும் தன் புரோஹிதனுமாக நாட்டிலுள்ள வித்வான்களை யெல்லாந் திரட்டி "சிவாத் பரதரம் நாஸ்தி" என்று எழுத்திடச் சொல்லி நிர்ப்பந்திக்க, சிலர் அவனுக்கு அஞ்சியும் சிலர் பொருட்கும் பூமிக்கு மாசைப்பட்டும் அப்படியே யெழுத்திட்டார்கள். அப்போது அவ்வரசனிடத்துச் சிறிது மேன்மை பெற்றிருந்த நாலூரான் என்னுமொரு வைஷ்ணவன் அவ்வரசனை நோக்கி எங்களிராமாநுசன் எழுத்திட்டாலன்றோ எழுத்திட்டதாவது; மற்றையோர் இட்டாலென்ன? இடாவிடிலென்ன? என்று கூற, அதுகேட்ட அரசனும் அப்போதே இராமாநுசனை யழைத்து வரும்படி ஆள்களை அனுப்பினான்.

**237.** அவர்களும் உடையவர் மடத்தேறச் சென்றவளவிலே இந்தச் செய்தியை யுணர்ந்து ஆழ்வான் "ஸ்வாமி ராஜசபைக்கு எழுந்தருள்வராகில் அவர்க்கு அங்கு ஏதாவது அபாயம் விளையக் கூடும்; உலகுக்கெல்லாம உயிரான அவரைக் காட்டிக் கொடுக்கத் தகாது; நாமே அவருடைய கோலம் பூண்டு ஸபைக்குச் செல்வோம்; கெடுதல் ஏதாவது நேர்ந்தாலும் நம்மோடே போகட்டும் என்று கருதி, அப்போது எம்பெருமானார் நீராட்டத்திற் கெழுந்தருளி யிருப்பதறிந்து அவருடைய காஷாயத்தையும் த்ரிதண்டத்தையும் தரித்துக்கொண்டு அந்த ராஜபுருஷர்களுடனே போகப் புறப்படும்போது பெரிய நம்பியும் சில முதலிகளும் தாமுங் கூடவருவதாகப் புறப்பட, அவர்களுடன் ஆழ்வான் ராஜ ஸபைக்கெழுந்தருளினர்.

**238.** பிறகு உடையவர் நீராட்டஞ் செய்தெழுந்தருளி த்ரிதண்ட காஷாயாதிகளைத் தேடின வளவிலே 'கூரத்தாழ்வான் தரித்துக்கொண்டு ராஜ புருஷர்களுடனே யெழுந்தருளினார்' என்று முதலியாண்டான் விண்ணப்பஞ் செய்ய, ஆகில் அவருடைய வெள்ளையைத் தாருங்கள்

என்று ஆழ்வானுடைய திருப்பரிவட்டத்தை வாங்கித் தாம் சாத்திக்கொண்டு ஆழ்வானுக்கும் பெரியநம்பிக்கும் என்ன நேருமோவென்று சிந்தித்துத் துவண்டிருக்க 'இனி ஸ்வாமி இவ்விடத்திலெழுந்தருளியிருக்கை உசிதமன்று, என்று அனைவரும் விஜ்ஞாபிக்க, உடையவரும் உடனே புறப்பட்டெழுந்தருளித் திருநாராயணபுரம் சேர்ந்தார்.

239. [எம்பெருமானார் காலத்திலேயே யெழுந்தருளியிருந்த ப்ராமாணிக பண்டித சிகாமணியான கருடவாஹந பண்டிதர் செய்தருளின திவ்யஸூரி சரிதத்தில் பதினெட்டாம் ஸர்க்கத்திலும், எம்பெருமானார்க்கு அந்தரங்கச் சேவகராயிருந்த வடுகநம்பி பணித்த யதிராஜ வைபவத்தின் தொண்ணூற்றைந்தாம் சுலோகத்திலும் இக்கதை விளக்கமாக வுரைக்கப்பட்டிருத்தலால் இதில் யார்க்கும் விப்ரதிபத்தியுண்டாகக் காரணமில்லை. உடையவர்க்குத் தெரியாமலே ஆழ்வான் ஸ்வபுத்தியாலே த்ரிதண்ட காஷாயங்களைத் தரித்து ஸபைக்கெழுந்தருளின தாகவும், சோழ ராஜனிடத்தில் நின்றும் ஆட்கள் வந்தவுடனே எம்பெருமானார் ஆழ்வான் ஆண்டான் முதலானோர் பலருங் கூடிக் கலந்து யோசித்து உடையவர் வெள்ளை சாத்திக்கொண்டு வெளியேறிவிட வேண்டியதென்றும் ஆழ்வான் யதிராஜ வேஷம்பூண்டு ஸபைக்கெழுந்தருள வேண்டியதென்றும் நிஷ்கர்ஷிக்கப்பட்டு அப்படி நடந்ததாகவும்—இங்ஙனே இரண்டுவகையாக நூல்களிற் காணப்படுவதுண்டு. இவ்விரண்டு வகையும் ஸம்பாவிதமேயாகையால் இவற்றில் விப்ரதிபத்திக் கிடமில்லையென்க.]

240. ராஜ ஸபையில் நடந்த செய்திகளும் பின்னடந்த செய்திகளும்: ஆழ்வானும் பெரியநம்பியும் சோழராஜன் ஸதஸ்ஸிலேயெழுந்தருளின பிறகு அங்கு விசேஷமாக சாஸ்த்ர விசாரங்கள் நடைபெற்று 'சிவாத் பரதரம் நாஸ்தி' என்ற ராஜவாக்யத்தின்மீது இகழ்ந்துரைக்கப்பட, சோழன் கடுஞ்சினத்தனாய் 'இவ்விருவருடைய கண்ணையும் கீண்டு விடுங்கள்' என்று சேவகர்கட்குக் கட்டளையிட, ஆழ்வான் சோழனைக்குறித்து 'நீ மஹாபாதகியாகையால் உன்னைப் பார்த்த கண்கள் எனக்கு ஆகாது' என்று சொல்லித் தாமே தமது திருவுகிர்களாலே தீண்டிக் கண்ணை வாங்கியெறிய, பின்பு ராஜ ஸேவகர்கள் பெரியநம்பியைப் பிடித்துக்கொண்டு போய்ச் சோழன் சொற்படி செய்து ராஜத்வாரத்தில் நின்றும் புறப்படவிட, ஆழ்வான் தர்சநத்துக்காக தர்சனம் கொடுக்கப் பெற்றோமே!' என்று மகிழ்ந்திருக்க, பெரியநம்பி வ்ருத்தராகையாலே அவ்வேதனை பொறுக்கமாட்டாமல் அங்கேயொரு கொல்லைத் தலைமாட்டிலே 'ஆழ்வான் மடியிலே திருமுடியும் தம் திருமகளான அத்துழாய் மடியிலே திருவடிகளுமாய் இளைத்துக் கண்வளர்ந்தருளி ஆளவந்தார் திருவடிகளை த்யானித்துக்கொண்டு அங்கே திருநாட்டுக் கெழுந்தருளினார்.

241. பின்பு ஸ்ரீபராந்தகபுரமென்னும் அக்ரஹாரத்தில் நின்றும் வந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் பெரியநம்பியை அங்கே ஸம்ஸ்கரித்துத் திருப்பள்ளிப்படுத்து ஆழ்வானை எழுந்தருள்வித்துக் கொண்டுபோய்த் தங்கள் ஊரிலே யிருத்தித் திருக்கண் வேதனை தீருமாறு சிலகாலம் உபசரித்துப் பிறகு திருவரங்கம் பெரிய கோயிலிலே கொண்டு சேர்த்தார்கள். தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்த எம்பெருமானாரைப் பிரிந்து அங்கே வாழகில்லாமல் கோயில் வாஸத்தை விட்டிட்டுத் திருமாலிருஞ்சோலையில் வாஸத்தை விரும்பிப் பயணகதியாகப் புறப்பட்டெழுந்தருளினார். வழியிடையே எழுந்தருளும்போது தம்முடைய மனத்துயரங்கள் நினைவுக்கு வாராதிருக்கும்படி எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளை நினைந்து நெஞ்சு கனிந்திருக்கக் கருதி ஸ்ரீவைகுண்ட ஸ்தவம் அதிமாநுஷஸ்தவம் என்ற அற்புதமான இரண்டு ஸ்தோத்ரங்களையருளிச் செய்துகொண்டே திருமாலிருஞ்சோலைக்கெழுந்தருளி அங்கே பல வாண்டுகளெழுந்தருளியிருந்து ஸுந்தரபாஹுஸ்தவமும் அருளிச்செய்தார். அவ்வளவிலே அந்த மஹாபாதகியான சோழன் கழுத்திலே புண்ணுகிப் புழுத்து மாண்டானென்ற செய்தி கேள்விப்பட்டு ஆழ்வான் அழகர் ஸந்நிதியிலே விடைபெற்று மீண்டும் கோயிலேறவெழுந்தருளினார்.

**242** எம்பெருமானார் மேல்நாட்டில் பன்னிரண்டு ஸம்வத்ஸரமளவும் எழுந்தருளியிருந்து அவ்விடத்தில் திருநாராயணனைத் திருப்ரதிஷ்டை செய்தருளியும், ஐம்பத்திருவர் என்னும் ஸ்ரீவைஷ்ணவ வகுப்பை நியமித்தருளியும், மற்றும் பலபல அதிமாநுஷக்ருத்யங்களைச் செய்தருளியும், திருநாராயணனுக்கு ஆழ்வார் பாடல் இல்லையென்கிற குறை தோன்றாதபடிக்கு *திருநாரணன்தான் காலம் பெறச்சிந்தித்துய்மினோ* என்னுமடியைக்கொண்ட *ஒரு நாயகப் பதிகத்தை ஸமர்ப்பித்தருளியும், அவ்வளவிலே மஹாபாதகியான சோழன் புழுத்துமாண்டு திருவரங்கச் செல்வம் குறையற்றிருப்பதைக் கேட்டருளி ஸ்ரீரங்கத்திற்குப் புறப்பட்டருளினதும் முதலான வைபவ விஸ்தாரங்கள் ஸ்ரீ ராமாநுஜார்ய திவ்ய சரிதையிலும் மற்றும் பலபல வைபவக்ரந்தங்களிலும் காணத்தக்கன.

**243 எம்பெருமானார் மேல்நாட்டில் நின்று கோயிலுக்கெழுந்தருளி ஆழ்வானை உசாவுதல்:** சோழனுடைய உபப்லவங்களுக்கு அஞ்சி மேல் நாட்டுக்கெழுந்தருளியிருந்த எம்பெருமானார், கோயிலில் நின்றும் அங்குவந்த ஒரு ஸ்ரீ வைஷ்ணவராலே—சோழராஜ ஸதஸ்ஸில் ஆழ்வானுக்கும் பெரியநம்பிக்கும் நேர்ந்த ஆபத்தைக் கேள்விப்பட்டுச் சாலவும் திருவுள்ளம் நொந்து ஆழ்வானாகிலும் உயிர்வாழ்ந்திருக்கப் பெற்றோமே' என்று திருவுள்ளம் தேறி, அப்போது தம்மிடத்தில் கைங்கரியம் செய்துகொண்டிருந்த மாறொன்றில்லா மாருதிச் சிறியாண்டானை 'மிகவும் விரைவாகக் கோயிலுக்குச் சென்று ஆழ்வானையும் ஆராய்ந்து அங்குள்ள விசேஷங்களையும் அறிந்து வாரும்' என நியமித்தருள, அவரும் மிக விரைந்து கோயிலுக்கு வந்து சோழன் புழுத்து மாண்ட செய்தியுட்பட எல்லாவற்றையும் ஆழ்வான் ஸந்நிதியிலே அறிந்துகொண்டு மீண்டு திருநாராயணபுரம் போய் எம்பெருமானார் திருவடிகளிலே இவற்றை விண்ணப்பஞ்செய்ய, அதுகேட்டு அவர் பெருமகிழ்ச்சி கொண்டு உடனே அங்கு நின்றும் புறப்பட்டுக் கோயிலுக்கெழுந்தருளி முதலிகளுடன் ஆழ்வான் திருமாளிகைக் கெழுந்தருள, ஆழ்வானும் எதிரேயெழுந்தருளி உடையவர் திருவடிவாரத்திலே வேரற்ற மரம்போலே விழுந்து ஸேவித்துத் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு கிடக்க, உடையவரும் ஆழ்வானை யெடுத்தணைத்துக் கொண்டு சோகவேகத்தாலே ஒரு வார்த்தையும் அருளிச்செய்யமாட்டாமல் உள்ளெலாமுருகிக் குரல் தழுத்து 'வாரீர் ஆழ்வான்! இத்தர்சனத்திற்கு த்ருஷ்டி பூதரான உமக்கு இப்படி கண்போவதே! இது என்னுடைய தீவினையின் பயனன்றோ?' என்றிப்படி பலவாறாக அருளிச்செய்து ஆழ்வானைத் தேற்றி, பண்டுபோலே திருவரங்கச் செல்வத்தை வளர்த்துக்கொண்டு வாழ்ந்து வந்தார்.

**244 திருமலையப்பனுக்குத் திருவாழி திருச்சங்கு அளித்தது:** பண்டொரு காலத்தில் திருவேங்கடமுடையான் தன் பக்கல் பரமபக்த சிகாமணியாயிருந்த தொண்டைமான் சக்ரவர்த்திக்கு ஒரு காரணார்த்தமாகத் தன் திருவாழி திருச்சங்குகளைத் தந்தருளி, இப்படி ஆச்ரித பக்ஷபாதத்தாலே தனது திவ்யாயுதங்களையும் தந்து உபகரிக்கும் ஔதார்யகுணம் உலகில் பரவுவதற்காகச் சிறிதுகாலம் ஸுதர்சநபாஞ்சஜந்ய சூந்யனாகவே இருந்திட்டான். அக்காலம் கலியின் கொடுமையால் வர்ணாச்ரம தர்மங்கள் குலைந்து தேவாலயங்களும் சீர்கெட்டுப் பாஷண்டிகள் தலையெடுக்கும் காலமாயிருந்தது, திருமலையில் அர்ச்சகர்களாயிருந்த வைகாநஸர்கள் எம்பெருமானுக்கு முறைப்படி உபசாரங்கள் பண்ணாமல் அச்ரத்தை காட்டியிருந்த காரணத்தினால் தேசாதிபதியான யாதவராஜனால் அடிக்கடி தண்டிக்கப்பட்டு அங்கு வாழவில்லாமல் வெளிநாடு சென்றனர்; வ்ருத்தர்களாயிருந்த அர்ச்சகர்கள் இங்ஙனம் ஒருவரொருவராக வெளியேற ப்ரபலர்களான ஸ்ரீவைஷ்ணவர்களும் இங்கு இலராக, விரல் நுழைக்க இடம் தேடிக் கொண்டிருந்த சைவர்கள் இதுவே நல்ல சமயமென்று கொண்டு அந்த யாதவ மன்னன் பக்கல்சென்று அவனுடைய ப்ரீதியைச் சிறிது சிறிதாக ஸம்பாதித்து ஒருநாள் அவனிடம் சொன்னார்கள். திருமலையில் ஸ்வாமிபுஷ்கரிணியின் தென்கரையில் திகழும் தேவன் முருகக் கடவுள்தான்; அவர்க்குக் குமாரசாமியென்னும் பெயர் வழங்குவதுண்டாகையால் அந்த நாமைகதேசத்தையிட்டு ஸ்வாமி புஷ்கரிணியென்று அத்தடாகம் வழங்கப்

பெற்றது: ஸ்ரீ வேங்கடாசல மாஹாத்மியம் கூறவந்த வாமன புராணப் பகுதியில் இரண்டாவது அத்யாயத்தில் ஸ்ரீப்ரஹ்மண்யன் வேங்கடமலையில் ஒரு குளத்தின் கரையில் தவம் புரிந்து கொண்டிருந்தானென்று சொல்லப்பட்டிருத்தலாலும் அப்பெருமான் முருகக்கடவுளே. அவர்க்கு அஸாதாரண ஆயுதங்களானபாசமும் அங்குசமும் தவநிலைக்கு உரியவையல்லாமையால் தரிக்கப்படவில்லை. இன்னும் பல ஹேதுக்களாலும் அம்மலை சைவக்ஷேத்ரமே யாம். இப்போதுதான் சிறிது காலமாகச் சில வைஷ்ணவர்கள் கூடிப் புராணார்த்தங்களை மனம் போனபடி சொல்லி அப்பெருமான் விஷ்ணுவேயென்றுரைத்து ராஜாவை வசப்படுத்திக் கொண்டு சில வைஷ்ணவ விக்ரஹங்களையும் கோவிலில் ஸ்தாபித்து உத்ஸவங்களை நடத்தத் தொடங்கினார்கள். உண்மையில் இது சைவ க்ஷேத்ரமாகையால் சைவ விதிப்படி இனி இக்கோவிற் காரியங்கள் நடைபெறுமாறு மஹாப்ரபு செங்கோல் செலுத்தவேணும்" என்றார்கள்.

245. இதைக்கேட்ட அவ்வரசன் இந்த சைவர்கள் சொல்லுவதெல்லாம் அநுபவ விருத்தமாயிருக்கின்றதே: ஆராயாமல் நாம் எதையும் ஸாஹஸமாகச் செய்துவிடக் கூடாது; தக்கபடி ஆராய்ச்சி செய்யவேணும் என்றெண்ணியிருந்தான். அக்காலத்தில் அங்கு நிபுணர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் யாருமில்லாமையால் ஸாமாந்யராயிருந்த சிலர் திருவரங்கம் பெரிய கோயிலில் மிக்க சிஷ்யஸம்பத்துடனே எழுந்தருளியிருந்த எம்பெருமானார்க்கு இச்செய்தியை அறிவித்தனர். இச்செய்தியை அறிந்த உடையவர் கடுநடையாகத் திருப்பதிக் கெழுந்தருளி ஸம்சயாக்ராந்தனாயிருந்த அரசனை நோக்கி, "சைவர்களால் உனது நெஞ்சில் உண்டாக்கப் பட்ட சங்காகளங்கத்தை நீக்கி உன்னைத் தெளிவிப்பதற்காகவே நெடுந்தூரத்தில் நின்றும் இங்கே வந்தோம்; உனக்குப் பரிபூர்ண த்ருப்தி உண்டாகும்படி யாம் தெளிவாகச் சொல்ல வல்லோம்; கேளாய் கொற்றவனே!" என்று சொல்லத்தொடங்கினர்.

246. அவ்வரசன், முன்பு கொக்கரித்த சைவர்களையும் வரவழைத்து பெரிய ஸபையாக்கி சைவ வைஷ்ணவர்களுக்கு வாதயுத்தம் நடக்குமாறு நியமித்துத் தான் தடஸ்தனாயிருக்க, வெகு காலம்வரை வாதப்போர் நடந்ததில் சைவர்களுடைய துர்வாதங்களையெல்லாம் எம்பெருமானார் ப்ராமாணிகமாகக் கண்டித்து வெற்றி பெற்று விளங்கினார்.

247. [இந்த வாதப்ரதிவாதங்களின் விவரணம் திருமலையனந்தாழ்வான் பணித்த ஸ்ரீவேங்கடாசலஇதிஹாஸமாலையில் அறுபத்தைந்து பக்கம் நிறையப் பெரிய வாக்யார்த்த ஸரணியில் குறிப்பிட்டுள்ளன; அங்கே கண்டுகொள்வது] எம்பெருமானாருடைய அற்புதமான உபபாதனங்களைக் கேட்ட மன்னவன் கலக்கம்நீங்கி மிக்க தெளிவுபெற்று, திருவேங்கடமலை விஷ்ணுக்ஷேத்ரமே யென்றும் அங்குள்ள பெருமான் திருமாலே யென்றும் அறுதியிட்டு "இந்த ஸ்ரீராமாநுஜர் ஸாமாந்ய புருஷரல்லர்; அவதார புருஷரேயாவர்; இவர் மனம் வைத்தால் அதிமாநுஷமான காரியங்களையும் செய்து ஸர்வஜனங்களுக்கும் திண்ணிய நம்பிக்கை யுண்டாகும்படி செய்யவும் வல்லவர்; அங்ஙன் செய்ய இவரை வேண்டிக்கொள்வோம்" என்றெண்ணி, ஸ்வாமின்! யோகீச்வரரே!! தேவரீர் நிரூபித்துக்காட்டிய சாஸ்த்ரார்த்தங்களைக் கேட்டுப் பரமானந்தமடைந்தேன்; திருமாலே திருமலைக்கு இறைவர் என்று நன்கு துணிந்தேன்; ஸம்சயலேசமுமில்லாமல் இக்கெனத் தெளிவுபெற்றேன்; ஆயினும் மஹாபுருஷராயும் அதிமாநுஷ சேஷ்டிதராயுமிராநின்ற தேவரீர், பண்டிதரோடு பாமரரோடு வாசியற எல்லாரும் தெளியுமாறு ஸமாதாநோபாயம் ஏதாவது செய்தருளக் கூடுமேல் நன்று" என்று கைகூப்பி விண்ணப்பஞ் செய்தான்.

248. அதனைக்கேட்ட எம்பெருமானார் புராணப் பொருள்களைப் பலவாறாக எடுத்து உபந்யஸித்துக் காட்டினவளவிலும் இவ்வரசனுடைய மனம் பரிபூர்ண த்ருப்தியை அடையவில்லைபோலும்; அதிமாநுஷமானதொரு கார்யம்செய்து காட்டவேணுமென்கிறான்: ஆயிடுக; இங்ஙனே செய்வோம்;—

249. ப்ரஹ்மாண்ட புராணத்தில் பதினோராவது அத்யாயத்தில் எம்பெருமான் தானே சோதிவாய் திறந்து பிரதிஜ்ஞை செய்தருளியிருக்கிறபடியே கலியுகத்தில் விமான மண்டபாதிகளைப்போல் சங்கு சக்கரங்களையும் பக்தர்கள் செய்து ஸமர்ப்பித்தால் ஸ்வீகரித்தே திருவுளத்தால் நாம் செய்து ஸமர்ப்பிக்கும் திவ்யாயுதங்களையும் எம்பெருமான் ஸ்வீகரிக்கக் கூடுமே; ப்ரார்த்தித்தாகிலும் ஸ்வீகரிக்கச் செய்திடுவோம்; இல்லையேல் மஹத்தான அநர்த்தம் நேரிடும் போலிருக்கிறதே! இவ்வரிய செயலினால்தான் அனைவரும் விச்வஸிக்கவேணும் என்று திருவுள்ளத்திற் சிந்தித்து அப்படியே செய்திடுவதென்று அறுதியிட்டு, மன்னவனை நோக்கி, நான் எம்பெருமானுக்கு அஸாதாரண சிஹ்னங்களான திருவாழி திருச்சங்குகளைச் செய்வித்துக் கொணர்ந்து பகவத் ஸந்நிதியிலே வைத்திடுகிறேன்; இந்த சைவர்கள் தாமும் தங்கள் தெய்வத்துக்குரிய பாசம் அங்குசம் முதலிய ஆயுதங்களைச் செய்வித்துக் கொணர்ந்து வைத்திடுக; எந்த ஆயுதங்களை எம்பெருமான் எடுத்து அணிந்து கொள்கிறானோ பார்ப்போம்'' என்றருளிச் செய்தார்.

250. இதைக்கேட்ட அரசன் மகிழ்ச்சிகொண்டு 'இப்படியாகில் இது சிறந்த உபாயமே. பிறகு ஒருவர்க்கும் ஆக்ஷேபம் இருக்க ப்ரஸக்தியில்லையன்றோ; நல்லது; அப்படியே இருவரும் பின்னும் செய்யக்கடவது' என்று சொல்ல; உபயவாதிகளும் தங்கள் தங்கள் தெய்வத்தின் அஸாதாரண ஆயுதங்களைச் செய்வித்துக் கொணர்ந்து ஒருநாள் அவ்வரசனுடனே திருமலைக்கு வந்து இரவில் திருவேங்கடமுடையானுடைய ஸந்நிதி கர்ப்பக்ருஹத்தினுள்ளே அவற்றை வைத்துவிட்டுக் கதவுகளைப் பூட்டி மன்னவன் கையால் அரக்கிலச்சினை செய்வித்துக் காலையளவும் கோவிலைச் சுற்றிக் காவலிருந்துகொண்டு தங்களுக்கே வெற்றியுண்டாகும்படி தங்கள் தங்கள் தெய்வத்தைச் சிந்தை செய்து கொண்டிருந்தனர்.

251. எம்பெருமானார் தமது யோகமஹிமையினால் உள்ளேபுக்கு எம்பெருமானை ஸாக்ஷாத்கரித்து ''பரமபுருஷ! முன்பு நீ வாயோலை செய்து கொடுத்த ப்ரதிஜ்ஞையின்படியே உனது அஸாதாரண சிஹ்னங்களைப் பேணி அணிந்துகொண்டு அடியோங்களைக் காத்தருள வேணும்'' என்று பிரார்த்தித்து அப்படியே திருவாழி திருச்சங்குகளை அணிந்து கொள்வித்து க்ருதக்ருத்யராயினர். பிறகு பொழுது விடிந்தவாறே யாதவமன்னன் நித்யாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு உபயவாதிகளுடனும் ஸந்நிதிக்குச்சென்று திருக்காப்பு நீக்குவித்துப் பெருமானை ஸேவிக்குமளவில் பாச அங்குசாதி ஆயுதங்களை அப்பால் தள்ளிவிட்டுத் திருவாழி திருச்சங்குகளை யணிந்துகொண்டு பரமபோக்யமாக ஸேவை ஸாதிக்கக்கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டு எம்பெருமானார் பக்கல் அளவுகடந்த ப்ரதிபத்தியை வஹித்து அவரையே சரணமடைந்து க்ருதார்த்தனாகி, குத்ஸிதவாதம் பண்ணிக் கொக்கரித்துக் கிடந்த சைவர்களையும் த்ருணீகரித்து ராஜ்யத்தில் நின்றும் ஓட்டிவிட்டு இனிது வாழ்ந்தான்.

252. எம்பெருமானாரும் சிறப்புடனே சிஷ்ய வர்க்கங்களுடன் தென்னரங்கம் சென்று சேர்ந்து *வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே என்கிறபடியே நித்ய விபூதிச் செல்வத்தையும் இங்கிருந்தே ஆண்டு கொண்டு ''தமிழ்மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன்'' என்றபடியே அருளிச் செயல்களைப் பல வகைகளாலும் வளர்த்துக்கொண்டு வாழ்ந்தருளாநின்றார்.

253. நிகமனம்: எம்பெருமான் வைபவம் போலே எம்பெருமானார் வைபவமும் பேசியும் எழுதியும் தலைக்கட்ட வொண்ணாதது, அன்பர்கள் அனுதினமும் அநுஸந்திக்கப் பாங்காக இது சுருக்கமாக வரைந்தபடி. ஸ்வாமியருளிச்செய்த திவ்ய க்ரந்தங்கள் நவநிதிகள் போலவும் நவரத்னங்கள் போலவும் ஒன்பதாம்; வேதார்த்த ஸங்க்ரஹம், ஸ்ரீபாஷ்யம், வேதாந்த—தீபஸாரங்கள், சரணாகதி கத்யம் ஸ்ரீரங்ககத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம், நித்யம்—என்பவை.

ஸ்வாமியின் பெருமைகளில் ஸாரமானவற்றை யெடுத்துரைத்துத் திருவரங்கத்த முதனார் பணித்த இராமாநுச நூற்றந்தாதி ப்ரபன்ன காயத்ரி யென்று அன்று தொட்டே ப்ரஸித்தி பெற்றிருப்பதனால் அதை நாடோறும் அநுஸந்திப்பதே நமக்குற்ற பெருஞ்செல்வம்.

பெற்றது: ஸ்ரீ வேங்கடாசல மாஹாத்மியம் கூறவந்த வாமந புராணப் பகுதியில் இரண்டாவது அத்யாயத்தில் ஸுப்ரஹ்மண்யன் வேங்கடமலையில் ஒரு குளத்தின் கரையில் தவம் புரிந்து கொண்டிருந்தானென்று சொல்லப்பட்டிருத்தலாலும் அப்பெருமான் முருகக்கடவுளே. அவர்க்கு அஸாதாரண ஆயுதங்களானபாசமும் அங்குசமும் தவிலைக்கு உரியவையல்லாமையால் தரிக்கப்படவில்லை. இன்னும் பல ஹேதுக்களாலும் அம்மலை சைவக்ஷேத்ரமே யாம். இப்போதுதான் சிறிது காலமாகச் சில வைஷ்ணவர்கள் கூடிப் புராணார்த்தங்களை மனம் போனபடி சொல்லி அப்பெருமான் விஷ்ணுவேயென்றுரைத்து ராஜாவை வசப்படுத்திக் கொண்டு சில வைஷ்ணவ விக்ரஹங்களையும் கோவிலில் ஸ்தாபித்து உத்ஸவங்களை நடத்தத் தொடங்கினார்கள். உண்மையில் இது சைவ க்ஷேத்ரமாகையால் சைவ விதிப்படி இனி இக்கோவிற் காரியங்கள் நடைபெறுமாறு மஹாப்ரபு செங்கோல் செலுத்தவேணும்'' என்றார்கள்.

245. இதைக்கேட்ட அவ்வரசன் இந்த சைவர்கள் சொல்லுவதெல்லாம் அநுபவ விருத்தமாயிருக்கின்றதே; ஆராயாமல் நாம் எதையும் ஸாஹஸமாகச் செய்துவிடக் கூடாது; தக்கபடி ஆராய்ச்சி செய்யவேணும் என்றெண்ணியிருந்தான். அக்காலத்தில் அங்கு நிபுணர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் யாருமில்லாமையால் ஸாமாந்யராயிருந்த சிலர் திருவரங்கம் பெரிய கோயிலில் மிக்க சிஷ்யஸம்பத்துடனே எழுந்தருளியிருந்த எம்பெருமானார்க்கு இச்செய்தியை அறிவித்தனர். இச்செய்தியை அறிந்த உடையவர் கடுநடையாகத் திருப்பதிக்கெழுந்தருளி ஸம்சயாக்ராந்தனாயிருந்த அரசனை நோக்கி, "சைவர்களால் உனது நெஞ்சில் உண்டாக்கப்பட்ட சங்காகளங்கத்தை நீக்கி உன்னைத் தெளிவிப்பதற்காகவே நெடுந்தூரத்தில் நின்றும் இங்கே வந்தோம்; உனக்குப் பரிபூர்ண த்ருப்தி உண்டாகும்படி யாம் தெளிவாகச் சொல்ல வல்லோம்; கேளாய் கொற்றவனே!" என்று சொல்லத்தொடங்கினர்.

246. அவ்வரசன், முன்பு கொக்கரித்த சைவர்களையும் வரவழைத்து பெரிய ஸபையாக்கி சைவ வைஷ்ணவர்களுக்கு வாதயுத்தம் நடக்குமாறு நியமித்துத் தான் தடஸ்தனாயிருக்க, வெகு காலம்வரை வாதப்போர் நடந்ததில் சைவர்களுடைய துர்வாதங்களையெல்லாம் எம்பெருமானார் ப்ராமாணிகமாகக் கண்டித்து வெற்றி பெற்று விளங்கினார்.

247. [இந்த வாதப்ரதிவாதங்களின் விவரணம் திருமலையனந்தாழ்வான் பணித்த ஸ்ரீவேங்கடாசலஇதிஹாஸமாலையில் அறுபத்தைந்து பக்கம் நிறையப் பெரிய வாக்யார்த்த ஸரணியில் குறிப்பிட்டுள்ளன; அங்கே கண்டுகொள்வது] எம்பெருமானாருடைய அற்புதமான உபபாதனங்களைக் கேட்ட மன்னவன் கலக்கம்நீங்கி மிக்க தெளிவுபெற்று, திருவேங்கடமலை விஷ்ணுக்ஷேத்ரமேயென்றும் அங்குள்ள பெருமான் திருமாலேயென்றும் அறுதியிட்டு "இந்த ஸ்ரீராமாநுஜர் ஸாமாந்ய புருஷரல்லர்; அவதார புருஷரேயாவர்; இவர் மனம் வைத்தால் அதிமாநுஷமான காரியங்களையும் செய்து ஸர்வஜனங்களுக்கும் திண்ணிய நம்பிக்கையுண்டாகும்படி செய்யவும் வல்லவர்; அங்ஙன் செய்ய இவரை வேண்டிக்கொள்வோம்'' என்றெண்ணி, ஸ்வாமிந்! யோகீச்வரரே!! தேவரீர் நிரூபித்துக்காட்டிய சாஸ்த்ரார்த்தங்களைக் கேட்டுப் பரமானந்தமடைந்தேன்; திருமாலே திருமலைக்கு இறைவர் என்று நன்கு துணிந்தேன்; ஸம்சயலேசமுமில்லாமல் திண்ணெனத் தெளிவுபெற்றேன்; ஆயினும் மஹாபுருஷராயும் அதிமாநுஷ சேஷ்டிதராயுமிராநின்ற தேவரீர், பண்டிதரோடு பாமரரோடு வாசியற எல்லாரும் தெளியுமாறு ஸமாதாநோபாயம் ஏதாவது செய்தருளக் கூடுமேல் நன்று'' என்று கைகூப்பி விண்ணப்பஞ் செய்தான்.

248. அதனைக்கேட்ட எம்பெருமானார் புராணப் பொருள்களைப் பலவாறாக எடுத்து உபந்யஸித்துக் காட்டினவளவிலும் இவ்வரசனுடைய மனம் பரிபூர்ண த்ருப்தியை அடையவில்லைபோலும்; அதிமாநுஷமானதொரு கார்யம்செய்து காட்டவேணுமென்கிறான்; ஆயிடுக; இங்ஙனே செய்வோம்;—

**249.** ப்ரஹ்மாண்ட புராணத்தில் பதினோராவது அத்யாயத்தில் எம்பெருமான் தானே சேஷிவாய் நின்று பிரதிஜ்ஞை செய்தருளியிருக்கிறபடியே கலியுகத்தில் விமான மண்டபாதிகளைப்போல் சங்கு சக்கரங்களையும் பக்தர்கள் செய்து ஸமர்ப்பித்தால் ஸ்வீகரித்தே திருவுளத்தால் நாம் செய்து ஸமர்ப்பிக்கும் இவ்வாயுதங்களையும் எம்பெருமான் ஸ்வீகரிக்கக் கூடுமே; ப்ரார்த்தித்தாகிலும் ஸ்வீகரிக்கச் செய்திடுவோம்: இல்லையேல் மஹாந்தான அநர்த்தம் நேரிடும் போலிருக்கிறதே! இவ்வரிய செயலினால்தான் அனைவரும் விச்வஸிக்கவேணும் என்று திருவுள்ளத்தில் சிந்தித்து அப்படியே செய்திடுவதென்று அறுதியிட்டு, மன்னவனை நோக்கி, நான் எம்பெருமானுக்கு அஸாதாரண சிஹ்னங்களான திருவாழி திருச்சங்குகளைச் செய்வித்துக் கொணர்ந்து பகவத் ஸந்நிதியிலே வைத்திடுகிறேன்; இந்த சைவர்கள் தாமும் தங்கள் தெய்வத்துக்குரிய பாசம் அங்குசம் முதலிய ஆயுதங்களைச் செய்வித்துக் கொணர்ந்து வைத்திடுக; எந்த ஆயுதங்களை எம்பெருமான் எடுத்து அணிந்து கொள்கிறானோ பார்ப்போம்'' என்றருளிச் செய்தார்.

**250.** இதைக்கேட்ட அரசன் மகிழ்ச்சிகொண்டு 'இப்படியாகில் இது சிறந்த உபாயமே. பிறகு ஒருவர்க்கும் ஆக்ஷேபம் இருக்க ப்ரஸக்தியில்லையன்றோ; நல்லது; அப்படியே இருவரும் பினரும் செய்யக்கடவது' என்று சொல்ல; உபயவாதிகளும் தங்கள் தங்கள் தெய்வத்தின் அஸாதாரண ஆயுதங்களைச் செய்வித்துக் கொணர்ந்து ஒருநாள் அவ்வரசனுடனே திருமலைக்கு வந்து இரவில் திருவேங்கடமுடையானுடைய ஸந்நிதி கர்ப்பக்ருஹத்தினுள்ளே அவற்றை வைத்துவிட்டுக் கதவுகளைப் பூட்டி மன்னவன் கையால் அரக்கிலச்சினை செய்வித்துக் காலையளவும் கோவிலைச் சுற்றிக் காவலிருந்துகொண்டு தங்களுக்கே வெற்றியுண்டாகும்படி தங்கள் தங்கள் தெய்வத்தைச் சிந்தை செய்து கொண்டிருந்தனர்.

**251.** எம்பெருமானார் தமது யோகமஹிமையினால் உள்ளேபுக்கு எம்பெருமானை ஸாக்ஷாத்கரித்து "பரமபுருஷ! முன்பு நீ வாயோலை செய்து கொடுத்த ப்ரதிஜ்ஞையின்படியே உனது அஸாதாரண சிஹ்னங்களைப் பேணி அணிந்துகொண்டு அடியோங்களைக் காத்தருள வேணும்'' என்று பிரார்த்தித்து அப்படியே திருவாழி திருச்சங்குகளை அணிந்து கொள்வித்து க்ருதக்ருத்யராயினர். பிறகு பொழுது விடிந்தவாறே யாதவமன்னன் நித்யாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு உபயவாதிகளுடனும் ஸந்நிதிக்குச்சென்று திருக்காப்பு நீக்குவித்துப் பெருமாளை ஸேவிக்குமளவில் பாச அங்குசாதி ஆயுதங்களை அப்பால் தள்ளிவிட்டுத் திருவாழி திருச்சங்குகளை யணிந்துகொண்டு பரமபோக்யமாக ஸேவை ஸாதிக்கக்கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டு எம்பெருமானார் பக்கல் அளவுகடந்த ப்ரதிபத்தியை வஹித்து அவரையே சரணமடைந்து க்ருதார்த்தனாகி, குத்ஸிதவாதம் பண்ணிக் கொக்கரித்துக் கிடந்த சைவர்களையும் த்ருணீகரித்து ராஜ்யத்தில் நின்றும் தூரத்திவிட்டு இனிது வாழ்ந்தான்.

**252.** எம்பெருமானாரும் சிறப்புடனே சிஷ்ய வர்க்கங்களுடன் தென்னரங்கம் சென்று சேர்ந்து *வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே* என்கிறபடியே நித்ய விபூதிச் செல்வத்தையும் இங்கிருந்தே ஆண்டு கொண்டு "தமிழ்மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன்'' என்றபடியே அருளிச் செயல்களைப் பல வகைகளாலும் வளர்த்துக்கொண்டு வாழ்ந்தருளாநின்றார்.

**253. நிகமனம்:** எம்பெருமான் வைபவம் போலே எம்பெருமானார் வைபவமும் பேசியும் எழுதியும் தலைக்கட்ட வொண்ணாதது, அன்பர்கள் அனுதினமும் அநுஸந்திக்கப் பாங்காக இது சுருக்கமாக வரைந்தபடி. ஸ்வாமி யருளிச்செய்த திவ்ய க்ரந்தங்கள் நவநிதிகள் போலவும் நவரத்னங்கள் போலவும் ஒன்பதாம்; வேதார்த்த ஸங்க்ரஹம், ஸ்ரீபாஷ்யம், வேதாந்த—தீபஸாரங்கள், சரணாகதி க்தயம் ஸ்ரீரங்ககத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம், நித்யம்—என்பவை.

ஸ்வாமியின் பெருமைகளில் ஸாரமானவற்றை யெடுத்துரைத்துத் திருவரங்கத்த முதனார் பணித்த இராமாநுச நூற்றந்தாதி ப்ரபன்ன காயத்ரி யென்று அன்று தொட்டே ப்ரஸித்தி பெற்றிருப்பதனால் அதை நாடோறும் அநுஸந்திப்பதே நமக்குற்ற பெருஞ்செல்வம்.

# ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: என்கிற இந்த வாக்யத்திலுள்ள பத்து அக்ஷரங்களையும் முற்கொண்ட ச்லோகங்களினாலும் பாசுரங்களினாலும் எம்பெருமானார்வைபவத்தையுரைக்கின்றேன். P.B.A.

254. ஸ்ரீ ஸ்ரீமாதவாங்க்ரிஜலஜத்வயநித்யஸேவா ப்ரேமாவிலாசயபராங்குசபாதபக்தம் ।
காமாதிதோஷஹரமாத்மபதாச்ரிதாநாம் ராமாநுஜம் யதிபதிம் ப்ரணமாமி மூர்த்நா ॥
(யதிராஜவிம்சதி—1.)

அழகு பொலிந்த எம்பெருமானது திருவடித் தாமரையிணைகளை நிச்சலும் தொழுகை மீதூண்டான ப்ரேமத்தினால் கலங்கின திருவுள்ளமுடையரான நம்மாழ்வாருடைய திருவடிகளிலே அன்பு பூண்டவரும், தமது திருவடிகளைப் பணிந்தவர்களுக்கு காமம் முதலிய குற்றங்களைக் களைந்தொழிப்பவரும் யதிகளுக்குத் தலைவருமான எம்பெருமானாரைத் தலையால் வணங்குகின்றேன். நம்மாழ்வார் திருவடிகளில் அன்பு பூண்டவரும், தமது திருவடிகளைப் பணிந்தவர்களது குற்றங்களை நீக்கி நற்றங்களை வளர்ப்பவருமான எம்பெருமானாரைத் தொழுகின்றேனென்றவாறு. எம்பெருமானார்க்கு அதிசயாவஹமான வைபவங்கள் பல்லாயிரமிருந்தாலும் ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யத்தையே அவர் தமக்குப் பெரிய வைபவமாக அத்யவஸித்திருந்தாராதலால் அவருடைய அத்யவஸாயத்திற்குப் பொருந்த "பராங்குசபாதபக்தம்" என்றார். அமுதனாரும் "மாறனடி பணிந்துய்ந்தவன்" என்றே தொடங்கினர். "தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்தவிதத்தாய் இராமாநுசன்" என்ற திருவாய்மொழித் தனியனாலும், "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ர வாக்யங்களொருங்க விடுவர்" என்ற ஆசார்ய ஹ்ருதய சூர்ணையாலும் ஸ்வாமிக்கு ஆழ்வார் பக்கலிருந்த ப்ராவண்யாதிசயம் அறியற்பாலது. ஸ்வாமியின் ப்ராவண்யத்திற்குப் பாத்ரபூதரான நம்மாழ்வார் எப்படிப்பட்டவரென்னில், [ஸ்ரீமாதவாங்க்ரிஜலஜத்வய நித்யஸேவா ப்ரேமாவிலாசயர்.] எம்பெருமானுடைய திருவடிகளிலே காதலடியாகக் கலங்கின திருவுள்ளமுடையவர் என்கை. 'தெளிந்த சிந்தையர்' என்று சொல்லிப் புகழ்வது ப்ராப்தமாயிருக்க, ஆவிலாசய என்று கலங்கின திருவுள்ளமுடையவர் என்று விசேஷணமிடுவது பெருமைக்கு ஒக்குமோவென்னில்; கர்மநிபந்தனமான கலக்கம் ஹேயமே யல்லது ப்ரேமநிபந்தனமான கலக்கம் ஹேயமன்று, மிகவும் உபாதேயம், உத்தேச்யம் என்கிற சாஸ்த்ரார்த்தம் இங்கு அறியத்தக்கது. ப்ரேமநிபந்தனமான கலக்கத்தினால் செய்யும் காரியம் ஏதெனில்; மடலெடுக்கவொருப்படுகை, மங்களாசாஸனத்திலேயூன்றுகை, நோன்பு நோற்கை முதலியனவாம். இவை ப்ரேமபரவசர்க்கு அவத்யமன்று; "ஜ்ஞாந விபாககார்யமான அஜ்ஞாநத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்" என்கிற ஸ்ரீவசநபூஷண திவ்ய ஸூக்தியும் அதன் வியாக்யான ஸ்ரீஸூக்திகளும் இங்கே அநுஸந்தேயம். ஸித்தோபாயமான அவன் பண்ணின க்ருஷி பலமாய் விளைவது இக்கலக்கமென்று கொள்ள வேணும். பாரங்குசரென்கிற திருநாமத்திற்கு இரண்டுவகையான வ்யுத்பத்தியுண்டு. பரர்களுக்கு அங்குசமாயிருப்பவரென்றும். பரனுக்கு அங்குசமாயிருப்பவரென்றும். (அதாவது) பரர்களாகிறார்—எம்பெருமானுக்கு குணமில்லை விக்ரஹமில்லை யென்னும் புறச்சமயிகள்; அவர்களுக்குத் தம்முடைய திவ்யஸூக்திகளாலே அங்குசமாயிருப்பவர்—அவர்களது செருக்கு மொழிகளை யடக்குபவர் என்கை முதல் வ்யுத்பத்தியின் கருத்து. இனி பராத்பரனான எம்பெருமானுக்கு அங்குசம் போன்றவர் என்கிற இரண்டாவது வ்யுத்பத்தியின் கருத்தாவது— வலக்கை யாழியிடக்கைச்சங்கமிவையுடை மால்வண்ணனை, "மலக்கு நாவுடையேற்கு" [திருவாய்மொழி 6-4-9] என்று ஆழ்வார் அருளிச்செய்தபடி தம்வசப்படுத்தி நடத்திக்கொள்ள வல்லவரென்கை. [காமாதிதோஷஹரம்] இங்கு ஆதிசப்தத்தாலே க்ரோதம் லோபம் மோஹம் மதம் மாத்ஸர்யம் அஜ்ஞாநம் அஸூயை இவை கொள்ளத்தக்கன 'காமாதிஹரம்' என்னாமல் 'காமாதி தோஷஹரம்' என்கையாலே காமம் முதலானவை நியமேந தோஷமல்லவென்றும்

குணகோடியிலே கைக்கொள்ளத்தக்க காமாதிகளுமுண்டென்றும் தெரிவிக்கப்பட்டதாம். பகவத்விஷயத்திலே யுண்டாகிற காமமோஹாதிகளும் பகவத்பாகவதவிரோதிகள் திறத்திலே யுண்டாகிற க்ரோதமாத்ஸர்யாதிகளும் குணமேயல்லது தோஷமன்றே. அவை விலக்கத் தக்கவையல்லவே. தோஷமான காமாதிகளேவிலக்கத்தக்கவையாதலால் தோஷஹரமென்றது

255. ம. மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து *எங்கள் மாதவனே
கண்ணுறநிற்கிலும் காணகில்லா* உலகோர்க ளெல்லாம்
அண்ண லிராமாநுசன் வந்துதோன்றிய வப்பொழுதே
நண்ணரு ஞானந் தலைக்கொண்டு* நாரணற்காயினரே.

(இராமாநுச நூற்றந்தாதி—41.)

நமக்கு நாதனான திருமால்தானே இப்பூமியிலுள்ள (மனுஷ்யாதி) யோனிகள் தோறும் அவதரித்தது. எல்லாருடைய கண்ணுக்கும் தன்னை இலக்காக்கிக் கொண்டுநின்ற விடத்திலும் (அவனை நம்முடைய நாதனென்று) காணமாட்டாதிருந்த இவ்வுலகத்தாரெல்லாரும் ஸர்வஸ்வாமியான எம்பெருமானார் இங்கே வந்தவதரித்தவுடனே பெறுதற்கரிதான ஞானம் அதிகரிக்கப்பெற்று ஸ்ரீமந்நாராயணனுக்கு சேஷப்பட்டனரென்கை. எம்பெருமானுடைய அவதாரத்திற்காட்டிலும் எம்பெருமானாருடைய அவதாரமே சிறப்புற்றதென்கிறார் "அஜாய மாநோபஹுதா விஜாயதே" என்றும் "உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா" என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமான் பல பல யோனிகளிற் பலவகைப்பிறவி பிறந்து கண்காண வந்து நின்று உபதேசங்களாலே ஸ்வஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுத்த விடத்திலும் யாரும் அவனை லக்ஷியம்பண்ணவில்லை; "அவஜாநந்தி மாம் மூடா:" [என்னை எல்லாரும் அவமானப்படுத்துகிறார்கள்] என்று அவன்றானே சொல்லிக் கொண்டு வருத்தப்பட வேண்டிற்றாயிற்று, ஆகையாலே பகவானுடைய அவதாரம் ஸம்ஸாரிகளுடைய தெள்ளறிவுக்கு உறுப்பாகவில்லை. எம்பெருமானாருடைய அவதாரமோ வென்னில், பயன் பெற்றது. இவர் தாம் திருவவதரித்தவுடனே எல்லா வுலகத்தாரும் ஆச்சரியமான ஞானத்தைப்பெற்று உஜ்ஜீவித்தார்கள்—என்றாயிற்று.

256. தே. தேரார்மறையின் திறமென்று* மாயவன் தீயவரைக்
கூராழிகொண்டு குறைப்பது* கொண்டலனையவண்மை
ஏரார்குணத்தெம் மிராமாநுச னவ்வெழில் மறையில்
சேராதவரைச் சிதைப்பது* அப்போதொரு சிந்தை செய்தே.

(இதுவும் நூற்றந்தாதி—74.)

(இப்பாவிகள்) வேதஞ்சொல்லுகிற வழியை நிருபித்தறிகிறதில்லை யென்று பாவிகளை எம்பெருமான் தண்டிப்பது கூர்மையான தனது திருவாழியாலே; மேகம் போன்ற ஔதார்ய குணமுடையவரும் (மற்றும் பல) நல்லகுணங்களுடையவருமான ஸ்வாமி எம்பெருமானார் அர்த்தச் சிறந்த வேதத்தில் அந்வயியாதவர்களை பங்கப்படுத்துவது (எப்படி யென்றால்) அப்போதப்போது ஓவ்வொரு யுக்தியைக் கொண்டாம். எம்பெருமான் தனது ஆஜ்ஞாரூபமான வேதங்களின் கட்டளைப்படி நடவாத கொடியவர்களைத் தனது திருவாழியைக் கொண்டு த்வம்ஸம்பண்ணிவிடுவன்; எம்பெருமானாரோவென்னில் அவ்வளவு ஆயாஸம் எடுத்துக்கொள்வதில்லை; வேதங்களை அடியோடு ஒப்புக்கொள்ளாத பாஹ்யர்களையும், வேதங்களைப் பிரமாணமாக ஒப்புக்கொண்டு அவற்றில் அபார்த்தங்களைப் பண்ணுகிற குத்ருஷ்டிகளையும் வாதப் போரில் அப்போதப்போது திருவுள்ளத்தில் ஸ்புரிக்கின்ற நல்ல யுக்திகளைக்கொண்டு கண்டித்துவிடுவர். இதனால், துஷ்டர்களை நிரஸிக்கும் வகையில் எம்பெருமானாருடைய சாதுரியம் ஒப்பற்றதென்று சொல்லிற்றாயிற்று.

257. ரா. ராமாநுஜமுநிர் ஜீயாத் யோ ஹரேர் பக்தியந்த்ரத:,
கலிகோலாஹல க்ரீடா முதாக்ரஹமபாஹரத் (ஸ்ரீரங்கராஜஸ்தவம்—1-3)

யாவரொரு எம்பெருமானார் எம்பெருமானிடத்து உண்டானபக்தியாகிற யந்த்ரத்தினால் கலிபுருஷனுடைய கோலாஹல விளையாட்டாகிற பாழும் பிசாசை துரத்தினாரோ, அந்த

எம்பெருமானார் பல்லாண்டு பல்லாண்டு. இதனால் ஜகதாசார்யரான எம்பெருமானாரை வாழ்த்துகிறார். "கலியுங்கெடுங் கண்டுகொண்மின்" என்று மபர்வுற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார் ஸூசிப்பித்தபடியே இவ்வுலகில் திருவவதரித்துக் கலியின் கொடுமைகளைத் தொலைத்தருளின எம்பெருமானார் வாழ்க என்கை. "இராமாநுசன் மறை தேர்ந்துலகில் புரியும் நன் ஞானம் பொருந்தாதவரைப் பொருங்கலியே" என்கிறபடியே இராமாநுசன் திருவடி ஸம்பந்திகளைக் கலிபுருஷன் அணுகவும் மாட்டானென்பது அறியத்தக்கது. "இராமாநுசனித்தலத்து தித்து—ஆனது செம்மை யறநெறி. பொய்ம்மை யறுசமயம் போனது பொன்றி, இறந்தது வெங்கலி" என்ற நூற்றந்தாதிப் பாசுரமுமிங்கே அநுஸந்திப்பது. கலியின் கோலாஹலம் நிரம்பிய விளையாட்டைப் பேயாடலாகப் பேசினதற்கேற்ப ராமாநுசனுடைய பகவத்பக்தியை ஒரு யந்த்ரமாக ரூபிக்கிறார். பிசாசு ஓட்டுதல் யந்த்ரஸாத்யமாகையாலே பகவத்பக்தியாகிற யந்திரத்தினால் கலிவிலாஸமாகிற பிசாசை ஓட்டினாரென்கிறது. "கலௌ க்ருதயுகம் தஸ்ய கலிஸ் தஸ்ய க்ருதேயுகே—யஸ்ய ஹ்ருதயே யஸ்ய கோவிந்தோ யஸ்ய சேதஸி நாச்யுத:, என்றது காண்க. (எவனுடைய உள்ளத்தில் எம்பெருமான் ஸுப்ரதிஷ்டிதனாக வாழ்கிறானோ அவனுக்குக் கலியுகமே க்ருதயுகம்; எவனுடைய நெஞ்சில் எம்பெருமானில்லையோ அவனுக்குக் க்ருதயுகமும் கலியுகமாம்! என்கை.) இரண்டாம் பாதத்தின் முடிவில், "யந்த்ரத:, யந்த்ரித:, யந்த்ரிதாத்" என்பன பாடபேதங்கள். .... .... ....

**258.** மா. மாதவ! முகுந்த! மதுஸூதந! முராரே! தாவகபதாப்ஜயுகளேஹமிஹ யாசே,
லக்ஷ்மண முநீந்த்ர சரணாப்ஜயுகலே மே பக்திரபிவ்ருத்திமுபயாது நிரவத்யா. (ப்ர-அ)

இஷ்டப்ராபண அநிஷ்டநிவர்த்தக ஸமர்த்தனான லக்ஷ்மீநாதா! தேவரீருடைய திருவடித் தாமரையிணைகளிலே அடியேன் பிரார்த்திப்பதாவது—எம்பெருமானாருடைய திருவடித் தாமரையிணைகளில் எனக்கு நிஷ்கல்மஷமான பக்தி மேன்மேலும் வளரவேணுமென்பதே.

**259** நு. நுதிரஸ்து ஸததஞ்ச மம வாசி யதிராட் குணராசிமதிக்ருத்ய குணராசிபரிதா।
நதிரஸ்து மம தஸ்ய பதபத்மயுகளே மதிரஸ்து யதிராஜகதிதாஸூக்திஷு॥ (ப்ர-அ.)

எனது வாக்கில் எப்போதும் எம்பெருமானாரது திருக்கல்யாணகுணவிஷயமாய்ச் சிறந்த ஸ்துதிகள் மிகமுறவேணும். அவருடைய திருவடித்தாமரையிணைகளிலேயே தலை வணங்கியிருப்பேனாக. அவரருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளிலேயே எனது புத்தி செல்லவேணும்.

**260.** ஜா. ஜாயா ஜநநீ ஜநகஸ் தநயஸ் தநயேதி விமோஹவசாம்லி ஸதா।
ப்லவப் பவஸிந்துநிமக்நமநா: அஹமத்ய யதீந்த்ரகடாக்ஷணபாக். (ப்ர-அ.)

*ஆசைவாய்ச் சென்ற சிந்தையராகிப்படியே பாந்தவபாஸலோலனாய்க் கிடந்த அடியேன் இன்று எம்பெருமானாருடைய திருக்கண்ணோக்கத்திற்கு இலக்காகப் பெற்றேன்.

**261.** ய. யதிப்ரவரபாரதீரஸபரேண நீதம் வய:
ப்ரபுல்லபலிதம் சிர: பரமிஹ க்ஷமம் ப்ரார்த்தயே:
நிரஸ்தரிபுஸம்பவே க்வசந ரங்க முக்க்யே விபோ!
பரஸ்பரஹிதைஷிணும் பரிஸரேஷு மாம் வர்த்தய. (அபீதிஸ்தவே)

திருவரங்கம் பெரிய கோயிலில் நித்யவாஸம் செய்தருளத் திருவுள்ளம்பற்றிய ஸ்ரீவேதாந்த தேசிகன், திருப்பேர் நகர் ப்ராந்தம் எழுந்தருளினவாறே கோயிலில் துருஷ்க யவநாதிகளால் நேர்ந்த உபப்லவத்தைக் கேட்டு அங்கு எழுந்தருளாதே ஸத்யமங்கலத்தில் சிலகாலம் எழுந்தருளியிருந்தபோது அருளிச்செய்த அபீதிஸ்தவத்தின் முடிவிலுள்ள சுலோக மிது. (கருத்து) எம்பெருமானார் திவ்யஸ்ரீஸூக்திகளின் ரஸாநுபவத்தினால் என் வாழ்நாளைப் போக்கினேன்; முதுமையடைந்திட்டேன், இந்நிலையில் அடியேன் வேண்டுவதொன்றே. விரோதிவர்க்கம் தொலையப்பெற்றுத் திருவரங்கம் பெரிய கோயிலில் ஒருமூலையில் பரஸ்பர ஹிதைஷிகளான பாகவதோத்தமர்களின் திருவடிநிழலிலே அரங்கா! என்னைவாழச் செய்தருள்.

262. ந. ந சேத் ராமாநுஜேத்யேஷா சதுரா சதுரக்ஷரீ ।
காமவஸ்தாம் ப்ரபத்யந்தே ஜந்தவோ ஹந்த மாத்ருஶ: (முதலியாண்டான் மூக்தகம்)

உலகுக்கெல்லாம் சேமவைப்பான ராமாநுஜ என்கிற நான்கெழுத்து இல்லையாகில் அந்தோ! நம்போன்ற பிராணிகளின் நிலைமை என்னாகும்! .... ....

263. மு: மஸ்தகமஸ்து மதீயம் நிஸ்துல யதிராஜபாதபத்மதரம்,
வதநம் ஹ்ருதயஞ்ச ஸதா தத்குண கீர்த்தந விசிந்தநப்ரவணம். (ப்ர.-அ)

எம்பெருமானாருடைய நிகரில்லாத் திருவடியிணைகள் எனது சென்னிக்கு அணியாகுக; எனதுவாய் அவருடைய திருக்கல்யாண குணகீர்த்தனத்திலும், எனது இதயம் அவருடைய குணசிந்தனத்திலும் ஊன்றியிருக்குமாக. .... .... ....

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:(மற்றொருவகையான விவரணம்)

[ஸ்ரீமதே ராமாநுஜாய நம:] என்கிற புராதன வாக்யத்திலுள்ள பத்தெழுத்துக்கும் சுலோகங்களாலும், பாசுரங்களாலும் எழுத்தடைவே விவரணம் கீழே கண்டீர், இப்போது அந்தப் பத்தெழுத்துக்களுக்கும் புதிய பத்து சுலோகங்களினால் விவரணம் காணீர். புதிய பத்து சுலோகங்கள் எப்படிப்பட்டவையென்னில் ஒவ்வொரு பாதத்திலும் பத்தெழுத்துக்கள் கொண்டவையான சுலோகங்களை இயற்றியநுபவிக்க வேணுமென்று ஒரு பெரியார் கனவிலே கட்டளையிட்டதனால் அந்தவகையில் இந்த தஶகம் ப்ராதுர்ப்பவிக்கின்றது.

264. ஸ்ரீ பாஷ்யாதீந் நவநிதிகல்பாந் திவ்யக்ரந்தாந் நவ விரசய்ய ।
அஸ்மாஸு ப்ராக் பரமக்ருபாம் ய: ஸ்பஷ்டீசக்ரே ஜயது யதீந்த்ர: ॥

நவநிதிகளோ! நவரத்னங்களோ! என்னலாம்படியான ஸ்ரீ பாஷ்யம் முதலிய ஒன்பது திவ்ய க்ரந்தங்களை யருளிச்செய்து நம்மீது பரம க்ருபையை வெளியிட்டருளின எம்பெருமானார் வாழி வாழி.

265. மந்தாநாமப்யாநவதிமோதம் தாதும் ஶக்தாந் பணிதிவிஶேஷாந் ।
ப்ரோசே மோசாபலரஸகல்பாந் ஸ்ரீமாந் ராமாவரஜமுநீந்த்ர: ॥

நம்போன்ற மந்தர்களுக்கும் எல்லையற்ற மகிழ்ச்சியைத் தரக்கூடியவை யாய் ரஸ்தாளி வாழைக்கனியின் சுவைபோன்று இனிய ஸூக்திகளை எம்பெருமானார் அளித்தருளினர். (அவர் இந்நிலவுலகில் நீடூழி வாழ்ந்தருள்க.)

266. தேஜ:புஞ்ஜஸ் ஸகலவிதோபி க்ஷோண்யாமஸ்யாம் யதிபதிரூபம் ।
த்ருத்வா ப்ராதுர்ப்பவநமயாஸீத் இத்யுக்தஞ்சேத் ந கலு ம்ருஷோக்தி: ॥

அக்நி ஸூர்யன் சந்திரன் வித்யுத் முதலான தேஜோராசிகளெல்லாம் நிலவுலகில் எம்பெருமானாராக வடிவெடுத்து ப்ராதுர்ப்பாவமடைந்த தென்றால் மிகையாகாது.

267. ராம: க்ருஷ்ணோ நரஹரிரூப: மத்ஸ்ய: கூர்ம: கிடிரிதி சாபூத் ।
யோயம் விஷ்ணுர் யதிபதிரூபம் த்ருத்வா ஸத்யம் ஜகதி ஸமாகாத் ॥

எந்த ஸ்ரீ மஹாவிஷ்ணு ராமக்ருஷ்ண நரஸிம்ஹ மத்ஸ்ய கூர்மவராஹாதி ரூபேண அவதரித்தாரோ, அவரே எம்பெருமானாராகவும் வடிவெடுத்து இந்நிலத்தில் போந்தருளினார்.

268. **மா**தா வந்த்யா ம இதி வதத்பிர் மூர்க்கைஸ் துல்யா ய இஹ பபூவு: ।
தேஷாம் ஜல்பாந் நிரஸிதுமாகாத் ஶேஷ: ஸ்ரீமாந் யதிபதிமூர்த்யா ॥

'மம மாதா வந்த்யா' (என் தாய் மலடி) என்னும் மூர்க்கர்களைப் போன்றவர்களின் ப்ரலாபங்களைக் கண்டிக்க ஆதிஶேஷன் எம்பெருமானாராக அவதரித்தார்.

269. **நு**த்வா நத்வா யதிபதிபாதௌ போ! போ! மர்த்யாஸ் ஸபதி லபத்வம் ।
ஶ்ரேயோ பூயோ புவந இதீஹ க்ஷேமாயோக்திம் வததி ந கோபி ॥

'ஓ உலகர்களே! எம்பெருமானார் திருவடிகளைத் துதித்தும் தொழுதும் இந்நிலத்தில் நல்லநன்மைகளைப்பெறுங்க' ளென்று உபதேசிப்பாரில்லையே!

270. **ஜா**யாதோஷைர் விக்ருதமநாஸ் ஸந் யஸ் ஸ்வீசக்ரே யதிபதிபாவம் ।
ஸோயம் யோகீ பணிபதிரூபீ கோபிநாதாதபி மம ஹ்ருத்ய: ॥

திருக்கச்சிநம்பிபக்கல் தாழ்வு நினைத்தது, பெரியநம்பி தேவியாரோடு பிணங்கியது முதலிய தேவியாரது குற்றங்களைக் கண்டு திருவுள்ளம் நொந்து ஆஶ்ரம ஸ்வீகாரம் செய்துகொண்ட ஶேஷரூபியான எம்பெருமானார் எமக்கு ஆராத்யனான கண்ணபிரானிற்காட்டிலும் பரமபோக்யர்.

271. **ய**ஸ்ய ஸ்ரீஸூக்த்யதிஶயபோதாத் ப்ராபத் பாதௌ விமதஜநோபி ।
ஸோயம் ராமாநுஜமுநிரேக: தத்வஜ்ஞாநீத்யபஜத கீர்த்திம் ॥

யாதவப்ரகாஶர், யஜ்ஞமூர்த்தி முதலான பிறரும் யாவரொருவருடைய ஸ்ரீஸூக்தி நலங்களைக்கண்டு திருவடி பணிந்தார்களோ, அந்த எம்பெருமானாரொருவரே ('தத் வித்தி ப்ரணிபாதேந' என்ற கீதாச்லோகத்திற் சொன்ன) தத்வதர்சியாவர்.

272. **ந**க்ஷத்ரேஶப்ரதிமமுகம் தே ஸ்ரீமத்ராமாவரஜமுநீந்த்ர! ।
பாக்யாதிக்யாத் ய இஹ மஹாந்த: ஸேவந்தே ஸ்மைதாந் ஹ்ருதி கலயே ॥

எம்பெருமானாரே! சந்த்ரமண்டலம்போன்ற தேவரீருடைய திருமுகமண்டலத்தை நேரில் (விபவத்தில்) ஸேவிக்கப்பெற்ற பாக்யஶாலிகளான ஆழ்வானாண்டான் முதலானாரையே நெஞ்சில் நினைப்பேன்.

273. **ம**ஸ்தம் தத்தாம் யதிபதிபாதௌ ஹஸ்தோ லிகதாத் தத்க்ருதி ப்ருந்தம் ।
வக்த்ரம் ப்ரூயாத் யதிபதிஸூக்தீ: நித்யஞ்சைவம் விரமது கால: ॥

எமது சென்னி எம்பெருமானார் திருவடிகளையே தரித்திடுக; கை அவருடைய திவ்யக்ரந்தங்களையே எழுதுக; வாய் அவருடைய ஸ்ரீஸூக்திகளையே சொல்லுக. நிச்சலும் எமது போது இப்படியே கழியட்டும்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

## மற்றொரு வகையான அநுபவம் காணீர்

"பூமன்னுமாது பொருந்திய மார்பன் புகழ்மலிந்த
பாமன்னு மாறனடி பணிந்துய்ந்தவன்—பல்கலையோர்
தாம் மன்னவந்த விராமாநுசன் சரணாரவிந்தம்
நாம் மன்னிவாழ நெஞ்சே! சொல்லுவோ மவன் நாமங்களே."

(இராமாநுச நூற்றந்தாதி—முதற்பாசுரம்.)

இப்பாசுரத்தில் மொத்தம் இருபத்தெட்டு சொற்கள் அமைந்துள்ளன. பூ, மன்னு, மாது, பொருந்திய, மார்பன்....என்றிப்படி பிரித்துக் கணக்கிட்டால் இருபத்தெட்டு பதங்கள் தேறும். இப்பதங்களின் முதலெழுத்தையோ, சிலவெழுத்துக்களையோ, பரிபூர்ணபதத்தையோ கொண்டு சில விசேஷங்கள் விளம்புவோம்.

**274 பூ**—இஃது ஓரெழுத்தாயும் ஒருபதமாயுமுள்ளது. புஷ்பமென்று பொருள். வட சொல்திரிபாகக் கொண்டால் பூமியென்று பொருள். திருச்சந்தவிருத்தத் தொடக்கத்தில் (*பூநிலாய வென்பதில்) பூமியென்று பொருள். புஷ்பமென்கிற பொருளில் சிறியதோர் உபந்யாஸம் கேளீர். ஆழ்வார்களின் அநுபவத்தில் மூன்றுவகைப் புஷ்பங்கள் காணப்படுகின்றன. திருவிருத்தத்தில் *வண்டுகளோ! வம்மின், நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ உண்டுகளித் துழல்வீர்க்கு* என்ற பாசுரத்தில் சொல்லப்படுகிற மூவகை தவிர, மற்றொரு மூவகை கேண்மின்: 1. எம்பெருமான் திருமேனியில் சாத்திக் கொண்டிருப்பவை; 2. நிலத்திலும் தடாகத்திலும் பூத்திருப்பவை; 3. எம்பெருமானுக்குச் சாத்துவதற்காக பக்தர்களின் கையிலுள்ளவை. ஆக இம்மூவகைகளுக்கும் பாசுரங்கள் வருமாறு; (1)*பூந்தண்மாலைத் தண்டுழாயும். *தூய்மையோகமாயினுய் துழாயலங்கள் மாலையாய் *தோளிணை மேலும் நன் மார்பின்மேலும்*.......இவை போன்ற பாசுரங்கள் முதல்வகைக்குச் சேரும். (2) *பூவையுங் காயாவும் நீலமும் பூக்கின்ற காவிமலரென்றும் காண்தோறும்* *கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும் முள்ளார் முளரியும் ஆம்பலும் முன்கண்டக்கால்* *தாமுளரே-தாமரையின் பூவுளதே* இவை போன்ற பாசுரங்கள் இரண்டாம் வகைக்குச் சேரும். (3) *இண்டை கொண்டு தொண்டரேத்த *இண்டையாயினகொண்டு தொண்டர்களேத்துவார்* *வானவர் வானவர்கோனொடும் சிந்துபூமகிழும்* *வரைச்சந்தனக்குழம்பும்—விரைப்பொலிந்த வெண் மல்லிகையும்* இவை போன்ற பாசுரங்கள் மூன்றும் வகைக்குச் சேரும்.

**275 மன்னு.** *மன்னுபெரும் புகழ்மாதவன்* என்கிற நாச்சியார் திருமொழிப் பதிகம் குயிற்பத்து எனப்படும். குயிலைப்பார்த்து எம்பெருமானைக் கூவும்படி வேண்டுகிறது இதில். குயிலைப்பற்றிய விசேஷார்த்தங்கள் கேண்மின். (ஸ்வாபதேசார்த்தம்) (1) *போற்றி யானிரந்தேன் புன்னைமேலுறை பூங்குயில்காள்!* என்று நம்மாழ்வாரும், *புன்னை குருக்கத்தி நாழல் செருந்திப் பொதும்பினில் வாழுங்குயிலே!* என்று ஆண்டாளும் மற்றும் பலரும் புன்னை மரத்தைக் குயில்களுக்கு உறைவிடமாகச் சொல்லுகிறார்கள். இங்ஙனம் சொல்லுகிற விதனுல் *புந்நாகதல்லஜம் அஜஸ்ர ஸஹஸ்ரகீதி ஸேகோத்த திவ்யநிஜ ஸௌரபமாமநாம!* என்று ஸ்ரீரங்க ராஜஸ்தவத்தில் பட்டர் அருளிச் செய்தபடி திருவாய்மொழியின் சொற்சுவையும் பொருட்சுவையுமூறின கோயிற் புன்னை மரத்தின் கீழே அமர்ந்து விசேஷார்த்தங்கள் கேட்டு வளருமவர்கள் விவக்ஷிதர்கள். திருவரங்கம் பெரியகோயிலில் பூருவாசாரியர்களின் காலந்தொடங்கித் திருப்புன்னைமரம் ஸுப்ரஸித்தம். நம் முதலிகள் அதன் கீழேயிருந்து திருவாய்மொழியின் அர்த்தங்களைச் சிந்தனை செய்வார்களென்பது ஸ்ரீவசநபூஷண வ்யாக்யாநாதிகளில் ப்ரஸித்தம். திருவாய் மொழியில் (3-5-4) *தம்பிறப்பால் பயனென்னே சாதுசனங்களிடையே* என்றவிடத்து ஈட்டிலும் "திருப்புன்னைக் கீழே ஒருவரிருக்குமிடத்திலே நம் முதலிகள் பத்துப்பேர்கூட நெருக்கிக்கொண்டிருக்கச் செய்தே" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. மேலே யெடுத்துக் காட்டிய பட்டருடைய ஸ்தவ ஸ்ரீஸூக்தியில்* அஜஸ்ர ஸஹஸ்ரகீதி ஸேகோத்த திவ்யநிஜ ஸௌரபம்—புந்நாகதல்லஜம்* என்று அந்த திருப்புன்னையின் பெருமை நன்கு விசதமாக்கப்பட்டது. ஆகவே அந்த திருப்புன்னையின் நிழலிலேயிருந்து *குயில் நின்றால் பொழில்சூழ் குருகூர்நம்பி பாவினின்னிசை பாடிக் களிக்குமவர்கள் குயிலாக விவக்ஷிதர்கள். (2)*மாம்பொழில் தளிர் கோதிய மடக்குயில் வாயது துவர்ப்பு எய்தத் தீம் பலங்கனிதேனது நுகர்* (பெரிய திருமொழி) என்று குயில்களின் ஓர் இயற்கை கூறப்பட்டது (அதாவது) முதலில் மாந்தளிர்களிலே வாய் வைத்ததனுல் வாய் துவர்த்துப்போக அந்தத் துவர்ப்பு நீங்குதற்காகப் பலாப்பழத் தேனைப் பருகுமியல்வு சொல்லிற்று. இதனுல், முதலில் ஸாமாந்யசாஸ்திரங்களிலே வாய்வைத்துப் பிறகு விசேஷ (அத்யாத்ம) சாஸ்திரங்களிலே மிகப் பேரின்பமாகப் போதுபோக்கும் பக்தர்களின்படி சொல்லிற்றுகிறது. (3)*வநப்ரிய; பரப்ருத; கோகில; பிக;* என்கிற அமர கோசத்தின்படி குயில்களுக்கு வடமொழியில் பரப்ருதமென்று பெயர். காக்கையின் கூட்டிலே கொண்டுவிடப்பெற்று அவற்றால் போஷிக்கப்பட்டு வளருமவை குயில்கள்; அதுபோல, பரனான ஆசார்யனால் போஷிக்கப்பட்டு வளரும் குருகுலவாஸிகளைச் சொல்லிற்றுகிறது.

(4)*வஸந்தகாலே ஸம்ப்ராப்தே காக: காக: பிக: பிக:* என்கிறபடியே சில கால விசேஷங்களில் குயில் தன் மிடற்றோசை காட்டி வீறுபெறும். அதுபோல ஆசாரியர்களும் ஸமய விசேஷங்களிலே கம்பீரமாக வாய்விட்டு உபந்யஸித்து மற்றையாரிற் காட்டில் தமது வைலக்ஷண்யத்தை விளக்குவார்கள். (5)*பிக: கூஜதி பஞ்சமம்* என்று, குயில் கூவும் இசையானது பஞ்சமமெனப்படும். அப்படியே ஆசாரியர்கள் வாய்விட்டு அருளிச்செய்யுமது நான்கு வேதங்களுக்கு அடுத்தபடியாக ஐந்தாவது வேதமோ! என்னலாம்படி யிருக்கும். "அல்லி மலர்ப் பாவைக்கு அன்பரடிக்கன்பர் சொல்லுமவிடு சுருதியாம்" என்ற ஞானஸாரப் பாசுரமும் காண்க. [அவிடு—ஸாமான்யமான வார்த்தை]

276. **மாது**—இச்சொல்லுக்கு அழகு என்றும் பெண் என்றும் சில பொருள்களுண்டேயன்றி, பிராட்டியென்கிற பொருள்கிடையாது. முன்னும்பின்னுமுள்ள சொற்சேர்த்தியைக் கொண்டு பிராட்டியென்று பொருள் கொள்ளலாகிறது. ஸாமான்யசப்தத்திற்கு விசேஷத்தில் பர்யவஸான மென்றுணர்க. இது தமிழ் நூற்களில் பெரும்பான்மையாகவுள்ளது. *கோவை வாயாள் பொருட்டு* என்கிறார் நம்மாழ்வார். அவள் யார்! என்றால் *ஏற்றினெருத்த மிறுத்தாய்* என்று அடுத்த வாக்யத்தைக் கொண்டு நப்பின்னையென்றறிகிறோம். *வம்பவிழ்கோதை பொருட்டா* என்றவிடமும் இத்தகைத்தே. *தையலாள்மேல் காதல் செய்த* என்கிறார் திருமங்கையாழ்வார் அவள்யாவளென்னில், *வாளரக்கன்....* என்று மேலுள்ளதைக் கொண்டு ஸீதாபிராட்டி யென்றறிகிறோம். ஐவர் என்று அடிக்கடி வருகிறது; சில விடங்களில் பஞ்ச பாண்டவர்களையும், சிலவிடங்களில் பஞ்சேந்திரியங்களையும் பொருளாகக் கொள்ளுகிறோம். இதுவும் முன்பின் சொற்செறிவைக் கொண்டே. இந்த மரியாதை தமிழ்நூல்களில்மட்டுமே காண்கிறோம்; வடநூல்களிற் காண்கின்றிலோம்.

277. **பொருந்திய—**

"பொருந்தியதேசும் பொறையும் திறலும் புகழும்* நல்ல
திருந்தியஞானமும் செல்வமும் சேரும்*, செறுகலியால்
வருந்தியஞாலத்தை வண்மையினால் வந்தெடுத்தளித்த
அருந்தவன்* எங்களிராமானுசனை யடைபவர்க்கே" (இராமானுச நூற்றந்தாதி—22)

கலிகலுஷநிவர்த்தகரான நம்மிராமானுசரைப் பணிபவர்களுக்கே ஸ்வரூபாநுருபமான மதிப்பும், *களிப்பும் கவர்வு மற்றிருக்கையாகிற க்ஷமாகுணமும் ஜிதேந்த்ரியத்வமாகிற மீடுக்கும் குணசாலிகளென்கிற கீர்த்தியும் தத்வஹித புருஷார்த்தங்களில் தெளிந்த ஞானமும் பக்திச்செல்வமும் சேரும் என்றவாறு.

278. **மார்பன்**—ஸ்ரீரங்கநாதனுடைய திருமார்பை ஸ்ரீரங்கராஜஸ்தவ பூர்வபாதகத்தில் பட்டர் அற்புதமாக வருணிக்கிறார்—*வக்ஷஸ்ஸ்தல்யாம் துளஸி கமலா கௌஸ்துபைர் வைஜயந்தீ ஸர்வோபாத்வம் கதயிதராம் ரங்கதாம்நஸ்ததாஸ்தாம். கூர்மவ்யாக்ரீநகபரிமிலத்பஞ்சஹேதீய சோதாதகத்தா மௌக்த்யா பரண மதிகம் நஸ் ஸமாதிம் திநோதி* என்கிற சுலோகம் பரம போக்யமானது. திருத்துழாயலங்கல், திருமாமகள், குருமாமாமணிப்பூண், வனமாலை ஆகிய இத்திருவாபரணங்கள் நம்பெருமாளுடைய ஸர்வேஸ்வரத்தை விளக்குகின்றன; இஃதிருக்கட்டும். ஆமைநகம் புலிநகம் பஞ்சாயுதஹாரம் என்னுமித் திருவாபரணங்கள் (க்ருஷ்ணவதாரத்தில்)யசோதைப்பிராட்டி சாத்தினவை இன்னமும் திருமார்பிலே திகழாநின்று ஸௌலப்ய காஷ்டையை விளங்கச் செய்கின்றனவாதலால் இத்திருவாபரணங்களே நமது சிந்தனைக்கு இனியவை என்றாராயிற்று.—அமலனாதிபிரானில் *கொண்டல்வண்ணனைக் கோவலனாய் வெண்ணெயுண்டவாயன்—அணியரங்கன்" என்ற பாசுரத்தைக் கண்டவர்கள் *பெரிய பெருமாளேயோ வெண்ணெயுண்டது* என்று கேட்க, "நம் பெரிய பெருமாளுடைய கொறுட்டையை மோந்துபார்த்தால் தெரியும்" என்றருளிச் செய்தவரன்றோ பட்டர்.

279. புகழ்—குறளாசிரியர் *தோன்றில் புகழொடு தோன்றுக, அஃதிலார் தோன்றலின் தோன்றாமை நன்று* என்றார். கீர்த்தியை அடியோடு பெறாதவர்களும், அபகீர்த்தியை அபரிமிதமாகப் பெற்றவர்களும் மலிந்த இவ்வுலகில் "நர: பதிதகாயோபி யஶ:காயேந ஜீவதி" என்னும்படியாகப் புகழுடம்புடனே ஜீவித்திருக்குமவர்கள் மிகச்சிலரேயன்றோ? அவர்களில் *ஸர்வதேஶதஶாகாலேஷ்வ! அவ்யாஹத பராக்ரமா, ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம், திகந்தவ்யாபிநீ பூயாத் ஸாஹி லோக ஹிதைஷிணீ* என்று தொள்ளாயிரம் வருடங்களுக்கு முன்பு தோன்றின மங்களாஶாஸந ச்லோகம் ஈஷத்தும் பழுதுபடாதபடி இற்றைக்கும் நாளைக்கும் எற்றைக்கும் செழித்தோங்கும் புகழ் எம்பெருமானாரொருவர்க்கே யன்றோ? "படிதிஶாமுகேஷு யதிராஜயஶ:படஹ:" என்ற யதிராஜஸப்ததி ஸூக்தியை ஸ்மரிப்பது.

280. மலிந்த. *மலிபுகழ்க் கணபுர முடைய வெம்மடிகளை*
வலிகெழு மதிளயல் வயலணி மங்கையர்*
கலியன தமிழிவை விழுமிய விசையினொடு*
ஒலிசொலுமடியவருறுதுயரிலரே.*

திருமங்கையாழ்வாருடைய திருக்கண்ணபுரப் பதிகங்கள் பத்தினுள் *வியமுடை விடையின முடைதர மடமகள்* என்கிற பாசுரத்தை முடிவிற்கொண்டபதிகம்(8 7-) திருவாய்மொழியில் *உயர்வறவுயர்நல முடையவன்யவனவன்* என்கிற முதற் பதிகத்தின் சாயையிலே அமைந்தது* பெரும்பாலும் குறிலெழுத்துக்களையிட்டே அமைத்தபதிகங்கள் இவையிரண்டே. பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ பூர்வசதகத்தில்—'த்ருதகஜகிரி பரிமிலதுததி—ப்ரசலித லஹரிவதஹ மஹமியா, ஸ்நபயதி ஜநமிமமபஹ்ரதி தம: பணிஶய மரதகமணி கிரணகண:" என்கிறச்லோகத்தை இந்தச் சாயையிலேயே [ஹ்ரஸ்வாக்ஷரமயமாகவே] அருளிச் செய்தார்.

281 பா.—"பாட்டுக் கேட்குமிடமும் கூப்பீடு கேட்குமிடமும் குதித்தவிடமும் வளைத்தவிடமும் ஊட்டுமிடமுமெல்லாம் வகுத்தவிடமேயென்றிருக்கக்கடவன்" என்பது ஸ்ரீவசநபூஷண சூர்ணை. (4-7,) நித்யமுக்தர்களின் ஸாமகானம் கேட்குமிடமான திருநாடும், அஸுரராக்ஷஸாதிபீடிதர்களான அமரர்களின் ஆர்த்தநாதம் கேட்கச் செவிகொடுத்துக்கொண்டு கண்வளருமிடமான திருப்பாற்கடலும், அங்கு நின்றும் வந்து அவதரித்த விபவாவதாரஸ்தலங்களும், நினைத்தது தலைக்கட்டுமளவும் மலையாளர் வளைப்புப் போலே இட்ட அடிபெயராமல் வளைத்துக் கொண்டிருக்கிற அர்ச்சாவதாரஸ்தலங்களும் ஹ்ருதயகமலத்திலேயிருந்து தானுகந்தார்க்குத் தன்னமுதை புஜிப்பிக்கிற அந்தர்யாமித்வ ஸ்தலமுமாகிற இந்த ப்ராப்யஸ்தலங்களெல்லாம் ஆசார்ய விஷயமேயென்று துணிந்திருக்கவேணுமென்கை.

282. மன்னு—

*மன்னுமதுரை தொடக்கமாக வண்டுவராபதி தன்னளவும்
தன்னைத் தமருய்த்துப் பெய்யவேண்டித் தாழ்குழலாள் துணிந்ததுணிவைப்
பொன்னியல்மாடம் பொலிந்து தோன்றும் புதுவையர்கோன் விட்டுசித்தன்கோதை
இன்னிசையால் சொன்ன செஞ்சொல்மாலை ஏத்தவல்லார்க்கிடம் வைகுந்தமே*

இது நாச்சியார் திருமொழியில் பன்னிரண்டாவது பதிகத்தின் நிகமனப்பாசுரம். இப்பதிகத்தில் ஆண்டாளுடைய அநுபவம் மிக அற்புதமானது. கண்ணபிரான் *ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:, நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹி ஆகதோ மதுராம் புரீம்* என்றபடி வடமதுரையில் வந்து திருவவதரித்தானென்று கேட்டு [அவதாரஸமாப்தியாய் விட்டதென்பதை மறந்து] தன்னை உடனே வடமதுரையில் கொண்டு சேர்க்கும்படி உற்றாரை வேண்ட, அவர்களும் அப்படியே மதுரையில் கொண்டு சேர்த்துக் கண்ணபிரான் எங்கே? என்று விசாரிக்க, அவதரித்தவுடனே அப்போதே நள்ளிருளிலேயே திருவாய்ப்பாடிக்குச் சென்று சேர்ந்துவிட்டாரே! என்ன; 'அங்கே கொண்டு போங்கோள்' என்று

**286-288. அடி.** திவ்யப்ரபந்தங்களில் திருவடியைப்பற்றி ஒரு விசேஷம் கேண்மின். பொய்கையாழ்வார்முதல் திருமங்கையாழ்வாரளவும் ஒவ்வோராழ்வாரும் பிரபந்தம் தொடங்கும்போதோ முடிக்கும்போதோ (இரண்டிடத்திலுமோ) திருவடியைப் பேசுவதை விரதமாகக் கொண்டிருக்கின்றனர். இதை அடைவே விவரிக்கின்றேன். (பொய்கையாழ்வார்) *செய்ய சுடராழியானடிக்கே* என்று தொடங்கினர். *ஓரடியும் சாடுதைத்த ஒண்மலர்ச்சேவடியும், ஈரடியுங் காணலாமென்னெஞ்சே! ஓரடியில் தாயவனைக் கேசவனை* என்று திருவடிமயமாகவே பேசித் தலைக்கட்டினர். (பூதத்தாழ்வார்) தம்முடைய திருவந்தாதியைத் தலைக்கட்டும்போது *அறைகழல சேவடியான் செங்கணடியான் என்றருளிச் செய்தார். (பேயாழ்வார்) இவர் தொடங்கும்போது *இன்றே கழல் கண்டேன்* என்றருளிச் செய்து, பிரபந்தம் தலைக்கட்டும்போதும் *சக்கரத்தான் தாள்முதலே நங்கட்குச் சார்வு என்றருளிச் செய்தார். (திருமழிசையாழ்வார்) திருச்சந்த விருத்தம் தலைக்கட்டும்போது *உன்னபாதமென்ன நின்ற ஒண்சுடர்க் கொழுமலர்* என்றருளிச் செய்தார். (நம்மாழ்வார்) திருவிருத்தம் தொடங்கும்போது *அடியேன் செய்யும் விண்ணப்பமே என்று சொல்லி உடனே *தொழுதிரிணையடிக்கே அன்பு சூட்டிய* என்றருளிச் செய்தார். திருவிருத்தம் தலைக்கட்டும்போது *அடிக்கண்ணிசூடிய மாறன்* என்றருளிச்செய்தார். அடுத்தபடி திருவாசிரியம் தொடங்கும்போது *மூவுலகளந்த சேவடியோயே* என்றார். பெரியதிருவந்தாதி தலைக்கட்டும்போது *மொய்கழலே ஏத்த முயல் என்றருளிச்செய்தார். திருவாய்மொழி தொடக்கம் *துயரறு சுடரடி தொழுதெழென்மனனே என்பது. (குலசேகராழ்வார்) பெருமாள் திருமொழி தொடங்கும்போது *திரைக்கையால் அடிவருடப்பள்ளிகொள்ளும்* என்றருளிச்செய்து, முடிவிலும் *நலந்திகழ் நாரணனடிக்கீழ் நண்ணுவாரே* என்றருளிச் செய்தார். (பெரியாழ்வார்) திருப்பல்லாண்டு தொடக்கம் *உன் சேவடி செவ்வி திருக்காப்பு* பெரியாழ்வார் திருமொழி தலைக்கட்டும்போது *இருப்பொலிந்த சேவடி என் சென்னியின்மேல் பொறித்தாய்* என்றருளிச் செய்தார். (தொண்டரடிப்பொடிகள்) இவருடைய திருநாமமே அடிபட்டுக்கிடக்கிறது. (திருப்பாணாழ்வார்) *திருக்கமலபாதம் வந்து என் கண்ணினுள்ளனவொக்கின்றவே. (திருமங்கையாழ்வார்) இவ்வாழ்வார் வயலாலி மணவாளன் திருவடியில் வாய்வைத்தே பிரபந்தம் தொடங்கினர் என்றுணர்க. சரமப்பிரபந்தம் தலைக்கட்டும்போதும் *நெடியானை அடிநாயேன் நினைந்திட்டேனே* என்றார். (மதுரகவிகள்) *முயல்கின்றேன் உன்றன் மொய்கழற்கு அன்பையே* (ஆண்டாள்) *உன் பொற்றாமரையடியே... களோய்* நாச்சியார்திருமொழிமுடிவில் *பெருந்தாளுடைய பிரானடிக்கீழ்ப் பிரியாதென்றுமிருப்பாரே* (இராமாநுச நூற்றந்தாதி) மாறனடிபணிந்துய்ந்த—*இராமானுசனடிப் பூமன்னவே*.

**289** நம்மாழ்வாருடைய திருவாய்மொழியில் (6-10) *உலகமுண்ட பெருவாயா பதிகத்தில் குறிக்கொள்ளத்தக்க விசேஷம் கேண்மின்; அப்பதிகத்தின் பதினொரு பாசுரங்களிலும் திருவடிப்ரயோகம் தவறாமலுள்ளது. 1. உனபாதம் கூடுமாறு. 2. உன்னடி சேர்வண்ணமருளாயே. 3. அன்னமேலே! உன்னடிசேர. 4. பூவார் கழல்களருவினையேன். 5. திணரார் சார்ங்கத்துனபாதம். 6. உன்னடிக்களடியேன் மேவுவதே. 7. கொடியார் பொழுது முனபாதங் காண 8. நோலாதாற்றேனுனபாதங்காண. 9. அந்தோவடியேனுனபாதம். 10. உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே. 11. அடிக்கீழமர்ந்துபுகுந்து. (இங்குமற்றொன்றும் குறிக்கொள்ள வேணும்.) இவ்வுலகமுண்டபதிகத்தில் பாசுரந்தோறும் திருவடி பேச்சுவருவது போல, (பாசுரந்தோறும்) அடியேன் என்பதும் வருவது காணலாம். நான்காவது பாட்டில்மட்டும் அடியேனுக்குப் பதிலாக 'அருவினையேன்' எனவந்துள்ளது.

**290. பணிந்து.** *பணிந்துயர்ந்த பௌவப் படுதிரைகள் மோதப் பணிந்த பணமணிகளாலே அணிந்து. அங்கு அனந்தலணைக் கிடக்குமம்மான். அடியேன் மனந்தனணைக் கிடக்கும் வந்து*. இது மூன்றாந்திருவந்தாதியில் பதினைந்தாம் பாட்டு. கீழ்ப்பதினான்காம் பாட்டில "மாறுபாட மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு நூற்பால் மனம் வைக்க

நொய்விதாம்'' என்றருளிச் செய்த ஆழ்வாரை நோக்கி, சாஸ்த்ரங்களில் மனம் வைத்து அவ் வழியால்தான் எம்பெருமான் படிகளை அறியவேணுமென்றீரே; நீர் அவ்விதமாகத் தான் அறிந்தீரோ?' என்று சிலர் கேட்க; எம்பெருமானுடைய நிர்ஹேதுகமான விஷயீகாரத்திற்கு இலக்கானவர்கள் சாஸ்த்ரங்களில் சிரமப்படவேணுமோ? அவன்தானே ஒருவரை விஷயீ கரிக்கத் திருவுள்ளம்பற்றினால் எல்லைகடந்த அன்புகொண்டு அவன் செய்யும் காரியங்களைத் தடுப்பாருண்டோ?' திருப்பாற்கடலிலே பரமஸுகமாகக் கண் வளர்ந்தருளுமவன் அதனை விட்டிட்டு என்னெஞ்சிலே வந்து கிடக்கிறானே; இது அவனுடைய நிர்ஹேதுக கிருபையினால் வந்ததன்றோ? இங்ஙனமே அவன் நிர்ஹேதுகமாக விஷயீகரிக்க விரும்பப் பெறுமவர்களுக்கு யாதொரு சாஸ்த்ர பரிச்ரமும் வேண்டா; நான் பெற்றபேறு அவர்களும் பெறுவர்கள்—என்ற கருத்தையடக்கி இப்பாசுரமருளிச்செய்தபடி.

291. **உய்ந்தவன்.** வடமொழியில், ஜீவநம் உஜ்ஜீவநம் என்று இரண்டு சொற் களுண்டு. வயிறு வளர்த்து வாழ்வது ஜீவனமென்றும், ஆத்மா கடைத்தேறப்பெறுவது உஜ்ஜீவனமென்றும் சொல்லப்படும். ஜீவனம் என்கிற சொல்லுக்கு இவ்விரண்டு பொருள் களையும் கொள்ளுவாருமுளரெனினும், உஜ்ஜீவனமென்கிற சொல்லுக்கு வயிறு வளர்த்து வாழ்தலைப் பொருளாகச் சொல்லுவாரில்லை. தமிழில் (உய்தல்) என்கிற சொல்லுக்கு ஜீவனமும் உஜ்ஜீவனமுமாகிய இரண்டும் பொருளாம். *திருநாரணன் தாள் காலம்பெறச் சிந்தித்து உய்ம்மினோ* என்றவிடத்து 'உஜ்ஜீவியுங்கோள்' என்று பொருள். *உய்ம்மின் திறைகொணர்ந் தென்றுலகாண்டவர்* என்கிற அடுத்த பாசுரத்தில் 'ஜீவித்துப் போங்கோள்' என்று பொருள்.

292 **பல்கலையோர் இத்யாதி**—(பல்) இதைக் கலையிலும் அந்வயிக்கலாம், கலை யோரிலும் அந்வயிக்கலாம். பலவகைப்பட்ட கலைகளையுங் கற்றவர்கள்—என்பது முந்தின அந்வயத்திற் பொருள்; கலைகளெல்லாங் கற்று மஹாவித்வான்களானோர் பலர்—என்பது பிந்தின அந்வயத்திற்பொருள். கூரத்தாழ்வான், முதலியாண்டான், எம்பார், அனந்தாழ்வான், திருக்குருகைப்பிரான் பிள்ளான் கிடாம்பியாச்சான் போல் வாரான எண்ணிறந்த சிஷ்ய வர்க்கங்களை நினைக்கிறது. *ஏகாந்திநாம் த்வாதசபிஸ் ஸஹஸ்ரைஸ்ஸம்ஸேவிதஸ் ஸம்யமி ஸப்தஸங்க்யா* என்று யதிராஜ வைபவத்தில் வடுகநம்பி பணித்தபடியே பன்னீராயிரம் ஸ்ரீவைஷ்ணவர்களும் எழு நூறு உத்தமாச்ரமிகளுமன்றோ எம்பெருமானார் பக்கலிலே மண்டிக் கிடந்தது.

293. **இராமானுசன் சரணாரவிந்தம்**—எம்பெருமானார் திருவடியிணைகளின் பெரு மையை மட்டும் நூற்றந்தாதியில் ஒரு பாட்டாலே யருளிச்செய்கிறார் அமுதனார், அப்பாட்டுவருமாறு—

> ''உதிப்பனவுத்தமர் சிந்தையுள், ஒன்னலர் நெஞ்சமஞ்சிக்
> கொதித்திட மாறிநடப்பன, கொள்ளைவன் குற்றமெல்லாம்
> பதித்தவென்புன்கவிப் பாவினம் பூண்டன பாவுதொல்சீர்
> எதித்தலைநாதனி ராமானுசன் தன்னிணையடியே. (50)

294. இதன் கருத்தாவது—உலகமெங்கும் பரவின திருக்கல்யாண குணங்களையுடைய வரும் யதிஸார்வபௌமருமான எம்பெருமானாருடைய திருவடியிணைகள் (எப்படிப்பட்டவை யென்றால்): உத்தமாதிகாரிகளாயிருப்பார் நிரந்தரம் சிந்திக்கும் படியாயிருப்பவை; சங்கர பாஸ்கரயாதவ பாட்டப்ரபாகராதிகளான புறமதத்தவர்கள் அஞ்சி நடுங்கும்படி அவர்களது தலைகள்மீதே காலவிட்டுமிதிருமவை; மஹாபாபியான என்னுடைய இழிய புன்கவிதைகளையும் பெற்றுக்கொண்டவை. (என்றால் துதிக்கப்பட்டவை யென்றபடி.)

**295-96. நாம்**—*நாமே யறிகிற்போம் நன்னெஞ்சே* என்கிற பொய்கையாழ்வாருடைய திருவந்தாதிப் பாசுரம் நினைவுக்கு வருகிறது. அந்தப் பாசுரத்தில் அபூர்வமான கதையொன்று ஆழ்வாரால் அநுஸந்திக்கப்பட்டுள்ளது. பாசுரமாவது—*ஆமே யமரர்க்கறிய அது நிற்க, **நாமே யறிகிற்போம்** நன்னெஞ்சே!, பூமேய, மாதவத்தோன் தாள் பணிந்த வாளரக்கன் நீண் முடியைப், பாதமத்தாலெண்ணினான் பண்பு* என்பதாம். இதிலுள்ள அபூர்வ கதையாவது—முன்பு இராவணன் தனது பத்துத் தலைகளையும் மறைத்துக்கொண்டு நான்முகனிடஞ்சென்று வரம் வேண்டிக்கொள்ளுமளவில் எம்பெருமான் ஒரு சிறு குழந்தை வடிவாய் அப்பிரமனுடைய மடியில் உறங்குவான் போற்கிடந்து 'இவன் பத்துத்தலைகளையுடையனான இராவணன்; ஸ்வஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டு உன்னை வஞ்சித்து வரம் வேண்டிக் கொள்ள வந்திருக்கிறான்; இவனுக்கு நீ வரமளித்தால் பெருந்தீங்காக முடியும் என்று தெரிவிப்பவன் போன்று தன் திருவடியால் அவ்விராவணனுடைய பத்துத் தலைகளையும் எண்ணிக் காட்டினன்—என்பதாம். இக்கதை மூன்றாம் திருவந்தாதியில் *ஆய்ந்த அருமறையோன் நான்முகத்தோன் நன்குறங்கில்' வாய்ந்த குழவியாய் வாளரக்கன்—ஏய்ந்த, முடிப்போது மூன்றே மென்றெண்ணினான், ஆர்த்தவடிப்போது நங்கட்கரண்* என்ற (77) பாட்டிலும், நான்முகன் திருவந்தாதியில் *கொண்டு குடங்கால்மேல் வைத்தகுழவியாய், தண்டவரக்கன் தலைதாளால் பண்டெண்ணிப் போங்குமரன்....* என்ற (44) பாட்டிலும் பேயாழ்வாராலும் திருமழிசைப் பிரானாலும் அநுஸந்திக்கப்பட்டுள்ளது. இக்கதை இதிஹாஸ புராணங்களில் உள்ளிடம் தெரியவில்லை. பெரியாழ்வார் திருமொழியில் 'சீமாலிகனவனோடு தோழமைக்கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்* என்றும், *எல்லியம்போதினிதிருத்தலிருந்ததோரிட வகையில், மல்லிகை மாமாலை கொண்டு அங்கார்த்தது மோரடையாளம்' என்று அருளிச்செய்த கதைகள் வ்யாஸபராசர வால்மீகி ப்ரப்ருதிகளால் ஸாக்ஷாத்கரிக்கப்படாமல் ஆழ்வாரால் மட்டும் பகவந் நிர்ஹேதுக கருணைபடியாக ஸாக்ஷாத் கரிக்கப்பட்டன வென்று நம் பூருவாசாரியர்கள் நிர்வஹித்திருப்பது போலவே இக்கதையும் கொள்ளத்தக்கதென்று பெரியோர் பணிப்பர்.

**297. மன்னி**—*மாரிமலைமுழஞ்சில் **மன்னிக்கிடந்துறங்கும்*** என்கிற திருப்பாவைப் பாசுரம் நினைவுக்குவருகின்றது. திருப்பாவை முப்பதுபாட்டும் திருப்பாவை ஜீயரான எம்பெருமானாருடைய வைபவத்தைத் தெரிவிப்பனவாயினும் இப்பாசுரம் விசேஷித்து எம்பெருமானார் பெருமையைப் பேசுவதாம். திருப்பாவை நறுமணமென்னும் நமது விசேஷவுரையிற்காண்க.

**298. வாழ.**—வாழ்வது பலவிதம். *நலமந்தமில்லதோர் நாட்டில் வாழ்வதும் நரகபர்யாயமான சுவர்க்கத்தில் வாழ்வதும் வாழ்ச்சியன்று. ஆழ்வார் திருவாய்மொழியில் *வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம்புகழவே* என்றும் *இங்கே காண இப்பிறப்பே மகிழ்வர் எல்லியுங்காலையே* என்றும் பயனுரைத்தருளினபடி இவ்விபூதியிலே அகமகிழுந் தொண்டரோடு திவ்யதேசாநுபவம் பண்ணிக்கொண்டு வாழ்வதே வாழ்வாம்.

**299. நெஞ்சே! சொல்லுவோம்**—நெஞ்சின் காரியம் நினைப்பதே யொழியச் சொல்லுகையன்றே; நெஞ்சே! நினைப்போம்' என்ன வேண்டிருக்க, **நெஞ்சே சொல்லுவோ**மென்றது மனஸ்ஸஹகாரமின்றி எதுவும் நடைபெறாதாதலால். *மன:பூர்வோ வாகுத்தர:* என்றது வேதமும்.

**300. அவன் நாமங்களே**—எம்பெருமான் திருநாமங்களைச் சொல்லுவதிற் காட்டிலும் எம்பெருமானார் திருநாமங்களைச் சொல்லுகையே சிறக்குமென்க. 'மதுரகவி சொற்படியே நிலையாகப்பெற்றோம்* என்றார் மணவாளமாமுனிகளும்.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜபக்த ஹஸ்தபூஷணத்தில்-கீர்த்திமூர்த்திகளான பெரியோர்களின் குணநுபவப் பகுதி

[எம்பெருமானார் தரிசனத்திற்கு அணிவிளக்காகவும் அடியேனுக்குப் பரிசிதர்களாகவுமிருந்த பெரியோர்களை ஸ்மரிக்கின்றேன்.]

## 301. பிரதிவாதிபயங்கரம் அண்ணுரங்காசாரியர் ஸ்வாமி. (அடியேன் திருத்தகப்பனுர்)

முதன்முதலாக அடியேனுடைய திருத்தகப்பனுர் பெருமையை விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீரங்கநாதசர்மந்கொண்டவர். அண்ணு ரங்காசாரியரென்றே வழங்கும் திருநாமம். நாற்பத்து மூன்று ஸம்வத்ஸரமே இவ்விபூதியை அலங்கரித்தெழுந்தருளியிருந்தார். குரோதி ஸம்வத்ஸரம் பங்குனித் திங்களில் திருநாடலங்கரித்தமையால் இற்றைக்கு எழுபத்திரண்டாண்டு நிரம்பி விட்டது. அடியேனுடைய பதினுன்காவது பிராயம் முடிந்த ஏழாம் நாளில் பரம பதித்தபடி. அவரோடு நெருங்கிப் பழகினவர்களும் அவரிடத்தில் கல்வி பயின்றவர்களும் பத்தெட்டு ஸம்வத்ஸரங்களுக்கு முன்புவரையில் இருந்தார்கள். அப்படிப்பட்டவர்கள் இப்போது வாழ்வதாக ஒருவரும் நினைவுக்கு வரவில்லை. அவருடைய திருவுருவப்படமும் சேகரிக்கப்படவில்லை. அக்காலத்தில் தேவப்பெருமாள் ஸந்நிதி வீதியிலுள்ள வானமாமலை மடத்தில் ஸம்ஸ்க்ருத பாடசாலையொன்று பிரபலமாக நடந்து கொண்டிருந்தது. அதில் (திருத்தகப்பனர்) ஸாஹித்யத்திற்கும் திவ்யப்ரபந்தத்திற்கும் உபாத்யாயராக எழுந்தருளியிருந்தார். அப்பாடசாலையில் நூற்றைம்பது வித்யார்த்திகள் ஸம்ஸ்க்ருத பாடங்கள் பயின்று வந்தார்கள். காலை 10 மணிக்கும் மாலை 5 மணிக்கும் பாடசாலை விடும்போது மாடவீதிக்குத் திரும்பும் வித்யார்த்திகள் 75 பேர்களும் மேற்கே திரும்பும் வித்யார்த்திகள் 75 பேர்களும் காணப்படுவார்கள். ஸ்கூல் என்று சொல்லக்கூடிய பள்ளிக்கூடம் அப்போது சின்ன காஞ்சியிலோ பெரிய காஞ்சியிலோ ஒன்றுகூட ஏற்பட்டிருக்கவில்லை. அதனால்தான் அப்போது ஸம்ஸ்க்ருத வித்யாபாட ப்ரவசனங்கள் குறைவற நடந்து வந்தன.

## 302. ஸ்ரீ அழகிய மணவாள ராமாநுஜ (ஷஷ்டி) ஜீயர் ஸ்வாமி.

தேவப்பெருமாளது கீழண்டை கோபுர வாசலில் விளங்கும் அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி மடத்தில் 1916—ஆம் வருடத்திற்குமுன்பு நாற்பது ஸம்வத்ஸரகாலம் ஆஸ்தானமலங்கரித்து விளங்கின ஜகத்ப்ரஸித்த மடாதிபதி ஜீயர்ஸ்வாமி ஷஷ்டி ஜீயர் ஸ்வாமியென்று வழங்கப்பட்டு வந்தார். சதுஷ்ஷஷ்டி கலாவல்லப பரவஸ்து திருவம்சத்தில் அவதரித்ததனால் ஷஷ்டியார் என்று குடும்பப்பெயராக வழங்குவது. அந்தரீதியில் ஷஷ்டி ஜீயர்ஸ்வாமியென்றே இந்த ஜீயர்ஸ்வாமி ப்ரஸித்தி பெற்றிருந்தார். இந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் அடியேனுக்கு ஸாக்ஷாத் மாதாமஹராவர். பூர்வாச்ரமத்தில் ஷஷ்டி வரதாசாரியர் ஸ்வாமியென்று ப்ரஸித்தராய் தென்மொழியும் வடமொழியும் திகழ்ந்த நாவரராய் விசேஷித்துத் தமிழ்ப் புலவர் திரளில் ப்ரதம பரிகணிதராய் விளங்கி வந்தார். சடகோப நிலய பாடசாலையில் ஸ்ரீமத் திருப்புட்குழியப்பா ஸ்வாமி காலத்தில் தமிழிலக்கண இலக்கியங்களுக்கு உபாத்யாய பதவியை அலங்கரித்துவந்தார். கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீ வை. மு. சடகோபராமாநுஜாசாரியார் ஸ்வாமியைப்பற்றிக் கேள்விப்படாதாரிலர். அந்த ஸ்வாமி ஸ்ரீஉவே. புன்னை. சீமாச்சார் ஸ்வாமி யென்பவருடைய மாணுக்கர். அந்த சீமாச்சார் ஸ்வாமி ப்ரக்குதஜீயர் ஸ்வாமி ஸன்னிதியிலேயே (பூர்வாச்ரமத்தில்) மாணுக்கராக வாழ்ந்து தேர்ச்சி பெற்றுர்.

## 303. ஸ்ரீ ஜகத்குரு காதிஸ்வாமி :

''ஸ்ரீமூகரும்பஸ்வாதீஜாதமநந்தார்ய ஸூரிமஹாபீடே, ஸ்ரீக்ருஷ்ணஸூரிதநயம் வாதிபயங்கர
குலாப்தி சந்த்ரமஸம்.'' என்கிற நித்யாநுஸந்தேய திருநக்ஷத்திரத் தனியன்படி ஸ்ரீமூகஸம்வத்
ஸரம் மாசி மாதம் ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் இந்த விபூதியில் வந்து தோன்றி அறுபத்திரண்டு
ஸம்வத்ஸரம் வாழ்ந்தருளி ஸ்ரீ ஸ்வாமி செய்தருளின அதிமாநுஷ க்ருத்யங்கள் அவாங்மனஸகோ
சரமென்று ஒரே வார்த்தையில் தலைக்கட்டத் தக்கது. ஆயினும் ஸ்வல்பமே விஜ்ஞாபிக்கிறேன்.
ஸ்ரீ காஞ்சியில் பெண்ணிதிவிதியில் வடவண்டை வாடையில் ஸ்ரீ ஸுதர்சனாழ்வானுடைய ரக்ஷை
பெற்ற மிகப்பெரிய திருமாளிகை'காதி அனந்தாசார்யர் திருமாளிகை'என்றும் 'காரணையனந்தாசார்
திருமாளிகை' என்றும் ப்ரஸித்தி பெற்றது. இந்த ஸ்வாமியின் முன்னோர்கள் காரணையென்னும்
அக்ரஹாரத்தில் வாழ்ந்துவந்ததனால், ஏறக்குறைய நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்பு வாழ்ந்த
வரும், முதன் முதலாக வடதேசங்களுக்கெழுந்தருளி சிஷ்யஸம்பத்தைப் பெற்றவரும், புஷ்கர
க்ஷேத்ரத்தில் விக்ரஹப்ரதிஷ்டை பெற்றிருப்பவருமான பெரிய அனந்தாசார்யஸ்வாமிக்கு 'காரணை
அனந்தாசாரியார்' என்கிற ப்ரஸித்தியிருந்துவந்தது. அந்த மஹாஸ்வாமியின் ஸ்தானத்தில்
எழுந்தருளியிருந்த காதிஸ்வாமி இளமையில் அடியேனுடைய திருத்தகப்பனாரிடம் சில வருஷங்
கள் கல்வி பயின்று, திருப்பதியில் எழுந்தருளியிருந்த ஜகத்விக்யாத வித்வத்ஸார்வபௌமரும்
தமக்கு ஸாக்ஷாத்மாதுலருமான ஸ்ரீமத் திருமலை அனந்தாண் பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி
திருவடிவாரத்தில் சென்று பத்தெட்டு ஸம்வத்ஸரங்கள் அங்கேயே குடி வாழ்ந்து ஸகல சாஸ்த்ர
பாரங்கதராய் தீபாதுத்பந்நப்ரதீபமாய் விளங்கினர்.

## 304. திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்வாமி

புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி திருப்பதியில் தென்னாடும் வடநாடும் ஸுப்ரஸித்தராயிருந்த
மஹாவித்வத் பரிப்ருடர். இந்த ஸ்வாமி பரமபதித்து இற்றைக்கு 52 வருஷமாகிறது. மேலே ஸ்ரீமத்
குன்றபாக்கம் ஸ்வாமியைப்பற்றி யெழுதப்போகிறேன். மண்ணுலகுக்கு ஸூர்ய சந்திரர்களென்றே
வழங்கப்பட்டு வந்தனர் இவ்விருவரும். ஸ்ரீமத் புரிசை ஸ்வாமி பக்கலில் ஜ்ஞானஸம்பத்தோடுகூட
அநுஷ்டானஸம்பத்தும் அதிசயிதமாக விளங்கிற்று. சதுச்சாஸ்த்ரபாண்டித்யத்தோடுகூட மற்றும்
அநேக கலைகளிலும் பாண்டித்யம் ப்ரசுரமாயிருந்தது. பிற்காலத்தில் ஸ்ரீகாதி ஸ்வாமியோடொப்ப
ப்ரஸித்த வித்வான்களாக விளங்கின ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சி மேட்டழகிய சிங்கர், ஸ்ரீமத் கபிஸ்
தலம் தேசிகாசார்ய ஸ்வாமி முதலானோரும் இந்த ஸ்வாமி பக்கலிலேயே நெடுங்காலம் வித்யார்த்தி
களாக வாழ்ந்தவர்கள். திருப்பதியில் இப்போது பிரபலமாக விளங்கிவருகின்ற வித்யாசாலை
யானது முந்நூறுமுன்னம் இந்த ஸ்வாமியினால் ஸாமான்யமாகத் தொடங்கப்பட்டதாம். இந்த
ஸ்வாமியின் காலத்திலேயே அது ப்ராபல்யமடைந்து விட்டது.

## 305. ஸ்ரீ குன்றபாக்கம் ஸ்ரீநிவாஸாசார்யர் ஸ்வாமி

ஸ்ரீ காஞ்சீபுரியானது முற்காலத்தில் பிரபல வித்யா பீடமாக விளங்கிக் கொண்டிருந்ததென்
பதை எந்நாட்டினரும் அறிவர். ஏறக்குறைய 55 வருஷங்களுக்குமுன் இம்மஹாநகரத்தில் த்ரிம
தஸ்தர்களிலும் பிரபல வித்வான்கள் சதுச் சாஸ்த்ர பண்டிதர்களென்று புகழ்பெற்று விளங்கிக்
கொண்டிருந்தார்கள். அன்னவர்களில் குன்றபாக்கம் ஸ்வாமியென்றே ப்ரஸித்திபெற்றிருந்த
மஹாஸ்வாமி ஈடுமெடுப்புமில்லாத வித்வத் ஸார்வபௌமராக விளங்கியவர் 'குன்றபாக்கம்
சிமாச்சார்ஸ்வாமி' யென்றே இவர்க்கு ப்ரஸித்தி. வடதேசங்களில் சிங்களாசார்ஸ்வாமி யென்று
ப்ரஸித்தி. இந்த ஸ்வாமி சதுச்சாஸ்த்ரங்களிலும் வல்லவரெனினும் நியாய வேதாந்தங்களில்
அநிதர ஸாதாரணமான வைதுஷ்யம் பெற்றிருந்தார். நியாய சாஸ்த்ரத்தில் யார் எத்தனை கோடி
கள் சொன்னாலும் இந்த ஸ்வாமியின் கோடியே மேம்பட்டு நிற்குமென்று ஸகல வித்வான்களும்
ஏககண்டமாகச் சொல்லுவார்கள். ஸ்வாமியினுடைய திருமாளிகை சின்ன காஞ்சீபுரம் ஸன்னிதி

வீதியிலுள்ளது. அந்த வீதியிலேயே ஸ்ரீ வானமாமலை மடத்தில் ஸ்வாமியினுடைய தலைமையில் ஸம்ஸ்க்ருத பாடசாலை 20 வருஷகாலம் வெகு சிறப்பாக நடந்து வந்தது. அதில் நியாய வேதாந்த ப்ரவசனம் செய்து பலபேர்களை சாஸ்த்ராதிகாரிகளாக ஆக்கியருளினர் இந்த ஸ்வாமி.

## 306. ஸ்ரீ மாம்பள்ளம் ஸுதர்சனாசார்யர் ஸ்வாமி

இந்த மஹாபுருஷர் திருநாட்டுக்கெழுந்தருளி 40 ஸம்வத்ஸரமாகிறது. உலகத்தில் மிகவும் ப்ரஸித்தமாக வழங்கிவருகின்ற "ந பூதோ ந பவிஷ்யதி" என்கிற வாக்கானது இந்த ஸ்வாமி ஒருவருக்கே தகும். இந்த உலகத்தில் மற்ற மஹான்கள் ஸம்பாதிக்கும் யோக்யதைகள் மற்றும் பலரிடத்தும் காணக்கூடியவையேயாகும். இந்த ஸ்வாமி ஸம்பாதித்திருந்த யோக்யதைகள் முக்காலத்திலும் அஸாதாரணமென்பதை விஜ்ஞாபிப்பதற்கும் அடியேன் அநர்ஹன். தென்னாடு முழுவதிலும் இவருடைய யோக்யதைகள் நன்கு பரவியிருப்பதால் அடியேன் எடுத்துரைப்பது பிஷ்டபேஷணமே யாகும். வேதத்திலும், ஆழ்வாரருளிச் செயல்களிலும், ஆசார்ய திவ்ய ஸூக்திகளிலும், இதிஹாஸ புராணங்களிலும், காவ்ய நாடகாலங்காரங்களிலும் இந்த ஸ்வாமி பரிச்ரமப்பட்டு ஸம்பாதித்திருந்த யோக்யதை ஒருவர்க்கும் ஒரு புருஷாயுஸ்ஸில் ஸம்பாதிக்கக் கூடியவையல்ல என்பது ஸத்யம். இந்த ஸ்வாமி பெரும்பாலும் வித்யாக்ரஹணம் செய்தது ஸ்ரீபெரும்பூதூரில். திவ்யதேச வாஸத்தையே பரமபுருஷார்த்தமாகக்கொண்டு பலபல திவ்யதேசங்களில் வாழ்ந்துகொண்டு நியத ப்ரமத்தானிச் சேவகம் புரிந்துவந்தார். நம்பெருமாள் ஸந்நிதியில் ஏழெட்டு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து வேதபாராயண கைங்கர்யம் நிர்வஹித்தருளினர். திருநின்றவூர், திருநீர்மலை, திருவல்லிக்கேணி ஆழ்வார் திருநகரி முதலான பல தலங்களில் மாதக்கணக்கிலும் வருஷக் கணக்கிலும் எழுந்தருளியிருந்து உபயவேத கோஷ்டிகளையும் நிர்வஹித்தருளினர். ஸ்ரீ காஞ்சியில் வேத வேதாந்தவைஜயந்தீ பாடசாலையைத் தொடங்கி வைத்தவர் இந்த ஸ்வாமியே. அடியேன் முதலான இருபது வித்யார்த்திகளுக்கு க்ரமாந்தம் ஓதுவித்தவர் இந்த மஹாஸ்வாமியே.

## 307. ஸ்ரீ குண்டலம் நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமி

இத்திருநாமம் பூண்ட மஹாஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூரில் உபய வேதாந்த வர்த்திநீ வித்யா சாலையை முன்னம் அபிவிருத்திக்குக் கொண்டுவந்த மஹாபுருஷர்களில் தலைவர். இவரிடத்தில் ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களை அதிகரித்து நாளைக்கும் ஜகத்ப்ரஸித்த வரிஷ்ட வித்வத் சிகாமணிகளாக விளங்கும் மஹான்கள் சிலருளர். ஸ்ரீபெரும்பூதூரில் வித்வத் வரிஷ்டராய் விளங்கியவரும் மஹாவாக்மியுமான ஸ்ரீமத் உபயவே. தி ஆஸூரி. ராமாநுஜாசார்யர் ஸ்வாமி, இந்த ஸ்ரீ நரஸிம்ஹாசார்யர்ஸ்வாமியின் அந்தேவாஸி என்பதொன்றே இவருடைய அப்ரதிம வைபவத்தை விளக்கவல்லதாகும். இவருடைய ஜன்மபூமி நைஜாம் இலாகாவில் சேர்ந்த 'இந்தூர்' என்னும் அக்ரஹாரம். வடதேசத்திலிருந்த ஸ்ரீ உ. வே. இல்லந்திர ராகவாசாரியார் ஸ்வாமி யென்பவரிடத்திலும், மற்றும் சில மஹாவித்வான்களிடத்திலும் இவர் ஸாமாந்ய சாஸ்த்ரங்கள் வாசித்து, கத்தவால் வனபர்த்தி வேங்கடகிரி முதலான ஸம்ஸ்தானங்களில் பரீக்ஷை கொடுத்து வித்வான் என்னும் விருதும் ஸ்வர்ண குண்டலமும் பெற்றவர். அதுபற்றியே குண்டலம்ஸ்வாமி யென்றே இவர் வழங்கப்பட்டு வந்தார்.

## 308 ஆஸூரி. (சின்ன) ராமாநுஜாசாரியர் ஸ்வாமி

அடுத்தபடியாக ஸ்ரீமதுபயவே. பெரிய ராமாநுஜாசார்ய ஸ்வாமியின் வைபவம் வருகிறது. அந்த மஹாஸ்வாமியின் பரமக்ருபையினால் அபிவிருத்தியடைந்து சின்ன ஸ்வாமி யென்றே பேர் பெற்றிருந்த இந்த ஸ்வாமி இற்றைக்கும் எழுந்தருளியிருக்கத்தக்கவர். திருநாடலங்கரித்து

ஏறக்குறைய முப்பத்தைந்து ஸம்வத்ஸரமாய்விட்டது. நியாய வேதாந்தங்களில் ஆழ்ந்த அவகாஹனமுடையராய்ச் சிறந்த வாக்மியாக விளங்கினவர். ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் பலவாண்டுகள் நியாயோபாத்யாயராக விளங்கினவர்.

## 309. ஸ்ரீமதுபயவே. ஆஸூரி. மஹாஸ்வாமி

கீர்த்திமூர்த்திகளான பெரியார்களின் பெருமையென்னுமிக்கட்டுரை தொடங்கும்போதே முதல் ஸ்தானத்தில் வீற்றிருக்க வேண்டிய மஹாஸ்வாமி இவர். *அதீத மத்யாமித மார்ஜிகம் யச:* என்றதற்கு ப்ரதம லக்ஷ்யமாக எழுந்தருளியிருந்த இந்த மஹாஸ்வாமியின் பெருமைகளை நமது ஸ்ரீராமாநுஜன் பல பர்யாயங்களில் பேசியிருக்கின்றது. *செலக்காண்கிற்பார் காணுமளவும் செல்லுங்கீர்த்தியாய்* என்னும்படி விளங்கின இந்த மஹாஸ்வாமியின் ஸ்மரணம் பண்டிதவுலகில் இற்றைக்குமுள்ளது. பரமபதித்து 25 வருஷமாகிறது.

## 310. ஸ்ரீ பண்டிதரத்னம் கஸ்தூரி ரங்காசார்யர் ஸ்வாமி

இந்த ஸ்வாமி சதுச்சர்ஸ்த்ர வித்வரென்றும், விசேஷித்து நியாயமீமாம்ஸைகளில் ப்ரசண்ட பண்டிதரென்றும் சொல்லுவர்கள். சிறந்த க்ரந்திகர் என்பதை அடியேன் நன்கறிந்திடுக்கிறேன். இந்த ஸ்வாமியிடத்தில் சாஸ்த்ரங்கள் வாசித்து உத்தீர்ணர்களான வித்வான்கள் பலர். சிலபல ஸம்வத்ஸரங்களுக்குமுன் பரமபதித்த ஸ்ரீமத் அபிநவரங்கநாத பரகால மஹாஸ்வாமி கஸ்தூரி ஸ்வாமியின் அந்தேவாஸியென்று ப்ரஸித்தர். இதை ஸ்வாமி தாமே அடியேனிடத்தில் ஸாதித்துமிருந்தார்.

## 311. காஞ்சீ, திருப்புட்குழி பட்டண்ணு ஸ்வாமி

ஸ்ரீ காஞ்சீ ஸன்னிதி வீதியில் ஜகத்ப்ரஸித்தராக எழுந்தருளியிருந்த ஸ்ரீக்ருஷ்ண தாதாசார்ய ஸ்வாமியென்கிற திருப்புட்குழி யப்பாஸ்வாமியை அடியேன் அறியேன். அவர் பரமபதித்தகாலத்தில் அடியேன் ஒருவயது சிசுவாக இருந்தவன். அவருடைய திருக்குமாரர் பட்டண்ணுதாதாசாரியர்ஸ்வாமி யென்பவரை நன்கறிவேன். முப்பது பிராயம்வரையில் அவரை ஸேவித்திருக்கிறேன். 'தீபாதுத்பந்நப்ரதீபம்' என்னுமாபோலே திருத்தகப்பனாரைக் காட்டிலும் மஹா மேதாவியென்று சொல்லுவர்கள்; நியாய வேதாந்தங்களிரண்டிலும் அத்விதீய வித்வந்மணியாக விளங்கினவர். ஸ்ரீகாதிஸ்வாமி வெளியூர்களுக்கு எழுந்தருளுங்காலங்களில் அடியேனுக்கு நியாயோபாத்யாயராக அமைந்திருந்த ஸ்ரீமதுபயவே. இளங்காடு ரங்கஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி இந்த பட்டண்ணுஸ்வாமியிடத்திலேயே ஸகலமும் அதிகரித்தவராகையாலே ஸ்வாசார்யருடைய மேதாப்ரதிபாப்ரஜ்ஞா விலாஸங்களை அடிக்கடி அவர் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

## 312. ஸ்ரீ தன்றி. பட்டப்பாதாதாசார்யர் ஸ்வாமி

ஸ்ரீ காஞ்சீ ஸன்னிதி வீதியில் பதினாறுகால் மண்டபத்திற் கெதிர்த்திருமாளிகையில், தண்ட்ரி. ஸ்ரீநிவாஸதாதாசார்ய ஸ்வாமியென்று திருநாமமுடையராய் பட்டப்பாஸ்வாமியென்றே வழங்கப்பட்டு வந்தவர் இந்த மஹா புருஷர். இவர் அடியேனுடைய திருத்தகப்பனார்க்கு ஸஹாத்யாயியாய் *பஹி: ப்ராண இவாபர:* என்னும்படி யிருந்தவரென்று திருத்தகப்பனாரே ஸாதிக்கக் கேட்டிருந்தேன். அடியேனுடைய பதினைந்து பிராயத்திற்குள்ளாகவே இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்து விட்டார். அப்போது இவர்க்கு நாற்பத்தைந்து திருநக்ஷத்ரங்கூட நிரம்பவில்லையென்று ஞாபகம். அடியேன் பாடசாலைக்குப் போகிறபோதும் திரும்புகிறபோதும் இந்த ஸ்வாமியிடத்தில் சற்றுப்போதாவது வார்த்தையாடாமலிருந்ததில்லை. இது திருத்தகப்பனாருடைய நியமனத்தினாலு

மாயிற்று. திருப்புட்குழியப்பா ஸ்வாமியின் வித்யார்த்திகளில் இவர் தலைவராயிருந்து, சதுச் சாஸ்த்ரங்களிலும் துல்யமான பாண்டித்யம் பெற்றிருந்தார்.

## 313. ஸ்ரீ ஆடூர் ரங்கஸ்வாமி ஐயங்கார்ஸ்வாமி

ஆடூர் ஸ்வாமியை அடியேன் இளமையில் ஸேவித்திருந்தாலும் அதிகமாக நெருங்கிப் பழகினதில்லை. திருவல்லிக்கேணி வேத வேதாந்தவர்த்திநீ ஸபையில் பரீக்ஷகராக எழுந்தருளின காலத்தில் இரண்டொருதடவை ஸேவித்ததத்தனை. அக்காலத்தில் இந்த ஸ்வாமியின் ப்ரக்யாதி ப்ரபலமாக இருந்தது. ஸ்ரீமத் ஆடூர் ஸ்வாமி பல வருஷங்கள் நம்பெருமாள் ஸன்னிதியிலெழுந்தருளியிருந்து பிறகு ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்திரவாஸயாகி எழுபத்தைந்து திருநக்ஷத்திரம் இவ்விபூதியை அலங்கரித்திருந்தார். 1905 வருஷம் விசுவாவஸு வருஷத்தில் விண்ணுலகெய்தினர். ஸ்வாமி ஸ்ரீராமாயணம், பகவத்கீதை, பகவத்விஷயம், ரஹஸ்யங்கள் போன்ற க்ரந்தங்களைப் பலகால் ப்ரவசனம் செய்தருளினதோடு தர்க்கசாஸ்த்ர பாடங்களும் பலர்க்குச் சொல்லிவந்தார்.

## 314. ஸ்ரீ திருக்கண்ணபுரம் பட்டப்பாஸ்வாமி

இப்பேராசிரியரின் திருநாமம் கேள்விப்படாத ஸ்ரீ வைஷ்ணவர் ஒருவரும் இருக்கமாட்டார். இந்த ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி ஐம்பது ஸம்வத்ஸரங்களானாலும், இற்றைக்கும் வித்வத் கோஷ்டிகளில் இவருடைய திருநாமம் பெரும்பாலும் ப்ரஸக்தமாகியே வருகின்றது. இந்த ஸ்வாமி ந்யாய வியாகரண வேதாந்தங்களில் சிறந்த பாண்டித்யம் ஸம்பாதித்திருந்ததோடு, பகவத் விஷயத்திலும் ரஹஸ்யப்ரஸ்தானத்திலும் தமிழ் இலக்கியங்களிலும் நிகரற்ற புலமை பெற்றிருந்தார். சென்னைமாநகரில் பத்தெட்டு வருஷங்கள் எழுந்தருளியிருந்து அமுதப்பெருக்கான உபந்யாஸங்களை வெகு ஆச்சரியமாக ஸாதித்துக்கொண்டிருந்தார். இவருடைய திருக்குமாரன் விஜயராகவனென்பவன் மஹா மேதாவியாய் த்வீபாந்தரஸ்தர்களாலும் பாராட்டப்பட்டிருந்து நாற்பத்தைந்து வயதுக்குள்ளாகவே நாமாவசேஷனாய்விட்டான். அவனுடைய குமாரர்கள் லௌகிக பதவிகளில் ப்ரதிஷ்டிதர்களாய் விளங்குகிறார்கள்.

## 315. ஸ்ரீ காழியூர் ஸ்ரீ ரங்காசாரியர்ஸ்வாமி

இந்த ஸ்வாமி ஒரு விலக்ஷண பண்டிதராய் விளங்கினவர். 50 வருஷங்களுக்கு முன்பு திருநாட்டுக்கெழுந்தருளினர். *ரூபமே வாஸ்ய ஏதந்மஹிமாநம் வ்யாசஷ்டே* என்கிறபடியே மிகவும் கம்பீரமான திருவுருவத் தோற்றத்துடன் எழுந்தருளியிருந்தவர். நான்கு சாஸ்த்ரங்களையும், முறைப்படி அதிகரித்து ப்ரவசனங்களும் அழகாகச் செய்து போந்தவர். இளம்பிராயத்தில் ஸ்ரீபெரும்பூதூர் வந்துசேர்ந்து அவ்விடத்திலேயே வித்யாப்யாஸம் செய்து அவ்விடத்து ஸம்ஸ்க்ருத கலாசாலையில் ஸ்ரீமத். உ. வே. வித்வத்சிகாமணி குண்டலம் நரஸிம்ஹாசாரிய ஸ்வாமிக்கு அடுத்தபடியாக ப்ரதாநாத்யக்ஷ பதவியை வஹித்து அநேகரை வித்வான்களாக்கின மஹான் இவர். உபயவேதங்களிலும் இந்த ஸ்வாமி யோக்யதை பெற்றிருந்தவர். திருப்பதியில் ஸுப்ரஸித்த வித்வச் சிகாமணியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசாரியஸ்வாமியின் திருவடி ஸம்பந்தம் பெற்றவரான இவ்வாசிரியர்க்கு விளைந்த அதிசயங்கள் அற்புதமல்ல. இவருடைய ஞானத்திற்காட்டிலும் பரம ஸாத்விகத்வப் போற்றத்தக்கதாயிருந்தது.

## 316. ஸ்ரீ விரக்தி, பாஷ்யகாராசார்யர்ஸ்வாமி

திருப்புட்குழி ஸமீபத்திலுள்ள முஸரபாக்கத்தில் ஸ்ரீமத் விரக்தி பாஷ்யகாரர்ஸ்வாமியெழுந்தருளியிருந்தார். இவர் வியாகரண மீமாம்ஸைகளில் பரிபூர்ணபாண்டித்யம் பெற்றிருந்ததோடு

உபயவேதாந்தங்களிலும் அகாதமான ஞானமுடையவர். அவரை 'நீறுபூத்த நெருப்பு' என்றே யாவரும் சொல்லுவார்கள். காஞ்சீபுரத்தில ஸ்ரீயதோக்தகாரி ஸன்னிதி ப்ராந்தத்திலுள்ள பல பெரியார்கள் ஸம்ப்ரதாய க்ரந்தங்களையெல்லாம் காலக்ஷேபம் செய்யவேணுமென்று ஆவல் கொண்டு இந்த மஹா ஸ்வாமியைக் காஞ்சிக்கு எழுந்தருளப்பண்ணி அவ்விடத்திலேயே ஸ்திர வாஸியாக வைத்து யதோக்தகாரி ஸந்நிதியில் பொய்கையாழ்வார் திருமண்டபத்தில் நித்யமும் காலை மாலைகளில் ஸம்பரதாய க்ரந்த ப்ரவசநம் நடந்துவரும்படி ஏற்பாடு செய்திருந்தார்கள். அப்படி 15, 20 வருஷகாலம் நடந்தது. அக்காலத்தில் பிரபல உத்யோகஸ்தர்கள், வக்கீல்கள், வைதிகர்கள் பலரும் இந்த ஸ்வாமி பக்கலிலே உபயவேதாந்த ரஹஸ்யங்களையெல்லாம் வரியடைவே ச்ரவணம் செய்துவந்தார்கள். அதுவொரு நல்லடிக்காலமென்னவேணும்.

## 317. ஸ்ரீ எஸ். கோபாலஸாமி ஐயங்கார் பி.ஏ. பி.எல்.

சென்னை மயிலாப்பூரில் ப்ரஸித்த அட்வகேட்டாக விளங்கினவர் எஸ். கோபாலசாமி ஐயங்கார். ஜகத்ப்ரஸித்தரான ஸ்ரீமான் ஸர். எஸ். வரதாசார்ய ஸ்வாமியின் ஸாக்ஷாத் மாதுலர் இவர். உபயவேதாந்தங்களையும் வரியடைவே கற்றவர். (இவர் ஸ்ரீமத் வரவரமுநி ஸம்ப்ரதாயஸ்தர்.) திருநாராயணபுரத்தில் ப்ரஸித்த வித்வந்மணியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. மண்டயம் ஆழ்வார் ஸ்வாமியைச் சில வருஷகாலம் தமது பங்களாவில் எழுந்தருளப் பண்ணிவைத்து அவர் ஸந்நிதியிலே உபயவேதாந்த ஸம்ப்ரதாய க்ரந்தங்களையெல்லாம் நன்கு அதிகரித்துப் பல வக்கீல்களுக்கு ப்ரவசனமும் செய்தவர். அடியேனுடைய மாதாமஹ ஜீயர் ஸ்வாமி ஸன்னிதிக்கு அடிக்கடி வந்து பஹுச்ருதாக்ரேஸரர் என்று ஸ்வாமியால் விருது சாத்தப்பெற்றவர். சென்னையில் அஹோபிலமடத்துப் பத்ரிகையாக முதன்முதலில் ஆரம்பம் செய்யப்பட்ட வேதாந்ததீபிகா பத்ரிகைக்கும் சில வருஷகாலம் ஸம்பாதகராக இருந்தவர். அடியேனைக்கொண்டு சில பல க்ரந்தங்கள் எழுதுவித்துப் பிரசுரம் செய்வித்தவர்.

## 318. ஸ்ரீ பரமஹம்ஸ. இஞ்சிமேட்டழகியசிங்கர்

நெடுநாள் அஹோபிமடாஸ்தானத்தை யலங்கரித்திருந்து 25 வருஷங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்த ஸ்ரீமத் இஞ்சிமேடு ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் இஞ்சிமேடு ரங்கநாதாசார்ய ஸ்வாமியென்று வ்யபதிஷ்டர். திருப்பதியில் ஸ்ரீமத் புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் நெடுநாள் வாழ்ந்து ஸாமாந்ய சாஸ்த்ரங்களையதிகரித்து உபயவேதாந்த ப்ரவர்த்தந ப்ரவீணராய் காஞ்சியில் பல வாண்டுகள் எழுந்தருளியிருந்தார். அடியேனுடைய க்ருஹத்திற்கு அதிஸமீபத்திலேயே ஒரு திருமாளிகையை ஸ்வகீயமாகக் கொண்டு குடி வாழ்ந்து வந்தார். அப்போது இருவோமுக்கும் மிக நெருங்கிய பழக்கம் ஏற்பட்டது. அனுஷ்டானத்திற்கு வெள்ளக்குளமெழுந்தருள்வர். அடியேனுடைய க்ருஹத்தின் பக்கத்திலுள்ள ஸந்து வீதி வழியாகவே அக்குளத்திற்குச் செல்லவேண்டுமாதலால் இருவரும் ஒன்றுசேர்ந்தே குளம் செல்வது தினப்படியான வழக்கம். திரும்புகிற ஸமயத்தில் சேர்த்தி ஏற்படுவது அரிதாகும். செல்லுகிற ஸமயத்தில் நியமேந சேர்ந்து தான் செல்வது. அப்போதைய ஸம்பாஷணைகள் ஐம்பது வருஷங்களுக்கு மேலானாலும் மறக்க முடியாதவை. திருப்பதியில் தாம் வாழ்ந்தபோது ஸ்ரீமத் புரிசை ஸ்வாமி பக்கலிலே தாம் அநுபவித்த விசேஷங்களை ஒவ்வொரு நாள் ஒவ்வொன்றாக ஸாதித்தருள்வர். மற்றும் அநேக க்ராந்திக விஷயங்களையும் ஸாதித்தருள்வர். இடையிடையே ஸம்ப்ரதாயார்த்த சர்ச்சைகளும் நடைபெறும். கோபதாபங்கள் சிறிதுமில்லாமல் புன்முறுவலோடே ஸாதிப்பர்; தூமுறுவல்கொண்ட முகத்துடனே கேட்டருள்வர். மனச்சாக்ஷியை மீறியோ அப்ராமாணிக வழியை யவலம்பித்தோ விதண்டாவாதமாகவோ ஓரக்ஷரமும் ஸாதிக்கமாட்டார். அந்த ஸ்வாமியிடத்தில் அடியேன் விசேஷித்து அநுபவித்த குணமிது.

## 319. ஸ்ரீபெருங்கட்டூர் கண்டாவதாராசார்யர்

பெருங்கட்டூர் கண்டாவதாராசார்ய ஸ்வாமி பெரியோருவர் ஸன்னிதி வீதியிலெழுந்தருளி யிருந்தார். அவர் கேவல வையாகரணர். கோவில் பாடசாலையில் பல வருஷங்கள் வ்யாகரணப்ர வசநம் செய்துகொண்டிருந்தவர். அந்த ஸ்வாமியின் இயல்பு இஞ்சிமேடு ஸ்வாமியின் இயல்புக்கு நேர்மாறானது. விஷயசர்ச்சையென்றெடுத்தால், அது எந்த விஷயமானாலும்ஸரி, கோபதாபங் களில்தான் பர்யவஸித்து நிற்குமவர்க்கு. உச்சைருத்கோஷம் ப்ரபலமாயிருக்கும். இஞ்சிமேடு ஸ்வாமியின் கம்பீர ப்ரக்ருதிகளை நினைந்தொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு கனிந்திருக்கும்.

## 320. ஸ்ரீ ஷஷ்டி க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி

சதுஷ்ஷஷ்டி கலாவல்லப பரவஸ்துகுலதிலகராய், ஷஷ்டியென்று சுருக்கமான உபபதத்தை யுடையரான இந்த ஸ்வாமி ஸ்ரீ காஞ்சியில் கீழண்டை மாடவீதியில் எழுந்தருளியிருந்தவர். இவர் பரமபதித்து அறுபது ஸம்வத்ஸரமாகிறது. விசேஷித்து வியாகரண சாஸ்த்ரத்திலும் உபயவேதாந் தங்களிலும் பாண்டித்யம் பெற்றவர். இங்கு ஸன்னிதிவீதி, வானமாமலை மடத்தில் நடந்து கொண்டிருந்த ஸம்ஸ்க்ருத பாடசாலையில் வியாகரணோபாத்யாயராக எழுந்தருளியிருந்தவர். ப்ரவசனகாலந்தவிர மற்ற காலத்தில் இந்த ஸ்வாமி ஒருவரோடும் வார்த்தை சொல்லாதே. "மந்த்ரரத்நாநுஸந்தாநஸந்ததஸ்ப்புரிதாதரம்" என்ற ஸ்ரீஸூக்தியை நினைப்பூட்டுவார்போன்று த்வயாநுஸந்தானைக நிரதராயிருந்துவந்ததை அடியேன் நேரிலறிந்தவன். அதனால் இவரை ருஷியென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள் அக்காலத்துப் பெரியோர். அடியேனுடைய திருத்தகப்பனார் இந்த ஸ்வாமியிடத்தில் வியாகரணம் வாசித்தார். இவர், ஔரஸ புத்ரரில்லாமை யாலே ஸ்வீக்ருத புத்ரரால் புத்ரவானாயினர். அந்த புத்ரரத்னத்தின் ப்ரபாவத்தை அடுத்தபடியநு பவிப்போம்.

## 321. ஸ்ரீ ஷஷ்டி ஸ்ரீநிவாஸவரதாசார்யர் ஸ்வாமி

முன்னம் ப்ரஸ்துதரான ஷஷ்டி. கிருஷ்ணமாசாரியார் ஸ்வாமியின் ஸ்வீக்ருத குமாரர் இவர் என்பதைக் கீழே தெரிவித்திருக்கிறேன். இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்து இருபத்தேழு வருஷ மாகிறது. இவர் வியாகரணசாஸ்த்ரத்திலும் தரும சாஸ்த்ரத்திலும் மஹாநிபுணர் அடியேனுடைய திருத்தகப்பனாரிடத்தில் காவ்ய நாடகாலங்காரங்களைப் பரிபூர்த்தியாக அதிகரித்தவர் இவரொருவரே நெடுநாள் வாழ்ந்தவராக எனது நினைவுக்கு வருகிறார். வெகு அழுத்தமான வ்யுத்பத்தியுடையவர். ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஷஷ்டி ஜீயர் ஸ்வாமி ஸன்னிதியில் பகவத் விஷய ரஹஸ்யாதிகள் அதிகரித்து நல்ல வாக்மியாய் விளங்கினார். ஸ்ரீமதுபயவே. திருமலை ஈச்சம்பாடி. திருவேங்கடாசாரியர் ஸ்வாமிக் கும், திருமலைவிஞ்சிமூர், பாஷ்யகாரர் ஸ்வாமிக்கும் உசாத்துணையாயிருந்து தென்னாசார்யதர்சன நிர்வாஹகராயிருந்த பெருமையும் இவர்க்குள்ளது. இவர்க்கும் ஔரஸபுத்ரரில்லாமையாலே ஜ்யேஷ்டதௌஹித்ரனையே புத்ரவத் அபிமானித்திருந்தார். கோயில் கந்தாடை அண்ணன். ஜடப்ரோல் ராமாநுஜாசாரியர் ஸ்வாமியின் பௌத்ரனை அவனும் ராமாநுஜாசார்யனென்றே பெயர்பெற்று உபயவேத பாரங்கதனாய், பிஞ்ஞானச்சிறு குழவியென்று அனைவராலும் கொண் டாடப்பட்டவனாயிருந்து இளமையிலேயே ஆசாரியன் திருவடி சேர்ந்தது நினைதொறும் சொல்லுந் தொறும் நெஞ்சு இடிந்துகும்.

## 322. ஸ்ரீ புரிசை கிருஷ்ணமாசார்யர் ஸ்வாமி

மேலேப்ரஸ்துதரான ஷஷ்டி ஸ்ரீநிவாஸவரதாசார்யஸ்வாமியின் ஜநக குலத்திலே அவர்க்குக் கநிஷ்ட ஸஹோதரராகத்தோன்றின இந்த ஸ்வாமி திருமலை அனந்தான்பிள்ளை வம்சத்தவராவர்.

புரிசை க்ருஷ்ணமாசாரியரென்றே வழங்கப்பெற்று வந்தார். இவரும் தமது திருத்தமையனாரான ஷஷ்டி ஸ்ரீநிவாஸ வரதாசாரியரோடு கூடவே அடியேனுடைய திருத்தகப்பனாரிடத்தில் காவ்யநாடகாலங்காரங்கள் பயின்று, ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியிலே ந்யாய வேதாந்தங்களையும் ஸ்வரூபக்ரந்தங்களையும் பரிபூர்ணமாக அதிகரித்து ப்ரபலவித்வானாக விளங்கினர். திருமலை திருப்பதி தேவஸ்தான கலாசாலையில் பல வருஷங்கள் சாஸ்த்ரோபாத்யாயராக விளங்கிப் பல தேசத்தவர்களைப் பண்டித மணிகளாக்கினர். கலாசாலையில் விச்ராந்தி பெற்ற பிறகு திருவல்லிக்கேணியிலும் மாம்பலத்திலும் வாழ்ந்து ஸம்ப்ரதாயக்ரந்த ப்ரவசன நிரதராயிருந்து பதினைந்து வருடங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்தார். இவருடைய குமாரர்கள் லௌகிகோத் யோகங்களில் ப்ரதிஷ்டிதர்களாக விளங்கி வருகின்றனர்கள்.

## 323. ஸ்ரீ பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீகோழியாலம் ஸ்வாமி

பதினைந்து இருபது வருஷங்களுக்குமுன்பு திருநாடலங்கரித்தவரும் விச்வவிக்யாத ஜ்ஞான வைராக்ய நிதியுமான இந்த ஸ்வாமியை ஸ்ரீவைஷ்ணவவுலகம் முழுவதுமுணரும். ஸ்வாமியின் திருத்தகப்பனார் ஸ்வக்ராமவாஸத்தை விட்டு இருதிருக்குமாரர்களுடன் காஞ்சீ வாஸமாக வந்து சேர்ந்து முதலில் எமது வீதியிலேயே ஸந்நிஹிதராகக் குடிவாழ்ந்திருந்த காலம் அடியேனுக்கு நன்றாக நினைவிலுள்ளது. கோழியாலம் ராகவாசார்யஸ்வாமியென்று ப்ரஸித்தராயிருந்து தேவப்பெருமாள் ஸன்னிதி சடகோபநிலய பாடசாலையில் வித்யார்த்தியாக வந்து சேர்ந்து அங்கு வியாகரணோபாத்யாயராக இருந்த ஸ்ரீமத் கண்டாவதாராசார்ய ஸ்வாமியிடம் வியாகரண சாஸ்த்ரமதிகரித்து, பிறகு திருப்பதியில் கோபாலாசார்ய ஸ்வாமியென்று ப்ரஸித்தராய் மஹாஜ்ஞான நிதியாக எழுந்தருளியிருந்த உத்தமாச்ரமியையடிபணிந்து அத்யாத்ம சாஸ்த்ரங்களை யதிகரித்து மஹாவாக்மியாய் விளங்கி, திருவஹீந்திரபுரத்தில் துரீயாச்ரமஸ்வீகாரம் செய்துகொண்டு தக்ஷிணதிவ்ய தேசயாத்திரைகள் செய்து ஸ்ரீகாஞ்சியில் ஸ்திரவாஸமாக நெடுநாள் எழுந்தருளியிருந்தார். பூர்வாச்ரமத்திலும் உத்தமாச்ரமத்திலும் ஸ்வாமியோடு நெருங்கிப்பழகினவடியேன் ஸ்வாமியின் ஜ்ஞாநஸாம்ராஜ்யத்தை நன்கறிந்தவன்.

## 324. ஸ்ரீ நவநீதம் க்ருஷ்ணமாசார்யர் ஸ்வாமி

திருக்குடந்தைக்கு ஸமீபத்திலுள்ள திருவிண்ணகரென்கிற ஒப்பிலியப்பன் ஸன்னிதியில் நவநீதம் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி யென்று ப்ரஸித்தரான மஹான் எழுந்தருளியிருந்தார். இந்த ஸ்வாமி 35 ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு திருநாட்டுக்கெழுந்தருளினவர். இந்த ஸ்வாமியினுடைய க்ருபைக்கு அடியேன் மிக்க இளமையிலேயே இலக்காகப் பெற்றவன். மஹா ஜ்ஞாநாதிகராயும் சிஷ்டவரிஷ்டராயுமெழுந்தருளியிருந்த இந்த ஸ்வாமியை ஸேவிப்பதற்கென்றே அடியேன் சில ஸமயம் திருவிண்ணகர்க்கு விடைகொண்டிருக்கிறேன். ஸ்வாமியும் பன்முறை காஞ்சிக்கெழுந்தருளிப் பரமாநுக்ரஹம் செய்தருளியிருக்கிறார். மஹாபாரதம், ச்ருதப்ரகாசிகைக்கு வியாக்கியானமான பாவப்ரகாசிகை, ஸவ்யாக்யானமான மீமாம்ஸாபாதுகை முதலான க்ரந்த ரத்னங்களை க்ரந்தலிபியிலும், நயமயூக மாலிகை, சாரீரக சாஸ்த்ரார்த்த தீபிகை முதலான க்ரந்தங்களை தேவநாகராக்ஷரத்திலும் பதிப்பித்த மஹோபகாரகர்.

## 325. ஸ்ரீ கச்சிக்கிடாம்பி. பாஷ்யகாராசார்யர் ஸ்வாமி

திருவஹீந்திரபுரத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீ உவே. கச்சிக்கிடாம்பி. பாஷ்யகாராசார்ய ஸ்வாமி 35 வருஷங்களுக்கு முன்னம் திருநாட்டுக்கெழுந்தருளினவராகையாலே அந்த ஸ்வாமியை ஸ்ரீவைஷ்ணவமண்டலம் நன்கறியும். இந்த ஸ்வாமி ந்யாய சாஸ்த்ரத்திலும் உபய வேதாந்தங்களிலும் நிஷ்ணாதர். ஸ்வாமியினுடைய பரிசயம் அடியேனுக்கு நாற்பது ஸம்வத்ஸரங்களுக்கு

மேலுண்டு. ஆனால் மிக நெருங்கிப் பழகி வார்த்தையாட அதிகமாக நேர்ந்ததில்லை. ஆங்காங்கு திவ்ய தேசங்களில் உத்ஸவ காலங்களில் ஸேவை ஸாதிப்பர். வித்வத்வரேண்யரான ஸ்ரீரங்கம் எம்பார் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் ப்ரசம்ஸையை இந்த ஸ்வாமி சில ஸமயங்களில் செய்தருளக் கேட்டிருக்கிறேனதலால் இவர்க்கு அந்த ஸ்வாமி ஸன்னிதியில் சாஸ்த்ராத்யயனங்கள் நடந்ததாக அடியேன் க்ரஹித்திருப்பதுண்டு.

## 326. 327. திருநாங்கூர் ப்ரதிவாதிபயங்கரம் ஸ்வாமிகளிருவர்

திருநாங்கூரில் பல மஹான்கள் எழுந்தருளியிருந்தார்கள். அங்கு வைகுந்த விண்ணகரம் ஸன்னிதி வீதியில் ப்ரதிவாதிபயங்கரம் பெரிய க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியும் சின்ன க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியும் ப்ரஸித்தர்களாயிருந்த மஹநீயர்கள். "ஏகயோக்த்யாபுஷ்பவந்தௌ திவாகரநிசாகரௌ" என்ற கணக்கிலே இவ்விரு மஹான்களையும் ஒருசேர அநுபவிக்கிறேன். பெரிய க்ருஷ்ணமாசார்யஸ்வாமி அபார வித்யா நிதியாக எழுந்தருளியிருந்தவர். சாஸ்த்ரஜ்ஞர்களில் தலைவராயிருந்ததோடு மஹாகவீச்வரராய் அனேக காவியங்கள் ஸ்தோத்ரங்கள் அருளிச் செய்திருந்தார். இந்த ஸ்வாமி அடியேனுடைய இளமையில் பல வருஷங்கள் ஸ்ரீ காஞ்சியிலெழுந்தருளியிருந்தபடியால் இந்த ஸ்வாமியிடத்திலும் சில நாடகங்கள் வாசிக்க நேர்ந்தது அடியேனுக்கு. இந்த ஸ்வாமி திருநாங்கூரில் குலகூடஸ்தர் ஸன்னிதியைத் திருப்ரதிஷ்டை செய்திருந்தார். 40 வருஷங்களுக்கு முன்பு சரமஸமயத்தில் உத்தமாச்ரமியாகித் திருநாட்டுக்கெழுந்தருளினார். இந்த ஸ்வாமிக்கு வித்வத்பஹுமானமாக (தோடா) என்கிற கரபூஷணம் கிடைத்திருந்தபடியால் "தோடா. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி" என்று வ்யபதேசமிருந்துவந்தது. இவர்க்கு ஸந்ததி இல்லாமையினால் இவர் ஏறியருளப்பண்ணின கூடஸ்த ஸன்னிதியும் பரிபாலனமில்லாமலே போயிற்று. அது மிகவும் சோசநீயம்.

"தோடா" ஸ்வாமியின் திருநாமமேகொண்டு இவருடைய ஸந்நிஹிதஜ்ஞாதியும் இவருடைய அடுத்த திருமாளிகைக்காரருமானவர் "சின்ன கிருஷ்ணமாசாரியர்ஸ்வாமி" யென்றே வழங்கப்பட்டுவந்தார். இவர் ஸ்ரீமத் திருக்கண்ணபுரம் பட்டப்பாஸ்வாமி ஸன்னிதியிலும் மற்றும் பெரியார்களிடத்திலும் ந்யாய வேதாந்தங்களும் ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயாதிகளும் அதிகரித்து மிகச் சிறந்த ப்ரவக்தாவாக விளங்கினார். சிலபல ஸம்வத்ஸரங்கள் சென்னைமாநகரில் சாரிடிகளில் ப்ரவசனநிரதராய் ப்ரக்யாதராயிருந்தார். இந்த ஸ்வாமியின் இரு திருக்குமாரர்களும் வித்வான்களாக விளங்கிவருகிறார்கள். அண்ணங்கராசாரியரென்று திருநாமமுடைய ஜ்யேஷ்டகுமாரர் குஜராத் ப்ராந்தத்தில் வடதால் என்னுமிடத்தில் சாஸ்த்ர ப்ரவக்தாவாக இருந்துகொண்டு ஸ்வாமி நாராயண ஸம்ப்ரதாயஸ்தர்களான பலரை வித்வான்களாக்கினார். இப்போது விருந்தாவனத்தில் தேவஸ்தான வித்வானாக வாழ்ந்து வருகிறார். சிறிய திருக்குமாரர் ஸ்ரீநிவாஸாச்சாரியரென்பவர் தற்போது ஸ்ரீரங்கத்திலிருந்து கொண்டு ஸம்ப்ரதாய ப்ரவசன ப்ரசார ப்ரவணராயிருந்து வருகிறார்.

## 328. கவிபூஷண. அத்தங்கி. குமாரதாதாசார்யர் ஸ்வாமி.

திருவல்லிக்கேணியில் ஸ்ரீமத். அத்தங்கி. குமாரதாதாசார்ய ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான வித்வந்மணி எழுந்தருளியிருந்தார். இந்த ஸ்வாமி ஸாஹித்ய க்ரந்தங்களில் நிகரற்ற மஹா வித்வான். ஸகல காவ்ய நாடகாலங்கார க்ரந்தங்களும் இந்த ஸ்வாமிக்கு வாசோவிதேயங்களாயிருந்தன. வ்யாகரண வேதாந்த நிபுணர். கவித்வத்தில் மஹா நிபுணரென்பதை 'கவிபூஷணர்' என்னும் இவருடைய பிருதமே விளக்கி நிற்கும். இந்த ஸ்வாமியால் இயற்றி வெளியிடப்பட்டிருக்கின்ற உத்தரராமசரித வியாக்கியானம் முதலான சில க்ரந்தங்களினால் இவர் சிறந்த க்ராந்திகர்

என்பது தெற்றென விளங்கும். இந்த ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி நாற்பது வருஷங்களுக்கு மேல் ஆய்விட்டாலும் இவருடைய கீர்த்தி நிகரற்றது. இவருடைய பரிஸரத்தில் எப்போதும் பல வித்வான்கள் கூடியேயிருப்பர்கள், இவருடைய ஸகாசத்தில் ஏதாவது விஷய விசாரங்கள் நடந்து கொண்டேயிருந்தது.

## 329. ஸ்ரீ. அ. வீ. நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமி

ஸ்ரீ அகரம், வீரவல்லி, நரஸிம்ஹாசாரியரென்பது இவரது திருநாமம். ஆனால் அ. வீ. என்றே ப்ரஸித்தர். இவர் பரமபதித்து இருபது ஸம்வத்ஸரமாகிறது. ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் பலவாண்டுகள் வாசித்து வியாகரணத்தில் மஹாபாஷ்யாந்த வித்வந்மணியாக விளங்கினார். உத்தீர்ணரான பிறகு திருவல்லிக்கேணியிலேயே நிரந்தர வாஸமாக எழுந்தருளியிருந்து சென்னையில் ப்ரஸித்தமான ஆனந்தா ப்ரெஸ்ஸில் பரிசோதக பதவியில் அமர்ந்து அனேகஸம்ஸ்க்ருத க்ரந்தங்களை வெளியிட்டார். ஸ்ரீராமாயணத்தையும் ஸ்ரீபாகவதத்தையும் ஒரு பதமும் விடாமல் அக்ஷரசः தமிழில் மொழி பெயர்த்துப் பல ஸம்புடங்களாக இவர் வெளியிட்டிருப்பது தமிழ்நாடு முழுவதும் பரவியுள்ளது. மேலே ப்ரஸ்தாவித்த அத்தங்கி ஸ்வாமிக்கு தக்ஷிணபாஹுவாக விளங்கிவந்தார். திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருந்த ஸ்ரீஉவே. சே. கிருஷ்ணமாசார்யார் ஸ்வாமி அச்சிட்ட பகவத்விஷயம் [சே. கி. பதிப்பு என்றே ப்ரஸித்தமாகவுள்ளது] பெரும்பாலும் இந்த ஸ்வாமியினால் பரிசோதிக்கப்பெற்றது. இந்த ஸ்வாமி காவ்ய நாடகாலங்காரங்களிலும் நிகரற்ற நிபுணராயிருந்ததோடு நிரவத்ய கத்யபத்யரசனைகளிலும் அதிஸமர்த்தராயிருந்தார். இவர் திருமலை திருப்பதி ப்ரதிவாதிபயங்கர ஸ்வாமிகளின் திருவடிஸம்பந்தம் பெற்றவராதலால் அடியேனுடைய திருத்தகப்பனாரிடத்தில் மிக ப்ராவண்யம் கொண்டிருந்தார். அப்போதே இவருடைய பாண்டித்யத்தைத் திருத்தகப்பனார் மிகவும்கொண்டாடினது அடியேனுக்கு நினைவிருக்கிறது. இவர்க்கு ஜ்யேஷ்டப்ராதாவொருவரும் கநிஷ்ட ப்ராதாவும் சிறந்த வித்வானாயிருந்தார். கநிஷ்ட ப்ராதா ஸ்தலசயனம் ஸ்வாமியென்பவர் ஸாஹித்யப்ரவீணராயிருந்ததோடு க்ரமாந்தம் அதீதவேதராய் அடியேனுடைய வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலையில் இருபது ஸம்வத்ஸரம் வேதாத்யாபகராக விளங்கினார். இவரினும் கனிஷ்டர் க்ருஷ்ண ஸ்வாமியென்பவர் லௌகிகோத்யோகத்தில் ப்ரவ்ருத்தராயிருந்தாலும் உபயவேதாந்த ரஹஸ்யார்த்தங்களை நன்குணர்ந்தவராயிருந்தார். ஆக ஸஹோதரர்கள் நால்வரும் அடியேனுக்கு அடிக்கடி ஸ்மரணீயர்களாயிருந்து வருகிறார்கள்.

## 330. ஸ்ரீ மஹர்ஷி. வாஸுதேவாசார்யர் ஸ்வாமி.

சென்னை மாம்பலத்தில் இருபது ஸம்வத்ஸரங்களுக்குமுன் ஜ்ஞாநாநுஷ்டாந நிதியாக வாழ்ந்த ஸ்ரீஉவே. எஸ். வாஸுதேவாசார்ய ஸ்வாமியை இன்றைக்கும் நினையாதாரில்லை. இவர் மஹர்ஷியென்று வழங்கப்பட்டுவந்தார் லௌகிக வ்ருத்தியிலிருந்து கொண்டு வைதிக மார்க்கத்தில் ச்ரத்தை கொண்டவர்களில் இந்த ஸ்வாமி அக்ரகண்யராக விளங்கினவர். ஆங்கிலத்தில் எம். ஏ. எல். டி. முதலான பட்டங்களை பெற்றிருந்த இந்த ஸ்வாமியை லௌகிகரென்றே பலர் நினைத்திருக்கக்கூடும். இவருடைய திருமேனியை ஸேவிக்கும் பாக்யமுள்ளவரும் இவரைப் பரம வைதிகஸார்வ பௌமரென்றே கூறுவர். இவரிடத்தில் லௌகிகக் கல்விகளைப் போலவே வைதிகக் கல்விகளைப் பயின்றவர்களும் பலபலர். ஸ்ரீபாஷ்யபகவத் விஷய ரஹஸ்ய க்ரந்த காலக்ஷேபங்களை நாள் தவறாமல் ஸாதித்துக் கொண்டிருந்தவர். "நாட்காலே நீராடி" என்று ஆண்டாள் ஸாதித்தது மார்கழி முப்பது நாளைக்கு. இந்த ஸ்வாமியின் அநுஷ்டானம் யாவதாயுஷம். வேதாந்ததீபிகை யென்னும் பெயரால் நடந்துகொண்டிருந்த அஹோபில மடத்துப் பத்திரிகைக்கு இவர் பல வாண்டுகள் ஸம்பாதகராகவிருந்து அரிய பெரிய விஷயங்களை எழுதியுள்ளார். இவருடைய

ஸர்வபூத ஸௌஹார்த்த ஸௌஜந்யங்களைப்பற்றி எத்தனை பக்கமெழுதினாலும் மிகையாகாது. ஸகல பூர்வாசாரியர்களிடத்திலும் ஸமமான ப்ரதிபத்திகொண்டிருந்தவர் இந்த ஸ்வாமி. தம்முடைய திருவுள்ளத்திற்கு ஏலாத அர்த்தம் எந்த மஹான் ஸாதித்ததாயிருந்தாலும் அதை ஆதரிக்க மாட்டார். இவர் மடத்து ஸம்பிரதாயத்தைச் சேர்ந்தவராதலால் நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளை வேதத்தினும் மேம்பட்டதாகக் கொண்டிருந்தார். சென்னையில் நடைபெறும் அடியேனுடைய உபந்யாசங்களுக்குப் பெரும்பாலும் ஸேவைஸாதித்துக் கொண்டிருந்ததனால் இவருடைய பரிசயம் அடியேனுக்கு அபரிமிதமாக வாய்த்தது. மதுரோபசாரவாக்யங்களில் ஐகரூப்யம் என்கிற ஆர்ஜவகுணத்தை இந்த ஸ்வாமியிடத்தில்தான் அடியேன் அதிகமாக அனுபவித்தவன்.

## 331. ஸ்ரீ வை. மு. சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமி

திருவல்லிக்கேணியில் ஸ்ரீமதுபயவே, வைத்தமாநிதி முடும்பை அப்பயங்கார் ஸ்வாமியென்று ப்ரஸித்தரான ஸம்ப்ரதாயப்ரவசன நிரதர் அறுபது வருஷங்களுக்கு முன்பு எழுந்தருளியிருந்தார். அவருடைய மூத்த திருக்குமாரர் சடகோப ராமாநுஜாசார்யஸ்வாமி. இளைய திருக்குமாரர் வை. மு. பார்த்தஸாரதி ஐயங்காரென்பவர். இன்றைக்கும் திருவல்லிக்கேணியில் வாழ்ந்து வருகிறார். இவருடைய திருத் தமையனாரான சடகோபராமாநுஜாசாரியர்ஸ்வாமி பரமபதித்து இன்றைக்கு ஐம்பத்தைந்து வருடங்களுக்கு மேலாகிறது. இவர் தமிழ்க்கடலில் பாரங்கதராயிருந்ததோடு வடமொழியிலும் ஆழ்ந்த ஞானம் பெற்றிருந்தார். கும்பகோணம் காலேஜில் பலவாண்டுகள் தமிழ்த் தலைமையாசிரியர் பதவியை அலங்கரித்திருந்தார். ஜகத்ப்ரஸித்த காலக்ஷேபபரரான திருத் தகப்பனாரிடத்தில் ஸம்பிரதாயக்ரந்தங்களை வரியடைவே கற்றவராதலால் பூர்வாசார்ய திவ்யஸூக்திகளில் ஒப்புயர்வற்ற ப்ரதிபத்தி கொண்டவர் என்பது இவர்க்குத் தனிச் சிறப்பு. கம்பராமாயணம், பிள்ளைப் பெருமாளையங்கார் அஷ்டப் பிரபந்தம் முதலிய பல தமிழ் நூல்களுக்கு இந்த ஸ்வாமி யெழுதி வெளியிட்டிருக்கும் உரைகள் உலகம் போற்ற விளங்குகின்றன. அக்காலத்தில் பள்ளிக்கூட மாணாக்கர்களுக்குப் பேருதவியாக இவர் எழுதி வெளியிட்ட உரைகள் அபரிமிதம். மஹாமஹோபாத்யாய சாமிநாதையரவர்களுக்கு இவரிடத்தில் மஹத்தான ப்ரதிபத்தி.

## 332. ஸ்ரீ வை. மு. கோபால்கிருஷ்ணமாசாரியர்* ஸ்வாமி

மேலே ப்ரஸ்தாவித்த சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமிக்குத் தம்பிமுறையில் சேர்ந்த இவரும் சிறந்த தமிழ் வித்வானாக விளங்கினவர். தமிழுலகுக்குப் பேருதவிகள் புரிந்தவர். ஸம்ஸ்க்ருதஜ்ஞானமும் நன்கு உடையவர். திருவல்லிக்கேணியிலேயே வாழ்ந்தவர். இவர் பரமபதித்த காலம் இருபது ஸம்வத்ஸரங்களுக்குட்பட்டது. சடகோபராமாநுஜாசாரியர்ஸ்வாமி உரை நூல்களெழுதியபோது இந்த கோபாலக்ருஷ்ணமாசாரியரும், சே. கிருஷ்ணமாசாரியர் என்று ப்ரஸித்தரான தமிழ்ப்பண்டிதரும் உடனிருந்து துணை புரிந்தவர்கள். இவ்விருவரும் சடகோபராமாநுஜாசார்யஸ்வாமியினால் முன்னேற்றமடைந்து சிலபல தமிழ் நூல்களை வெளியிட்டு ப்ரஸித்தி பெற்றவர்கள், சே. கிருஷ்ணமாசாரியர் பதிப்பு நூல்களில் பகவத் விஷயப்பதிப்பு மஹோபகாரகமாய் விளங்குகின்றது.

## 333. ஸ்ரீ கோயில் பத்தராவிஸ்வாமி

திருவரங்கம் பெரிய கோயிலில் ஐம்பத்தைந்து ஆண்டுகட்கு முன்பு எழுந்தருளியிருந்த மஹாஸ்வாமி. 'தெருப்பையலம்புகிறவர்' என்னும்படியான சிஷ்டாக்ரேஸரர். உபயவேதங்களை

அதிகரித்து நம்பெருமாள் ஸந்நிதியில் வேதபாராயண கைங்கர்யத்தில் அக்ரேஸரராயிருந்து அசீதி ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்தவர். நம்முடைய ஸம்ப்ரதாயக்ரந்தங்களில் பரிநிஷ்டிதமான ஞானமுடையவர். அடியேனுடைய வியாக்கியானங்களில் "கோயில் பத்தராவிஸ்வாமி இங்ஙனே திருத்துவர்" என்று ஆங்காங்கு எழுதியிருக்கின்றேன். இந்த ஸ்வாமி இளமை தொடங்கியே தூமசகடமேறியறியாதவர். அடியேனுடைய திருத்தகப்பனார்க்கு இவர் பரமஸ்நிக்தர். அதனால் திருத்தகப்பனார் திருமேனி பாங்கில்லாமலிருந்த ஸமயத்தில் அவரைக் காண்பதற்கென்றே கோயிலிலிருந்து நடைவழியாகவே காஞ்சிக்கு வந்து சேர்ந்து சில நாட்கள் எழுந்தருளியிருந்தார். அப்போது தகப்பனாருடைய நியமனங்கொண்டு இந்த ஸ்வாமி பக்கலில் கத்யத்ரயம் மூலம் அதிகரித்தேன். அது பதினொன்றாவது வயதில். பிறகு இரண்டு மூன்று பரியாயம் அடியேன் கோயிலுக்கு விடை கொண்டிருந்தபோது இந்த ஸ்வாமியோடு மிக நெருங்கிப் பழகியிருக்கிறேன். இவரைப்போன்ற ஜ்ஞாநாநுஷ்டான ஸம்பந்நர் இக்காலத்தில் துர்லபரென்றே சொல்லவேணும்.

## 334. ஸ்ரீ காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமி

ஸ்ரீ வைஷ்ணவவுலகில் இந்த ஸ்வாமியின் புகழ் அத்விதீயம். அடியேனுக்கு இருபத்தைந்து வயது வரையில் இந்த ஸ்வாமியின் பரிசயம் ஏற்படவில்லை. ஸ்ரீ உ.வே. திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமியோடு மிக நெருங்கின பழக்கமிருந்த காலத்தில் அவர் இந்த ஸ்வாமியின் ப்ரபாவாதிசயங்களைப் பலகால் பன்னியுரைக்கக் கேட்டிருந்தேன். ஸ்வாமியை ஸேவிக்க வேணுமென்றே ஒருஸமயம் காரப்பங்காட்டுக்கு விடைகொண்டிருந்து ஸேவித்து வந்தேன். பிறகு பலபர்யாயங்கள் நெருங்கி ஸேவிக்கப்ராப்தமாயிற்று. ஸ்வாமி சிலவாண்டுகள் நம்பெருமாள் ஸந்நிதியிலெழுந்தருளியிருந்து ஸ்ரீரங்கநாராயண ஜீயர் மடத்தில் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயப்ரவசனம் செய்து கொண்டிருந்த காலத்தில் சில நாட்கள் அணுகி வர்த்திக்கும் பாக்கியம் நேர்ந்தது. ராஜமன்னார் ஸந்நிதி, மதுரை, திருவல்லிக்கேணி, ஸ்ரீபெரும்பூதூர் முதலானவிடங்களில் ஸ்வாமியின் உபந்யாஸாம்ருததாரைகளைப் பருகும் பாக்யமும் வாய்த்தது. ஸ்வாமியிடத்தில் அடியேன் கண்ட அதிசயம் நம்முடைய உபய வேதாந்த க்ரந்தங்களிலும், அனந்தாழ்வானுடைய வேதாந்தவாதாவளியிலும், மற்றும் நவீந க்ரந்தங்களிலும் யாவரும் வியக்கத் தக்கதான உபஸ்திதி விசேஷம். இவ்விஷயத்தில் ஸ்ரீ காஞ்சியிலெழுந்தருளியிருந்த விரக்தி பாஷ்யகாராசார்ய ஸ்வாமியை ஒப்புச் சொல்லலாமாயினும், அந்த ஸ்வாமிக்கு க்ரந்த ப்ரவசனங்கள் தவிர உபந்யாஸங்களுக்கு வாய்ப்பு ஏற்படவில்லை. இந்த ஸ்வாமிக்கு இரண்டுக்கும் அவகாசம் அமைந்திருந்தது. ஸ்வாமிக்கு ஜ்யோதிச் சாஸ்த்ரத்திலும் அபாரமான புலமையிருந்தது. ஸ்வாமியின் திருத்தமையனாருடைய திருக்குமாரர் (அம்மாஞ்சி) வேங்கடாசாரியரென்பவர் ஸ்வாமி பக்கலிலேயே உபயவேதாந்தங்களுமதிகரித்து வாக்மியாக இருந்தவர் அகாலத்தில் பரமபதித்து விட்டார்.

## 335 ஸ்ரீ எம்பார்—க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி

ஸ்ரீரங்கத்திலே திருவவதரித்து ப்ரசண்ட பண்டிதோத்தமராகப் புகழ் பெற்றவர் இந்த ஸ்வாமி "அத்தமத்யாபிக மார்ஜிதம் யச:" என்ற பழமொழிக்கு இலக்கானவர்களில் தலை நிற்பவர் இந்த மஹா ஸ்வாமி. எம்பார் திருவம்சத்தவராகையாலே கோயிலில் ஸ்தலாசார்ய புருஷராக எழுந்தருளியிருந்தார். நியாய வேதாந்தங்களில் வாதப்போர் நிகழ்த்தவல்ல மஹாவித்வத் கேஸரியாக விளங்கினவர். ஸுப்ரக்யாதராக எழுந்தருளியிருந்த கோஷ்டிபுரம் ஸௌம்ய நாராயணாசார்ய ஸ்வாமி, உத்தமசீலி, ரங்கஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி முதலானோர் ஸ்வாமியிடத்தில் சாஸ்த்ரங்களதிகரித்துத் தேறினவர்கள். ஸ்வாமியினுடைய ப்ரசண்ட பாண்டித்யத்தையறிந்த குர்ஜர தேசத்த

வர்கள்—நாராயண ஸம்ப்ரதாயஸ்தர்கள்—ஸ்வாமியை அந்த ப்ராந்தத்திற்கு வரவழைத்து வடதால் என்னுமிடத்திலுள்ள ஸம்ஸ்க்ருத வித்யாலயத்தில் ஸ்வாமியை ப்ரதாநாத்யாபகராக வைத்ததனால் அந்நாட்டினர் பலர் வேதாந்தமதிகரித்துத் தேறினார்கள். அக்காலத்தில் ஸ்வாமி தர்சனக்ரந்தங்கள் பலவற்றை யெழுதுவதற்கு அவகாசமேற்பட்டது. அவை பெரும்பாலும் அந்தேவாஸிகளால் அச்சிடப்பட்டுமுள்ளன. ஸ்வாமியின் ஜ்யேஷ்ட திருக்குமாரர் ஸ்ரீமதுபயவே, எம்பார் ராமாநுஜாசார்ய ஸ்வாமி ஸம்ப்ரதாய க்ரந்த நிர்வாஹதுரந்தரராய் பெங்களூரில் சிஷ்யர்களுக்கு ப்ரவசனம் செய்து வருகிறார்.

## 336. ஸ்ரீ கபிஸ்தலம் அனந்தாசார்ய ஸ்வாமி.

இந்தஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி 69 ஸம்வத்ஸரமாகியும் ஸ்வாமியினுடைய புகழ் தென்னாட்டில் ரவித்துள்ளது. ஸ்வாமி கபிஸ்தலத்தில் அவதரித்தவராயினும் திருநாங்கூரிலும் திருவரங்கம் பெரியகோயிலிலுமே பெரும்பாலும் வாழ்ந்தவர். திருமலை அனந்தாழ்வானுடைய திருவம்சத்தவர். பகவத்விஷயம் ஸாதிப்பதில் அப்ரதிமமான வல்லமைபெற்றவர். அடியேன் இளமையில் ஸ்வாமியினுடைய காலக்ஷேப கோஷ்டியில் அந்வயித்திருக்கிறேன். விஷயங்களைப் பூப்புரிந்தாற்போலே ஸாதிப்பதில் மிகவிரகர். ம்ருது மதுரபாஷி. அனேகபர்யாயங்கள் ஈட்டு ப்ரவசனம் செய்தருளினவரென்று ப்ரஸித்தியுண்டு. அஸ்மதாசார்யரான ஸ்ரீஜகத்குரு காதிஸ்வாமி ஒருஸமயம் திருநாங்கூர்க்கு எழுந்தருளியிருந்தபோது அடியேனும்கூட விடைகொண்டிருந்தேன். அப்போது இந்தஸ்வாமி அவ்விடத்திலெழுந்தருளியிருந்தார். இவர் காதிஸ்வாமியிடம் வந்து வார்த்தையாடுகையில் "பூவார் திருமாமகள்புல்கியமார்பா!" என்கிற திருவெள்ளக்குளப் பாசுரத்தையும் "அகலகில்லேனிறையுமென்கிற திருவேங்கடமுடையான் பாசுரத்தையும் ஸமந்வயப் படுத்தி மிக இனிதாக உபந்யஸித்தருள, காதிஸ்வாமி பரமஸந்தோஷமடைந்து விசேஷஸத்காரம் செய்தருளினர். அவருடைய ஸ்வீகார திருக்குமாரரும் வாக்மியாக இருந்து சிலவாண்டுகட்கு முன்பு திருநாடலங்கரித்தார். அவருடைய ஸ்வீகார திருக்குமாரர் இப்போது வாக்மியாயிருந்து வருகிறார்.

## 337. கோயில் கோவிந்தாசார்ய ஸ்வாமி.

திருக்கோட்டியூர் கோவிந்தாசார்ய ஸ்வாமியென்றும், நம்மாழ்வார் ஸந்நிதி கோவிந்தாசார்ய ஸ்வாமியென்றும் வழங்கப்பெற்ற இவர் கோயிலில் நித்யவாஸநிரதராய் நித்யப்ரவசன நிஷ்ணாதராய் எழுந்தருளியிருந்தார். வியாகரண சாஸ்த்ரத்தில் பாரங்கதர். ஸம்ப்ரதாயக்ரந்தங்களை வரிப்படையே கற்று வரிப்படையே ப்ரவசனம் செய்து போந்தவர். பகவத்விஷயம் மட்டுமன்றிக்கே மற்றும் பூர்வாசார்ய வியாக்யானங்களையும் ரஹஸ்யங்களையும் நாள் தவறாமல் தொண்டரடிப்பொடியாழ்வார் ஸந்நிதி முதலானவிடங்களில் காலக்ஷேபம் ஸாதித்துக்கொண்டே வாழ்நாளைக் கழித்தவர். பாஞ்சராத்ராகமங்களில் மிக்க பரிசீலனையுள்ளவரென்பது இவர் பரிஷ்கரித்து வெளியிட்டுள்ள பாரமேச்வரஸம்ஹிதைப்பதிப்பினால் உலகமறிந்தது. கோயிலுக்குத் திலகமாக நெடுநாள் எழுந்தருளியிருந்தவர்; வடதிருக்காவேரியில் நித்யாநுஷ்டானம் தவறாதவர். "தோதவத்தித் தூய்மறையோர்" என்ற பெரியாழ்வாரருளிச் செயலுக்கு இலக்காக எழுந்தருளியிருந்தவர்.

## 338. கோயில் மெய்யுவாசார்யஸ்வாமி.

திருவரங்கம் பெரிய கோயிலிலேயே மெய்யுவையங்கார் ஸ்வாமியென்று மிக ப்ரஸித்தராக எழுந்தருளியிருந்த இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்து 30 வருஷமாகிறது. நியாயவ்யாகரண

வேதாந்தங்களில் தலஸ்பர்சியான ஞானமுடையராயிருந்ததோடு ஸாஹித்யத்திலும் அப்ரதிமமான பாண்டித்யம் பெற்றவர். அடியேன்பால் இளமையிலிருந்தே பரமக்ருபையுள்ளவர். அடியேன் மஞ்ஜுபாஷிணி பத்திரிகை நடத்திக்கொண்டிருந்தகாலத்தில் ஸ்வாமி காரைக்குடியில் எழுந்தருளியிருந்தார். அப்போது பத்ரிகைக்கு வியாஸங்களெழுதியனுப்பிக்கொண்டிருந்தபடியால் ஸ்வாமியினுடைய வைதுஷ்யத்தையும் ஸம்ஸ்க்ருதலேகன ஸாமர்த்யத்தையும் நன்கு அநுபவித்தவனடியேன். பிறகு கோயிலில் நித்யவாஸ நிரதராயெழுந்தருளியிருந்து திருமாளிகையிலும், கீர்த்திமூர்த்தி, குலாக்குடி சிங்கமையங்கார்ஸ்வாமியின் தென்னாசார்ய ஸம்ப்ரதாய பாடசாலையிலும் உபயவேதாந்த க்ரந்தகாலக்ஷேபமும் இதிஹாஸபுராண ப்ரவசனமும் நெடுநாள் செய்து போந்தார். ஸ்வாமியினுடைய திருக்குமாரர் ஸ்ரீ உ.வே. மெ. ஸௌந்தரராஜாசார்யர் [illegible] ப்ரதிபமாக விளங்கி அல்பகாலத்திலேயே திருநாடலங்கரித்தார். அவர் அடியேனுக்கு [illegible] என்னும்படியிருந்தவர்.

## 339. ஸ்ரீ பஹுகுடும்பி ஸ்ரீநிவாஸாசாரிய ஸ்வாமி.

முன்னம் ப்ரஸ்தாவித்த சிங்கப்பெருமாள்ஸ்வாமியின் பாகிநேயர் இவரென்று நினைவு. இவர் ஸ்ரீராஜமன்னார் ஸந்நிதிக்கடுத்த சேனங்குளத்தில் வாழ்ந்து மாதுலர் முதலானோரிடத்தில் வித்யா க்ரஹணம்பண்ணி ப்ரபலபாண்டித்யம் ஸம்பாதித்துத் திருவரங்கம் பெரியகோயிலில் நித்யவாஸமாக எழுந்தருளியிருந்து உபயவேதாந்த ப்ரவசனம்செய்து கொண்டிருந்தார். அடியேனுக்குப் பரமஸ்நிக்த கோடியில் சேர்ந்திருந்தார். இவருடைய பாண்டித்யமும் ரஸிகத்வமும் அந்யாத்ருசம். பல நூற்றுக்கணக்கான ச்லோகங்களும் செய்யுள்களும் இந்த ஸ்வாமிக்கு வாசோவிதேயம். கோயிலில் ஸ்ரீரங்கநாச்சியார் ஸந்நிதி முன் மண்டபத்தில் அடிக்கடி உபந்யாஸங்கள் ஸாதித்துக் கொண்டிருந்தவர். அடிக்கடி அடியேன் நெருங்கிப்பழக நேரும்போது தம்முடைய சாதுக்தி சாதுர்ய விசேஷங்களைக் காட்டியருள்வர். ஸ்ரீமத் பரமஹம்ஸ. வானமாமலை. சின்ன கலியன் ஸ்வாமி நியமனத்தினால் இந்த ஸ்வாமி சிலவருஷகாலம் நந்திபுர விண்ணகரமென்கிற நாதன் கோவிலில் எழுந்தருளியிருக்க நேர்ந்தது. அப்போது அடியேன் யாத்திரையிடையில் அங்கே விடைகொள்ள நேர்ந்தது. மூன்று நான்கு நாட்கள் *இருநிலத்திவினிதின்பமெய்தலாமே* என்கிற திருநெடுந்தாண்டகப் பாசுரத்தை நினைப்பூட்டுவனவாயிருந்தன. இவர் திருநாடலங்கரித்து முப்பது வருடங்களுக்கு மேலாயிற்று.

## 340. ஸ்ரீ பஹுகுடும்பி வரதாசாரிய ஸ்வாமி.

மேலே ப்ரஸ்தாவித்த ஸ்வாமியின் திருத்தமையனார் இந்த வரதாசார்ய ஸ்வாமி. இந்த ஸ்வாமியும் ந்யாய வேதாந்தங்களில் நிபுணராய் உபய வேதாந்த க்ரந்த காலக்ஷேபமே போதுபோக்காக எழுந்தருளியிருந்தவர். இந்த ஸ்வாமியின் ப்ரவசனங்கள் திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் நெடுநாள் நடந்துகொண்டிருந்ததை நேராக அறிவேன். பரம ப்ராமாணிகபத்ததியில் ஆடம்பர டம்பங்களின்றிக்கே ஸாத்விக ஸரணியில் காலக்ஷேபம் ஸாதித்துக்கொண்டிருந்தவர். இந்த ஸ்வாமியின் திருத்தமையனாரொருவர் சேனங்குளத்திலேயே யிருந்துகொண்டு ஸாங்க வேதாத்யயனம் செய்து மன்னார்குடியில் ஸ்ரீ ராஜகோபாலனுக்கு வேதபாராயணம் செய்துகொண்டிருக்கையில் அங்கு உத்ஸவஸேவார்த்தமாக விடைகொண்டிருந்த அடியேனுக்குப் பரமஸ்நிக்தரானார். ஸஹோதரர்களான இம்மூவரும் அடியேனுடைய சிந்தனையில் திகழ்பவர்கள்.

## 341. ஸ்ரீ ஸ்வர்ணம் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி

ஸ்ரீ முஷ்ணம் ஸ்வாமியென்றும் ஸ்வர்ணம் ஸ்வாமியென்றும் விக்யாதராயிருந்த க்ருஷ்ணமாசார்யஸ்வாமி ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி, இஞ்சிமேட்டழகிய சிங்கர்க்கு பூர்வாச்ரமத்தில்

ஆசார்யராக விளங்கினவர்; மஹா சிஷ்டாக்ரேஸரர். நெருப்பையும் அலம்புகிறவர் என்றால் அதிசயோக்தியாகாது. ஒரு ஸம்வத்ஸரம் தையமாவாஸ்யை மஹோத்ஸவம் ஸேவிக்கத் திருநாங்கூரெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் ஜகத்குரு காதி ஸ்வாமியோடுகூட அடியேன் விடை கொண்டிருக்கையில் இந்த ஸ்வர்ணம் ஸ்வாமியும் இஞ்சிமேடு (பூர்வாச்ரம) ஸ்வாமியும் அங்கே யெழுந்தருளியிருந்தார்கள். சிஷ்யாசார்ய க்ரமத்தின் அழகை அங்கே அனுபவிக்க நேர்ந்தது அகங்குழைந்தது. இரு ஸ்வாமிகளும் அப்போதே [குறட்பிரமசாரியான] அடியேன்பால் விசேஷ கடாக்ஷஞ் செய்தருளினபடியை நினைக்குங்கால் நெஞ்சமுருகுகின்றது. அப்போது ஸ்வாமியின் பாதசாரமாகவே யெழுந்தருளுகிறபடியாதலால் சில நாட்களில் ஸ்ரீ காஞ்சிக் கெழுந்தருளி ஸன்னிதி வீதியில் பருத்திப்பட்டு திருவேங்கடாசார்ய ஸ்வாமி திருமாளிகையில் எழுந்தருளியிருந்து கொண்டு ஈட்டு ப்ரவசனந் தொடங்கினார் ஸ்வர்ணம் ஸ்வாமி. சில நாட்களில் அடியேனும் விடை கொண்டு ச்ரவணம் செய்ததுண்டு.

## 342. ஸ்ரீ பண்டிதரத்னம் குப்பண்ணு ஸ்வாமி

இம் மஹாபுருஷர் பெரும்பாலும் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருந்தவர். அவ்விடத்திலுள்ள மஹாராஜா ஸம்ஸ்க்ருத வித்யாசாலையில் பல வருஷங்கள் அத்யக்ஷராக எழுந்தருளியிருந்து நூற்றுக்கணக்கான வ்யக்திகளை நாநா சாஸ்த்ரங்களில் ப்ரவீணர்களாக்கி யருளினவர். சதுச்சாஸ்த்ர வித்வானான இவர்க்கு உபய வேதாந்தங்களில் மிக்க ப்ராவீண்யமிருந்தது. எம்பெருமானார் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருந்த காலத்தில் ஐம்பத்திருவர் என்று ஒரு ஸமூஹத்தை நியமித்தருளினா ரென்பது ஸம்ப்ரஸித்தம்; அந்த ஸமூஹத்தில் இந்த ஸ்வாமியின் குடியும் சேர்ந்ததாகும். ஆனதுபற்றியே ஸ்தானிகம் என்ற உபபதமும் இவர்க்கு விளங்கி வந்தது.

## 343. அயோத்யா ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி

இந்த ஸ்வாமி "காரப்பங்காடு ஜீயர்" என்றும் வழங்கப்பட்டு வந்தார். அடியேன் எழெட்டு பிராயத்திலிருக்கும்போது இந்த ஸ்வாமி ப்ரஹ்மசாரியாய் அடியேனுடைய திருத் தகப்பனாரிடம் ஸாஹித்ய பாடங்கள் வாசித்துக்கொண்டிருந்தார். சிலவாண்டுகளுக்குப்பால் வட நாட்டில் எங்கேயாவது சென்று வாழ வேணுமென்று கருதி எந்தவிடம் உசிதமானதென்று திருத் தகப்பனாரைக் கேட்டுக்கொண்டிருந்தார். அக்காலத்தில் ப்ருந்தாவனம் புஷ்கரம் ஸீதாராம்பாக், கல்யாண் முதலான விடங்களிலுள்ள ஸன்னிதிகளுக்கு அர்ச்சக பரிசாரகர்களைத் திருத்தகப்பனார் அனுப்பிக்கொண்டிருந்தபடியால் தம்மை ஓரிடத்திற்கு அனுப்பும்படி ப்ரார்த்தித்து வந்தாரிவர். அப்போது ஸ்ரீ சுருமணியே புதுப்பேட். இளையவில்லி ராமாநுஜாசாரியர் ஸ்வாமி ராஜபுதானா ஸம்ஸ்தானத்தில் கோட்புட்லி யென்னுமிடத்தில் வாழ்ந்துவருபவர், தம்முடைய மந்திரத்திற்கு ஒருவரை யனுப்பவேணுமென்று திருத்தகப்பனார்க்கு எழுதியிருந்தபடியால் காரப்பங்காடு ராமாநுஜாசாரியர் என்னுமிவரை அவ்விடத்திற்கு அனுப்பினார். அந்த இளையவில்லி ஸ்வாமி உபயவேதாந்தக் கடலில் ஆழ மூழ்கின ப்ரபல வித்வான். அவரிடம் சென்று சேர்ந்த இந்த ராமாநுஜாசாரியர் அவரிடத்தில் ஸம்ஸ்க்ருத ஜ்ஞானத்தை அபிவ்ருத்தி செய்துகொண்டார். சிலவாண்டுகள் அவர் திருவடிகளில் வாழ்ந்து வந்தார். அப்போது அயோத்யையில் (கீர்த்திமூர்த்தி) யோகி பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமியால் ப்ரதிஷ்டாபிதமான ஸன்னிதிக்கு அர்ச்சகர் வேண்டியிருந்தபடியால் இவர் அவ்விடத்திற்கு (இளையவில்லி ஸ்வாமியால்) அனுப்பப்பட்டு அங்கே கைங்கர்ய பரராக இருந்துவந்தார். இருக்கையில் ஸந்ந்யாஸாச்ரமம் ஸ்வீகரிக்க வேணுமென்று தோன்றி காஞ்சிபுரம் வந்து சேர்ந்து அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி ஸன்னிதியில் ஆச்ரமம் பெற்று மடத்திலேயே ஒரு ஸம்வத்ஸர மெழுந்தருளியிருந்து ஸம்ப்ரதாய க்ரந்த காலக்ஷேபம் செய்துகொண்டிருந்து பிறகு ஸ்ரீரங்க நாராயணஜீயராஜர்,

## 344. ஸ்ரீமத் தேரழுந்தூராண்டவன்

இப்போது ஆண்டவன் ஆஸ்தானத்தை அலங்கரித்தருளா நின்ற திருக்குடந்தை யாண்டவனுக்கு முந்தினவர் தென்பரையாண்டவன்; அவர்க்கும் முந்தினவர் ஆக்கூராண்டவன்; அவர்க்கும் முந்தினவர் தேரழுந்தூராண்டவன். அந்த மஹாஸ்வாமியை முதன் முதலாகத் திருநாராயணபுரத்தில வைரமுடி யுத்ஸவத்தில் ஸேவிக்கப்பெற்று அப்போதே பரமக்ருபைக்குப் பாத்திரமாயினேன். அதன் பிறகு விரைவிலேயே ஸ்ரீகாஞ்சிக் கெழுந்தருளி வேகவதிக்கரையில் தர்மார்த்த தோட்டமென்று ப்ரஸித்தமாக வழங்குமிடத்தை ஆச்ரமமாகக் கொண்டு பல ஸம்வத்ஸரங்கள் ப்ரவசனம் செய்துகொண் டெழுந்தருளியிருந்தார். தினப்படியாக ஏதாவதொரு ஸமயத்தில் இங்கு வந்து போகவேணுமென்று அடியேனுக்குக் கட்டளையிட்டிருந்தார். 'இந்த ஆஜ்ஞையை நிறைவேற்ற அடியேனாலாகாதே' என்று விஜ்ஞாபித்து 'ஸ்வாமி தேவப்பெருமானை மங்களாசாஸனம் செய்தருள நியமமாக எழுந்தருளுகிறபடியால் அங்கே ஸேவித்துக் கொள்ளுகிறேன்.' என்று சொல்லி அப்படியே நாடோறும் அரைமணி காலத்திற்குமேல் ஸம்பாஷணம் ப்ராப்தமாகி வந்தது. ஆச்ரமத்திற்கு விடைகொள்வதும் பலகாலுண்டு. அப்போது அடியேன் சென்னை முதலான இடங்களை இறையும் அறியாமல் ஸ்வஸ்தானத்திலேயே நியதமாயிருந்துவந்தபடியால் நான் தவறாமல் ஸேவித்து வார்த்தையாட ப்ரஸங்கம் வாய்த்தது. ஸ்வாமி பக்கலில் வைதுஷ்யத்திற் காட்டிலும் ராஸிக்யமே விஞ்சியிருந்தது. மிதபாஷித்வ மென்பதை ஒருநாளும் கண்டிலேன்.

ஒருநாள் ஸம்பாஷித்துக்கொண்டிருக்கையில் ''கோபால இதிக்ருஷ்ணா! த்வம் ப்ரசுரக்ஷீர வாஞ்ச்சயா, ச்ரிதோ, மாத்ருஸ்தநக்ஷீரமப்யஹோ துர்லபம் க்ருதம்'' என்கிற ச்லோகத்தை அடியேன் விஜ்ஞாபித்து விவரிக்க நேர்ந்தது; உடனே ஆண்டவன் 'இந்த ச்லோகத்தைத் தமிழ்ப் பாட்டாக மொழிபெயர்த்துச் சொல்லுவீரா?' என்று ஸாதிக்க, உடனே,

கண்ணா! நின்னை ஆயனென்று கண்டு மிக்க பால்பெறத்
தெண்ணி நின்ன பாதபங்கயத்தை நண்ணினேனரோ
எண்ணமீது மாறுபட் டொழிந்தவாறு கேட்டியோ
அன்னைபாலு மென்றனக் கருமையாக்கினையரோ.

என்று விஜ்ஞாபித்தேன். ஸ்வாமியும் திருவுள்ளமுவந்து பல வார்த்தைகள் ஸாதித்தருளினார்.

[கருத்து:—கண்ணா! நீ இடையனாகையாலே உன்னையடைந்தால் மிக்க பால் கிடைக்குமென்றாசைப்பட்டு வந்தடைந்தேன். ஏற்கனவே கிடைத்துக் கொண்டிருந்த தாய்முலைப்பாலும் கிடைக்காதபடி செய்திட்டாயே! என்கை. மறுபிறவி தவிரத் திருத்தினையென்கை. ''ஸ்தநந்தயத்வம் ந புநர் பபூவ'' இதி யாதவாப்யுதயே.]

ஸர்வபூதஸுஹ்ருத்தாக எழுந்தருளியிருந்தது தேரழுந்தூராண்டவனுக்குத் தன்னேற்றம். அவரை ஸௌசீல்ய நிதியென்றே சொல்லவேணும். காஞ்சியிலேயே திருநாட்டுக்கெழுந்தருளினார்

## 345. திருநாராயணபுரம் தி. அ. ஸம்பத்ஸ்வாமி.

திருமலை அனந்தாண்பிள்ளை குலதிலகராய் ஸ்ரீரங்கம் ஸம்பத்ஸ்வாமி யென்றே வழங்கப்பட்டுத் திருநாராயணபுரத்தில் வாழ்ந்து பத்தெட்டு ஸம்வத்ஸரங்களுக்குமுன் திருநாடலங்கரித்த ஸ்ரீ ஸம்பத் குமாராசார்யஸ்வாமி திருநாராயணபுரத்திற்குத் திலகமாக விளங்கின ஒரு விலக்ஷண வ்யக்தி. உபய வேதாந்தத்திலும் ஆழ்ந்த ஞானமுடையராய் ப்ரவசன ப்ரவீணராயுமிருந்தார். அவ்விடத்து ஸம்ஸ்க்ருத வித்யாலயத்தில் நெடுங்காலம் அத்யாபகராக எழுந்தருளியிருந்தவர். ஆழ்வாரருளிச்செயல்களைக் கசடறக்கற்று ஸந்நிதி கைங்கர்யங்களில் நிஷ்ணாதரா யிருந்தது விசேஷித்த வைபவமிவர்க்கு. இந்த ஸ்வாமியின் அந்தேவாஸிகளாகப் பலர் விளங்குகின்றார்கள். ஒரு திருக்குமாரர் இவருடைய திருநாமத்தை விளங்கச்செய்து வருகிறார்கள்.

யாகிறது. இவர் நியாய சாஸ்த்ரத்தில் மஹா நிபுணராய் அதிகரண ஸாராவளியையும் தத்வமுக்தா கலாபத்தையும் கண்டஸ்தமாகக் கொண்டிருந்தார். ஸ்ரீமதுபயவே. காதிஸ்வாமி வடநாட்டு ஸஞ்சாரமாக எழுந்தருளுங்காலங்களில் அடியேன் இந்த ஸ்வாமியிடத்திலே நியாயபாடம் வாசித்ததுண்டு. "சமதமகுணவிந்துஸ் ஸாத்வீகேஷ்வக்ரகண்ய:" என்பதற்கு மிகப் பொருத்த மானவர் இந்த ஸ்வாமி. நெடுங்காலம் காஞ்சியில் வாழ்ந்து கலைவைஷம்யச் சண்டை, மடமுனித் ரயச் சண்டை முதலான எந்த விவாதத்திலும் த்ரிகரணங்களாலும் ஸம்பந்தப்படாமல் ஸர்வபூத ஸுஹ்ருத்தாக விளங்கின பெருமை இந்த ஸ்வாமிக்கு அஸாதாரணமானது. தேவப்பெருமானு டைய திருவீதிப் புறப்பாடுகளில் நியமேன அந்வயிப்பர். வேதபாராயண கோஷ்டிக்குப் பின்னால் ஏகாந்தசீலராக எழுந்தருள்வர். தம்முடைய நியதமான காரியங்கள் தவிர வேறொன்றில் கண் செலுத்தாமலும் செவி கொடாமலிருந்த பெருமைவாய்ந்த இந்த ஸ்வாமியின் இயல்பை அநுகரிக்க வல்லாராருமில்லை.

## 351. நாவல்பாக்கம், நரஸிம்ஹாசார்யஸ்வாமி

சிஷ்டாக்ரேஸரரும் வித்வத்வரேண்யருமான இந்த மஹாஸ்வாமி மைஸூரில் சாஸ்த்ராப்யா ஸங்கள் செய்து ராஜமன்னார் ஸன்னிதி முதலானவிடங்களில் சிலவாண்டுகள் வாழ்ந்து ஐம்பது திருநக்ஷத்ரங்களுக்குமேல் காஞ்சீவாஸத்தையே ஸ்திரமாகக்கொண்டிருந்தவர். இடையில் காஞ்சியில் தீர்த்தகஷ்டம் நேர்ந்தபோது இரண்டொரு ஸம்வத்ஸரம் திடமாக இருந்தவரையில் உஞ்சவ்ருத்தியையே ஜீவிகையாக அவலம்பித்திருந்தார். வேதாத்யயனஸம்பத்தும் கொண்டி ருந்தார். இந்த ஸ்வாமியிடம் சாஸ்த்ரங்கள் வாசித்து வித்வான்களானவர்கள் பலர். அன்னவர் களில் இப்போது நாவல்பாக்கத்தில் ஏகாந்த சீலராக வாழ்பவரான ஸ்ரீமதுபயவே. அரியாகுடி தேவநாதாசாரியர் ஸ்வாமி தலைமைபெற்றவர். இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்து 12 ஸம்வத்ஸரமே யாகிறது.

## 352. திருக்கோட்டியூர், ஸௌம்ய நாராயணாசார்யர்ஸ்வாமி

கோஷ்டீபுரம் ஸ்வாமியென்றே ப்ரஸித்தி பெற்றிருந்தவர் இந்த ஸ்வாமி. நியாய சாஸ்த்ரத் திலும் உபயவேதாந்தங்களிலும் ஆழ்ந்த ஞானமுடைய வித்வத்வரேண்யராக விளங்கினார். (கீழே ப்ரஸ்தாவித்த) ஸ்ரீமதுபயவே. ஸ்ரீரங்கம் எம்பார் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் ஸாமாந்ய சாஸ்த்ரமதிகரித்து அந்த ஸ்வாமியும் மெச்சும்படியாகத் தேர்ச்சி பெற்றவர். தமது திருத்தகப்பனாரான ஸுந்தரகோபாலாசாரியர் ஸ்வாமி ஸன்னிதியில் அத்யாத்ம சாஸ்த்ரங்கள் பயின்று தம்பெருமான் ஸன்னிதியிலும் பெருமாள் கோயிலிலும் மதுராந்தகத்திலும் பலநாள் வஸித்து உபயவேதாந்தங்களும் ப்ரவசனம் செய்தவர். இதிஹாஸபுராண ப்ரவசனத்திலும் வல்லவர். கோஷ்டீபுரம் ஸ்வாமியிடத்தில் அடியேன் விசேஷித்துக் கண்ட குணம் பரமப்ரா மாணிகத்வம். நிக்ரஹஸ்தானங்களுக்கு இடமற வ்யவஹரிப்பர். ஈட்டுப்ரவசனத்தில் அந்தரங்க மான விச்வாஸமுள்ளவர்.

## 353. ஸ்ரீமத் பரமஹம்ஸ, கருடபுரம் ஸ்வாமி

இந்த மஹாஸ்வாமியை க்ருஹஸ்தாச்ரமத்திலிருந்து நன்கறிவேன். முதன்முதலாக மதுராந்தகத்தில் (க்ருஹஸ்தராய்) ஸேவை ஸாதித்து பரமக்ருபை காட்டியருளினார். உத்தமாச்ரமம் ஸ்வீகரித்த பின் பெரும்பாலும் பெருமாள் கோயிலிலேயே எழுந்தருளியிருந்ததாக நினைவு. நெல்லூர் ஜில்லாவில் மங்களம்பாடியென்கிற அக்ரஹாரத்தில் (பூர்வாச்ரமத்தில்) சிலவாண்டுகள் எழுந்தருளியிருந்து அங்குள்ளாரைத் திருத்திப் பணிகொண்டதாக அங்குள்ளார் நாளைக்கும் க்ருதஜ்ஞதாநுஸந்தானம் பண்ணிப்போருகிறார்கள். "ஸ்மிதபூர்வாபிபாஷீ" என்கிற விசேஷ ணம் ஸ்வாமிக்கு மிகப் பொருத்தமானது. தேவப்பெருமானுடைய மங்களாசாஸனம் அசக்தி

யிலும்கூட நாள் தவறாமல் செய்து போருவர். நித்யம் ப்ரவசன நிரதராய் எழுந்தருளியிருப்பர். காஞ்சியிலேயே திருநாட்டுக்கெழுந்தருளிப் பதினெட்டு ஸம்வத்ஸரங்களுக்கு மேலாயிற்று. அனேகருக் ஸ்மரணீயர்களான புண்ய புருஷர்களில் தலைவர். திருப்பதியிலெழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. கபிஸ்தலம் தேசிகாசார்ய ஸ்வாமியிடத்தில் ஸாமான்ய சாஸ்த்ரமதிகரித்ததாக ஸாதிக்கக் கேட்டிருந்தேன். ஸ்ரீ பாஷ்ய ப்ரவசனத்தில் உத்தமாதிகாரி.

## 354. கபிஸ்தலம் தேசிகாசார்ய ஸ்வாமி

இந்த ஸ்வாமி மிகவும் ப்ரக்க்யாதராய் மஹாமஹோபாத்யாய பட்டமும் பெற்ற ப்ரபல வித்வான். வேதாந்த சாஸ்த்ரத்தில் உபகாரகங்களான சில க்ரந்தங்களும் இயற்றினவர். த்வைதிகளோடும் அத்வைதிகளோடும் வாதம் செய்து புகழ்பெற்றவர். திருப்பதியிலெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் திருமலை அனந்தான்பிள்ளை புரிசை, ஸ்ரீ ரங்காசாரியர்ஸ்வாமி; அவருடைய திருத்தமையனாரான பங்காரசாரியர்ஸ்வாமி ஆகிய இருவர் ஸன்னிதியிலும் ஸாமான்ய சாஸ்த்ரங்கள் வாசித்துப் பல மதங்களிலும் பல பேர்களை வித்வான்களாக்கினவர். அடியேனுடைய பந்துக்கள் திருப்பதியில் அதிகமாகவுள்ளபடியால் இளமையில் பலகால் அவ்விடம் விடைகொள்ள நேரும். அந்த ஸமயங்களிலெல்லாம் ஸ்வாமியோடு நெருங்கிப் பழகவும் நேரும். 1930–ல் வேதலக்ஷண விவாதம் பிரபலமாக நடந்துகொண்டிருந்தபோது அடியேன் திருப்பதிக்கு விடைகொண்டிருக்கையில் ஸ்வாமி தாமாகவே யழைத்து இந்த விவாத ஸ்வரூபமென்னவென்று விசாரித்தறிந்து திருவுள்ளமுவந்து அபிநந்தன பத்ரிகையும் ஸாதித்தது ஜகத்ப்ரஸித்தம். அதன்பிறகே அந்த விவாதம் சாந்தமாயிற்று.

## 355. திருப்பதி கிடாம்பி. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

இந்த ஸ்வாமி திருப்பதி கிடாம்பி அப்பாஸ்வாமி யென்றே ப்ரஸித்தர். வியாகரண வேதாந்தங்களில் வல்லவராய் மஹா சிஷ்டாக்ரேஸரராய் விளங்கினவர். ஸ்ரீமத் புரசை ஸ்வாமிக்கு ''தக்ஷிணோ பாஹு:'' என்னும்படி விளங்கினவர். ப்ரதிவாதி பயங்கர ஸ்வாமியர்களினுடைய தௌஹித்ர ஸந்ததியாகையாலே அண்ணங்கராசாரியரென்று திருநாமம் பூண்டவர். நெடுங்காலம் திருப்பதிக்குத் திலகமாக விளங்கின மஹான். இவர் திருநாட்டுக்கெழுந்தருளி ஐம்பத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்கு மேலாயிற்று.

## 356. யோகி. பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி

பலகாலம் திருவல்லிக்கேணியிலெழுந்தருளியிருந்த இந்த ஸ்வாமி வித்வானாயிருந்ததோடு கூட, பிரபல தனிகராயுமிருந்தார். அதனால் இந்த ஸ்வாமி செய்தருளின லோகோபகாரங்கள் அளவுகடந்தவை. உபயவேதாந்த க்ரந்தங்கள் பலவற்றை அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார். அவற்றுள் இரண்டு மஹா க்ரந்தங்களை மட்டும் இங்குக் குறிப்பிடுகிறேன். (1) ஸ்ரீவசனபூஷண வியாக்யானம் இரண்டு அரும்பதவுரைகளோடும் ஸ்ரீவசனபூஷண மீமாம்ஸா பாஷ்யத்தோடும் [ஆயிரம் பக்கங்களுக்குமேல் கொண்ட மிகப் பெரிய ஸ்ரீகோசம்] இம்மஹான் தெலுங்கு லிபியில் அச்சிட்டு வெளியிட்டது. (2) ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் நிர்வசனங்களோடுங்கூட மிகப்பெரிய ஸ்ரீகோசமாகத் தெலுங்கு லிபியிலேயே அச்சிட்டார். மற்றும் பலபலவுண்டு. இந்த ஸ்வாமிக்கு சக்ரவர்த்தி திருமகன் கனவிலே ஸேவை ஸாதித்துத் திருவயோத்தியில் ஸன்னிதி ப்ரதிஷ்டை செய்யும்படி நியமிக்க, அந்த நியமனத்தை சிரஸாவஹித்து அயோத்தியில் கோலாகாட் என்று ப்ரஸித்தமான ஸரயூதீரத்தில் தக்ஷிணாத்ய ப்ரக்ரியையிலே திவ்யஸன்னிதி நிர்மாணம் செய்வித்து ப்ரதிஷ்டை பண்ணியிருப்பது ப்ரஸித்தமான விஷயம்.

## 357. தேவசிகாமணி. ராமானுஜாசார்யஸ்வாமி

மண்டயம் தேவசிகாமணி ஸ்வாமியென்று ப்ரஸித்தராயிருந்த இந்த வித்வான் பரமபதித்து

இருபத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்கு மேலாகிறது. இவர் மைஸூரில் வாஸித்து விசேஷத: மீமாம்ஸா சாஸ்த்ரத்திலும் உபயவேதாந்தங்களிலும் அத்விதீய வித்வன்மணியாக விளங்கினர். அயோத்யையிலும் ப்ருந்தாவனத்திலும் பல ஸம்வத்ஸரங்கள் வாழ்ந்து சாஸ்த்ர ப்ரவசனம் செய்தவர். மிகச் சிறந்த க்ராந்திகர். அடையாறில் அச்சாகி வெளிவந்த அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை வெகு ஆச்சரியமான பதிப்பு. அதற்கு இந்த ராமாநுஜாசார்யஸ்வாமியே பரிஷ்காரகராயிருந்தவர். அந்த ஸம்ஹிதைக்கு இந்த ஸ்வாமியெழுதி வெளியிட்டுள்ள மிக விரிவான பூமிகையை வாசித்துப் பார்ப்பவர்களுக்கு இவருடைய வித்யாபரிச்ரமம் அத்விதீயமென்பது புலப்படும். இவருடைய லேகனங்களும் பாஷணங்களும் மிகச் சிறந்து விளங்கின.

## 358. 359. 360. குன்றபாக்கம் வித்வான்கள் மூவர்

(1) திருமலை, விஞ்சிமூர், ஸ்ரீ ரங்காசாரியார்ஸ்வாமி.

(2) திருமலை, அனந்தாண்பிள்ளை, ராமாநுஜாசார்யஸ்வாமி.

(3) திருமலை, அனந்தாண்பிள்ளை, (அப்பா) பாஷ்யகார ஸ்வாமி.

மேலே குறித்த மூன்று திருநாமங்களும் (மலையடி) குன்றபாக்கத்து வித்வன்மணிகள், அடிக்கடி அடியேன் ப்ரஸ்தாவிக்கிற ஸ்ரீ குன்றபாக்கம் சிமாச்சார்ஸ்வாமியின் ஸமகாலத்தவர்களும், அவர் தம்மாலும் கொண்டாடப்பட்டவர்களுமான வித்வான்கள். இவர்களுள் முன்னே குறித்த தி. வி. ஸ்ரீரங்காசார்யஸ்வாமியின் திருத்தகப்பனார் அய்யாஸாமி ஐயங்காரென்று ஸுப்ரஸித்தராம், ராகவாசார்யஸ்வாமியென்று திருநாமமாம். அந்த ஸ்வாமியை அடியேன் அறியேன். அவரை ப்ரசண்ட பண்டிதோத்தமரென்பர்கள். அவரிடம் சாஸ்த்ரங்கள் பயின்று தேறினவர்களே குன்றபாக்கத்து வித்வான்களெல்லாரும், மேலே குறித்த ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமியின் திருக்குமாரர்கள் மூவர் விளங்கிவருகிறார்கள். ஸ்ரீராமாநுஜாசார்ய ஸ்வாமியின் பௌத்ரரான ஸ்ரீசைல க்ருஷ்ணமாசார்யரென்பவர் ப்ரவசன ப்ரவீண பண்டிதராய் விளங்கி ஆறு ஸம்வத்ஸரங்களுக்குமுன் திருநாட்டுக்கெழுந்தருளினார். (அப்பா) பாஷ்யகாரஸ்வாமி யென்பவர் திருவல்லிக்கேணியில் பலர்க்கு ப்ரவக்தாவாக வாழ்ந்திருந்தவர். இப்பெரியார்கள் வாழ்ந்த காலம் மிகவும் வ்யவஹிதமானாலும் இவர்கள் வித்வத் கணனையில் ப்ரஸித்தர்களாக விளங்கிவருபவர்கள். இவர்களோடு அடியேன் நெருங்கிப் பழகின பாக்கியமுடையேன்.

## 361. உத்தரமேரூர் கனபாடி ராகவாசார்யர் ஸ்வாமி

காவ்ய நாடகாலங்காரங்களில் ஆழ்ந்த வ்யுத்பத்தி பெற்று வேத லக்ஷணங்களையெல்லாம் முகஸ்தமாகக் கொண்டு பதக்ரமஜடாகனங்களோடு நில்லாமல் வர்ணக்ரமாந்தமாகவும் பரிச்ரமப்பட்டு 'ஸாங்க வேதாத்யாயீ' என்று புகழ் பெற்றிருந்தவர் உத்தரமேரூர் ராகவாசார்ய ஸ்வாமி. காஞ்சீ ப்ராந்தத்தில் கனபாடிகள் இல்லையென்கிற அபப்ரதையை இந்த ஸ்வாமியொருவரால்தான் நீங்கிற்று. இந்த ஸ்வாமி இன்னமும் ஜீவித்திருக்கத் தக்கவர், ஆயினும் இவர் பரமபதித்து 28 ஸம்வத்ஸரமாய் விட்டது. இவர் அடிக்கடி காஞ்சிக்கு எழுந்தருள்வர். அடியேனோடு ஸம்பாஷிக்க வேணுமென்றே பலகால் எழுந்தருளி நாலு நாள் எட்டு நாள் பத்து நாள்கூட அடியேனுடைய க்ருஹத்திலேயே யெழுந்தருளியிருந்ததுண்டு. அக்காலத்தில் வேதலக்ஷண விஷயமாக அடியேனெழுதி வெளியிட்ட வேதார்த்த யஜ்ஞ ஸர்வஸ்வாதி க்ரந்தங்களை ஓரக்ஷரம் விடாமல் ஆழ்ந்து ஆராய்ந்து அபிநந்தித்த இந்த ஸ்வாமியின் அபிநந்தன பத்ரிகைகள் பல வெளிவந்திருக்கின்றன. வேதமோதினவர்களில் ஸம்ஸ்க்ருத வைதுஷ்யம் பெற்றவர்களில் இந்த ஸ்வாமியைப் போன்றவர்கள் மிகச்சிலரே யென்று மீண்டும் விஜ்ஞாபயே.

## 362. திருமலை நச்சம்பாடி ராமாநுஜாசார்ய ஸ்வாமி

ஸ்ரீ காஞ்சீபுரியில் தென்னாசார்ய ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்களில் தலைவராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. திருமலை, நச்சம்பாடி, நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி திருநாடலங்கரித்து எண்பத்தைந்து வருடமிருக்கும். ஸ்ரீபாஷ்யபகவத்விஷயங்களும் அஷ்டாதசரஹஸ்யங்களும் வியாக்கியானங்களும் அந்த ஸ்வாமிக்கு வாசோவிதேயங்களென்று அஸ்மதாசார்யரான ஸ்ரீமத் பரமஹம்ஸ, அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி (ஷஷ்டி ஜீயர் ஸ்வாமி) அடிக்கடி ஸாதிக்கக் கேட்டிருந்தேன். அந்த ஸ்வாமியை அடியேன் ஸேவிக்க ப்ரஸக்தியில்லையாயிற்று. அந்த ஸ்வாமியின் பெரும்புகழ் அபாரமானது. ஸ்ரீமத் திருப்புட்குழி அப்பா ஸ்வாமியென்று ப்ரஸித்தராக எழுந்தருளியிருந்த ஸ்ரீக்ருஷ்ணதாதாசார்ய ஸ்வாமியும் இவரும் ஸமகாலஸ்தர்களாம். பரஸ்பரம் வெகு கௌரவத்தோடு வாழ்ந்தவர்களாம். இந்த ஸ்வாமியின் திருக்குமாரர் நச்சம்பாடி, ராமாநுஜாசார்ய ஸ்வாமியென்பவர் மஹாதேஜஸ்வியாகவும் மஹாஜ்ஞாநாதிகராகவும் விளங்கினவர். இந்த ஸ்வாமி ஸன்னிதியில் அடியேன் இளமையில் குரு பரம்பராப்ரபாவம் (ஆறாயிரப்படி) ஸேவித்தேன். அந்த ஸ்வாமி பரமசாந்தர், மஹாஸாத்விகப்ரக்ருதி. திருமாளிகையை விட்டுக் கீழேயிறங்காமல் ஏகாந்த சீலராக எழுந்தருளியிருந்தவர்.

## 363. காளி. ரங்காசாரியர் ஸ்வாமி

மாயவரம் தாலுக்காவில் காளியென்பது ஒரு அக்ரஹாரம். அவ்விடத்தில் உதித்துத் தேரழுந்தூரில் வாழ்ந்து கொண்டிருந்த இந்த ஸ்வாமி புதுக்கோட்டை ஸமஸ்தானத்தில் நெடுங்காலம் தானாதிகாரி பதவியை அலங்கரித்திருந்தார். பிறகு விச்ராந்தராய் தமது திருக்குமாரரோடு கூட வஸிக்கவேண்டி நாக்பூரிலும் கல்கத்தாவிலுமெழுந்தருளியிருந்து கடைசியாக புது டில்லியில் இருக்கும்போது திருநாடலங்கரிக்க நேர்ந்து விட்டது. அது பதினைந்து ஸம்வத்ஸரங்களுக்கு மேல் ஆய்விட்டது. இந்த ஸ்வாமியின் பரிசயம் எமக்கு விசேஷமாக இருந்தது. இவர்க்கு மதத்ரய நிரூபகரென்று ஒரு ப்ரஸித்தியுண்டு. அந்த ப்ரஸித்திக்கு ஏற்பச் சில க்ரந்தங்களுமியற்றி பிரசுரம் செய்திருக்கிறார். ஒருவருடைய தாக்ஷிண்யத்திற்கும் கட்டுப்படாமலும் ஸங்கேதபீதியில்லாமலும் அந்தரங்க ஸாக்ஷ்யத்தை வஞ்சியாமலும் தமது திருவுள்ளத்தில் பட்டதை வெளியிடும் பான்மை இந்த ஸ்வாமியிடத்தில் அடியேன் வெகு நாள் அநுபவித்த மஹாகுணம். அடியேனுடைய க்ரந்தங்களைப் பெரும்பாலும் கடாக்ஷித்தருளி அபிநந்தன பத்ரிகைகள் வெளியிட்டவர் இந்த ஸ்வாமி. *ருபமேவாஸ்யைதந்மஹிமாநம் வ்யாசஷ்டே யென்னும்படி ஸேவை ஸாதித்துக் கொண்டிருந்தவர். இந்த ஸ்வாமி ஸன்னிதியில் ஸ்வரூப க்ரந்த காலக்ஷேபம் செய்தவர்கள் பலர். அன்னவர்களில் ஒருவரான ஸ்ரீமதுபயவே. கோமல், சேஷாத்ரியாசார்ய ஸ்வாமி *ராமாயண பூஷணாதி பிருதாலங்க்ருதராய் சில ஸம்வத்ஸரங்களாக சென்னை மாநகரில் ப்ரவசன துரந்தரராய் விளங்கி வருவது ஸுப்ரஸித்தம்.

## 364. ஸ்ரீவில்லிபுத்தூர் மேலைவாத்யார் திருமலை ஐயங்கார் ஸ்வாமி

இப்போது திருமலை திருப்பதியில் ஸ்ரீமத்பரமஹம்ஸ. பெரிய ஜீயர் ஸ்வாமியாஸ்தானத்தை அலங்கரித்தருளாநின்ற ஸ்ரீ மஹா ஸ்வாமிக்கு பூர்வாச்ரமத்தில் மாதுலரான இந்த ஸ்வாமி ஸ்ரீவில்லிபுத்தூரில் மேலைவாத்யாரென்றே வ்யபதிஷ்டராயெழுந்தருளியிருந்த சிஷ்டாக்ரேஸரர். இந்த ஸ்வாமியினுடைய பரிசயம் அடியேனுக்கு இளமையிலேயே கிடைத்தது. இருவோமுக்கும் தேச வ்யவதானம் மிகவுமிருந்தாலும் மதுரை கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான இடங்களில் பலகால் ஸந்திக்க நேர்ந்ததுண்டு. ஸ்ரீவில்லிபுத்தூரிலும் பலமுறை ஸேவித்தேன். இவர் சிறந்த வித்வானுமிருந்ததோடு ஆசுகவி, சித்ரகவி இத்யாதி பிருதாவளிகளையும் பெற்றிருந்தார். சிஷ்டாக்ரேஸரர் என்பதை முத்துற முன்னமே விஜ்ஞாபித்தேன். இவரிடத்தில் அடியேன்

அதிகமாகக் கண்ட குணம் ரஸிகத்வம். அது ஸாமான்யமன்று. பரமரஸிகர், மஹாரஸிகர் என்று எவ்வளவெழுதினாலும் போதாது. இவரிடத்தில் ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் அதிகரித்தவர்கள் பலருளர். இவருடைய ஸ்வீக்ருத குமாரரான ராமாநுஜய்யங்கார் வாக்மியாக விளங்கி வருகிறார்.

## 365. வேதவாத்யார் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி

ஸ்ரீபெரும்பூதூரில் முப்பத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு வாழ்ந்த வித்வான்களில் சிறந்து விளங்கினவர் இந்த ஸ்வாமி. வேத வாத்யார் என்றே வ்யபதிஷ்டராயிருந்து வந்தார். வேதமும் வியாகரண சாஸ்த்ரமும் இந்த ஸ்வாமிக்கு ஸ்வாதீனமாயிருந்ததுபோல் கடல் சூழ்ந்த மண்ணுலகில் வேறு யார்க்கும் வசப்பட்டிருக்கவில்லை யென்று அக்காலத்திலுள்ள ஸகல வைதிகர்களும் ஏகமுகமாகச் சொல்லுவார்கள். இவருடைய பரம்பரையே மிகச் சிறந்த வைதிக பரம்பரை. இவருடைய திருத்தகப்பனாரிடத்தில் வேதமோதித் தேறினவர்கள் உபயவேதிகளிலும் அடியேனுக்குத் தெரிந்து ஐம்பதறுபது ச்ரோத்ரியர்களிருந்தார்கள். அடியேனுடைய வேதோபாத்யாயரான ஸ்ரீமதுபயவே. மாம்பள்ளம் ஸுதர்சநாசார்யரும் அந்த மஹாஸ்வாமியிடத்திலேயே வேதமதிகரித்தவராதலால் அவரைப்பற்றி நாடோறும் காலக்ஷேபம் செய்யாமலிருக்கமாட்டார். அப்போது அவருடைய திருக்குமாரரான (ப்ரக்ருத) க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் வல்லமையையும் பேசிக்கொண்டிருப்பர். இவரிடத்தில் வேதமோதினவர்களும் வியாகரண சாஸ்த்ரமதிகரித்தவர்களும் பலருண்டு. தற்காலம் ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத கலாசாலையில் உபாத்யாயராக விளங்கும் ஸ்ரீஉ. வே. காத்தூர் ஸ்ரீசேஷாத்ரியாசாரியரும் இவருடைய அந்தேவாஸியே. இந்த க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் காலேஜில் பலவாண்டுகள் வியாகரணப்ரவசனநிரதராக எழுந்தருளியிருந்தார். தமது திருமாளிகையில் வேதாத்யாபனம் தவறாதவர்.

## 366. திருமழிசை தாதப்பங்கார்ஸ்வாமி

இந்த ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத கலாசாலையில் பலவாண்டுகள் ஸாஹித்யவ்யாகரண ப்ரவசன நிஷ்ணாதராக எழுந்தருளியிருந்தவர். அடியேனுடைய இளமையில் இந்த ஸ்வாமியின் பரிசயம் மிகவுமிருந்தது. இவர் திருநாட்டுக்கெழுந்தருளி கிட்டத்தட்ட அறுபது ஸம்வத்ஸரங்களாயிருக்கும். இந்த ஸ்வாமி பண்டிதர்களுக்குக் கடிதமெழுதினால் ஆலோசனையில்லாமல் ச்லோகமாகவே யெழுதிக்கொண்டுபோவர். முற்காலத்தில் திருமழிசையில் ஸாமாந்ய சாஸ்த்ர ப்ரவீணர்களும் உபயவேதாந்த ப்ரவர்த்தகர்களுமல்லாதவர்கள் இருந்ததில்லையென்று ப்ரஸித்தி. முப்பது நாற்பது ஸம்வத்ஸரங்களுக்கு முந்தின காலம்வரையில் அந்த ப்ரஸித்தி அநபாயமாயிருந்துவந்ததை அறிவேன். உத்தரராமசரிதத்தில் "புரா யத்ர ஸ்ரோத: புலிநமதுநா தத்ர ஸரிதாம் விபர்யாஸம் யாதோ கனவிரலபாவ: க்ஷிதிருஹாம்" என்ற ச்லோகமே இப்போது நினைவுக்கு வருகின்றது. இது திருமழிசையின் ஸ்திதிக்கு மட்டுமன்று.

## 367. விசாகப்பட்டணம். பரவஸ்து பட்டநாதஸ்வாமி

விசாகப்பட்டணத்தில் பரவஸ்து குடும்பத்தார் இன்றைக்குமுளர். மஹாமஹோபாத்யாய. பரவஸ்து. ரங்காசார்ய ஸ்வாமியென்பவர் மிகப்ரஸித்தர். அவரை அடியேன் ஸேவித்ததில்லை. அவருடைய திருவுருவப்படம் ஸம்பாதித்து வெளியிட்டிருக்கிறேன். இவருடைய பரம்பரையை வித்வத் பரம்பரையென்று வழங்குவார்கள். இவர்கள் பகவத் ராமாநுஜ தர்சனஸ்தர்களாயிருந்தும் 'ஸ்ரீமதே ராமாநுஜாய நம:' என்று எழுதார்கள்; "நம: பரமர்ஷிப்ய:" என்றே எழுதுவர்களாம். மேலே ப்ரஸ்தாவித்த ரங்காசார்ய ஸ்வாமியின் பௌத்ரர்களில் ஒருவர் பட்டநாதஸ்வாமி யென்பவர் கும்பகோணம் காலேஜில் ப்ரொபஸராயிருந்தவர். மற்றொருவர் திருப்பதி காலேஜில் பலவாண்டுகள் வாழ்ந்து விச்ராந்தரானவர். அவருடைய பரிசயம் அடியேனுக்கு மிகக் குறைவு.

பட்டநாதஸ்வாமி யென்பவர் சிறந்த சாஸ்த்ரஜ்ஞர், மஹாமேதாவி. அடியேன் மஞ்ஜுபாஷிணி பத்ரிகை நடத்திக் கொண்டிருந்த காலத்தில் கும்பகோணத்தில் வாழ்ந்து வந்த அவர் பத்ரிகை மூலமாகவே மிகவும் பரிசிதராயிருந்தார். இவர் தென்கலை ஸம்ப்ரதாயஸ்தராயிருந்தும் உபய ஸம்ப்ரதாயக்கொள்கைகளிலும் வைமத்யம் காட்டிக் கொண்டிருந்தார். முமுக்ஷுப்படியில் "உய்யக்கொண்டார் விஷயமாக உடையவர் அருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது" என்றொரு ஸ்ரீஸூக்தியுண்டே; அதனை நினைவூட்டுமவராயிருந்தாரிவர். மஞ்ஜுபாஷிணி பத்ரிகையில் இவர்க்கும் எமக்கும் நிகழ்ந்த லேகப்ரதிலேகங்கள் அபரிமிதம். கடைசியில் மிக்க அநுதாபங்கொண்டு திருந்தமுற்றார். திருநாடுமலங்கரித்தார்.

## 368. சிறுபுலியூர் தொட்டயாசார்ஸ்வாமி

ஸ்ரீவில்லிபுத்தூரில் மஹாவைபவசாலியாகவும் ப்ரக்யாதராகவுமெழுந்தருளியிருந்த சிறுபுலியூர் ஸ்வாமியை ஸ்ரீவைஷ்ணவ வுலகமெல்லாமறியும். சிறந்த சிஷ்யஸம்பத்து வாய்ந்தவர். "ஞானமனுஷ்டானமிவை நன்றாகவே யுடையனான குரு" என்ற பாசுரத்திற்கு ப்ரதம லக்ஷ்யமாக எழுந்தருளியிருந்தவர். அந்த மஹாஸ்வாமிக்கும் திருக்குமாரர்கள் இருவர். மூத்த திருக்குமாரர் மஹா பண்டிதோத்தமராய்த் திருந்தகப்பனாரோடு கூடவே வாழ்ந்தவர். இளைய திருக்குமாரர் தொட்டயாசாரியரென்பவர் காஞ்சியில் விவாஹ ஸம்பந்தம் பெற்றவர். பெரும்பாலும் ஸ்ரீபெரும்பூதூரில் வஸித்துவந்தவர். பண்டிதோத்தமராக விளங்கி வந்தார். (செவிடு தொட்டயாசாரியர் என்று இவர்க்கு ப்ரஸித்தி.) இவர் பாணன் பவபூதி முதலான கவிகளைப்போன்று கவிதையில் நிகரற்றவராய் விளங்கினார். கத்யபத்யங்கள் அத்யாச்சர்யமாக எழுதுவர். அவரைப்போன்ற எழுத்தாளர் அவரே யென்னலாம்; அவர் "விசக்ஷணா" என்றொரு ஸம்ஸ்க்ருத பத்ரிகை நடத்த ஆரம்பித்துச் சில மாதங்களே நடத்தினார். அப்போது அவருடைய நட்பு அடியேனுக்கு அதிகமாக விளைந்தது. அவர் இன்னமும் ஜீவித்திருக்கவேண்டியவர். [இனிமேல் அத்யந்த சோசநீயம்.] அவருக்கு ச்வசுரக்ருஹம் காஞ்சி ஸந்நிதி வீதியிலாகையால் அடிக்கடி அங்குவரநேரும். ஸந்திக்கிறபோதெல்லாம் சொல்லுவர்—'நான் ஏதோ லௌகிகனாயிருந்துவருகிறேன்; என்னுடைய திருந்தமையனார் மஹாசிஷ்டர், மஹாபண்டிதர்; அவரை ஸந்திக்கவேணும்' என்று. அவருடைய பரிசயமும் பத்ரிகை மூலமாக அடியேனுக்கு ஏற்பட்டிருந்தது. அவர் எங்கும் எழுந்தருளுகிறவரல்லாமையால் நேரில் விடை கொண்டு ஸேவிக்கவேணுமென்று பாரித்துக்கொண்டிருந்தேன். இப்படியிருக்கையில் இந்த தொட்டயாசாரியர் ஒருநாள் காஞ்சீபுரம் வந்து "ஜ்வரத்துடன் இங்கு வந்திருக்கிறேன், நீ வந்து பார்க்கவேணும்" என்று ஸந்தேசமனுப்பினார். அன்று நாதமுனிகள் சாத்துமுறை. ஸாயங்காலம் அவரிடம் சென்று ஒரு நாழிகை வார்த்தையாடிவிட்டு ஸந்நிதிக்குச் சென்று சாத்துமுறை யநுபவித்துக்கொண்டிருக்கையில் 'தொட்டயாசார்யர் பரமபதித்துவிட்டார்' என்று ஒருவர் வந்து சொன்னார். இந்த பரிதாப கதையை இவ்வளவில் நிறுத்துகிறேன்.

## 369. ஸாரநாதாசாரியர்ஸ்வாமி

கீழே ஸ்ரீமதுபயவே; ஆடூர். ரங்கசாமி ஐயங்கார் ஸ்வாமியின் பிரபாவ மெழுதுகையில் "இந்த ஸ்வாமியின் ஜ்யேஷ்டதுஹிதாவின் குமாரர் ஸாரநாதாசார்யரென்று ப்ரஸித்தராய் இளமையிலேயே மிகச் சிறந்த வித்வானென்று புகழ்பெற்றார்; மாதாமஹர்க்குமேல் சிறந்துவிளங்குவரென்று பலரும் கொண்டாடவிருக்கையில் முப்பது பிராயத்திற்குள்ளேயே ஆசார்யன் திருவடி சேர்ந்து விட்டார்" என்று ஸங்க்ஷேபமாக எழுதியிருக்கிறேன். ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமியின் அந்தேவாஸிகளில் ஸ்ரீ ஸாரநாதாசாரியர் பரிகணநீயராய் விளங்கினவர். ந்யாய வேதாந்தங்களைக் கசடறக் கற்றவர். ச்ருதப்ரகாசிகையோடுகூட ஸ்ரீபாஷ்யத்தை திருவல்லிக்கேணி வேதவேதாந்தவர்த்திநீ ஸபையில் பரீக்ஷை கொடுத்து உத்தம ஸம்மானமும் பெற்றுவந்த சிலநாட்களில் ஆசாரியன் திருவடி சார்ந்துவிட்டார். ஸ்ரீபெரும்பூதூர் ஸந்நிதியில் ப்ரதிபக்ஷிகளின் அதர்க்கணச் செயல்கள்

அதிகப்பட்டிருந்த காலத்தில் நீதிமன்றங்களிற் சென்று சிரமப்பட்டு வெற்றிபெற்றவர்களில் இவர் தலைவராய் விளங்கினவரென்று அக்காலத்திய ப்ரஸித்தி யிருந்தது.

## 370. மோட்டூர் ராகவாசாரியர் ஸ்வாமி

ஸ்ரீமத் குண்டவம் ஸ்வாமி காலத்தில் ஆந்திர தேசங்களிலிருந்தும் பலர் ஸ்ரீபெரும்பூதூர்வந்து வாசித்து சாஸ்த்ர ப்ரவீணர்களாய் உபய வேதாந்த விசாரதர்களாய் விளங்கினதை அடியேன் இளமை தொடங்கி அநுபவித்தவன். அன்னவர்களில் மோட்டூர் ராகவாசாரியர் ஸ்வாமி யென்பவர் (கோதாவரி ப்ராந்தஸ்தரென்று ஞாபகம்) ஸ்ரீபெரும்பூதூரில் வந்திருந்து கலைகற்று மஹாமேதாவியாய் விளங்கினவர்; தம்முடைய ஸம்பிரதாயங்களை ஆந்திர பாஷையில் வெகுசதுரமாக உபந்யஸிக்க வல்லவர். பிறகு கோதாவரி ப்ராந்தமே சென்று சேர்ந்து பலர்க்கு உபய வேதாந்த ப்ரவசனம் செய்து கீர்த்தி சேஷராயினர்.

## 371. பின்னப்பாக்கம் திருவேங்கடாசாரியர் ஸ்வாமி

ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத வித்யா சாலையில் நியாய சாஸ்த்ர ப்ரவசன துரீணர்களாய் விளங்கின பண்டிதோத்தமர்களில் பரிகணிதராய்த் திகழ்ந்தவர் இந்த மஹாஸ்வாமி. இவருடன் பிறந்தவர்களான ஸ்ரீ உவே. பின்னப்பாக்கம் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி ராகவாசார்ய ஸ்வாமி என்னுமிருவரும் உபயவேத ஸாகர பாரதர்சிகளாய் விளங்கி நெடுங்காலம் ஸ்ரீபெரும்பூதூரில் வாசிக கைங்கர்ய துரந்தர்களாய் நன்குவாழ்ந்தவர்கள். திருவேங்கடாசார்யஸ்வாமி யென்னுமிவர் நியாய சாஸ்த்ரத்தில் கூலங்கஷஜ்ஞான புஷ்கலராய்ப் பலரை சாஸ்த்ரப்ரவீணர்களாய்ச் செய்தருளினர். முதிர்ந்த பிறகு அருளிச்செயல்களையும் அதிகரித்து ஸம்ப்ரதாய ப்ரவசன ப்ரவீணராயுமெழுந்தருளியிருந்தவர்.

## 372. ஸ்ரீமதுபயவே. புதுப்பேட். (வேங்கடாசார்யஸ்வாமி.) ஜீயர் ஸ்வாமி.

உத்தமாச்ரமியாய் ஸ்ரீகாஞ்சி அழகியமணவாள ராமாநுஜ ஜீயர் ஆஸ்தானத்தை யலங்கரித்திருந்த இந்த ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் ஸாஹித்ய வியாகரணங்கள் வாசித்துத் தேறி காஞ்சீபுரிக்கு வந்து சேர்ந்து (அடியேனுடைய திருத்தகப்பனார் திருமேனி பாங்கில்லாதிருந்த காலத்தில்) அன்று ஸன்னிதியில் நடந்து கொண்டிருந்த வேதாந்த வைபந்தீ பாடசாலையில் (அஸ்மத் ஸ்ரீபாத ஸ்தானத்தில்) உபாத்யாயராக அமர்ந்திருந்து அஸ்மதாதிகளுக்கு ஸாஹித்ய வ்யாகரண ப்ரவசனம் செய்து போந்தவர். பிறகு ஸ்ரீபெரும்பூதூர்க்கே சென்றுசேர்ந்து அவ்விடத்துப் பாடசாலையிலும் உபாத்யாயராகப் பத்தெட்டு ஸம்வத்ஸரங்கள் வாழ்ந்திருந்து மீண்டும் காஞ்சிக்கு வந்து சேர்ந்து ஆச்ரமஸ்வீகாரம் செய்தருளி மடாதிபதியாக விளங்கித் திருநாராயணபுரத்தில் திருநாடலங்கரித்தார்.

## 373. ஸ்ரீ ப்ரதிவாதிபயங்கரம் க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி

இந்த ஸ்வாமி காஞ்சீபுரியைச் சேர்ந்தவர். ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் நியாய வேதாந்தங்களாதிகரித்து அந்த கலாசாலையிலேயே சிலபல வருஷங்கள் சாஸ்த்ரோபாத்யாயராயிருந்தவர். சோளஸிம்ஹபுரத்தில் ஸம்ஸ்க்ருத காலேஜ் ஸ்தாபித்து நடத்தி வந்தவர். இவருடைய திருக்குமாரர் ஸ்ரீ. உ. வே. ப்ர. அனந்தாசாரியரென்பவர் நியாய வேதாந்த சிரோமணியாய் இப்போது விளங்கி வருகிறார்.

## 374. ஸ்ரீ சிங்கம்பூண்டி. தி. அ. வரதாசாரியர்

இவர் காஞ்சீபுரியைச் சேர்ந்தவர். ஸாஹித்யவியாகரண ப்ரவீணர். திருமலை அனந்தான்

பிள்ளை வம்சஸ்தர். திருப்பதி காலேஜில் பல வருஷங்கள் வியாகரணோபாத்யாயராயிருந்து விச்ராந்திபெற்றுக் காஞ்சியில் 20 வருஷங்களுக்குமுன் பரமபதித்தவர்.

## 375. ஸ்ரீ கிடாம்பி நரஸிம்ஹாசாரியர்

இந்த ஸ்வாமி ஸாஹித்யவியாகரண நிஷ்ணாதராய் ஸ்ரீபெரும்பூதூர்க் கலாசாலையில் பல வருஷங்கள் உபாத்யாய பதவியை அலங்கரித்துப் பல வித்யார்த்திகளை ப்ரவீணர்களாக்கினவர்.

## 376. ஸ்ரீ உ. வே. கோவை ஸ்ரீசைலசக்ரவர்த்யாசாரியஸ்வாமி

கோயம்புத்தூரில் பிரபல அட்வகேட்டாக வாழ்ந்து வந்த ஸ்ரீமது பய வே. ஸ்ரீசைல சக்ரவர்த்யாசார்ய ஸ்வாமியோடு எனக்கு மிக நெருங்கிய பழக்கமிருந்தது. அவர் அட்வகேட்டாகையால் ஆங்கிலத்தில் மிக நிபுணராயிருக்கலாம். நானறிந்த மட்டில் அவர் ஸம்ஸ்க்ருத பாஷையில் சிறந்த பண்டிதோத்தமர். அவர் நமது ஸம்ப்ரதாய விஷயமாக அருமையான பல நூல்கள் எழுதியவர். அவருடைய திருக்குமாரராய் டில்லியில் பலகாலம் வாழ்ந்தவரும் இப்போது சென்னையில் வாழ்பவருமான வி. எஸ். ஆர். சக்ரவர்த்தி ஸ்வாமியால் அவை அச்சிடப்பட்டுயிருக்கின்றன. அதனால் அவருடைய பாண்டித்யப்பெருமை புலனாகும்.

## 377. 378. ஸ்ரீ வானமாமலை அழகப்பயங்கார் ஸ்வாமியும் அழகராசார்யஸ்வாமியும்

இவ்விரண்டு ஸ்வாமிகளும் வானமாமலையில் மடத்தில் ஆஸ்தான வித்வான்களாக விளங்கினவர்கள். அழகப்பயங்கார் ஸ்வாமி மிக ப்ரசண்ட பண்டிதர். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி, சின்ன கலியன் ஸ்வாமிக்கு நெருங்கின தேஹாநுபந்தியென்றும், ஸ்வாமி ஆச்ரமஸ்வீகாரம் செய்தருளின பின்பு இவரிடத்தில் சாஸ்த்ரங்கள் பயின்று தேர்ச்சி பெற்றாரென்றும் கேள்வி.

## 379. ஸ்ரீ கோ. க. அண்ணன் ராமாநுஜாசாரியர் ஸ்வாமி

இவர் காஞ்சீபுரத்தைச் சேர்ந்தவர், ஜடப்ரோல்ஸமஸ்தான ராஜகுரு குடும்பத்தைச் சேர்ந்தவர், கோயில் கந்தாடை அண்ணன் திருவம்சத்தவர், "தாடி ராமாநுஜாசாரியர்" என்று வழங்கப்பட்டு வந்தார். இவருடைய திருத்தகப்பனார் சப்தகுணோத்தீபம், ரங்காசார்யர் ஸ்வாமியென்று மஹாபாஷ்யாந்த மஹாவித்வானாய் ப்ரக்யாதி பெற்றிருந்தார். திருப்புட்குழி ஸ்ரீக்ருஷ்ணதாதாசார்யஸ்வாமியென்று ப்ரக்யாதராயிருந்த திருப்புட்குழியப்பாஸ்வாமியென்பவர் இவரிடம் வியாகரணமதிகரித்தாரென்று ப்ரஸித்தம். இந்த ரங்காசார்யஸ்வாமியின் திருக்குமாரரான ராமாநுஜாசாரியரும் வ்யாகரண வித்வானாய் மஹாகவியாய் பகவத்விஷயாதிகாரியாய் விளங்கி வந்தார்.

## 380. கோயில் கந்தாடை அண்ணன் வாதிகேஸரிஸ்வாமி

மேலே ப்ரஸ்தாவித்த ஸ்ரீராமாநுஜாசார்ய ஸ்வாமியின் திருக்குமாரர்கள் மூவருள் கநிஷ்டரான இவர் இளமையிலேயே சிறந்த வித்வானென்று பெயர் பெற்றார். உபய வேதங்களையும் அதிகரித்து முக்கியமாக வ்யாகரணத்தில் நிஷ்ணாதராய் பகவத்விஷயாதிகாரியாயுமிருந்தார். ஒரு ஸமயம் ஸ்ரீபெரும்பூதூரெம்பெருமானாரை ஸேவிக்கச் சென்று அன்றே அவ்விடத்தில் அநாயாஸமாக ஆசாரியன் திருவடி சேர்ந்தார்.

## 381. வாதிகேஸரி ராமாநுஜாசாரியர்.

மேலே ப்ரஸ்தாவித்த வாதிகேஸரிஸ்வாமியின் மூத்த திருக்குமாரரானவிவர் மிக்க இளமையிலேயே அபரிமிதமான கல்விகளைக் கற்றார். உபயவேதங்களையும் தட்டுத் தடங்கலின்றி அவளீலை

யாகப் பரீக்ஷை கொடுக்கவல்லவராயிருந்தார். ஆசாரத்தில் வஸிஷ்டரையும் வென்றிருந்தார். முப்பத்தைந்து பிராயத்திற்குள் மறைந்துவிட்டார்.

## 382. ஸ்ரீதேரடி வேங்கடாசாரியர்ஸ்வாமி

ஸ்ரீபெரும்பூதூரில், அஷ்டகோத்ரம் தேரடி வேங்கடாசார்யரென்று முப்பதாண்டுகட்கு முன்பு விளங்கி வந்தார். நியாய வேதாந்தங்களையதிகரித்து ஸ்ரீபாஷ்யபகவத்விஷயாதிகாரியாக விளங்கினவர்.

## 383. அஷ்டகோத்ரம் (சிவகிரி) ஸ்ரீநிவாஸாசாரியர்

ஸ்ரீவில்லிபுத்தூர்ப் பிராந்தத்தில் பிறந்து ஸ்ரீபெரும்பூதூர் வந்து சேர்ந்து நியாயவியாகரண வேதாந்தங்களை அதிகரித்து ஸ்ரீவில்லிபுத்தூரில் வாழ்ந்து அங்குப் பலரை வித்வான்களாக்கினர். இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்தவர்.

## 384. ஸ்ரீபுத்தூர் ஸ்ரீநிவாஸய்யங்கார்ஸ்வாமி

இப்போது உலகப் பிரசித்தமாக நடைபெற்று வருகின்ற ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன பத்திரிகையைத் தொடங்கின மஹான் இவர். இப்போதைய ஆசிரியரான ஸ்ரீ உ., வே. எஸ் கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் எம். ஏ. பி. எல். அட்வகேட் ஸ்வாமியின் திருத்தகப்பனார். நமது பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளையெல்லாம் அச்சிடுவதற்கு ஸங்கல்பித்துப் பல ஸ்ரீகோசங்களையச்சிட்டு, மேன்மேலும் சாச்வதமாக அச்சிட்டு வர மூலதன நிதியை ஸ்தாபித்து வைத்திருப்பவர் இப்பெரியார்.

## 385. ஸ்ரீ காரப்பங்காடு வேங்கடாசார்யஸ்வாமி

கடந்த விரோதிகிருத்வூ ஆடி மாதத்தில் திருநாடலங்கரித்த இந்த மஹாஸ்வாமியை உலகமெல்லாமறியும். ஜகத்விக்யாதராயெழுந்தருளியிருந்த காரப்பங்காடு சிங்கப்பெருமாள்ஸ்வாமியின் தௌஹித்ரரும் ஸ்வீக்ருத புத்திரருமான இப்பெரியார் விளக்கில் கொளுத்தின தீவட்டிபோல விளங்கினவர். சிதம்பரம் கலாசாலையிலும் ஸ்ரீபெரும்பூதூர்க் கலாசாலையிலும் சிலபல வருஷங்கள் சாஸ்த்ர ப்ரவசன நிஷ்ணாதராயெழுந்தருளியிருந்து 25 வருஷங்களுக்கு மேலாக சென்னை மாநகரில் சாரிடிகளிலும் திருமாளிகையிலும் அஸ்கலிதப்ரவசனம் செய்து போந்தவர்.

## 386. ஸ்ரீ நல்லூர் கிருஷ்ணமாசாரியார்

ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்து ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் வியாகரணவேதாந்தங்களையதிகரித்து ஸ்ரீவில்லிபுத்தூரில் பலர்க்கு உபயவேதாந்தங்களையும் இதிஹாஸ புராணங்களையும் ப்ரவசனம் செய்தவர் இவர். மேன்மேலும் மிக அபிவிருத்திக்கு வரவேண்டியவர் இரண்டாண்டுகட்கு முன்பு அசிந்திதமாகத் திருநாடலங்கரித்தார்.

## 387. தெய்வசிகாமணிஸ்வாமி

ஸ்ரீவில்லிபுத்தூரிலேயே வாழ்ந்த இத்திருநாமம் பூண்ட ஸ்வாமி திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமி ஸந்நிதியில் பகவத்விஷய ரஹஸ்யாதிகளை நன்கு அதிகரித்து ப்ரவசனம் செய்து கொண்டிருந்த பரமஸாத்விகர். பல வருஷங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்தவர்.

## 388. குன்றபாக்கம் தி. அ. அண்ணங்கராசார்யஸ்வாமி

ஸ்ரீ காஞ்சியில் ஜகத்விக்யாத வித்வானாக எழுந்தருளியிருந்த குன்றபாக்கம் சிமாச்சார்ஸ்வாமி

யின் திருத்தம்பியரான இந்த அண்ணங்கராசாரியர் ஸ்வாமியும் ந்யாயவேதாந்த வித்வானாகக் கீழண்டை மாடவீதியில் எழுந்தருளியிருந்தார். இவரும் ந்யாய ஸம்ப்ரவசனம் செய்து கொண்டிருந்தவரே. கடைசியில் திருவல்லிக்கேணி சென்று சேர்ந்து ஸ்ரீபார்த்தஸாரதிஸ்வாமி ஸந்நிதியில் கைங்கர்யங்களை நிர்வாஹகராயிருந்து அவ்விடத்திலேயே ஐம்பதாண்டுகட்கு முன்பு திருநாட்டுக் கெழுந்தருளினார்.

## 389. பெங்களூர் கல்கி. நரசிம்ஹாசாரியர்ஸ்வாமி

தொண்டனூர் ப்ரதிவாதிபயங்கரவம்சஸ்தர் என்று ப்ரதிஷ்டராயிருந்த இப்பெரியவர் வேதாந்த க்ரந்தங்களில் ப்ரஸித்தராயிருந்த மஹாவித்வத்ஸார்வபௌமரான மண்டயம் அனந்தாழ்வார்ஸ்வாமியின் பாகிநேயரென்று ப்ரஸித்தரான வித்வான். அநேகக்ரந்தங்களெழுதின மஹாகவி. திருவாய்மொழி வ்யாக்யானத்தையும் அதிஸரளஸ்லோகபந்தமாக்கி அச்சிட்டு வெளியிட்டிருந்தவர். அதற்கு ஸஹஸ்ரகாதாரத்னாவளியென்று பெயர். அதற்குக் கன்னடபாஷையில் வ்யாக்யானமுமிட்டிருந்தாரென்று கேள்வி. இடையில் இவர்க்கு சித்தவிப்ரமம் விளைந்து தம்மைக் கல்கி யவதாரமாகச் சொல்லிக்கொண்டிருந்ததாலோ வேறு காரணத்தினாலோ இவர்க்குக் கல்கிஸ்வாமி யென்கிற ப்ரஸித்தி விளைந்தது.

## 390. ஸ்ரீமத் அக்காரக்கனி. ராமானுஜாசார்யஸ்வாமி

திருமலை அனந்தாழ்வான் திருவம்சஸ்தராய் திருநாராயணபுரத்தில் திருவவதரித்தவரான அக்காரக்கனி ராமானுஜாசார்யஸ்வாமியென்பவர் உபயவேதாந்த ப்ரவீணராக எழுந்தருளியிருந்து வடநாட்டில் மாளவதேசத்திலும் கூர்ஜர ப்ராந்தங்களிலும் பகவத்ராமாநுஜ தர்சனத்தை ப்ரசாரம் செய்ய எழுந்தருளிப் பல நூற்றுக்கணக்கானவர்களை ஸ்ரீவைஷ்ணவர்களாக்கத் திருத்திப்பணி கொண்டு விக்யாதராக எழுந்தருளியிருந்தவர். இந்த ஸ்வாமியின் திருக்குமாரரே நமது ஜ்யேஷ்ட ஜாமாதாவான அக்காரக்கனி ஸம்பத்குமாராசாரியர்.

## 391. திருநாராயணபுரம் ஐக்கு வேங்கடாசார்யஸ்வாமி

திருநாராயணபுரம் அநாதிகாலமாகவே வித்வான்களைப் படைக்கும் மஹாக்ஷேத்ரமென்று ப்ரஸித்தம். இதற்கு எம்பெருமானாருடைய திவ்யகடாக்ஷமே காரணமென்பர். அவ்விடத்தில் ஸ்ரீ. ஐக்கு வேங்கடாசார்யஸ்வாமியென்பவர் சிறந்த வித்வானாகவும் மஹாகவியாகவும் விளங்கி வந்தார். இந்த மஹாக்ஷேத்ரத்தில் இருபது வித்வான்களுக்குமேல் அடியேனறிவேன். ஒவ்வொருவரும் பரிகணிதரான வித்வன்மணியாக விளங்கினவர். இன்றைக்கும் இங்கு வித்வான்களுக்கு ஸம்ருத்தியே.

## 392. அத்தங்கி தெட்டு தாதாசாரியர்ஸ்வாமி

ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் ந்யாய வேதாந்தங்களையதிகரித்து உபயவேதாந்த ப்ரவீணராகி காஞ்சியில் ஸ்ரீயதோக்தகாரியெம்பெருமான் ஸந்நிதி வீதியில் வாழ்ந்து வந்த இப்பெரியார் திருநாடலங்கரித்து இருபத்தைந்து வருஷமாகிறது. ரஸிகவித்வான் என்று அடியேன் மதிக்க இருந்தவர்.

## 393. ஸ்ரீஸூக்தி ரத்னாகரஸ்வாமி

ஆழ்வார் திருநகரி. இளையவில்லி. சடகோபாசாரியர் ஸ்வாமியை அறியாதாரில்லை. உபய வேதாந்தங்களிலும் கனிந்த ஞானம் படைத்து மஹாவாக்மியாய் விளங்கினவர். ஸ்ரீஸூக்தி ரத்னாகர மென்கிற மிகப்பொருத்தமான விருதுபடைத்தவர். இருபது வருஷகாலம் திருவரங்கம் பெரிய

நகரியில் நித்யவாஸமாக எழுந்தருளியிருந்து உபயவேதாந்த ப்ரவசனம் செய்து கொண்டிருந்து தமது அறுபத்தோராவது திருநக்ஷத்திரத்தில் திருநாடலங்கரித்தவர்.

## 394—398. திருமழிசையிலெழுந்தருளியிருந்த ஸ்ரீமது பயவே.

புத்தூர் வரதாசார்யஸ்வாமி,
வேங்கடாசார்யஸ்வாமி, திருவாழி ஸ்வாமி,
அய்யன் ராமாநுஜாசார்யஸ்வாமி,
ராய்ஜீ ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி.

மேலே குறிப்பிட்ட ஐந்து திருநாமங்கள் திருமழிசையில் பரிகணிதர்களான வித்வான்களா யெழுந்தருளியிருந்தவர்கள். இவர்களுள் ஸ்ரீவரதாசார்யஸ்வாமி ப்ரசண்டபண்டிதோத்தமராக விளங்கி வந்நார். திருவல்லிக்கேணி வேதவேதாந்த வர்த்தினீஸபையில் ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமியோடுகூட சாஸ்த்ரபரீக்ஷகராக எழுந்தருளியிருந்தவர். ஸ்ரீபாஷ்யபகவத்விஷயங்களை நித்யப்ரவசனம் செய்து கொண்டிருந்தவர். புத்தூர் வேங்கடாசார்யஸ்வாமி நியாய வேதாந்தங்களில் மிகவும் பரிச்ராந்தராய் அநுஷ்டான சீலராயிருந்து வந்தார். திருவாழிஸ்வாமி ஸ்ரீபாஷ்ய ப்ரவசனத்தில் நிரதராக எழுந்தருளியிருந்தவர். அய்யன் ராமாநுஜாசார்யஸ்வாமி உபயவேதாந்த ப்ரவசன நிஷ்ணாதராயிருந்ததோடன்றி இதிஹாஸ புராணங்களிலும் ப்ரவக்தாவாக இருந்துவந்தார். ராய்ஜீ, ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி பத்தெட்டு வருஷகாலம் சென்னை சாரிடிகளில் காலக்ஷேபப்ரவர்த்தகராக எழுந்தருளியிருந்து பிறகு நம்பெருமாள் ஸந்நிதியில் ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீரங்க நாராயணஜீயர் ஆஸ்தானத்தை அலங்கரித்திருந்து திருமேனியின் அபாடவத்தினால் திருமழிசைக்கேயெழுந்தருளித் திருநாடலங்கரித்தவர்.

## 399. திருமலை பெரிய ஜீயர்ஸ்வாமி

பூர்வாச்ரமத்தில் ஸ்ரீமதுபயவே. ஸாது ராமாநுஜாசாரியர் ஸ்வாமியென்று ப்ரஸித்தராக எழுந்தருளியிருந்தவர் உபயவேதாந்தத்திலும் சிறந்த நிபுணராக எழுந்தருளியிருந்தவர் பல ஸம்வத்ஸரங்கள் திருவேங்கடமுடையானுக்கு வழுவிலாவடிமை செய்தவர். இரண்டு வருடங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்தவர்.

## 400. தி. வி. சிங்காரசாரியர்

ஸ்ரீ காஞ்சியில் திருமலை விஞ்சிமூர் குலதிலகராய் உபயவேதகண்டீரவரென்று விருதுபடைத்தவர். தேவப்பெருமானுக்கு ஏறக்குறைய 60 ஆண்டு தொண்டுபூண்டமுதமுண்டவர். சென்ற வருடத்தில் பரமபதித்தவர்.

சிறு குறிப்பு :— அடியேனுடைய வாழ்நாளில் வாழ்ந்த பெரியார்கள் மற்றும் பலருளர், தற்காலம் ஒரு நூறு கணக்கில் முடித்தபடி. அடியேன் மஞ்ஜுபாஷிணீ பத்ரிகை நடத்திக்கொண்டிருந்த காலத்தில் வடநாட்டிலும் மேலநாட்டிலும் பல நூற்றுக்கணக்கான பிரபல பண்டிதர்கள் பரிசிதர்களாயினர். அன்னவர்களின் பரிசயமும் நேசமும் மேன்மேலும் ஓங்கி வளர்ந்துவருகின்றது. அவர்களைப் பற்றியுங்கூட எழுத மிக ஆசையுண்டு. ஆனால் அதைத் தமிழில் வெளியிட்டுப் பயனில்லை. எனது தெலுங்கு பத்ரிகையிலும், வைதிக மநோஹராவிலும் வெளியிடுவேன். அவரவர்களிடத்தில் நன்றி பாராட்டுதற்கு இதுவொரு வழியென நினைத்துச் செய்வதாமிது.

# எம்பெருமானார் புகழ் மாலைகள்

**401.** **அனந்தாழ்வான், எம்பார், பட்டர் வெளியிட்ட பெருமைகள்**

ஆழ்வார்களருளிச்செய்த ஸகல திவ்யப் பிரபந்தங்களுக்கும் தனியன்கள் ஸ்ரீமந்நாத முனிகள் காலந்தொடங்கி பட்டர் காலம் வரையில் அவதரித்தவை நெடுநாளாக எங்கும் ஏக ரூபமாக அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. சில பிரபந்தங்களுக்கு ஒன்றிரண்டு தனியன்களும் சில பிரபந்தங்களுக்கு ஐந்தாறு தனியன்களும் அமைந்திருக்கின்றன. நம்மாழ்வாரருளிய திருவாய்மொழியாயிரத்திற்கு ஸம்ஸ்க்ருதத்தனியன் ஒன்றும், தமிழ்த்தனியன்கள் ஐந்துமாக ஆறு தனியன்கள் உலகமெங்கும் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. *மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங் கூறவவதரித்த திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழியாயிரத்திற்கு ஸம்ஸ்க்ருதத் தனியன் ஒன்றும் தமிழ்த் தனியன்கள் மூன்றுமாக நான்கு தனியன்கள் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. பெரும்பாலும் தனியன்களில் அந்தந்த திவ்யப்பிரபந்தங்களின் பெருமை, அவற்றையருளிச் செய்தவர்களின் பெருமை, அவர்களவதரித்த தலத்தின் பெருமை முதலியன சொல்லப்படுகின்றன. திருவாய்மொழித் தனியன்களில் ஒன்றும், பெரிய திருமொழித் தனியன்களில் ஒன்றும் வெகு விலக்ஷணமாக அவதரித்திருக்கின்றன. எங்ஙனேயெனில், திருவாய்மொழித் தனியன்களில்,

**402.**

> **"ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமாநுச முனிதன்**
> **வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்—ஆய்ந்தபெருஞ்**
> **சீரார் சடகோபன் செந்தமிழ்வேதந்தரிக்கும்**
> **பேராத வுள்ளம் பெற."** [அனந்தாழ்வான் பணித்தது.]

என்கிற தனியனானது எம்பெருமானார் திருவடிகளிலே பண்ணுகிறவொரு பிரார்த்தனையாக அமைந்திருக்கின்றது. இந்த வெண்பாவின் பொருளாவது, மிகச்சிறந்த கல்யாணகுணசாலியான நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழி யாயிரத்தை நன்கு தரித்துக்கொள்ளவல்ல நெஞ்சுதன்னைப் பெறுவதற்காக, பெரும்புகழ்படைத்த எம்பெருமானாருடைய திருவடித்தாமரைகளை வணங்குகின்றேனென்பதாம். ஸ்வாமிந்! எம்பெருமானாரே! திருவாய்மொழி யாயிரத்தையும் மறவாமல் தரிக்கத்தக்க ஸாமர்த்தியத்தை வரப்ரஸாதமாகத் தந்தருளவேணுமென்று அவர்தம்மையே நோக்கிப் பிரார்த்திக்கிறது. பெரிய திருமொழித் தனியன்களுள்,

**403.**

> **"எங்கள் கதியே யிராமாநுச முனியே !**
> **சங்கை கெடுத்தாண்ட தவராசா ! — பொங்குபுகழ்**
> **மங்கையர்கோனீந்த மறையாயிரமனைத்தும்**
> **தங்குமனம் நீயெனக்குத் தா."** [எம்பார் பணித்தது]

என்கிற இத்தனியனும் அதேரீதியாக அமைந்திருக்கின்றது. இது எம்பெருமானாரை முன்னிலைப் படுத்தியே கூறியுள்ளது. திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரியதிருமொழி யாயிரத்தையும் தரிக்கவல்ல மனத்தைத் தந்தருள வேணுமென்று எம்பெருமானாரை நோக்கிப் பிரார்த்திப்பது.

**404.** ஆக இவ்விரண்டு தனியன்களையும் விசேஷித்து மனதில் மனனம் செய்யுங்கால் தனிச்சிறப்பு வாய்ந்தவொரு பரமானந்தம் விளைவதோடு எம்பெருமானாருடைய ஒப்பற்றவொரு பெருமை ஸ்பஷ்டமாயறியலாகிறது. பிரபந்தங்களைத் தரிக்கும்படியான நெஞ்சைத் தந்தருள வேணுமென்கிற பிரார்த்தனையை அந்தந்த ஆழ்வார்களை நோக்கியே செய்திருக்கலாம்; அவர்களுக்கு அந்தரங்கர்களான மதுரகவிகள் ஸ்ரீமந்நாத முனிகள் போல்வாரை நோக்கியாவது செய்திருக்கலாம்; பரமோதாரனான எம்பெருமானை நோக்கிச் செய்திருக்கலாம். ஸகலவித ஸம்பத்துக்களையும்

அளிக்கவல்ல பெரியபிராட்டியாரை நோக்கிச் செய்திருக்கலாம். [இராமானுச நூற்றந்தாதியின் ஈற்றுப் பாசுரத்தோடு மிகப்பொருந்துமிது.]

**405.** இப்படிப்பட்ட வழிகளை விட்டு எம்பெருமானாரை நோக்கி இந்தப் பிரார்த்தனை செய்திருப்பது எதற்றென்று விமர்சிக்க வேண்டியது ஆவச்யகமன்றோ? புதிதாக நாம் என்ன விமர்சிக்கப் போகிறோம்? அக்காலத்தில் ஆழ்வாரருளிச் செயல்களெல்லாம் எம்பெருமானாரிட்ட வழக்காயிருந்தன வென்று இதனால் நிஸ்ஸந்தேஹமாக அறியக்கிடக்கின்றது. வெகு ச்ரமப்பட்டு அதிகரித்துப் பலகால் உருச்சொல்லித் தரிக்க வேண்டிய இந்த மஹத்தான ப்ரஹ்மவித்யையை ஸ்வாமி யெம்பெருமானாரொருவரே *கலியுங்கெடுங் கண்டுகொண்மி னென்று ஆசாஸித்த ஆழ்வாருடைய பரமக்ருபையினாலும், *ஆமுதல்வனிவ னென்று அநுக்ரஹித்த ஆளவந்தாருடைய அற்புதமான அநுக்ரஹாதிசயத்தினாலும் அநாயாஸமாக க்ரஹித்து ஒரிடத்திலும் ஒருவிதமான ஸந்தேஹமும் விஸ்மரணமுமின்றிக்கே தரித்தருளியிருந்தாரென்பது ஸுஸ்பஷ்டமாகின்றது. இல்லையேல் இந்தத் தனியன்கள் இவ்வண்ணமாக அவதரித்திருக்க அவகாசமில்லையன்றோ.

**406.**

''வான் திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்
ஆன்ற தமிழ்மறைகளாயிரமும்—ஈன்ற
முதல்தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த
இதத்தா யிராமானுசன்.

[பட்டர் பணித்தது.

முன்னம் விவரித்த *ஏய்ந்த பெருங்கீர்த்தி* தனியனுக்கடுத்ததான ''வான் திகழுஞ்சோலை'' என்று மேலேகாட்டின தனியனில் ''தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன்' மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்'' என்று சொல்லப் பட்டிருக்கின்றது. திருவாய்மொழியைப் பெற்ற தாயார் நம்மாழ்வாரென்றும், வளர்த்த தாயார் எம்பெருமானாரென்றும் அக்காலத்திலிருந்த ஆப்ததமர்களான ஆசிரியர்கள் அருளிச் செய்தார்களென்றால் திவ்யப்பிரபந்தங்களிலே எம்பெருமானார் எவ்வளவு ஈடுபாடு கொண்டவராக இருக்கவேண்டும்! திவ்யப்ரபந்தங்களைக்கற்க ருசியில்லாமலிருந்தவர்களை வலிய அழைத்துக் கற்க நியமித்தருளினார். வியாக்கியானங்கள் அவதரிக்க நியமனம் தந்தருளினார். ஆங்காங்கு அருமை பெருமை வாய்ந்த நிர்வாஹங்களை வெளியிட்டருளினார். திவ்ய தேசங்களில் அருளிச் செயல் பிரசாரங்களை ப்ரபலப் படுத்தியருளினர். இவ்வண்ணமாகச் செய்தருளின செயல்களைக்கொண்டே ''மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்'' என்று பணித்தார்கள். அக்காலத்தில் எம்பெருமானார் அவ்வளவு ச்ரத்தை கொண்டருளியிராவிடில் திவ்யப்ரபந்தங்கள் ஸ்ரீமந்நாத முனிகளின் காலத்திற்கு முன்னேயிருந்த விதமாகவே லோபமடைந்திருக்கும். அப்படியாகாத படிக்கு ஸ்வாமி யெம்பெருமானார் செய்தருளின சேமக்காப்பு வாசாமகோசரம். ''ஸர்வதேசதசாகாலேஷு... ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்...திகந்தவ்யாபிநீ பூயாத் ஸா ஹி லோக ஹிதைஷிணீ'' என்கிற ச்லோகத்தை நாடு நகரமெங்கும் திவ்யப்ரபந்த ஸேவா காலங்களிலேயே அநுஸந்தித்து வருவதனால் அந்த ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையானது திவ்யப்ரபந்த விஷயமே யல்லது வேறு விஷயமன்றென்பது நன்கு விளங்கும்.

**407.** எம்பெருமானாரைப் பற்றின வொரு ச்லோகரத்நம் ஈடுமுப்பத்தாறாயிரப்படியின் அவதாரிகையில் காணப்படுகிறது; அதாவது—

புரா ஸூத்ரைர் வ்யாஸ: ச்ருதிசதசிரோர்த்தம் க்ரதிதவாந்
விவவ்ரே தத் ச்ராவ்யம் வகுள தரதாமேத்ய ஸ புந:,
உபாவேதௌ க்ரந்தௌ கடயிது மலம் யுக்திபிரஸௌ
புந ஜஜ்ஞே ராமாவரஜ இதி ஸ ப்ரஹ்மமுகுர: ."

என்பதாம்.

இந்த ச்லோகத்தின் கருத்தாவது — உபநிஷத்துக்களின் பொருள்களை முதன்முதலாக வியாஸ பகவான் சாரீரக மீமாம்ஸையென்னும் ப்ரஹ்ம ஸூத்ரத்தினால் தொகுத்தார்; அந்த வியாஸர் தாமே மீண்டும் வகுளாபரணப் பெருமாளாக [நம்மாழ்வாராக] வடிவெடுத்து செவிக்கினிய செஞ்சொற்களாலே அந்த ப்ரஹ்ம ஸூத்ரத்தை விவரித்தார். இவ்வுபய திவ்ய க்ரந்தங்களையும் பொருத்தமாக ஸமந்வயப் படுத்தி நிர்வஹிக்க அவரே மீண்டும் ஸ்வாமி யெம்பெருமானாராகத் திருவவதரித்தார்—என்பதாம். இந்த ச்லோகம் எம்பார் அருளிச் செய்ததாகவும் முதலியாண்டான ருளிச் செய்ததாகவும் சொல்லப்பட்டு வருகிறது. ச்லோகமோ கம்பீரமானது; விஷயமோ யதார்த்த மானது. இது கொண்டே ஆசார்ய ஹ்ருதயத்தில் ''பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ரவாக்யங் களொருங்கவிடுவர்'' என்றருளிச் செய்யப்பட்டது.

**408.** ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஜனிக்கப்பெற்றவர்கள் ஸ்ரீமதுபயவே; என்கிற விருதை வஹிப்பது மாத்திரம் போராது; உபய வேதாந்தங்களையும் ஸமருபமாகப் பரிசீலனை செய்து உபயவேதாந்ததிவ்யார்த்தங்களையும் தாமநுபவித்துப்பிறரையும்அநுபவிக்கச் செய்யவேணும். எம்பாரருளிய ச்லோகரத்னமொன்று;

**409.** **வேதோத்தம்ஸ குஹாவிஹாரபடுஸா ஸ்ரீசைலச்ருங்கோல்லஸந்**
**மாயா கேஸரி மாநிதேந கஹநக்யாயாடவீசாரிணு,**
**கம்பீரேண பராத்மபேதநமஹாநாதேந நாதேந மே**
**குப்தோஹம் யதிஸார்வபௌமஹரிணு வர்த்தே ப்ருசம் நிர்ப்பய.**

இந்த சுலோகம் வெகு அற்புதமாக அமைந்திருக்கின்றது. இதனைச் சிறிது விவரிக்கிறோம். இராமானுச நூற்றந்தாதியில் ''கலிமிக்க செந்நெல் கழனிக்குறையல் கலைப்பெருமான், ஒலிமிக்க பாடலையுண்டு தன்னுள்ளந்தடித்து, அதனால் வலிமிக்க சீயமிராமானுசன்'' என்று எம்பெருமானார் சீறிய சிங்கமாக அருளிச் செய்யப்பட்டுள்ளார்; அதனையடியொற்றி இந்த சுலோகத்திலும் ஸ்வாமி ஸிம்ஹமாக ரூபிக்கப்படுகிறார். ஸிம்ஹத்தோடே ஸ்வாமிக்கு ஸாம்யம் ஐந்து விசேஷணங்களினால் அற்புதமாக நிர்வஹிக்கப்படுகிறது. விவரணம் கேளீர்;

**410.** [**வேதோத்தம்ஸ குஹா விஹார படுஸா**]

''மலைமுழைஞ்சில் மன்னிக்கிடந் துறங்கும் சீரிய சிங்கம்'' என்ற திருப்பாவையின்படியே சிங்கம் பர்வத குஹைகளில் விஹரிக்கும். ஸ்ரீராமாநுஜஸிம்ஹமோ வென்னில்; வேதங்களாகிற பர்வதங் களின் உபநிஷத் பாகமாகிற குஹைகளில் விஹரிக்கும். தைத்திரீய யஜுர் ப்ராஹ்மண—காடகத்தில் ''பரத்வாஜோ ஹ த்ரிபிராயுர்ப்பிர் ப்ரஹ்மசர்ய முவாஸ'' என்று தொடங்கியுள்ள உபாக்யானத்தில் தேவேந்திரன் பரத்வாஜ முனிவர்க்கு வேதங்களை மலைகளாகக் காட்டினனென்று ஓதியிருக்கை யாலே வேதம் மலையாகக் குறையில்லை. ''தர்மஸ்ய தத்த்வம் நிஹிதம் குஹாயாம்'' என்ற மஹாபாரத ச்லோகத்தின்படி தருமநுட்பம் பொதிந்திருக்குமிடம் குஹையாகக் கருதப்படுகை யாலே உபநிஷத் பாகங்களை குஹையாகக் கூறினது பொருத்தம். அதிலே விஹாரம் செய்கிறார் ஸ்வாமியென்றது. ''க்ரீடார்த்தமபி யத் ப்ருயுஸ் ஸ தர்ம: பரமோ மத:'' என்றும் ''சொல்லும விடு சுருதியாம்'' என்றும் சொல்லுகிறபடியே விளையாட்டாகச் சொல்லும் வார்த்தையும் சிறப் புற்றிருக்குமென்றவாறு.

**411.** [**ஸ்ரீசைல ச்ருங்கோல்லஸந் மாயா கேஸரி மாநிதேந.**]

ஸிம்ஹத்தைக் கொண்டாடவல்லது ஸிம்ஹமேயாகும். அப்படியே இந்த ராமாநுஜஸிம் ஹத்தைக் கொண்டாடவல்ல ஸிம்ஹம் திருவேங்கடமுடையானாகிற ஸிம்ஹமேயாம். திருமங்கை

யாழ்வார் "தூணுபதனூடு அரியாய் வந்து தோன்றிப் பேணுவவுணனுடலம் பிளந்திட்டாய், சேனர்
திருவேங்கட மாமலைமேய, கோனாகனையாய்'' என்கிற பாசுரத்தினால் திருவேங்கடமுடையானை
ஸிம்ஹமாகவநுபவித்திருப்பது காண்க. அந்த ஸிம்ஹம் இந்த ஸிம்ஹத்தை பஹுமானித்த விஷயம்
ஸ்ரீ வேங்கடாசல இதிஹாஸ மாலையில பரக்கக் காணத்தக்கது.

## 412. [கஹந ந்யாயாடவீ சாரிணு]

ஸிம்ஹம் பெருங்காட்டில் ஸஞ்சரிக்குமேயொழிய நாட்டில் காணக்கிடைக்காது. இந்த யதி
ராஜ ஸிம்ஹமோ வென்னில்; சாஸ்த்ரீய ந்யாயங்களாகிற அடவிகளிலே ஸஞ்சரிக்குமது.

## 413. [கம்பீரணோ]

சிங்கத்தின் தோற்றம் அதிகம்பீரமென்னுமிடம் சொல்லவேண்டா. ஸ்வாமியினுடைய
காம்பீர்யம் ஸ்ரீஸூக்திகளிலும் திருவுருவத்திலுமாகும்.

## 414. [பராத்ம பேதநமஹா நாதேந]

இந்த விசேஷணத்தில் சிலேடை அமைந்துள்ளது. ஸிம்ஹபக்ஷத்தில் "பரேஷாம் ஆத்மா
தம்பிநத்தீதி பராத்ம பேதந:; ததாவித: மஹாநாதோ யஸ்ய" என்கிற வ்யுத்பத்தி கொள்ளத்தக்கது.
ஸிம்ஹத்தின் பெருமுழக்கம் இதர ஜந்துக்களின் உயிரை மாய்க்கவல்ல தென்கை. இனி யதிராஜ
ஸிம்ஹபக்ஷத்திலோ வென்னில், "பரச்ச ஆத்மாநச் ச பராத்மாந:; தாந் பிநத்தீதி பராத்ம பேதந:;
ததாவிதோ மஹாநாதோ யஸ்ய" என்று வ்யுத்பத்தி கொள்ளக்கடவது. பரம புருஷனுக்கும்
ஜீவாத்மாவுக்கும் ஐக்யம் சொல்லுகிற விமத வாதிகளைக் கண்டித்து ஜீவபர பேதத்தை ஸாதிக்க
வல்ல திருமிடற்றோசையை யுடையவரன்றோ பகவத் ராமாநுஜர். நூற்றந்தாதியில் "உயிர்கள்
மெய்விட்டாதிப் பரனோடு ஒன்றாமென்று சொல்லுமவ் வல்ல லெல்லாம் வாதில் வென்றான் எம்பி
ராமாநுசன் மெய்ம்மதிக்கடலே" என்றருளியது இங்கு நோக்கத்தக்கது. ஆக இத்தகைய பொருத்
தங்களினால் ஸிம்ஹ மென்று போற்றத்தக்க எம்பெருமானாருடைய அபிமானத்திலே ஒதுங்கிக்
கிடக்கிற நாம் நிர்ப்பயமான வாழ்ச்சியையுடையோம் என்றதாயிற்று. ... ... ...

---

இனி பகவத் ராமாநுஜ திவ்யஸூக்திகளால் நாம் பெற்ற மஹார்த்த
விசேஷங்களில் சில அநுபவிக்கப்படுகின்றன.

### கீதாபாஷ்யத்தில் "திருப்பாவை" யையடியொற்றின அர்த்தம்

**415** "யத் யதாசரதி ச்ரேஷ்டஸ் தத் ததேவேதரோ ஜந:; ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்
ததநுவர்த்ததே." (3-21.) என்னும் ச்லோகம் சிஷ்டாசாரத்தின் சிறப்பைத் தெரிவிப்பது
ஸம்ஸ்க்ருதஜ்ஞர்களுக்கு அநாயாஸமாகப் பொருள்படக்கூடிய ச்லோகமிது. இதன் உத்தரார்த்
தத்திற்கு பாஷ்யமிட்ட சங்கராசார்ய ஸ்வாமிகள் "ஸ: ச்ரேஷ்ட: யத் ப்ரமாணம் குருதே லௌகிகம்
வைதிகம் வா: லோக: தத் அநுவர்த்ததே—ததேவ ப்ரமாணீகரோதீதி அர்த்த:" என்று உரைத்தார்.
ச்ரேஷ்டராயிருப்பார் யாதொன்றை ப்ரமாணமாகக் கொள்ளுகிறார்களோ அது தன்னையே லோக
மும் ப்ரமாணமாகக் கொள்ளுகிறது என்பதாகப் பொருள் காட்டப்பட்டதாயிற்று. மத்வாசார்யரான
ஆனந்த தீர்த்த ஸ்வாமிகளும் இவ்வண்ணமாகவே பொருளுரைத்தார். "ஸ: யத் வாக்யம் லோகம்
ப்ரமாணீ குருதே—யதுக்த ப்ரகாரேண திஷ்டதீத்யர்த்த:" என்பது அவருடைய பாஷ்ய பங்க்தி.
ஆக இவற்றால் "யத்ப்ரமாணம்" என்றவிடத்தில் பதச்சேதம் இவர்களுக்கு விவக்ஷிதம் என்று

தேறிற்று. யத் என்பது தனிப்பதமென்று முடிந்தது. நம் பாஷ்யகாரர் இங்கு இரண்டு பதங்களாகத் திருவுள்ளம் பற்றாமல் (யத்ப்ரமாணம்) என்று பஹுவ்ரீஹி ஸமாஸங்கொண்ட ஒரே பதமாகத் திருவுள்ளம் பற்றி பாஷ்யமிட்டருளியுள்ளார். பூர்வார்த்தத்தில் "ச்ரேஷ்ட: யத்யத் ஆசரதி", என்றதற்கு ச்ரேஷ்டராயிருப்பவர் எந்தெந்த கருமத்தை யநுஷ்டிக்கிறாரோ என்பதாகப் பொருளாதலால் அந்த கருமத்தைப் பற்றியே உத்தரார்த்தமும் சொல்லுகிறதென்று ஸ்வாமியின் திருவுள்ளம்' சிஷ்டர்கள் தாங்களனுஷ்டிக்கிற கருமத்திற்கு எவ்வளவு அவதி வைத்துக்கொள்ளுகிறார்களோ அவ்வளவு அவதியையே பிறரும் வைத்துக்கொள்ளுகிறார்களென்றபடி. இதை தாத்பர்யசந்த்ரிகையில் வேதாந்த தேசிகன் விவரித்துள்ளார். 'பெரியோர்கள் அனுஷ்டிக்கிற கருமத்தையே பிறரும் அனுஷ்டிக்கிறார்கள்' என்று இவ்வளவு மாத்திரமே சொன்னால் போதாது. அவர்கள் அக்கருமத்தை எந்த விதமாக அநுஷ்டிக்கிறார்களோ அந்த விதமாகவே பிறரும் அநுஷ்டிக்கிறார்கள் என்றும் சொல்லவேண்டியது இங்கு ஆவச்யகமாதலால் அதற்குச் சேர ஸ்வாமியின் பாஷ்யம் மிகப் பொருத்தமாக அவதரித்துள்ளது. பெரியார் எதை ப்ரமாணமாகக் கொள்ளுகிறாரோ அதையே பிறரும் ப்ரமாணமாகக் கொள்ளுகிறாரென்பது ப்ரக்ருதத்தில் அநபேக்ஷித மாதலால் இதர பாஷ்யகாரர்களை நம் ஸ்வாமி பின்செல்லவில்லை

**416.** இதர பாஷ்யகாரர்களுக்குத் தோன்றாத அர்த்தம் இங்கு நம் ஸ்வாமிக்குத் தோன்றினது எதனாலென்னில்; ஸ்வாமி திருப்பாவை ஜீயரென்று ப்ரஸித்தி பெற்றிருந்ததனாலேயே என்க. திருப்பாவையில் **மாலே மணிவண்ணா என்கிற பாசுரத்தில் "மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்" என்றுள்ளது; இங்கு 'மேலையார் செய்வனகள் கேட்டியேல்' என்னுமளவே போதுமாயிருக்க இடையில் **'வேண்டுவன'** என்று ப்ரயோகித்தது குறிக்கொள்ளத் தக்கது. அதை நோக்கியே யத்ப்ரமாண மென்றதை ஸமஸ்தமாகக் கொண்டு பாஷ்யமிட்டருளினார் திருப்பாவை ஜீயர். ... ... ... ...

**417.** கீதையில் *பரித்ராணாய ஸாதூநாம்* (4–8) என்றவிடத்திற்கு பாஷ்யமருளிச்செய்யா நின்ற ஸ்வாமி, ஸாதுக்கள் யாவர்? என்பதை விவரிக்குமிடத்து ஆழ்வார்களே ஸாதுக்களென்று ஸுஸ்பஷ்ட சப்தங்களால் விளக்கியருளினார்; *காணவாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து, ஒருபகலாயிரமூழியாலோ வென்று தளர்ந்து, *நினைந்துநைந்துள் கரைந்துருகி நிற்குமாழ்வார்களே ஸாதுக்களென்கிறார். அங்கு அருளிச் செய்திருக்கிற பரமபோக்யபங்க்திகள் சங்கர பாஷ்யாதிகளில் அணுவளவும் காணக்கிடையா; இவற்றை திவ்யஸூக்திரஸிகர்கள் நிச்சலும் சிந்தனை செய்யவேணும். அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் வருமாறு—"ஸாதவ: உக்த லக்ஷண தர்மசீலா: வைஷ்ணவாக்ரேஸரா: மத்ஸமாச்ரயணே ப்ரவ்ருத்தா: மந்நாம கர்மஸ்வரூபாணாம் வாங்மநஸாகோசரதயா மத்தர்சநேந விநா ஸ்வாத்மதாரண போஷணாதிகம் அலபமாநா: க்ஷணமாத்ர காலம் கல்பஸஹஸ்ரம் மந்வாநா: ப்ரசிதில ஸர்வகாத்ர பவேயுரிதி மத்ஸ்வரூப சேஷ்டிதாவலோகந ஆலாபாதிதாநேந தேஷாம் பரித்ராணாய" என்று. இந்த கீதாபாஷ்ய பங்க்திகள் ஆழ்வார்களின் தன்மைகளை அவர்களின் திவ்ய ஸூக்திகளைக் கொண்டே யருளிச் செய்தவை. [பதங்களின் மேலே சிறிது விவரிக்கிறோம்.]

**418.** 'வைஷ்ணவாக்ரேஸரா: என்பது இங்கு விசேஷ்யவாசகபதம். ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திலே முன்னிற்பவர்கள் ஆழ்வார்களே யென்பது நிர்விவாதம். மற்றுமுள்ள விசேஷணங்களெல்லாம் அவர்களுக்கே பொருந்துமவையாயும் அவர்களையே சுட்டிக்காட்டு மவையாவும் அமைந்திருக்கின்றன. எங்ஙனே யென்னில்; [உக்தலக்ஷண தர்மசீலா:] *யதாயதாஹி தர்மஸ்ய* என்கிற கீழ்ச்லோகத்தில் "தர்மஸ்ய—வேதோதிதஸ்ய சாதுர்வர்ண்ய சாதுராச்ரம்ய வ்யவஸ்தயா அவஸ்திதஸ்ய" என்று தாமருளிச் செய்திருக்கையாலே அதுவே 'உக்தலக்ஷணதர்ம' என்பதனால் பராமர்சிக்கப்படுகிறது. ஆழ்வார்கள் வேதோக்தங்களான வர்ணாச்ரம தருமங்களை

என்னளவும் கூடவாதவர்கள் என்றதாயிற்று. [மத்ஸமாச்ரயணே ப்ரவ்ருத்தா :]* துயரறு சுடரடி தொழுதெழென் மனனே* என்றும் *ஆழிவண்ண ! நின்னடியிணையடைந்தே னென்றும் சொல்லி பகவதாச்ரயணத்திலே ஒருப்பட்டவர்கள் என்றபடி. [மந்நாமகர்மஸ்வரூபாணும் வாங்மநஸ அகோசரதயா]. எம்பெருமானுடைய திருநாமங்களையும் சேஷ்டிதங்களையும் ஸ்வரூபத்தையும் பேசப்புகுந்து *என்சொல்லிச் சொல்லுகேன்* என்றும்,* நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னுமீனச் சொல்லே* என்றும் வாக்குக்கும் மநஸ்ஸுக்கு மெட்டாதவையென்று சொன்னவர்களு மாழ்வார்களே.

**419.** [மத்தர்சநேந விநா ஸ்வாத்மதாரண போஷணாதிகம் அலபமாநா :] *தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே*என்றும்* காணவாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து ........*என்றும் சொல்லிக் கண்ணாரக் கண்டாலல்லது தரிப்புப் பெறுதவர்களு மாழ்வார்களே. [க்ஷணமாத்ரகாலம் கல்பஸஹஸ்ரம் மந்வாநா :] *ஒரு பகலாயிர மூழியாலோ* *ஊழியில் பெரிதால் நாழிகை யென்னும் *ஓயும் பொழுதின்றி யூழியாய் நீண்டதால்* என்றுபேசி *அவனை விட்ட கன்று உயிராற்ற கில்லாதவர்களும் ஆழ்வார்களே. [ப்ரசிதில ஸர்வகாத்ரா :] காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்* காலுமெழா கண்ண நீரும் நில்லா உடல் சோர்ந்து நடுங்கிக் குரல் மேலுமெழா மயிர்கூச்சுமறா* உள்ளெலா முருகிக் குரல்தழுத்தொழிந்தேன் உரோம கூபங்களாய்க் கண்ண நீர்கள் துள்ளஞ் சோரத் துயிலணை கொள்ளேன்* என்று சொல்லி ஸர்வாவயவ சைதில்யத்தைக் காட்டினவர்களும் ஆழ்வார்களே. இப்படிப்பட்ட ஆழ்வார்களுக்கு விலக்ஷணாநுபவம் தந்து ரக்ஷணம் செய்வதற்காகவே எம்பெருமான் திருவவதாரங்கள் செய்தருள்வதாக எம்பெருமானாருடைய பாஷ்ய ப்ரக்ரியை. [அவதார ரஸங்களை நன்கு அநுபவித்தவர்கள் ஆழ்வார்களேயென்று கருத்து.] இப்படிப்பட்ட பங்க்திகள் இதரபாஷ்யகாரர்களிடத்திலே லவலேசமும் காணக் கிடைப்பதில்லை; ஆழ்வார்களைப்பற்றியும் அவர்களின் தன்மைகளைப் பற்றியும் சங்கராசார்ய மத்வாசார்யாதிகளுக்கு வ்யுத்பத்தியே யில்லாமைதான் அதற்குக் காரணம்... ... ... ...

**420.** **கீதாபாஷ்யத்தில் மிகச் சிறந்தயோஜனையொன்று.**

ஸ்வாமியின் கீதாபாஷ்யத்தை ஆழ்ந்து அநுபவித்தால் அதிலுள்ள ஸ்ரீஸூக்திகள் பெரும்பாலும் திவ்யப்ரபந்தத்தை யுட்கொண்டே அருளிச்செய்தவையென்று நிச்சயிக்கலாம். க்ரந்த விஸ்தரபயத்தினால் கீதாபாஷ்யத்திலிருந்து முடிவாக ஸாரதமமான ஒன்றே யெடுத்துக் காட்டுகிறேன். கீதை (10...10.) "தேஷாம் ஸதத யுக்தாநாம் பஜதாம் ப்ரீதி பூர்வகம், ததாமி புத்தி யோகம் தம்" என்றவிடத்தில் சங்கராசார்யர் 'ப்ரீதி பூர்வகம் பஜதாம்' என்று அந்வயக்ரமம் காட்டி "ப்ரீதி:— ஸ்நேஹ: ; தத்பூர்வகம் மாம் பஜதாம் இத்யர்த்த:" என்று எழுதியுள்ளார். இந்த அர்த்தத்தில் என்ன குறை சொல்லமுடியும்? ஆனாலும் ஸ்வாமி "ப்ரீதிபூர்வகம் ததாமி" என்றே அந்வயம் காட்டியருளுகிறார். சேதநன் செய்கிற பஜனத்தில் ப்ரீதிபூர்வகத்வத்தைக் கூட்டாமல் எம்பெருமான் செய்யுமருளிலே அதைக் கூட்டுகிறார் ஸ்வாமி; இதற்கு உண்மையான காரணம் தெரியுமோ? திருவாய்மொழியில் (8-7-8) *என்னையாளும் பிரானார் வெறிதே யருள் செய்வர்-உகந்து* என்றுள்ளது. எம்பெருமான் தான் விஷயீகரிக்கத் திருவுள்ளமான விடத்தில் அவ்யாஜமாகச் செய்யுமருளை உகந்து செய்வதாக ஆழ்வார் அருளிச்செய்கிறார்; இப்படியருளிச்செய்த ஆழ்வார்க்கு நிர்திஷ்டகீதா ச்லோகத்தில் "ப்ரீதி பூர்வகம் ததாமி" என்னுமந்வயமே திருவுள்ளத்திலுறைந்திருக்கு மென்று ஸ்வாமி நிச்சயித்து அதற்கு அநுரூபமான பாஷ்யத்தை இட்டருளினார். இவ்வண்ணமாக கீதாபாஷ்யத்தில் ஆழ்ந்து பார்த்தால் மஹார்நிதிகள் மலை மலையாகக் கிடைக்கும். ... ... ... *

**421.** ***வாஸுதேவஸ் ஸர்வமென்றவிடத்து கீதாபாஷ்யரஸம்.**

பகவத்கீதை (7–19.) *பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்மாம் ப்ரபத்யதே, வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்னு மிந்த ச்லோகத்தின் சங்கரபாஷ்யத்தையும் ஸ்ரீ ஸ்வாமி பாஷ்யத்தையும் உற்று நோக்க வேணும். ஸ்ரீசங்கரர் கீழே *ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ* என்றவிடத்தில் 'ஜ்ஞாநீ' என்பதற்கு எவ்விதமான அர்த்தம் செய்தாரோ அவ்விதமான அர்த்தமே 'ஜ்ஞாநவாந்' என்பதற்கும் அவர் செய்யலாவது. ஸ்வாமியோவென்னில் கீழே செய்தருளினபடியே இங்கும் ''மச்சேஷதைகரஸ ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநவாந்'' என்றே செய்தருளினார். இந்த ச்லோகத்தில் இதுவன்று முக்கியமான விஷயம்; *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்கிற உத்தரார்த்தத்திற்கு சங்கரர் பணித்த பொருள் *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* இத்யாதிஸ்தலங்களில் போலவே அத்வைதமாகவுள்ளது: வாஸுதேவ ஏவ மம ஸர்வம்'' என்பதாகக் கொள்ளப்படவேயில்லை. பரப்ரஹ்மத்திற் காட்டில் வேறுபட்ட பொருள் எதுவுமேயில்லையாகையாலே, எல்லாம் ப்ரஹ்மமேயென்றுகொண்டு என்னைப்பணிகின்ற மஹாத்மா துர்லபன்–என்று கீதாசார்யன்சொல்லுவதாக சங்கரபாஷ்ய ப்ரக்ரியை. இதை நமது பாஷ்யகாரர் கண்டித்திருக்கிறாரென்பது (அயமேவார்த்தர்) என்கிற ததீயபாஷ்ய ஸூக்தியாலும், சந்த்ரிகாஸூக்தியாலும் அறியவெளிது.

**422.** இங்கு சங்கரர் பணித்தபொருளானது அவசியம் கண்டிக்கத்தகுந்ததுகாணேவென்று பார்க்கவேணும். ஸர்வவஸ்து ஸாமாநாதிகரண்யார்ஹத்வரூப வஸ்துபரிச்சேதராஹித்யத்தை ப்ரஹ்மத்தினிடத்தில் விசிஷ்டாத்வைதிகளான நாமும் இசைந்தே யிருக்கிறோம். தாத்பர்யத்தில் வாசியேயொழிய சப்தஸந்தர்ப்பத்தில் ஒருவாசியுமில்லை நமக்கும். இங்கே சங்கரர் எழுதிவைத்த பொருள் அஸம்பாவிதமன்று. *ஸப்ரஹ்மா ஸ சிவஸ் ஸேந்த்ரஸ்ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட்* என்கிற வடமொழி வேதத்தையும், *அவனே யவனுமவனு மவனும், அவனே மற்றெல்லாமு மறிந்தனமே* என்கிற தமிழ் வேதத்தையும் நிர்வஹிக்கிற ரீதியிலே *வாஸுதேவஸ் ஸர்வமென்கிற விதையும் சங்கரர்க்கு அபிமதமான பொருளிலே எளிதாக நிர்வஹிக்கலாமாயிருக்க இங்கே கண்டனம் அவச்யமன்றேயென்னும்ப்ரத்யவஸ்தாநம் ப்ராப்தமாகும்.

**423.** **குறிக்கொண்மின் :**

சங்கருடைய அத்வைதாபிப்ராயத்தை ஸ்வாமி கீழே வெகு விரிவாகக் கண்டித்தேயிருக்கிறார். [ 1–12 பாஷ்யம் ஸேவிப்பது. 13–2, பாஷ்யத்திலும் மிகமிக விரிவாக ஸேவிப்பது. ] அதை இங்கும் கண்டிக்கவேண்டிய அவச்யமில்லைதான். இங்குக் கண்டிக்கிற விதம் வேறு. இவ்வர்த்தம் இந்த ப்ரகரணத்திற்குச் சேராதென்னுந் திருவுள்ளம் பற்றியே இவ்விடத்தில் ப்ரதிக்ஷேபமுள்ளது. இங்கே ஸ்வாமியருளிச் செய்த பொருள் என்னவென்று பார்ப்போம். 'வாஸுதேவஸ் ஸர்வ' மென்பதற்கு ஸ்வாமியருளிய பொருள் இதுவே—என்பது கீதாபாஷ்யஸூக்தி. இதை தாத்பர்ய சந்த்ரிகையில் விவரிக்கும்போது தாரக போஷக போக்யங்களும் எம்பெருமானே யென்று கொள்ளுகிற மஹாத்மாவை விவக்ஷிப்பதுதான் இவ்விடத்திற்குச்சேரும்—என்று ஸ்பஷ்டமாக எழுதியுள்ளார். திருவாய்மொழியில் *உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்* என்று ஆழ்வாரருளிச்செய்தது *வாஸுதேவஸ்ஸர்வமென்கிற இதனையநுஸரித்தே யென்று ஆளவந்தார் முதலானோர் நிர்வஹித்து வந்தார்கள். திருவாய்மொழியின் வ்யாக்யாதாக்களான பூர்வாசார்யர்களும் அங்கு இந்த கீதாவசனத்தை யுதாஹரித்தே வியாக்கியானம் செய்தருளியுள்ளார்கள். சங்கருக்குத் திருவாய்மொழியில் ப்ரவேசமில்லாமையாலே அவர்தாம் வேறு வகையாக பாஷ்யமிட்டாலும் திருவாய்மொழியமுதக்கடலிலே ஆழ்ந்தவரான ஸ்வாமி அவ்வர்த்தத்தை எங்ஙனே இசையக்கூடும்? *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்று சொல்லுகிற கீதாசார்யனும் நம்மாழ்வாரை நெஞ்சில்கொண்டே அது சொல்லியிருக்க, அதற்கு

மன்று என்றும் தெரிவிக்கப்படுகிறது. ஸாதுபரித்ராணம் மாத்திரம் ஏன் ஸங்கல்பத்தினாலாகக் கூடாது? என்று ஒருவர் ஸ்ரீபாஷ்யஸூக்தியின் மேலும் ஆக்ஷேபம் செய்தால் அதற்கு என்ன பரிஹாரம்? மேலும், 'துஷ்க்ருத்விநாசநம் ஸங்கல்பஸாத்யமாகலாம், ஸாதுபரித்ராணம் ஸங்கல்ப ஸாத்யமாக மாட்டாது' என்று ஸ்வாமி துணிந்து ஸாதித்திருப்பது எந்த ஆதாரத்தைக்கொண்டு? என்று ஒருவர் கேட்டால் இதற்கு த்ருப்திகரமான ஸமாதானம் சொல்லவேண்டும். திருவாய் மொழிய முதக் கடலில் அவகாஹநமில்லாதவர்கள் மேலே குறித்த கேள்விகளுக்கு விடையிறுக்க முடியாது.

**426.** நம்மாழ்வார் திருவாய்மொழியில் (3-1-9) "மழுங்காத வைநுதிய சக்கர நல்வலத்தையாய், தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில் தொழும்பாயார்க்கு அளித்தால் உன் சுடர்ச்சோதிமறையாதே" என்றொரு பாசுரம் அற்புதமாக அருளிச் செய்துள்ளார். இப்பாசுரத்தில் மூன்றாமடியில் மழுங்காத ஞான மென்றது எம்பெருமானுடைய ஸங்கல்ப ஞானம். 'எம்பெருமானே! நீ ஸாதுபரித்ராணம் பண்ண வேண்டி, நேரே வந்து திருவவதாரம் செய்யாமல் ஸங்கல்பத்தினாலேயே அது பண்ணுவதானால் உனது சோதி குன்றும்; ஸங்கல்பத்தினால் செய்திடாமல் நேரே வந்து அவதாரம் செய்தருளினபடியால் தான் உனது சோதி விளக்கம் பெற்றது' என்று அப்பாசுரத்தின் பின்னடிகளிலருளிச் செய்தாராழ்வார், இதனால் ஸாதுபரித்ராணம் ஸங்கல்பஸாத்யமாகாது என்பது ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டது. அது ஸங்கல்பஸாத்யமாகாது தான் என்பதை அப்பாசுரத்திலேயே முன்னிரண்டடிகளில் ஒரு கதை சொல்லுகிற முகத்தால் சிலாகித்துச் செய்வித்தாராழ்வார்: "தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே" என்று கஜேந்திராழ்வானுடைய கதையை யெடுத்துக்காட்டித் தம்முடைய விவக்ஷிதத்தை நிலைநாட்டியுள்ளாராழ்வார். கஜேந்திர மோக்ஷகதை யாவருமறிந்ததே; முதலைவாய்க்கோட்பட்ட மதவாரணம் ஆதிமூலமே யென்றழைக்க, எம்பெருமான் திருநாட்டி லிருந்து அரைகுலையத் தலைகுலையப் பெரிய திருவடியை மேற்கொண்டு பொய்கைக் கரையேறவந்து யானைக்கு அருள் செய்ததாகக் கதையுள்ளது. திவ்ய தேசங்கள் தோறும் இது பெரிய உத்ஸவ மாக இன்றைக்கும் கொண்டாடப்பட்டு வருகிறது. இதைப்பற்றி புத்திமான்கள் சிறிது ஆராய வேண்டும். ஆனைக்கு அருள் செய்யத் திருவுள்ளமானால் பரமபதத்திலிருந்து பொய்கைக் கரைக்கு ஓடிவந்து தான் அருள் செய்ய வேணுமோ? இடத்தைவிட்டுப் பெயராமலே இரண்டுபடி யாக அருள் செய்திருக்கலாமே. (அதாவது)

**427.** "விச்வம் திவைவ விரசய்ய நிசாய்ய பூயஸ் ஸஞ்ஜிஹீர்ஷு:" (ஸ்ரீவைகுண்டஸ்தவே) என்று ஆழ்வானருளிச் செய்தபடி ஸகலப்ரபஞ்சங்களினுடையவும் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை யெல்லாம் அவலீலையாக நடத்துவதற்குக் கருவியாயிருக்கின்ற ஸங்கல்பம் எங்கே போய்விட்டது? கஜேந்த்ர: ரக்ஷிதோ பவது—"கஜேந்திராழ்வான் ரக்ஷை பெறுக" என்று ஸங்கல்பித்தால் ஆகாத துண்டோ? ஆகாதென்று யாரும் சொல்ல முடியாது. இந்த ஸங்கல்பத்தைக்கொண்டே எளிதாக கஜேந்திரரக்ஷணம் செய்திருக்கலாமே. இது தவிர மற்றொரு ப்ரகாரமுண்டு; அதாவது, *விடுத்த திசைக் கருமம் திருத்தவல்ல திருவாழியாழ்வான் கைங்கரியத்திற்கு ஸஜ்ஜனாயிரா நின்றான்; *கருதுமிடம் பொருது கைந்நின்ற சக்கரத்தன்* (திருவாய்மொழி 10-6-8) என்கிறபடியே இன்ன திக்கில் இன்ன காரியமாகவேணுமென்று நினைத்தமாத்திரத்திலேயே அதை நிறைவேற்றவல்லவனவன். "கீழுலகிலசுரர்களைக் கிழங்கிருந்து கிளராமே ஆழிவிடுத்து அவருடைய கருவழித்த வழிப்பன்" என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடி பாதாளலோகத்திலுஞ்சென்று இறைப்பொழுதில் அரிய பெரிய காரியம் செய்துவந்த அந்தஸுதர்சநாழ்வானுக்கு அஸாத்யமானதுண்டோ? மேலும், பரமபதத்திலிருந்து பொய்கைக்கரைக்கு வந்துங்கூட "க்ராஹம் சக்ரேண மாதவ:" "கைந்நாகத்திடர்கடிந்த கனலாழிப் படையுடையான்" "குட்டத்துக் கோள்முதலை துஞ்சக்குறித் தெறிந்த சக்கரத்தான்" என்கிறபடியே அந்த ஸுதர்சநாழ்வானை யிட்டுத் தானே காரியம்

செய்தது; பொய்கைக்கரையளவு மெழுந்தருளித் தான் அவனுக்கு நியமிக்க வேணுமோ? பரம பதத்திலிருந்தே நியமித்தாலாகாதோ? நியமிக்கத் தான்வெணுமோ? கருத்தறிந்து செய்ய வல்லவனே அவன்; ஆக, அப்ரதிஹத ஶக்திகமான ஸங்கல்பத்தைக் கொண்டும், "வாணீ பௌராணிகீ யம் ப்ரதயதி மஹிதம் ப்ரோக்ஷணம் கைடபாரே:" [ஸுதர்சநசதகே] என்கிறபடியே ஸங்கல்ப பர்யாய பூதனை திருவாழியாழ்வானைக் கொண்டும் எளிதாகச் செய்யக்கூடிய கஜேந்த்ர ரக்ஷணத்தை எம்பெருமானே! ஏன் நீ அப்படிச் செய்தருளவில்லை? என்று நம்மாழ்வார் எம்பெருமானைக் கேள்விகேட்டிருக்கிறார். இப்பாட்டில் இவ்வளவு கேள்வி இருக்கிறதா? என்று ஐயுறவேண்டா; "மழுங்காத வைநுதிய சக்கர நல்வலத்தையாய்!" என்கிற முதலடியினால்— திருவாழியாழ்வானை ஏவியே ஏன் இந்த காரியத்தைச் செய்து கொள்ளவில்லை? என்றும் "மழுங்காத ஞானமே படையாக" என்ற மூன்றுமடியினால்—ஸங்கல்பத்தைக் கொண்டே ஏன் இந்த காரியத்தைச் செய்துகொள்ளவில்லை? என்றும் கேட்டிருக்கிறாரென்பது ஸுஸ்பஷ்டம்.

**428.** இக்கேள்விக்கு எம்பெருமான் தவிர வேறு யாராலும் விடை கூற முடியாதாகையாலே அவனே வந்து ஆழ்வாருடைய திருச்செவியிலே, ஆனைக் கருள்செய்ய தான் நேரே ஓடிவந்த காரணத்தையுரைத்தான்; அது கேட்டு ஸமாஹிதரான ஆழ்வார் எம்பெருமான் தமக்கு ரஹஸ்யமாக வருளிச்செய்த விடையை உலகறிய வெளியிட வேணுமென்றும் ஸ்ரீபாஷ்யத்திலு மே,ற வேணுமென்றும் திருவுள்ளம்பற்றி அப்பாட்டிலேயே இரண்டாமடியினால் அதனை வெளியிட்டருளினர் [தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே"] என்று. களிறு—கஜேந்த்ராழ்வான்; அவனுக்கு 'தொழுங் காதல்' என்று விசேஷண மிட்டதுதான் எம்பெருமானருளிச் செய்த விடையினலாயது. இங்கே குறிக்கொள்ளத்தக்க விஷய மிது;— கஜேந்திரனுக்கு முதலையைத் துணிக்கவேண்டியதே உத்தேச்யமாகில் அது ஸங்கல்பத்தாலோ திருவாழியாழ்வானை யிட்டோ செய்யக் கூடியதேயாகும். முதலையைத் துணித்தல் இங்கு உத்தேச்யமன்று. அப்போது எம்பெருமானை நோக்கி கஜேந்திராழ்வான் விண்ணப்பம் செய்கிறான்—

**429.** "நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் தவ", என்று; பெருமானே! இப்பாழுமுடலை முதலை தின்றுவிடுகிறதேயென்று இதற்காக நான் கரைந்திலேன்; கையிற்பறித்த பூக்களை உன் திருவடிவாரத்தில் நேராகப்பணிமாறவேணு மென்று இதொன்றையே ஆசைப்பட்டேன்; உன்னுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்தறியும் நீ இதைத் தெரிந்துகொண்டு நேரில் எழுந்தருளினையே! ஹா ஹா, உன்னுடைய ஸர்வஜ்ஞதையும் கருணையுமென்னே! என்று கஜேந்திரன் வியந்து உகந்து விஜ்ஞாபித்தது புராணஸித்தம். "பரித்ராணய ஸாதூநாம்" என்கிறவிடத்தில், இப்படிப்பட்ட தொழுங்காதலையுடையவர்களே ஸாது சப்தவாச்யர்களென்றும், அவர்களுக்குப் பரித்ராணமாவது அவர்கள் கோருகிறபடியே நேரே யெழுந்தருளி ஸேவை ஸாதித்தலும் தழுவி முழுசிவார்த்தையாடுதலுந்தானென்றும் நிர்ணயித்து இது ஸங்கல்பஸாத்யமாகாதென்று ஸ்வாமியருளிச் செய்தது பொருத்தமாயிற்று.

---

## 430. ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீ ஸூக்தி ஸவலக்ஷண்யம்.

கீதாபாஷ்யத்திலோ ஸ்ரீபாஷ்யத்திலோ ஸ்வாமியருளிச் செய்யும் ஸ்ரீஸூக்திகளில் நெஞ்சையுருக்கும்படியான ஒரு அதிசயம் அடியேனுடைய அநுபவத்தில் காண்கிறது. இவ்வதிசயம் வேறு எந்த பாஷ்யத்திலும் காண முடியாது. அஃது ஏனென்னில், மூலத்தில் பரம புருஷனுடைய ப்ரஸ்தாவம் வருமிடங்களில், ஆழ்வார்களுடைய திவ்ய ஸூக்திச் சாயையிலே அவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிப் பெருமைகளை விளக்கிப் பல விசேஷணங்களை அருளிச்

செய்தாலொழிய ஸ்வாமிக்குத் தரிப்பு உண்டாவதில்லை. இங்கு ஓரிடமெடுத்துக் காட்டுகிறேன். கீதையில் ஒன்பதாமத்யாயத்தில் முடிவு ச்லோகம் "மந்மநாபவ மத்பக்த:" என்பது. இதில் மந்மநா பவ என்பதற்கு என்னிடத்தில் மனத்தை வைத்திடு என்று பொருள் யாவர்க்கும் தெரிந்ததே. எளிதில் தெரியக்கூடியதே என்கிற கருத்தினால் மத்வபாஷ்யகாரர் அடியோடு அர்த்தம் செய்யவேயில்லை. சங்கராசாரியர் "மயி வாஸுதேவே மந: யஸ்ய தவ ஸ: த்வம் மந்மநா பவ" என்று உரைத்தார். என்னிடத்தில் என்பதற்கு வாஸுதேவனாகிய என்னிடத்தில் என்று அர்த்தம் என்பதாக விவரித்தாராயிற்று. இனி ஸ்வாமியின் பாஷ்யத்தை யெடுத்துக்கொள்வோம்: அவ்விடத்துப் பங்க்திகளை ஸேவித்தால் கல்நெஞ்சினனுக்கும் கண்ணீர் பெருகும்.

**431**. "மந்மநா பவ—மயி ஸர்வேச்வரே நிகிலஹேயப்ரத்யநீககல்யாணைகதாநே ஸர்வஜ்ஞே ஸத்யஸங்கல்பே நிகில ஜகதேககாரணே பரஸ்மிந் ப்ரஹ்மணி புருஷோத்தமே புண்டரீக தலாமலாயதேக்ஷணே ஸ்வச்சநீலஜீமூத ஸங்காசே யுகபதுதித திநகரஸஹஸ்ர ஸத்ருசதேஜஸி லாவண்யாம்ருதமஹோததௌ உதாரபீவரசதுர்பாஹௌ அத்யுஜ்ஜ்வல பீதாம்பரே அமலகிரீடமகரகுண்டலஹாரகேயூரகடகபூஷிதே அபார காருண்ய ஸௌசீல்ய ஸௌந்தர்ய மாதுர்யகாம்பீர்யௌதார்ய வாத்ஸல்ய ஜலதௌ அநாலோசித விசேஷாசேஷலோகசரண்யே ஸர்வஸ்வாமிநி தைல தாராவத் அவிச்சேதேந நிவிஷ்டமநா பவ"
என்கிற இவ்வளவும் அதிகம்பீரமான ஸ்வாமி ஸ்ரீஸூக்தியாகும்.

**432**. இந்த மஹாவாக்யத்தில் எம்பெருமானைப்பற்றின விசேஷணங்கள்பதினெட்டு உள்ளன. இத்தனை விசேஷணங்கள் இங்கு அவசியமோவென்று சிலர் நினைக்கக்கூடும். உண்மையில் அவச்யமன்றென்றும் சொல்லலாம். விஸ்தரத்தில் ருசியில்லாதவரான ஸ்வாமி இவ்வளவு ஏன் அருளிச் செய்தாரென்று ஆலோசிக்க வேண்டும். ஸ்வாமி யெம்பெருமானார் 'பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட வெங்களிராமானுசமுனி வேழம்' என்றும் 'கலிமிக்க செந்நெற் கழனிக்குறையல் கலைப்பெருமாளொளி மிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து அதனால் வலிமிக்க சீயமிராமானுசன்' என்றும் நூற்றந்தாதியில் அமுதனார் அருளிச் செய்தபடியே ஆழ்வாரருளிச் செயற்கடலில் அநவரதம் அவகாஹித்தவராதலால் அதன் பலனாகவே இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளை ஸ்வாமி பலகாலும் அருளிச்செய்யப்ராப்தமாகிறது. கண்ணபிரான் தன்னிடத்தில் பக்தி பண்ணும்படி விதிக்கிற இவ்விடத்தில் தன்னுடைய இத்தனை விசேஷங்களை யெடுத்துக் காட்டாவிடில் எங்ஙனே பக்தியுண்டாகும்? அவனுடைய ஸ்வரூப வைலக்ஷண்யத்தையும் திவ்ய மங்கள விக்ரஹ ஸௌந்தர்யத்தையும் திவ்ய பூஷணாதி வைசிஷ்ட்யத்தையும் திருக்கல்யாண குணபௌஷ்கல்யத்தையும் எடுத்துக் காட்டுவதானது கண்ணபிரான் தானே இவற்றை யெடுத்துரைத்து இவற்றிலேயீடுபடும்படி சொல்லுவதாகவன்றேவுள்ளது. இதர பாஷ்யகாரர்களுக்கு திவ்ய ப்ரமந்த ஸம்பந்து சிறிதுமில்லாமையினாலேயே அவர்கள் இப்படிப்பட்ட விசேஷணங்களை ஓரிடத்தில் கூட எழுதிவைக்க ப்ரஸக்தியில்லையாயிற்று.

**433**. இதேபோல் ஸ்ரீபாஷ்யத்திலும் காட்டுகிறேன். அதில் கடைசியானஸூத்ரம் [**அநாவ்ருத்திச் சப்தாத் அநாவ்ருத்திச் சப்தாத்**] என்பது. இங்கு மூலத்தில் பரமபுருஷனுடைய ப்ரஸ்தாவமேயில்லை. பரமபதத்தைச் சென்றடைந்த முக்தர்கள் மீண்டும் இந்நிலத்தில் திரும்பி வருவது உண்டா இல்லையா? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக இந்த ஸூத்ரம் அவதரித்துள்ளது. 'புநராவ்ருத்தி கிடையாதென்று சாஸ்த்ரம் சொல்லி யிருக்கையாலே அது இல்லை' என்றிவ்வளவே ஸூத்ரம் சொல்லி நின்றது. இதை விவரிக்குமிடத்து ஸ்வாமி யெம்பெருமானார், பகவானொருவனுளனென்று எந்த சாஸ்த்ரம் அறிவிக்கின்றதோ அந்த சாஸ்த்ரமே பகவானை அடைந்தவர்க்குப் புநராவ்ருத்தியில்லை யென்றும் தெரிவிக்கின்றது" என்றருளிச் செய்கிறார். இங்கு "யதா பரமபுருஷ: அஸ்தீதி சப்தாத் அவகம்யதே............" என்றிவ்வளவே அருளிச்செய்தால் போதுமானது; ஆயினும் ஸ்வாமி இங்கே அருளிச் செய்வது பாரீர்;—"யதா நிகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந: ஜகஜ்

ஜந்மாதி காரணம் ஸமஸ்தவஸ்து விலக்ஷண: ஸர்வஜ்ஞ: ஸத்யஸங்கல்ப: ஆச்ரிதவாத்ஸல்யைக ஜலதி: நிரஸ்த ஸமாப்யதிகஸம்பாவந: பரமகாருணிக: பரப்ரஹ்மாபிதாந: பரமபுருஷ:........." என்று இவ்வளவு விசேஷணங்களையருளிச் செய்கிறார்.

**435.** இங்ஙனே ஓரிடமன்று இரண்டிடமன்று; பலவிடங்கள் காணலாம். மற்ற பாஷ்யகாரர்களுக்கு இப்படிப்பட்ட வாக்விந்யாஸம் பண்ணத் தெரியாமலில்லை. பகவானிடத்தில் பக்தியில்லாமையுமில்லை. ஆயினும் அவர்களுடைய கையிலிருந்து இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளில் ஏகதேசமும் அவதரிக்கக் காண்கிறிலோம். 'செந்தாமரைத் தடங்கண் செங்கனிவாய் செங்கமலம் செந்தாமரையடிகள் செம்பொன் திருவுடம்பே' என்றும் 'கைவண்ணம் தாமரை வாய் கமலம் போலும் கண்ணிணையுமரவிந்தமடியுமஃதே' என்றும் 'செக்கமலத்தலர்போலும் கண் கைகால் செங்கனிவாய் அக்கமலத்திலைபோலுந் திருமேனி யடிகளுக்கே' என்றும் வாய்வெருவுகின்ற ஆழ்வார்களின் ஈரச்சொற்களிலே ஆழங்காற்பட்டிருக்கு மாசிரியர்களுக்கே இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்தி விந்யாஸவைபவம் வாய்க்கின்றது.

---

## 436. கப்யாஸ ச்ருதியின் பொருள் விளக்கம்

கப்யாஸம் என்று சாந்தோக்யோபநிஷத்திலுள்ள விலக்ஷணமான சொல்லுக்கு மூன்று வகையான வ்யுத்பத்திகளைக் கொண்டு மூன்று அர்த்தங்கள் அவதரித்தன. அவ்வர்த்த விசேஷங்களைக் காட்டுகின்ற ஸ்வாமி ஸ்ரீஸூக்தியாவது—*கம்பீராம்பஸ்ஸமுத்பூத-ஸம்ம்ருஷ்டநாள-ரவிகர விகஸித புண்டரீக தலாமலாயதேக்ஷண:* என்பது. ஆழ்ந்த தண்ணீரில் வாழ்வதும், நாளமென்கிற தண்டோடு கூடியிருப்பதும், இரவியின் கதிர்களால் மலரப்பெற்றதுமான புண்டரீகத்தின் இதழ்போல் நீண்ட திருக்கண்களையுடையவனென்கை. கப்யாஸம் என்கிற இச்சிறு சொல்லால் இவ்வளவு அர்த்தங்கள் எங்ஙனே தோற்றுவிக்கப்படுகின்றனவென்று ஸந்தேஹம் எழக்கூடும். அந்த ஸந்தேஹத்தைத் தீர்க்க கப்யாஸம் என்பதற்குச் செய்யக்கூடிய வ்யுத்பத்திகளை விவரிக்க வேண்டியதாகும். அது கடினமான ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரப்ரக்ரியையாக இருப்பதால் அதை நாம் ஸம்ஸ்க்ருதபாஷையி லெழுதிய சில நூல்களில் விவரித்துள்ளோம். அங்குக் கண்டுகொள்வது. எம்பெருமானார் ஆதரித்தருளின அர்த்தங்கள் மூன்றும் கப்யாஸம் என்கிற சப்தஸந்நிவேசத்தில் கிடைத்தவையேயென்பதை பகவத்ராமாநுஜ பக்தர்கள் திடமாகக் கொண்டிருப்பர்கள்.

**437.** கம்பீராம்பஸ்ஸமுத்பூதமாயும், ஸம்ம்ருஷ்டநாளமாயும், ரவிகரவிகஸிதமாயுமிருக்கிற புண்டரீகத்தை எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு உவமையாகச் சொல்லுவது பொருத்தமென்று எம்பெருமானாருடைய திருவுள்ளத்திலே தோன்றினது திவ்யப்பிரபந்தங்களில் அவர் ஆழ அவகாஹித்திருந்ததனாலேயே. ஆழ்வார்கள் எம்பெருமானுடைய திருக்கண்ணழகைப்பற்றிப் பேசுமிடங்களில் மேலே காட்டிய மூன்று விசேஷங்களையும் வெகு அற்புதமாகப் பேசியுள்ளார்கள். அதைஅடைவே விவரிக்கிறேன்.

**438.** [கம்பீராம்பஸ்ஸமுத்பூதபுண்டரீக]—ஜலஜமென்றும் அம்புஜமென்றும் அம்போஜமென்றும் நீரஜமென்றும் பேர்பெற்ற புண்டரீகமானது நீரில் நின்றுமுண்டாகாமல் மற்றொன்றிலின்று உண்டாக ப்ரஸக்தியில்லாமையாலே "அம்பஸ்ஸமுத்பூத" என்றதன் கருத்து, நீரைவிட்டுப் பிரியாமலிருக்கையைச் சொல்லுவதேயாம். "தாமரையை அலர்த்தக்கடவ ஆதித்யன்தானே நீரைப் பிரிந்தால் அத்தை யுலர்த்துமாபோலே" என்கிற ஸ்ரீ வசனபூஷண ஸ்ரீஸூக்தியும், "கமலம் ஜலாதபேதம் சோஷயதி ரவிர் ந தோஷயதி" என்கிற ப்ரமாணமும் இங்கே அநுஸந்தேயம். நீரைவிட்டுப் பிரியாமலிருக்கிற தாமரை போன்ற திருக்கண்களையுடையவன் என்றதாயிற்று. "நீரார் கமலம்போல் செங்கண்மாலென்றொருவன்" என்கிற சிறிய திருமடற் பாசுரத்திலும்,

''அழறலர் தாமரைக்கண்ணன்'' (58) என்ற திருவிருத்தப்பாசுரத்திலும் ஆழ்வார்கள் திருவுள்ளம் பற்றிய அர்த்தமென்றே இஃது எம்பெருமானாரால் ஆதரிக்கப்பட்டது. ''நீரார் கமலம்போல்'' என்றவிடத்தில் (நீரார்) என்ற விசேஷணம் எதுகையின்பத்திற்காக மாத்திரம் இடப்பட்டதன்று. ''அழறலர் தாமரைக் கண்ணன்'' என்றவிடத்து நம்பிள்ளையீட்டில் "கப்யாஸச்ருதி ஸ்பஷ்டமாகவே உதாஹரிக்கப்பட்டுள்ளது. அவ்விடத்து ஸ்ரீஸூக்தி வருமாறு—[அழறலர் தாமரைக்கண்ணன்] அழற்றிலே நின்றலர்ந்த தாமரைப்பூப்போலேயிருந்துள்ள திருக்கண்களையுடையவன். *யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ* என்னக்கடவதிறே.'' இங்கு வாதிகேஸரியின் ஸ்வாபதேசவுரை வருமாறு—''அழறு என்று அளறு; நீரிலும் சேற்றிலும் நின்று அலர்ந்து செவ்விமாறுத தாமரை போன்ற கண்ணையுடையவனென்றபடி.''

**439.** ஆக, 'நீரார் கமலம்போல் செங்கண் மாலென்றொருவன்'' என்ற சிறிய திருமடற்பாசுரத்தையும், 'அழறலர் தாமரைக்கண்ணன்' என்ற திருவிருத்தப் பாசுரத்தையும் ''தண்பெருநீர்த் தடந்தாமரை மலர்ந்தாலொக்கும் கண் பெருங் கண்ணன்'' என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தையும்திருவுள்ளம்பற்றியே 'கம்பீராம் மஸ் ஸமுத்பூத'' என்ற விசேஷணத்தைஸ்வாமியிட்டருளினரென்றது பொருத்தமாக முடிந்தது.

**440.** [ஸம்ம்ருஷ்ட நாள புண்டரீக] நீரைவிட்டுப் பிரிந்த தாமரைக்கு சோபையில்லாதது போலவே நாளத்தைவிட்டு நீங்கின தாமரைக்கும் சோபையில்லாமையாலே தாமரைக்கு நாளத்திருப்பும் அவச்ய வக்தவ்யமாயிற்று. இதுவும் ஆழ்வாரருளிச் செயலிலுள்ளது. திருவிருத்தத்தில் ''வண்காற்றறைய'' என்கிற பாட்டிலே ''எம்பிரான தடங்கண்கள்–மென்கால் கமலத்தடம்போல் பொலிந்தன'' என்றருளிச் செய்யப்பட்டிருக்கிறது. கமலத்திற்கு இடப்பட்டிருக்கிற 'மென்கால்' என்னும் விசேஷணத்திற்கு 'மெல்லிய நாளத்திலேயிருக்கின்ற' என்பது பொருள். (நாளமாவது தண்டு). கமலத்திற்கு அது கால் போன்றிருத்தலால் (கால்) என்னுஞ்சொல்லால் குறிக்கப்பட்டது. நாளமென்கிற பொருளையே பூருவர்களும் உரை செய்துள்ளார்கள். ஆக இந்த திவ்ய ஸூக்திக்குச்சேர (ஸம்ம்ருஷ்ட நாள) என்றருளிச் செய்யப்பட்டது.

**441.** [ரவிகரவிகஸித புண்டரீக] தாமரை நீரிலிருந்தாலும் நாளத்திலிருந்தாலும் ஸூர்ய கிரணங்களால் அலர்த்தப்பட்ட நிலையில்தான் எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு ஒப்பாகுமாதலால் இந்த விசேஷணமும் ஆவச்யகமாயிற்று. இதுவும் ஆழ்வாரருளிச் செயலிலுள்ளது. திருவாய்மொழியில் (5–4–9) ''செஞ்சுடர்த் தாமரைக் கண் செல்வன்'' என்றுள்ள பாசுரம் இங்கே கொள்ளக்கடவது. இவ்விடத்து ஈட்டிலும் கப்யாஸ ச்ருதியை உதாஹரித்தருளியுள்ளார். இதில் (செஞ்சுடர்த் தாமரை) என்பதற்கு செவ்விய சுடரையுடைய தாமரை என்று பொருளாகிறது. அச்செவ்விய சுடர் அதற்கு எங்ஙனம் வந்ததென்னில், அதற்கு முன்னடியில் ''அஞ்சுடர வெய்யோன்'' என்று ஸூர்யனை ப்ரஸ்தாவித்திருக்கையாலே ததீநமென்று காட்டப்படுகிறது. ஆக ஸூர்ய ப்ரகாசமடியாக வந்த செவ்வியசுடரை யுடைய தாமரைப் பூப்போன்ற திருக்கண்களையுடையவன் என்றதாயிற்று. இந்த ஸ்ரீஸூக்தியைத் திருவுள்ளம் பற்றியே, ''ரவிகரவிகஸித புண்டரீக'' என்றருளிச் செய்தது. ''செந்தண் கமலக்கண்......சிவந்த வாயோர் கருநாயிறு அந்த மில்லாக் கதிர் பரப்பி அலர்ந்ததொக்குமம்மானே'' என்கிற திருவாய்மொழிப் பாசுரமும் இங்கு யோஜிக்கவுரியது. [''செங்கமலம் அந்தரஞ்சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால்'' என்கிற பெருமாள் திருமொழிப் பாசுரமும் இங்கு நினைக்கத்தக்கது. ஆனால் அப்பாசுரத்தில் திருக்கண் ப்ரஸ்தாவமில்லாமையுணர்க. ... ... ...*

**442.** புண்டரீகதளாமலாயதேக்ஷண—தத்வம்

''கப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷிணீ'' என்கிற உபநிஷத்வாக்யத்திற்கு விவரணமாக ஸ்வாமி

அருளிச்செய்த *கம்பீராம்பஸ் ஸமுத் பூதேத்யாதி திவ்யஸூக்தியில் ''புண்டரீகதளாமலாய தேக்ஷண:'' என்றிருப்பது ப்ரஸித்தம். மூல ச்ருதியில் ''புண்டரீகமேவ மக்ஷிணீ'' என்றிருக்கிறதேயொழிய வேறில்லை; உள்ள மூலத்திற்குச்சேர ''புண்டரீகேக்ஷண:'' என்றிவ்வளவே அருளச்செய்திருக்க வேண்டும்; அதிகப்படியாக மூன்று பதங்களைச் சேர்த்திருக்கிறார். (1) தள. (2) அமல. (3) ஆயத என்னுமிந்த மூன்று சொற்கள் எந்த ஆதாரத்தைக்கொண்டு ஸ்வாமியாலருளிச்செய்யப்பட்டனவென்று விசாரம் செய்யுமளவில், ஆழ்வார்களின் திவ்யஸூக்திகளை ஆதாரமாகக் கொண்டுதானென்று நிர்ணயிக்க ப்ராப்தம்.

**443**. ஆழ்வார்கள் 'தாமரைக்கண்ணன்' என்றுசிலவிடங்களிலும் ''தாமரைத்தடங்கண்ணன்'' ''கமலத்தடங்கண்ணன்'' ''கமலத்தடம் பெருங்கண்ணன்'' என்று பல விடங்களிலுமருளிச்செய்து போருகிறார்கள். வடமொழியிலுள்ள லகரமும் ளகரமும் தென்மொழியில் டகரமாக மாறுபடுவதுண்டு; ''லடயோரபேத:'' என்கிற நியாயம் ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரஜ்ஞர்களுமிசைந்ததே. தமிழர்கள் எழுத்துப்போலி யென்பர்கள். ஏவஞ்ச, ''பத்ரம் பலாசம் சதநம் தளம் பர்ணம் சத: புமாந்'' என்ற அமர கோசத்தில் படிக்கப்பட்ட தளமென்கிற வடசொல்லே தமிழில் தடமென்றாயிற்று என்று திருவுள்ளம் பற்றிய எம்பெருமானார் 'கமலத் தடங்கண்ணன்' 'தாமரைத் தடங்கண்ணன்' என்னுமிடங்களிலே தளமென்னும் பொருளிலே தடமெனவந்ததென்று கொண்டு ''புண்டரீகதள'' என்றருளிச் செய்தார். தடமென்னுஞ் சொல்லுக்கு விசாலமென்கிற பொருளும் தளமென்கிற பொருளும் தடாகமென்கிற பொருளும் ஆங்காங்கு வியாக்கியான கர்த்தாக்களால் ஆதரிக்கப்படுகின்றன. ''நீலத்தடவரைமேல் புண்டரீக நெடுந்தடங்கள் போல ......... எம்பிரான் கண்ணின் கோலங்களே'' என்ற திருவிருத்தப் பாசுரத்தில் தடமென்பதற்கு தடாகமென்பது பொருள்.

**444**. ''கமலக்கண்ணன்... அமலங்களாகவிழிக்கும்'' என்கிற நம்மாழ்வார் பாசுரத்தை யுட்கொண்டே ''புண்டரீகதளாமல...க்ஷண:'' என்றார் ஸ்வாமி. கீழே காட்டிய பாசுரங்களையும், ''கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட வப்பெரியவாய கண்கள்'' என்கிற அந்திமமான திருப்பாணாழ்வார் பாசுரத்தையு மநுஸந்தித்துக்கொண்டே ''புண்டரீக... ஆயதேக்ஷண:'' என்றார்.

---

**445**. ''விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே'' விசேஷார்த்தம்.

ஸ்ரீபாஷ்ய மங்களச்லோகமான *அகில புவநஜந்மேத்யாதி ச்லோகத்தில் இரண்டாவது பாதம் ''விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே'' என்பது. முதல் பாதத்திலேயே ரக்ஷணார்த்தகமான ஸ்தேம சப்தத்தினால் எம்பெருமான் ஸர்வ ரக்ஷகனென்னுமிடம் சொல்லப்பட்டிருக்க, மீண்டும் அந்த ரக்ஷகத்வத்தையே தெரிவிக்குமதான இரண்டாவது பாதமிட்டிருப்பது விசேஷ ரக்ஷணமான மோக்ஷப்ரதாநத்தைப்பற்ற என்னுமிடம் ஸம்ப்ரதாயதத்வஜ்ஞர்களுக்கு விவரண நிரபேக்ஷம். விநத—வணங்கின, விவித—பலவகைப்பட்ட, பூதவ்ராத—பிராணிஸமூஹங்களை, ரக்ஷா—ரக்ஷிப்பதையே, ஏகதீக்ஷ—முக்கியமான விரதமாகக்கொண்டவனெம்பெருமான் என்பது சப்தார்த்தம். இங்கு பூதவ்ராத என்ற விடத்தில் ச்ருதப்ரகாசிகையில் பட்டரும், தத்வடீகையில் நிகமாந்தமஹாகுருவும் நிரூபித்தருளியுள்ள விசேஷார்த்தம் விசேஷித்து நோக்கத்தக்கது. பூதவ்ராத மென்பதற்கு ப்ராணிஸமூஹமென்று பொருளானாலும் இதில் சிறிது உட்புகுந்து ஆராய்ந்தருளுகிறார் ச்ருதப்ரகாசிகாபட்டர். ப்ராஹ்மண ஸமாஜ , ராஜபரிஷத் என்னுமிரண்டு வ்யவஹாரங்களை யெடுத்துக்காட்டி, இவற்றிலுள்ள வாசியையுங்காட்டி விசேஷார்த்த நிஷ்கர்ஷம் செய்தருளுகிறார். ப்ராஹ்மண ஸமாஜமென்று சொன்னால் அந்த ஸமாஜத்தில் பிராமணர்கள் மட்டுமே கூடி

யிருப்பதாகவும் இதர ஜாதியர்களின் சேர்க்கை அங்கு இல்லையாகவும் உலகத்தில் ஸ்பஷ்டமாகக் காண்கிறது. ராஜபரிஷத் தென்று சொன்னால் இப்படி காணப்படுவதில்லை. கேவலம் ராஜாக்கள் மட்டுமே கூடுகிற கூட்டத்தையா ராஜபரிஷத்தென்கிறோம். இல்லை; மந்த்ரிகளும்ப்ரஜைகளுமாகிய இதரர்களும் அரசனோடு கூடியிருக்குமிருப்பையே 'ராஜபரிஷத்' தென்கிறோர். 'ப்ராஹ்மண ஸமாஜ:' என்ற விடத்திலும் ராஜபரிஷத் என்ற விடத்திலும் அவிசேஷண ஷஷ்டீதத்புருஷ ஸமாஸமே கொள்ளுகிறோம். ஸமாஸத்தில் வாசியில்லையாயினும் பொருளில் நெடுவாசியுள்ளது.

**446.** ச்ருதப்ரகாசிகாபட்டர் இவற்றையெடுத்துக்காட்டி விரிவாக அருளிச்செய்துள்ளார். விநத ப்ராணிகளுக்கு மட்டும் மோக்ஷமளிக்கையன்றிக்கே அந்தப்ராணிகளோடு ஸம்பந்தம் பெற்றவர்களுக்குங்கூட அந்த விநதப்ராணிகளின் விநதியே காரணமாக மோக்ஷமளிக்கிறானெம்பெருமானென்றருளியுள்ளார். இங்கு "நுதத ஏவ காரணாத்" என்கிற ஸ்ரீஸூக்தி ஜீவநாடியாகவுள்ளது.

**447.** இவ்வர்த்தத்தை வேதாந்த வாசிரியர் தத்வடீகையில் வெகு அழகாக உபபாதித்துப் பொருந்தவைக்கிறார். அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் நன்கு காணத்தக்கன. மூலத்தில் ரக்ஷாபதத்தாலே விவக்ஷிதமான ரக்ஷணம் அஸாதாரணஸ்ய பரமப்ரயோஜநஸ்ய மோக்ஷஸ்யைவ ப்ரதாநம்' என்று நிர்ணீதமாயிருக்கையாலே இந்த மோக்ஷப்ரதாநம் விநதபூதங்களுக்கு மட்டுமன்று, தத்ஸம்பந்தி ஸம்பந்திகளுக்கும் அப்ரதிஹதம் என்கிற அர்த்தமே தத்வடீகாஸூக்திகளாலும் விசதீக்ருதமாயிற்று. சரணாகதிகத்யத்தில் *பகவந்நாராயணாபிமதேத்யாதி சூர்ணையினால் புருஷகாரப்ரபத்தி செய்தருளின எம்பெருமானார்க்கு ப்ரதிவசநமிட்டருளின ஸ்ரீரங்க நாச்சியார் "அஸ்து தே" என்றவளவோடு நில்லாமல் "தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே" என்று மருளிச் செய்த விடத்தில் அவ்விடத்து ச்ருதப்ரகாசிகையில் "ஸம்பந்தி ஸம்பந்தி நிஸ்தரணமபி, ஸர்வசப்தாபிப்ரேதம்" என்று அருளிச்செய்யப்பட்டிருப்பதும் இங்கு அநுஸந்தேயம்.

---

**448.** **அரங்கனிடத்தில் எம்பெருமானார் பெற்ற வரம்**

ஸ்வாமி சரணாகதிகத்ய மருளிச்செய்த பிறகு ஸ்ரீரங்கநாதன் எம்பெருமானார்க்கு ஒரு வரம் தந்தருளினதாக ப்ரஸித்தியுள்ளது. இதனை வேதாந்தவாசிரியர் ந்யாஸதிலகத்தில் ஒரு ச்லோகத்தினால் வ்யக்தமாகப்பணித்துள்ளார். அந்த ச்லோகமாவது,

> **உக்த்யா தநஞ்ஜய விபீஷண லக்ஷ்யயா தே**
> **ப்ரத்யாய்ய லக்ஷ்மணமுநேர் பவதா விதீர்ணம்.**
> **ச்ருத்வாவரம் தததுபந்த மதாவலிப்தே**
> **நித்யம் ப்ரஸீத பகவந் மயி ரங்கநாத.**

என்பதாம். சரணாகதி கத்யத்தின் முடிவில் திருத்தேர்த்தட்டிலே அர்ஜுநனையுத்தேசித்துச் சொன்ன ஸர்வதர்மாந்நித்யாதியையும், கடற்கரையிலே விபீஷணாழ்வானையுத்தேசித்துச் சொன்ன *ஸக்ருதேவப்ரபந்நாயேத்யாதியையும் எடுத்துரைத்து "இதி மயைவ ஹி உக்தம்" என்று மருளிச்செய்து இவ்வகையாலே எம்பெருமானார்க்கு ஒரு ப்ரத்யயத்தைப் பண்ணுவித்தபடியை "உக்த்யா தநஞ்ஜய விபீஷணலக்ஷ்யயா தே ப்ரத்யாய்ய லக்ஷ்மணமுநே:" என்னுமளவால் அருளிச் செய்தாராயிற்று. அதற்கு மேல் "பவதா விதீர்ணம் வரம் ச்ருத்வா" என்று ஸாதித்திருப்பது நிதியான வார்த்தை. ஸ்ரீரங்கநாதன் ஸ்ரீராமாநுஜர்க்கு ஒரு வரமளித்ததாகவும், அதை தேசிகன் தாம் பரம்பரையில் கேட்டறிந்ததாகவும் சொல்லப்பட்டுள்ளது. அந்த வரத்தின் ப்ரகாரம் எப்படிப்பட்ட தென்பதை (ந்யாஸதிலக) வ்யாக்க்யாதாக்கள் வெளியிட்டுள்ளார்கள். எங்ஙனே

யென்னில்; திருக்குடந்தை தேசிகஸம்ப்ரதாய விவர்த்திநிஸபாத்யக்ஷர்களான மஹநீய மஹா வித்வான்கள் பலர் பரிஷ்கரித்து வெளியிட்ட வியாக்கியானத்தில் "எம்பெருமானாரே! உம்முடைய ஸம்பந்த ஸம்பந்திகளுக்கும் மோக்ஷம் தந்தோம் என்பதுதான் வரம்" என்றுவிளக்கப்பட்டுள்ளது. வரம் இப்படிப்பட்டதேயொழிய வேறு விதமன்று என்பது மூலத்திலேயே ஸ்பஷ்டமாகக் காட்டப் பட்டு மிருக்கிறது. (அதாவது) "ச்ருத்வா வரம்" என்றவுடனே "ததநுபந்த மதாவ லிப்தே மயி" என்று ஸாதித்திருப்பதானது வரத்தின் ப்ரகாரத்தை ஸ்பஷ்டமாகக் காட்டுகின்றதன்றோ. தேசிகன் தாம் எம்பெருமானாருடைய ஸம்பந்தம் பெற்று அதனால் செருக்குற்றிருப்பதாகவன்றோ இங்குச் சொல்லுகிறது. தேசிகனுக்கு எம்பெருமானாரோடு ஸாக்ஷாத் ஸம்பந்தமில்லையென்பதும் பரம்பரா ஸம்பந்தமேயுள்ளதென்பதும் நிர்விவாதம். பரம்பராஸம்பந்தமுடைய தமக்குச் செருக்கு உண்டா யிருப்பதாகச் சொல்லும்போது ஸ்ரீராமாநுஜரோடு பரம்பராஸம்பந்தமுடையார்க்கும் மோக்ஷம் தந்தோமென்று ஸ்ரீரங்கநாதன் வரமளித்திருப்பது நிஸ்ஸந்தேஹமாக விளங்குமதன்றோ. இல்லை யேல் "ததநுபந்தமதாவலிப்தே" என்று தமக்கிட்டுக்கொண்ட விசேஷணம் கேவலம் பாத பூரணார்த்தமாகு மத்தனையன்றோ.

**449.** பரம்பராஸம்பந்திகளுக்கும் பேறு கைபுகுமோ! என்கிற ஸந்தேஹம் "விநதவிவிதபூத வ்ராதரக்ஷைகதீக்ஷே" என்ற விடத்து ச்ருதப்ரகாசியாலும் தத்வடீகையினாலும் நிரஸ்தமான வளவே யன்றிக்கே இந்த *உக்த்யாதநஞ்ஜயச்லோகத்திற்கு அடுத்த முந்தினச்லோகத்தினாலும் நிரஸ்த மாயிற்று. எங்ஙனேயென்னில்;

அந்தோநந்த க்ரஹண வசகோ யாதி ரங்கேச யத்வத்
பங்குர் நௌகா குஹர நிஹிதோ நீயதே நாவிகேந,
புங்க்தே போகாந் அவிதித ந்ருபஸ் ஸேவகஸ்யார்ப்பகாதி:
த்வத்ஸம்ப்ராப்தௌ ப்ரபவதி ததா தேதிகோ மே தயாளு:

என்ற ச்லோகத்தில் மூன்று த்ருஷ்டாந்தங்கள் காட்டப்பட்டுள்ளன. கண் தெரியாதவன் கண் தெரிந்தவனது கையைப்பற்றிக்கொண்டு நடந்து செல்லுகிறானென்றும், காலில்லாத முடவன் தோணிக்காரனால் தோணியில் உட்காரவைக்கப்பட்டு அக்கரை சேர்க்கப்படுகிறானென்றும் காட்டின இவ்விரண்டு த்ருஷ்டாந்தங்களும் ஸாக்ஷாத் ஸம்பந்தமுள்ள விடத்தில் பேறு தப்பா தென்கைக்குச்சார்பானவை. இனி "புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய அர்ப்பகாதி:" என்று காட்டின மூன்றாவது த்ருஷ்டாந்தம் அத்யந்தவ்யவஹிதஸம்பந்த முள்ளார்க்கும் பேறு தப்பாதென்கைக்குச் சார்பானது. என்றைக்கோ இருந்த ஒரு அரசனிடம் என்றைக்கோ இருந்த வொரு அமாத்யன் ஸேவைபண்ணி நிதிபெற்று அந்நிதியைத் தன் பரம்பரையில் வருமவர்கள் உபஜீவிக்கும்படி வைத்திட்டால் அந்த நிதியைக் காலதத்வமுள்ளதனையும் அவனது பரம் பரையைச் சேர்ந்தவர்கள் தாங்கள் ஒரு ராஜஸேவையும் செய்யவேண்டாமே, ஸேவைபண்ணின வருடைய ஸம்பந்தஸம்பந்த ஸம்பந்தமே ஹேதுவாக நெடுங்காலம் இடையறாதே பூஜித்து வருகிறார்களென்பதை நிர்விவாதமாகக் கண்டு வருகிறோம். இந்த த்ருஷ்டாந்தத்தை தேசிகன் காட்டியிருப்பதானது வ்யவஹிதஸம்பந்த முடையார்க்கும் பேறுதப்பாதென்பதை ஸூசிக்கவே யன்றோ. இதில் "அவிதித ந்ருப:, அர்ப்பகாதி:" என்னுமிரண்டு பதங்களின் ஸ்வாரஸ்யாதிசயங் களையும் அர்த்த புஷ்டியையும் அத்ருஷ்டார்த்த ஸர்வஸ்வத்திலே பரக்கவுபபாதித்தோம்; அங்கே கண்டுகொள்வது.

ஆக, எம்பெருமானாருடைய குடல்துடக்கு உடையோமான நாம் அவருடைய அநர்க்கமான ஸம்பந்தத்தை அநுதினமும் நினைந்துநைந்துள்கரைந்துருகி "நிர்ப்பரோ நிர்ப்பயோஸ்மி" என் றிருக்க ப்ராப்தம். ... ... ... ... ... *

**450.** **யதிராஜவிம்சதி ஸூக்திரத்னம்**

மணவாளமாமுனிகள் யதிராஜ விம்சதியில் அருளிச்செய்துள்ள (18).

> "காலத்ரயேபி கரணத்ரய நிர்மிதாதி
> பாபக்ரியஸ்ய சரணம் பகவத்க்ஷமைவ
> ஸாச த்வயைவ கமலாரமணேர்த்திதா யத்
> க்ஷேமஸ் ஸ ஏவஹி யதீந்த்ர பவத் ச்ரிதாநாம்."

என்கிற ச்லோகமானது கீழே விவரித்த அர்த்த விசேஷங்களையெல்லாம் உட்கொண்டு அவதரித்ததாகும். இந்த ச்லோகத்திற்கு நம்முடைய வியாக்கியானம் காணத்தக்கது. ... ... *

---

**451.** **ஜீவாத்மாவின் அந்தரங்க நிருபகத்தை நம் பாஷ்யகாரர் நிர்ணயித்த அற்புதம்.**

பகவத் விஷயம் (ஈடு), ஸ்ரீவசநபூஷண வியாக்கியானம், குருபரம்பராப்ரபாவம் முதலான க்ரந்தங்களிலே காண்பதோரிதிஹாஸத்தைச் சுருக்கமாகக் கேண்மின்; எம்பெருமானார் உபய வேதாந்தப்ரவசநம் நடத்தியருளா நிற்க "ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தங்களும் சேஷத்வமும் நிருபகமாகச் சொல்லப்படாநின்றதே, இவற்றினுள் அந்தரங்க நிருபகம் எது?" என்கிற ப்ரஸ்தாவம் திருவோலக்கத்திலே நிகழ, ஸ்வாமி ஸர்வஜ்ஞராயெழுந்தருளியிருக்கச் செய்தேயும் இதனை ஆசார்யமுகேந வெளியிடுவிக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றி, திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே சென்று ஸேவித்து இதனையறிந்து வரும்படி ஆழ்வானை யனுப்பியருள, ஆழ்வானும் திருக்கோட்டியூர்க்குச் சென்று நம்பி பக்கலிலே ஆறுமாஸம் காத்திருந்து *அடியேனுள்ளானுடலுள்ளான்* (8-8-2.) என்கிற திருவாய்மொழிப் பாசுரத் துணுக்கையைப் பெற்றுக்கொண்டு எம்பெருமானாரிடம் வந்து சேர்ந்து அதை விஜ்ஞாபிக்க, மஹாநிதியான இந்த ஸ்ரீஸூக்தியினுட்பொருளை ஸ்வாமி திருவோலக்கத்திலே விவரித்தார்.

**452.** அடியேனென்கிற சொல் நாலாயிர திவ்யப்ரபந்தத்தினுள் நூற்றுக்கணக்கான விடங்களிலுண்டு: நம்மாழ்வார் பாசுரம் பேசத் தொடங்கும்போதே 'அடியேன் செய்யும் விண்ணப்பமே' என்று அடியேன் சொல்லையிட்டே பேசுகிறார். இப்படி பல நூறிடங்களில் அடியேன் சொல் இருக்கவும் அவற்றையெல்லாம் விட்டுத் திருவாய்மொழியில் ஒரு மூலையிலிருக்கும் பாசுரத் துணுக்கொன்றைத் திருக்கோட்டியூர்நம்பி எடுத்துக் கொடுத்தனுப்பியிருக்கிறார்: அது எட்டாம் பத்தின் எட்டாம்பதிகத்தின் இரண்டாம் பாட்டிலுள்ளது. அங்கேயே முதற்பாட்டின் முடிவிலும் 'ஒருவனடியேனுள்ளானே' என்று அடியேன் சொல்லுள்ளது; அதையும் விட்டு அடுத்த பாட்டினடியை யெடுத்துக் காட்டியுள்ளார். இதில் என்ன விசேஷமென்பது நுண்ணுணர்வினர் நுண்மதிக்கே கோசரமாகக் கூடிய விஷயம். கேண்மின்: எந்த இடத்திலும் அடியேனென்கிற சொல்லுக்கு தேஹவிசிஷ்டனான ஆத்மாவே பொருளாகும். *அடியேன் செய்யும் விண்ணப்பமே* என்னுமிடத்தை யெடுத்துக்கொள்வோம்; தேஹமின்றிக்கே வெறும் ஆத்மா விண்ணப்பம் செய்ய முடியாதன்றோ. தேஹவிசிஷ்டனான ஆத்மாவே விண்ணப்பஞ் செய்ய முடியுமாதலால் இங்கு வெறும் ஆத்மாவை அர்த்தமாகக் கொள்வதற்கில்லை: *அடியேன் சிறிய ஞானத்தன்* என்கிற மற்றோரிடத்தையும் (1-5-7.) எடுத்துக் கொள்வோம்; இங்கு 'ஞானத்தன்' என்று ஞானமுடைமை

சொல்லியிருப்பதனால் அது தேஹத்திற்கு அஸம்பாவிதமாய் ஆத்மாவுக்கே ஸம்பாவிதமாகையாலே இங்கு அடியேனென்பது வெறும் ஆத்மாவையே சொல்லியாகவேண்டுமென்று சிலர் ப்ரமிக்கக் கூடும்; அப்படியில்லை; இங்கும் அடியேனென்கிற சொல் தேஹவிசிஷ்டனான ஆத்மாவையே சொல்லுகிறது; ஏனென்னில், "காண்பானலற்றுவன்" என்கிற க்ரியையிலே அச்சொல் அந்வயிக்க வேண்டும்; வெறும் ஆத்மாவே அடியேன் சொல்லுக்கு அர்த்தமாக வேண்டியது அவசியமாயிற்று. இப்படி எந்தவிடத்திலும் தேஹ விசிஷ்டனான ஆத்மாவையே அடியேன்பதம் சொல்லி நிற்குமென்பது திண்ணமாயிற்று. *ஒண் சங்கதை வாளாழி யானொருவனடியே னுள்ளானே* என்கிறவிடத்திலும் அப்படியே.

**453** இனி *அடியேனுள்ளானுடலுள்ளான்* என்கிறவிடத்தில் மட்டும் அடியேனென்பதற்கு வெறும் ஆத்மாவே அர்த்தமாகவேண்டிய நிர்ப்பந்தமுள்ளது. ஆத்மாவுக்கு விசேஷண பூதமான தேஹத்திற்கு வாசகமான சொல் உடலென்பது தனிப்பட இருப்பதனால் அடியேனில் தேஹத்தைச் சேர்த்து அர்த்தங்கொள்ளவேண்டிய அவச்யமில்லை; எம்பெருமான் ஜீவாத்மாவையும் உடல்பொருளையும் அநுப்ரவேசித்திருக்குமவன்' என்று சொல்லவேண்டுவது இங்கு விவக்ஷிதம். உடலிலுள்ளானென்பதனால் ஜடப்பொருளை அநுப்ரவேசித்திருக்குமவன் என்பது சொல்லிற்றாயிற்று. 'ஜீவாத்மாவை அநுப்ரவேசித்திருக்குமவன்' என்று விவக்ஷிதமான பொருளுக்கு *அடியேனுள்ளானென்று வாசகமிடப்பட்டிருக்கிறது. ஆத்மா அஹமர்த்தமாகையாலே என்னுள்ளானென்று சொல்லியிருக்கலாம்: அப்போதும் ஆத்மாவிலுள்ளானென்னும் பொருள் தேறிவிடும். ஆனால் ஆழ்வார் அப்படியருளிச் செய்யாமல் *அடியேனுள்ளானென்றருளிச் செய்திருக்கையாலே, ஆத்மாவென்றும் அடியேனென்றும் பர்யாயம்-(அதாவது) ஆத்மாவுக்கு சேஷத்வமே அந்தரங்க நிரூபகம்—என்பது ஆழ்வார் திருவுள்ளமாக அறுதியிடலாகிறது.

**454.** இப்படி எம்பெருமானார் நிர்ணயித்ததாகச்சொல்லுமைதிஹ்யம்உண்மையாயிருக்கவேண்டுமாகில் இது அந்த ஸ்ரீபாஷ்யகாரதிவ்யஸூக்திகளில் எங்கேயாவது ஏறியிருக்கவேணும். இல்லையாகில் இந்த ஐதிஹ்யத்திற்கு கௌரவமில்லை. ஸ்ரீபாஷ்யத்தில் *ஜ்ஞோத ஏவ* என்கிற ஸூத்ரத்தின் விவரணத்தில் இது தெரிவிக்கப்படவில்லை. அங்கு "அயமாத்மா ஜ்ஞாத்ருஸ்வரூப ஏவ" என்று இவ்வளவே முடிவாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே மேலே விவரித்த ஐதிஹ்யம் யதார்த்தமாயிருக்கத் தகுதியில்லையென்று குருகுலவாஸ பாக்யமில்லாதார் சிலர் சொல்லுவதுண்டு. அன்னவர்களை "எண்ணாத மானிடத்தை எண்ணாத போதெல்லாமினியவாறே" என்கிற ரீதியில் விட்டிட்டு தத்வஜிஜ்ஞாஸுக்களான ஸுக்ருதிகளுக்கு மருமமுணர்த்துகிறேனிங்கு. இந்த மஹார்த்தம் எம்பெருமானார் திருவுள்ளத்திலே நன்கு ஊறியிருந்து கீதா பாஷ்யத்தில் தகுந்த இடத்தில் வெளியிடப்பெற்றது. கீதையில் (7-16.) *சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதி நோர்ஜுந!, ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப!* என்றவிடத்தில் சங்கர பாஷ்யத்தை முன்னம் நோக்கிப் பிறகு ஸ்வாமி பாஷ்யத்தை நோக்குமின். ' ஜ்ஞாநீ-விஷ்ணோஸ் தத்த்வவித் என்றார் சங்கராசார்யர்; நம் ஸ்வாமி அப்படியன்றிக்கே ஒன்றாக எண்ணாது "பகவச் சேஷைதைகரஸ ஆத்ம ஸ்வரூபவித் ஜ்ஞாநீ" என்று அருளிச்செய்துள்ளார். இப்படி ஓரிடமன்று. ஜ்ஞாநீ என வருமிடங்களிலெல்லாம் இங்ஙனேயருளிச் செய்கிறார். ஜீவாத்மாவின் ஜ்ஞானத்திற்கு ப்ரயோஜனம் தன்னுடைய சேஷத்வத்தை யறிவதுதான் என்று ஸ்வாமியின் திருவுள்ளம் தேறுகிறது. ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தியில் அவகாஹநமில்லாமல் இங்ஙனே யருளிச்செய்ய இயலாது.

---

## 455. நம் பாஷ்யகாரர் செய்தருளின ப்ரதாநப்ரதிதந்த்ரார்த்த நிர்ணயம்

நம்முடைய விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தில் சரீராத்மபாவமென்பது ப்ரதாந ப்ரதிதந்த்

ரார்த்தமென்று குலாவப்படுகிறது. உபநிஷத்துக்களில் சேதந அசேதந ஈச்வரர்களுக்கு அபேதம் சிலவிடங்களிலும், பேதம் பல விடங்களிலும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அத்வைதிகள் அபேதம் தெரிவிக்கப்படுமிடங்களை மட்டும் முக்கியமாகக் கொண்டு பேதம் தெரிவிக்கப்படுமிடங்களை கௌணமாக்கி நிர்வஹிக்கிறார்கள். த்வைதிகளோ வென்னில் பேதம் தெரிவிக்கப்பெறுமிடங்களை மட்டும் முக்கியமாகக் கொண்டு அபேத ச்ருதிகளை கௌணமாக்கி நிர்வஹிக்கிறார்கள். ஸ்ரீவைஷ்ணவர்களான நாம் அப்படியன்றிக்கே உபயச்ருதிகளையும் ஸம்ப்ரதாநமாகவே கொண்டு நிர்வஹித்து விசிஷ்டாத்வைதிகளென்று பேர்பெற்று வருகிறோம். பேதம் அபேதம் ஆகிய இரண்டை யும் தெரிவிக்கிற உபயச்ருதிகளையும் ஸம்ப்ரதாநமாக எப்படி நிர்வஹிக்கிறோமென்றால் சரீராத்ம பாவத்தைக் கொண்டு நிர்வஹிக்கிறோம். இதை இங்கு நாம் விரிவாக விவரிக்க வேண்டிய ஆவச்ய கதையில்லை, ஸுபாலோபநிஷத்து அந்தர்யாமி ப்ராஹ்மணம் முதலான உபநிஷத்துக்களைக் கொண்டே ஆளவந்தார் எம்பெருமானார் முதலான ஆசார்யர்கள் இந்த நிர்வாஹ ப்ரக்ரியை யைப் பேணி வருகிறார்களென்று நம்மவர்கள் சொல்லி வருகிறார்கள். இதை நாம் மறுப் போமல்லோம். ஆனால் இங்கு ஒன்று நாம் ஆலோசிக்க வேண்டும். அந்தர்யாமி ப்ராஹ்மணாதிகள் நமக்கு மாத்திரமே தோன்றினவையல்ல; அவை மதாந்தரஸ்தருக்குமுண்டே; ஆகிலும் அவர்கள் அந்த உபநிஷத் பாகங்களில் ஆதரமின்றிக்கே யிரா நின்றார்கள்; ஆளவந்தா ரெம்பெருமானார் முதலான நம் ஆசார்யவர்யர்களே அவற்றில் விசேஷத்ருஷ்டியைச் செலுத்தியி ருக்கிறார்கள். இதற்கு என்ன காரணமென்னில், *அருளினன் அவ்வருமறையின் பொருள், அருள் கொண்டாயிரமின் தமிழ் பாடினான், அருள்கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே* என்கிறார் ஸ்ரீமதுர கவிகள்; *ததாதென காதபிர்முநிரதிக விம்சாபி ந: க்ருதீ ஸாரக்ரஹம் வ்யதரதிஹ க்ருபயா* இத்யாதிகளாலே தேசிகன் த்ரமிடோப நிஷத் ஸாரதாத்பர்யரத்நாவளிகளில் விரிவாக வருளிச் செய்தார். இங்கு இருபது பாசுரங்களினாலென்னுமல் அதிக விம்சாபி: என்றும், ரத்நா வளியில் "விம்சதிர்வக்தி ஸாக்ரா" என்றும் சொச்சமும் கூட்டியருளிச் செய்திருக்கையாலே திருவாய்மொழியில் முதலிரண்டு தசகங்களும் மூன்றும் தசகத்தில் இரண்டு பாசுரங்களும் பாஷ்ய காரருடைய வேதாந்தார்த்த நிஷ்கர்ஷங்களுக்கு மிகவும் ஹஸ்தாவலம்பமாயிருந்தனவென்று நம் ஆசார்ய கோஷ்டியில் ப்ரஸித்தமாகச் சொல்லி வருமது ப்ரதிஷ்டாபிதமாயிருக்கிறது. ஆசார்யர்களெல்லாரும் இதில் ஸமகண்டர்களே யாவர்.

**456.** முக்கியமாக பேதாபேதச்ருதிகளை சரீரசரீரிபாவத்தாலே நம் ஆசார்யர்கள் பொருந்தவிட் டது ஆழ்வார் ஸ்ரீஸூக்தியைக் கொண்டேயாம். திருவாய்மொழியில் (1-1-7). *உடன்மிசை யுயி ரெனக்கரந்தெங்கும் பரந்துளன்* என்கிற பாசுரத்திலிருந்தே நிதிகண்டு பெற்று நிர்மலஹ்ரு தயா ரானார்கள். அப்பாசுரத்திற்குப் பிள்ளானுடைய ஆறாயிரப்படி வியாக்கியானம் வெகு விரிவாக அவ தரித்திருக்கின்றது. அவ்வளவு விரிவு ஆயிரத்தினுள் வேறு எந்த பாசுரத்திற்கும் கிடையாது. நம் பாஷ்யகாரர்க்கு அந்த பாசுரமே நிதிகாட்டிக்கொடுத்த தென்பதை பிள்ளான் தம்முடைய விசதவ்யாக்யான முகத்தாலே தெரிவித்தாராயிற்று.

**457.** இவ்விஷயம் போலவே, நிர்க்குணச்ருதிகளுக்கு ஹேயகுண ராஹித்ய ப்ரதிபாத னத்திலே நோக்கென்று ஒதுக்கி எம்பெருமானை அநந்த கல்யாண குணமஹோததியாக ஆள வந்தாரு மெம்பெருமானாரும் நிஷ்கர்ஷித்தருளினதும் ஆழ்வார்ஸூக்திகளைக் கொண்டேதான்; சாரீர கமீமாம்ஸையின் முதல் ஸூத்ரம் *அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா* என்பது. இதில் ப்ரஹ்ம சப்தத்திற்கு சங்கராசார்யரும் அர்த்தம் செய்கிறார், நமது ஸ்ரீ பாஷ்யகாரரும் விவரணம் செய்தருளு கிறார். இரண்டிடங்களையும் பார்ப்போம். "ப்ரஹ்ம ச வக்ஷ்யமாணலக்ஷணம் ஜந்மாத்யஸ்ய யத இதி" என்றிவ்வளவேயுள்ளது சங்கரபாஷ்யம். ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியோ வென்னில்; *ப்ரஹ்ம சப்தேந ஸ்வபாவதோ நிரஸ்தநிகில தோஷ: அநவதிகாதிசயா ஸங்க்யேய கல்யாண குணகண புருஷோத்தம: அபிதீயதே* என்றுள்ளது. ஆழ்வார் திருவாய்மொழி தொடங்கும்போதே *உயர்

வறவுயர் நலமுடையவன்* என்றருளிச்செய்த சந்தையையே ஸ்வாமி நேராக மொழி பெயர்த்தி ருக்கிறார். **உயர்வு அற** = அநவதிகாதிசய, **உயர்** – அஸங்க்யேய. **நலமுடையவன்** – கல்யாண குணகண:, **யவனவன்**—புருஷோத்தம:. ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகள் முழுதும் பகவத்குணகண மயம்மயாதலால் அந்த அம்ருத ஸாகரத்திலே யூறின ஸ்ரீராமாநுஜர் அதற்குத் தகுந்தபடியே யருளிச் செய்கிறாரென்பதில் வியப்பொன்றுமில்லையிறே. ... ... *

---

## 458. நித்யக்ரந்தத்தில் நிதியான ஸூக்தியொன்று

ஸ்வாமி ராமாநுஜர் நவரத்நமாக வருளிச்செய்த ஒன்பது திவ்யக்ரந்தங்களில் சரமமென்று சொல்லப்பட்டு வருகிற நித்யக்ரந்தத்திலிருந்து ஒரு நிதியை யெடுத்துக் காட்டுகிறேனிங்கு. ஸ்ரீ வைஷ்ணவர்கள் தினப்படி செய்யும் திருவாராதனத்தில் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளை யநுஸந்தித்தே தலைக்கட்டவேண்டுமென்றும். ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளின் அநுஸந்தானமில்லாத திருவாராதனத்தினால் எம்பெருமானுடைய திருவுள்ளம் உகவாதென்றும் ஸத்ஸம்ப்ரதாய வ்ருத்தர்களின் அத்யவஸாயமுள்ளது. அநுஷ்டானமும் இவ்வண்ணமாகவே அநாதிகாலமாக எங்கும் நிகழ்ந்து வருகின்றது. இதுபற்றி ஸ்வாமியெம்பெருமானாரருளிச்செய்த திருவாராதந ப்ரயோகத்தில் [நித்ய க்ரந்தத்தில்] ''ச்ருதிஸுகை: ஸ்தோத்ரை ரபிஷ்டுய'' என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது.

**459.** ஆழ்வார்களின் திவ்யஸூக்திகளுக்கு ''செவிக்கினிய செஞ்சொல்'' என்றே வ்யபதேசம். ''கேட்டாரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே'' (திருவாய்மொழி 10-6-11.) என்று ஆழ்வார் தாமேயருளிச் செய்யும்படியாயிற்று. 'செவிக்கினிய' என்றதற்குப் பர்யாயமாகவே ஸ்வாமி (ச்ருதிஸுகை:) என்றருளிச் செய்தது. 'வைதிக ஸூக்தை:' என்றோ வேறுவிதமாகவோ அருளிச்செய்யாமல் இங்ஙனே யருளிச்செய்தது ஸ்வாமிக்கே அஸாதாரணமான கம்பீரஸரணி. ''ச்ருதிஸுகை: ஸூக்தை:'' என்றும் சில ஸ்ரீகோசங்களிற் பாடங்காண்கிறது. அதுவும் மிகப் பொருந்தும். எம்பெருமானாருடைய இத்தகைய கம்பீரஸூக்தி ஸரணியைப்பற்றி ஸாரமாகச் சில விஷயங்கள் தெரிவிப்போம் மேலே. ... ... ... *

## 460. சரணாகதிகத்யத்தில் அருமையான விஷயமொன்று

சரணாகதிகத்யத்தில் *அகிலஹேயப்ரத்யநீக (5) சூர்ணையில் ''மஹா விபூதே! ஸ்ரீமந்நாராயண! ஸ்ரீவைகுண்டநாத!'' என்கிற ஸம்போதநங்களுக்குப் பிறகு ''அபார காருண்ய ஸௌசீல்ய வாத்ஸல்யௌதார்யைச்வர்ய ஸௌந்தர்ய மஹோததே!'' என்கிற ஸம்போதநத்தில் வாத்ஸல்ய குணமும் சேர்த்துப் படிக்கப்பட்டிருக்கச் செய்தேயும் மறுபடியும் (அவ்விடத்திலேயே)* ஆச்ரித வாத்ஸல்யைக ஜலதே!* என்று மற்றொரு ஸம்போதநமும் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. கீழுள்ள ஸம்போதநத்திலேயே வாத்ஸல்யகுணமும் சேர்ந்திருக்கவும் மீண்டும் வாத்ஸல்யத்தை மாத்திரமிட்டுத் தனியே ஒரு ஸம்போதநமருளிச் செய்திருப்பது எதற்காகவென்று விமர்சிக்க வேணும்.

**461.** கீழ் ஸம்போதநத்தில் வாத்ஸல்யத்தை மற்றும்பல திருக்குணங்களோடே சேர்த்துப் படித்ததில் த்ருப்தியில்லாமல் வாத்ஸல்யத்தை மாத்திரமே தனிப்பட எடுத்துரைக்க வேணுமென்று திருவுள்ளமுண்டாகி இங்ஙனேயருளிச்செய்திருப்பதாக ஸ்பஷ்டமாய்த் தெரிகிறது. பெருவிடாய்ப்பட்டவன் நீரிலே விழுந்து நீரைப் பலமுகமாக உபயோகங்கொள்ளுமாபோலே பகவத்குணகண கீர்த்தனத்திலே அத்விதீயமான உத்கண்டையையுடைய எம்பெருமானார் அலமாப்பின் மிகுதியாலே யருளிச்செய்யுமதுக்கு நாம் ஒரு அடைவு தேடவேண்டாவாகிலும்,

இந்த புநருக்தி வாத்ஸல்ய கு[illegible]திலே யானபடியாலே நம் ஆசார்யர்கள் இவ்விடத்தில் விசேஷாவதானம் செலுத்தி வெளி[illegible]ட்டிருக்குமது இங்குத் தெரிவிக்கலாகிறது. வெகு நுட்பமான விஷயமிது.

**462.** திருவாய்மொழியில் (6–10–10)* அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா !* என்று ஆழ்வார் பெரிய பிராட்டியாரை முன்னிட்டுத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ப்ரபத்தி பண்ணுகிறபோது அடுத்த இரண்டாமடியில் எம்பெருமானை *நிகரில் புகழாய் !* என்று ஸம்போதித்திருக்கிறார். ஒப்பற்றவொரு திருக்குணத்தை யுடையவனே யென்கிறார். அந்த திருக்குணம் எதுவாக இருக்குமென்று ஆராய்ந்தால் ப்ரகரணத்தை யநுஸரித்து வாத்ஸல்யமே அது – என்று எம்பெருமானார் திருவுள்ளம் பற்றுகிறார்.

**463.** தோஷபூயிஷ்டனான சேதநன் பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாக வரிப்பது எதற்காக வென்னில்; தன்னுடைய தோஷங்களைக் கண்டு எம்பெருமான் தன்னை நிக்ரஹித்தருளாமைக்காகவன்றோ; அப்பிராட்டியினுடைய புருஷகாரபலத்தாலே எம்பெருமானிடத்தில் முதன் முதலாக எந்த திருக்குணம் விகாஸமடைகின்றதென்னில்; வாத்ஸல்யகுணமே யென்பது நிர்விவாதம்.

**464.** வாத்ஸல்யமாவது தோஷாதர்சித்வமா? தோஷபோக்யத்வமா? என்கிற விசாரம் இவ்விடத்தில் சிறிதும் கொள்ளப்படவில்லை. எதுவாயினுமாகுக. தோஷாதர்சநமே வாத்ஸல்யமென்று கொள்வோம். அக்குணம் எம்பெருமானுக்கு உள்ளதேயானாலும் சேதநனுடைய அபராத பாஹுள்யத்தாலே அது உள்ளே அமுங்கிக்கிடந்ததென்றும், பிராட்டியின் புருஷகார பலத்தாலே அது தலையெடுக்கிறதென்றும் ஆசார்யர்கள் கண்டறிந்து கூறுகிறார்கள். இவ்விஷயத்தை தேசிகனும் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் :த்வயாதிகாரத்திலும் மற்றும் சிறு ரஹஸ்யங்களிலும் ஸுஸ்பஷ்டமாக வெளியிட்டுள்ளார்.

**465.** *நிகரில்புகழாய் !* என்கிற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியில் விவக்ஷிதமான குணம் வாத்ஸல்யமே யென்பது பிள்ளை லோகாசார்யருடைய ரஹஸ்யங்களோடு வாசியற எல்லாவற்றிலும் விளக்கமாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஆக, இந்த வாத்ஸல்ய குணத்தை ஆழ்வார் நிகரற்றதாகத் திருவுள்ளம்பற்றின படியாலே, ஸ்வாமி ராமாநுஜர் இதை மற்ற திருக்குணங்களோடு சேர்த்துப் படித்த வளவால் த்ருப்திபெறுமல் தனிப்படவும் ஒரு சூர்ணிகை இதற்காக இட்டருளினர். இதனல் ஆழ்வாரருளிச் செயலில் எம்பெருமானர் வைத்திருந்த கௌரவாதிசயம் விசதமாகும். *

---

**466.** ஸ்ரீரங்ககத்ய ஸ்ரீஸூக்தி விசேஷம்.

எம்பெருமானர் அருளிச்செய்த ஸ்ரீரங்ககத்யத்தின் ஆரம்பம் [*ஸ்வாதீநத்ரிவிதசேதநாசேதநஸ்ருபஸ்தி ஸ்திப்ரவருத்திபேதம்*] என்பது. சேதநர்களினுடையவும் அசேதநங்களினுடையவும் ஸ்வரூபமென்ன, ரக்ஷணமென்ன, ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளென்ன இவை தன்னதீனமாயிருக்கப் பெற்றவன் எம்பெருமான்—என்பது மேலெடுத்த ஸ்ரீஸூக்தியின் கருத்து. இதைப்பற்றி விமர்சித்ததில், திருவாய்மொழியின் முதற்பதிகத்தில் 4, 5, 6 ஆம் பாட்டுக்களில் முறையே நம்மாழ்வாரருளிச் செய்த அர்த்தத்தையே திரட்டி *ஸ்வாதீ நேத்யாதி ஸ்ரீஸூக்தியை ஸ்வாமி யருளிச் செய்தாரென்று அறுதியிடப்படுகின்றது.

**467.** *நாமவனிவனுவன்* என்கிற நாலாம் பாட்டில் நாம் முதலான தன்மைப் பொருள்களும், அவன் இவன் உவன் என்கிற ஆண்பால் சுட்டுப் பொருள்களும், அவள் இவள் உவள் என்னும்

பெண்பால் சுட்டுப்பொருள்களும், எவள் என்கிற பெண்பால் வினாப்பொருளும், அவர் இவர் உவர் என்னும் பலர்பால் சுட்டுப் பொருள்களும், அது இது உது என்னும் ஒன்றன்பால் சுட்டுப் பொருள்களும், எது என்னும் ஒன்றன்பால் வினாப்பொருளும், நசிக்குந்தன்மையுள்ள பொருள்களும், இவை உவை அவை என்னும் பலவின்பால் சுட்டுப்பொருள்களும், நல்ல வஸ்துக்களும் கெட்ட வஸ்துக்களும் எதிர்காலப் பொருள்களும் இறந்தகாலப் பொருள்களும் ஆகின்ற எல்லாப் பொருள்களும் அந்த ஸர்வேச்வரனேயாம் (அதாவது) ஸர்வேச்வரனிட்ட வழக்கேயாம் என்றது. உலகத்திலுள்ள சேதநா சேதநப் பொருள்களெல்லாம் இந்தச் சிறிய பாட்டில் உக்தி வைசித்திரியாலே அடக்கப்பட்டு, இவை யெல்லாவற்றினுடையவும் ஸ்வரூபம் பகவானுடைய அதீனம் என்று தெரிவிக்கப்பட்டபடியால் இது தன்னையே ''ஸ்வாதீநத்ரிவித சேதநா சேதந ஸ்வரூப'' என்றார் ஸ்வாமி யெம்பெருமானார்.

**468**. இதற்கடுத்த பாட்டு *அவரவர் தமதமது* என்பது. இதன் கருத்தாவது, உலகில் பலவகைப்பட்ட அதிகாரிகள் இருக்கின்றார்களே; அவரவர்கள் தம்தமது உணர்ச்சிக்கு எட்டிய படியே ஒரோ தெய்வங்களை ஸ்வாமிகளாக வெண்ணி ஆச்ரயிப்பார்கள்; இப்படி அவரவர்களால் தொழப்படுகின்ற அந்தந்த தெய்வங்கள் அவரவர்கள் விரும்பின பலன்களைக் கொடுப்பதில் குறையற்றே யிருக்கின்றன; எதனாலே யென்னில்; ஸர்வஸ்வாமியான ஸ்ரீமந் நாராயணன் அவரவர் தம்தமது அத்ருஷ்டாநுஸாரமாய்ப் பலன் பெறும்படியாக அந்தந்த தெய்வங்களுக்கு அந்தர்யாமியா யெழுந்தருளி யுள்ளான்; அதனாலேதான்—என்பதாம்.

**469**. இதனால் சொல்லிற்றாவ தென்னென்னில்; உலகத்தில் நடக்கிற ரக்ஷணத்தொழில் யாவும் எம்பெருமானுடையதே; பிரமன் சிவனிந்திரன் முதலிய இதர தெய்வங்களைக் குறித்தும் மற்றும் அதிக்ஷுத்ர தெய்வங்களைக் குறித்தும் அவரவர்கள் வழிபாடுகள் செய்து தாம்தாம் கோரின பலன்களைப் பெறுவதாகக் கண்டாலும் அதுவும் எம்பெருமான் தானே அத்தெய்வங்களுக்கு உள்ளீடாக விருந்து நடத்துகிற ரக்ஷணமே யன்றி அத்தெய்வங்களே சுதந்திரமாகச் செய்து விடுகிற ரக்ஷணமன்று என்றதாயிற்று. [*நஹி பாலந ஸாமர்த்த்யம் ருதே ஸர்வேச்வரம் ஹரிம்*] என்றும், [*ந ஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே, ஸமர்த்தோத்ருச்யதே கச்சித் தம் விநா புருஷோத்தமம்*] என்றுமுள்ள பிரமாணங்களை யடியொற்றி யருளிச் செய்ததாமிது. ஆக இந்தப் பாசுரத்தின் ப்ரமேயத்தையும் சேர்த்துக்கொண்டு ஸ்வாதீநத்ரிவித சேதநாசேதநஸ்வரூப ஸ்திதி'' என்றார் ஸ்வாமி. [ஸ்திதியாவது ரக்ஷணம்.] சேதநாசேதந ரக்ஷணத்தையும் தன்னதீனமாக வுடையவனென்கை.

**470**. இனி, இதற்கடுத்த ஆறாவது பாட்டு *நின்றனரிருந்தனர்* என்பது. இப்பாட்டின் கருத்தாவது, நிற்பவர்கள் இருப்பவர்கள் கிடப்பவர்கள் திரிபவர்கள் ஆக இப்படிப்பட்ட ப்ரவ்ருத்தி சீலர்களும், நில்லாதவர்கள் இராதவர்கள் கிடவாதவர்கள் திரியாதவர்கள் ஆக இப்படிப்பட்ட நிவ்ருத்தி சீலர்களும் எம்பெருமானிட்ட வழக்கேயென்பதாம். இதில், ப்ரவ்ருத்தி சீலர்களையும் நிவ்ருத்தி சீலர்களையும் சொல்லி யிருந்தாலும் அவர்கள் இங்கு விவக்ஷிதர்களல்லர்; கீழ் *நாமவனி வனுவன்* என்கிற பாட்டிலேயே தர்மிகளான ஸகலரையும் சேரப் பிடித்தெடுத்து அவர்கள் யாவரும் எம்பெருமானிட்ட வழக்கேயென்பது சொல்லி முடிந்த விஷயமாதலால் இப்பாட்டு அத்தோடு புநருக்தமாகக் கூடாது; அதில் சொல்லப்படாத விஷயமே இங்குச் சொல்லப்பட்டதாக வேண்டும்.

**471**. ஆகவே, ப்ரவ்ருத்தி நிவ்ருத்திமான்கள் எம்பெருமானிட்ட வழக்கு என்று சொல்லுகிற இப்பாசுரமானது, அவரவர்களின் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளாகிற தர்மங்கள் எம்பெருமானிட்ட வழக்கே யென்று சொல்லிற்றாகிறது. இப்போது, நின்றனரிருந்தனரித்யாதிக்குப் பொருள்—நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதலாகிற ப்ரவ்ருத்திகளும், நில்லாமை இராமை கிடவாமை திரி

யாமையாகிற நிவ்ருத்திகளும் எம்பெருமானதீனமே யென்கையல்லது வேறல்ல. இது ஸகல பூர்வாசார்ய வ்யாக்கியான ஸித்தம். ஆக இந்தப் பாசுரத்தின் ப்ரமேயத்தையும் சேர்த்துக் கொண்டு **''ஸ்வாதீந த்ரிவித சேதநாசேதந ஸ்வரூப ஸ்திதி ப்ரவருத்தி பேதம்''** என்றருளிச் செய்தார் ஸ்வாமி. எனவே, திருவாய்மொழிப் பாசுரங்கள் மூன்றின் ஸாரார்த்த ஸங்க்ரஹமாக ***ஸ்வாதீநேத்யாதி** சூர்ணையை எம்பெருமானுர் அருளிச்செய்தா ரென்றதாயிற்று. ... *

**472**. **கிரீடமகுட சூடாவதம்ஸ விசேஷம்.**

ஸ்வாமி யருளிச் செய்த சரணுகதி கத்யத்தில் ***அகிலஹேய ப்ரத்யநீக** இத்யாதியான பெரிய சூர்ணையில், திவ்ய ரூபவர்ணனம், திவ்யகுண வர்ணனம், திவ்யபூஷண வர்ணனம், திவ்யாயுத வர்ணனம், திவ்ய மஹிஷீ வர்ணனம் முதலான பல வர்ணனங்கள் ஆச்சர்யமாக செய்யப் பட்டுள்ளன. அவற்றுள் திவ்யபூஷண வர்ணன பரமான ***ஸ்வோசித விவித விசித்ராநந்தேத்யாதி** வாச்யத்தில் **''கிரீட மகுட சூடாவதம்ஸ''** என்றுள்ள ஸ்ரீ ஸூக்தியின் ஆழ்பொருளைப் பற்றிச் சிறிது விமர்சிப்போ மிங்கு.

**473**. கிரீடமென்றும் மகுட மென்றும் சூடாவதம்ஸமென்றும் தனித்தனியாக மூன்று சொற்கள் இருந்தாலும் இவை மூன்றும் திருமுடியிலணியும் ஆபரணத்தையே சொல்லும். அந்த ஆபரணம் ஒரே விதமாக இருப்பதில்லை; திருவபிஷேக மென்றும், கொண்டையென்றும், தொப்பாரமென்றும் மூன்று விதமாக வழங்கி வருவதுண்டாதலால் அம்மூவகைத் திருவாபரணங் களுக்கும் வாசகமாக கிரீடமென்றும் மகுடமென்றும் சூடாவதம்ஸ மென்றும் மூன்று பதங்கள் இங்கு ப்ரயோகிக்கப்பட்டனவென்னலாம் முக்கியமாயும் உபதேச பரம்பராப்ராப்தமாயுமுள்ள ரஸ்யரஹஸ்யார்த்த மொன்று இங்கு அறியவேண்டியதுண்டு நம்மாழ்வாருடைய திவ்ய ஸூக்தி யொன்றைத் திருவுள்ளம்பற்றியே ''கிரீட மகுடசூடாவதம்ஸ'' என்று மூன்று சிரோபூஷணங் களைப் பேசியுள்ளார் எம்பெருமானுர்.

**474**. அந்த திவ்ய ஸூக்தி யெதுவென்னில், திருவிருத்தத்தில் *பாரளந்த பேரரசே! எம்விசும்பரசே! எம்மை நீத்து வஞ்சித்தோரரசே!* என்றுள்ள பாசுரமாம். இதில், அரசே! அரசே! அரசே! என்று மூன்று விசை விளிக்கருளுகிருர். பாரளந்த பேரரசே! என்பதனுல், உலகளக்கிற வியாஜத்தினுல் எல்லார் தலையிலும் திருவடியை வைக்கையாகிற ஸௌலப்யகுணம் அநுபவிக்கப்பட்டது. விசும்பரசே! என்பதனுல் நித்யஸூரிநாதத்வமாகிற பரத்வம் அநுபவிக்கப் பட்டது. எம்மை நீத்து வஞ்சித்தோரரசே! என்பதனுல் தம்மோடு ஸம்ச்லேஷ விச்லேஷங்கள் பண்ணிப் போருகையாகிற ப்ரணயித்வகுணம் அநுபவிக்கப்பட்டது.

**475**. ஆக, ஸௌலப்யத்துக்காகக் கவித்த முடியும், பரத்வத்துக்காகக் கவித்த முடியும், ப்ரணயித்வத்துக்காகக் கவித்த முடியுமாக மூன்று முடிகள் நம்மாழ்வாரால் எம்பெருமானுக்குச் சூட்டப்பட்டனவாயின. இவ்விஷயம் ஆசார்யஹ்ருதயத்தில் ''பாரளந்த வென்னும் மூன்று முடிக்குரிய இளவரசுக்கு'' என்பதனுல் காட்டப்பட்டுள்ளது. இங்ஙனே எம்பெருமானுக்கு மூன்று ஸாம்ராஜ்யாபிஷேகம் ஆழ்வார் திருவுள்ளத்தினுல் நேர்ந்திருப்பதைத் திருவுள்ளம்பற்றியே ஸ்வாமி யெம்பெருமானுர் கிரீட, மகுட, சூடாவதம்ஸமென்கிற மூன்று சொற்களாலே மூன்று முடிகளை யருளிச்செய்தாரென்று திண்ணமாகக் கொள்ளக்கடவது.

**476**. இனி, இதில் ஒரு சிறிய கேள்வியுண்டாகும்; ப்ரணயித்வகுணமென்பது ஸௌலப்ய

குணத்திலே அந்தர்ப்பவியாதோ? அதைத் தனிப்படச் சொல்லி அதற்காக வொரு திருவபிஷேகம் சூட்டினதாகச் சொல்ல வேணுமோ? என்று. இதற்குக் கேண்மின்;

**477.** அந்தரங்க பக்தர்களிடத்தில் அஸாதாரணமாகக் காட்டும் ப்ரணயித்வ குணத்தை ஸர்வ ஸாதாரணமான ஸௌலப்யகுணத்திலே அந்தர்ப்பவித்ததாகக் கொள்ளுவது பொருந்தாது. ஸ்ரீ பாஷ்ய மங்கள ச்லோகமான *அகிலபுவநஜந்மேத்யாதியில் முதல் பாதத்தில் ஸ்தேமசப்தத்தினால் ரக்ஷணம் சொல்லப்பட்டிருக்கச் செய்தேயும் மீண்டும் இரண்டாவது பாதத்தில் *விநத விவிதபூத வ்ராத ரக்ஷை சொல்லப்பட்டிருக்கின்றது. இது தனிப்படச் சொல்லவேணுமோ? முதல் பாதத்தில் சொன்ன ஸ்தேம சப்தார்த்தமான ரக்ஷணத்திலேயே இதுவும் அந்தர்ப்பவியாதோ? என்று கேட்டால் 'அது ஸாமாந்ய ரக்ஷணம் சொன்னபடி, இது விசேஷ ரக்ஷணம் சொல்லுகிறபடி' என்று ஸமாதானம் சொல்ல ப்ராப்தமாகிறது.

**478.** புபுக்ஷுக்களின் ரக்ஷணம் வேறாய், முமுக்ஷுக்களின் ரக்ஷணம் வேறாயிரே யிருப்பது. அதுபோலவே *உண்டியே உடையே உகந்தோடுமிம்மண்டலத்தாரிடத்தில் காட்டும் ஸௌலப்யமும் *உண்ணுஞ்சோறு பருகு நீர்த் தின்னும்வெற்றிலையுமெல்லாங் கண்ணனெம்பெருமானென்றேயிருக்கு மாழ்வார்போல்வார்பக்கலிலே காட்டும் ஸௌலப்யமும் நெடுவாசி பெற்றதாகையாலே ஒன்றாய்விடாது. அதற்கு ஸௌலப்யமென்று பெயர்; இதற்கு ப்ரணயித்வமென்று பெயர். ஆகவே மூன்று திருக்குணங்களுக்கான ஸாம்ராஜ்யாபிஷேகத்துக்காக மூன்று முடிகள் மிகப் பொருந்தும். ... ... ... ...

**479.** பகவத்ராமாநுஜ ஸ்ரீஸூக்திரஸலி

ஆளவந்தார்க்குத் தனியனாக *யத்பதாம்போருஹேத்யாதி ச்லோகம் ஸ்வாமியருளிச் செய்தது ஸுப்ரஸித்தம். இது கீதாபாஷ்யத்திலேயே சேர்ந்ததாதலால் ஸ்வாமி ஸூக்தி யென்பதில் விவாத லேசமுமில்லை. இந்த ச்லோகம் அமைந்திருக்குமழகை ஆராய்ந்தால் ஸ்வாமியின் உக்தி ஸரணி லோகவிலக்ஷணமானதென்பதை அல்ப ப்ரஜ்ஞர்களும் அறுதியிடக்கூடும். அந்த லோகத்திற்குப் பெரியார்கள் பரம்பரையாக உபதேசித்துவரும் அர்த்த விசேஷங்களை ஆஸ்திகர்களுக்கு உபகரிக்கிறோம்.

**480.** ''யத்பதாம்போருஹத்யாந வித்வஸ்தா சேஷகல்மஷ:
வஸ்துதாமுபயாதோஹம் யாமுநேயம் நமாமி தம்.''

இது ஆளவந்தாருடைய இரண்டு திருவடிகளை மாத்திரம் சிந்திப்பதாகச் சொல்லவந்ததன்று; *யத்பதாம்போருஹ பதத்தினால் பதினான்கு திருவடிகள் உத்தேசிக்கப்படுகின்றன. (யத்பதாம்போருஹ) என்கிற ஆறு எழுத்துக்களுக்கு வர்ணக்ரமம் சொன்னால் பதினான்கெழுத்துக்கள் தேறும். யகார அகார, தகார, பகார, அகார, தகார, ஆகார மகார, பகார ஓகார, ரேப, உகார, ஹகார அகார= என்றுயிற்று வர்ணக்ரமம் சொல்லும்வழி. இவ்வகையில் தேறுகிற பதினான்கெழுத்துக்களும் பதினான்குதிருவடிகளைத்தெரிந்தேயிருக்கின்றன. அவ்வாளவந்தார்தமக்குப்பரம நிதியாகக்கொண்ட [*ஸ்ரீமத்ததங்க்ரி யுகளம் ப்ரணமாமி மூர்த்நா* என்ற) நம்மாழ்வாருடைய இரண்டு திருவடிகள்; ஆக நான்கு. அவ்வாளவந்தாருடைய திருவடிகளை ஆச்ரயித்திருந்து ஸ்வாமிக்கு ஆசார்யர்களான பஞ்சாசார்யர்களின் திருவடிகள் பத்து. ஆக இப்பதினான்கு திருவடிகளைச் சிந்தித்து ஸத்தை பெற்றதாகத் தெரிவிப்பது இந்த ச்லோகம். இதனை விவரித்துக் காட்டுகேன் காண்மின்.

**481.** யஸ்ய பதாம்போருஹே—யத்பதாம்போருஹே: என்று ஸமாஸம். (ஸம்பந்த ஸாமாந்யே ஷஷ்டி என்று அறிக.) ஆளவந்தாருடைய திருமேனியிலுள்ள பாதாரவிந்தங்களைச் சொன்னபடி

மறுபடியும் "யஸ்ய பதாம்போருஹே, என்றால்—ஆளவந்தார்தாம் *மாதா பிதா யுவதய:* என்கிற ச்லோகத்தில் "ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம் ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா* என்று தம்முடைய சென்னிக்கு அணியாகப் பரிக்ரஹித்த நம்மாழ்வாருடைய உபயபாதங்களும் யத்பதாம் போருஹ சப்தத்தினாலேயே எளிதாகத் தெரிவிக்கப்படும். இப்போது ஷஷ்டிக்கு அர்த்தம்—பரிக்ராஹ்ய பரிக்ராஹக பாவரூபமான ஸம்பந்தம். மீண்டும் 'யஸ்ய பதாம்போருஹாணி' என்று கொள்க. உலகில் சிஷ்யர்களைத் திருவடிகளென்றே ஸம்ப்ரதாயஜ்ஞர்கள் வழங்குவராதலால் ஆளவந்தாருடைய ஐந்து சிஷ்யர்களையே ஆளவந்தாருடைய திருவடிகளாகச் சொன்னபடி. 'பதாம்போருஹ' என்பதில் இரண்டு பதங்கள் உள்ளனவன்றோ; (பத என்றும், அம்போருஹ என்றும்.) திருவடிக்கு வாசகமான **பத** சப்தத்தினால் அவருடைய சிஷ்யர்களைச் சொல்லி, தாமரைக்கு வாசகமான **அம்போருஹ** சப்தத்தினால் அவர்களுடைய திருவடிகளைச் சொல்லுகிறதென்றும் கொள்ளலாம். அம்போருஹமென்றால் திருவடிகளைச் சொல்லுமோ வென்னில்; *தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே *மண்ணின் முழுது மளந்த வொண்டாமரை* என்கிற ஆழ்வார் பிரயோகங்களை யறிந்தவர்கள் இதில் விப்ரதிபத்தி பண்ணமாட்டார்கள். "தாவி வையங்கொண்ட தடந்தாளினை" என்ன வேண்டுமிடத்தில் திருவடிக்குப் பர்யாயமாகத் தாமரையையே சொல்லி யிருப்பது காண்க. இந்த நடை வடமொழியிலுமுண்டு; **அபஹ்நுதி** யலங்கார மென்பார்கள். ரூபகாதிசயோக்தியுமாகும். "பச்ய நீலோத்பலத்வந்த்வாத் நிஸ்ஸரந்தி சிதாச்சரா:" இத்யாதி பரச்சதம் காண்க.

**482.** ஆக, பரமாசார்யரான நம்மாழ்வாரையும் ப்ராசார்யரான ஆளவந்தாரையும் ஸ்வாசார்யர்களான ஐவரையும் ப்ரகாசப்படுத்தியே தனியனிட்டிருக்கு மழகு ஸஹ்ருதய ஹ்ருதயங்கமம். "குரும் ப்ரகாசயேத் **சிஷ்ய:**" என்னாமல் "குரும்ப்ரகாசயேத் **தீமாந்**" என்று மூலப்ரமாணத்தில் இருக்கையாலே மஹா மேதாவிகள் எவ்விதமாக ஆசார்ய ப்ரகாசநம் பண்ணலாமோ அவ்விதமாக ஸ்வாமி தாமும் தம்முடைய மேதா வைபவம் விளங்க இங்ஙனே ச்லோகரத்நம் தொடுத்திருப்பது மிகவற்புதம். மஹான்களுடைய திருநாவின் வீறு இங்ஙனே யன்றோ இருப்பது. இப்படி நுட்பமாகத் தெரிந்துகொள்ள வேண்டும்படி ஏதுக்கு ச்லோகமியற்ற வேணும்? எல்லாரும் ஸுஸ்பஷ்டமாகவே நன்கு தெரிந்துகொள்ளும்படி யியற்றலாகாதோ வென்று கேட்பவர்கள் யாவஜ்ஜீவம் அப்படியே கேட்டுக்கொண்டிருக்கலாம்.

**483.** *யத்பதாம் போருஹேத்யாதியான மேற்குறித்த தனியனில் மற்றொரு விசேஷமும் நுட்பமாக உய்த்துணரத் தக்கதுண்டு; அதாவது—[பதாம்போருஹ] என்று ஐந்து எழுத்துக்களையிட்டு ஆளவந்தார் திருவடிகளை நிர்தேசித்திருப்பதானது ஆளவந்தாருடைய ஐந்து திருவடிகள் [அதாவது, ஐந்து சிஷ்யர்கள்] தம்முடைய சிந்தனைக்கு இலக்கானவர்களென்றும் தெரிவிக்கப்பட்டதாகிறது. அது தன்னிலும் முதலிலே பகாரத்தையிட்டிருப்பதானது அந்த ஐந்து ஆசிரியர்களுள் தலைமையாசிரியரே தமக்குத் தலைவரான ஆசார்யராக வாய்த்தார் என்பதற்கு ஸூசகமாகிறது.

**484.** எங்ஙனே யென்னில்; ஸ்வாமிக்குத் தலைமையாசிரியர் பெரிய நம்பி; அவருடைய நிஜநாமதேயம் **பராங்குச தாஸர்** என்பது. வாக்ய குருபரம்பரையில் "ஸ்ரீமதே ராமாநுஜாயநம:, ஸ்ரீமத்யாமுந முநயே நம:" என்ற வாக்கியங்களுக்கிடையில் "**ஸ்ரீபராங்குச தாஸாய நம:**" என்றிருப்பது கொண்டும் பெரிய நம்பியினுடைய திருநாமம் **பராங்குசதாஸ** ரென்பதே யென்றறியலாம். **பதாம்போருஹ** என்றதில் முதலிலுள்ள பகாரம் பராங்குச தாஸராகிற தம் முதலாசிரியரை ப்ரத்யபிஜ்ஞாபநம் பண்ணவல்லது என்றுணர்க. இதற்குமேல் ஒன்று கேட்கக்கூடும்; முதலெழுத்தினால் பெரியநம்பி ஸூசிதராகிறப்போலே, மற்றை நான்கெழுத்துக்களினாலும் மற்ற நான்கு ஆசாரியர்கள் ஸூசிதர்களாகிறபடியையும் காட்ட வேண்டாவோ? என்று. கேண்மின்; தலைவரான ஆசிரியரைக் காட்டுமளவே போதுமானது. ஒவ்வோராசிரியரையும் இங்ஙனே காட்டி

யாகவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. மஹா விவேகிகளான சதுரர்கள் இன்னமும் உட்புகுந்து ஆராய்ந்து பார்த்தால் அந்த வழியும் புலப்படக்கூடும்.

**485.** ஆக இந்த உபபாதந ப்ரக்ரியையினால் எம்பெருமானார் அரிய பெரிய விசேஷங்களை நுட்பமாகவே அருளிச்செய்யுமியல்வினர் என்பதை விவேகிகள் நிர்ணயிக்கக் குறையில்லை. திருமலையாண்டான் திருவடிகளிலே ஸ்வாமி திருவாய்மொழிப்பொருள் கேளா நிற்கையில் "த்ரோணாசார்யர்க்கு ஏகலவ்யன் போலே ஆளவந்தார்க்கு நான்" என்றருளிச் செய்ததாக சரித்திர நூல்களிலே ப்ரஸித்தமாகவுள்ளது.

**486.** இதை வேதாந்த வாசிரியர் அப்படியே ஸம்ஸ்க்ருதப்படுத்தி அருளிச் செய்கிறார்—"த்ரோணாசார்யஸ்ய ஏகலவ்ய இவ யாமுநாசார்யஸ்ய அஹமித்யபிப்ராயேண" என்று யதபதாம்போருஹ ச்லோக வியாக்கியானத்தில். ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யமே வடிவெடுத்தவரான ஆளவந்தாருடைய திருவடிகளைச் சிந்தித்துத் தாம் ஸத்தை பெற்றதாகச் சொல்லிக்கொள்ளு மெம்பெருமானார் ஆழ்வார் திருவடிகளிலும் அவருடைய திவ்ய ஸூக்திகளிலும் ஆளவந்தாரைவிட அதிசயிதமான ப்ராவண்யமுடையவரே யென்பது சிலாலிகிதம். ... *

**487.** இனி யதீந்த்ரருக்கும் யதீந்த்ரப்ரவணருக்கும் சில ஸாம்யங்கள் கேளீர். மணவாள மாமுனிகளுக்கு யதிவரபுநரவதார பூதரென்னும் ப்ரஸித்தி தொன்று தொட்டு விளங்கி வருகின்றது. எம்பெருமானாரே மீண்டும் மணவாள மாமுனிகளாகத் திருவவதரித்தருளினரென்றபடி. இதற்குரிய உபபத்திகள் பலவுண்டு. அதை முன்னம் ச்லோக ரூபமாக விஜ்ஞாபித்துப் பின்னை வியாக்கியானமிட்டு விளக்குகின்றேன்.

**488.** (ச்லோ) வ்யாக்க்யாநக்ரந்ததாநாத் பரிவதநகதாகந்தவைதேசிகத்வாத்
நாநாசாஸ்த்ரார்த்தப்ருந்தப்ரசுரபணிதிபி: ப்ராஜ்ஞஹ்ருத்ரஞ்ஜகத்வாத்,
பூர்வாசார்யோக்திராகாத் சடரிபுமுநிராட்ஸூக்திஸம்வர்த்தகத்வாத்
பீடாதீசப்ரதிஷ்டாபநக்ருதிகரணாத் திவ்யதேசாபிமாநாத்.

**489.** பணிராஜாவதாரத்வாத் ஸ்ரீரங்கஸ்ரீவிவர்த்தநாத்,
யதீந்த்ரப்ரவணஸ ஸாக்ஷாத் யதீந்த்ரோ பாஷ்யக்ருத் த்ருவம்.
—இதற்கு ஸம்க்ஷேபமான வியாக்கியானம் காண்மின்—

**490.** வ்யாக்க்யாநக்ரந்த தாநாத். பெரும்பாலும் வியாக்கியானங்களருளிச் செய்வதிலேயே ஊக்கம் எம்பெருமானார்க்கும் மாமுனிகளுக்கு மொக்கும். ஸ்ரீபாஷ்யம் வேதாந்த தீபஸாரங்கள், கீதாபாஷ்யம் என்னுமிவை வியாக்கியான க்ரந்தங்களேயன்றோ. மாமுனிகளின் வியாக்கியான க்ரந்தங்களும் ப்ரஸித்தங்கள். வேதார்த்த ஸங்க்ரஹம் கத்யத்ரயம்—என்று சில மூலக்ரந்தங்களும் ஸ்வாமி ஸாதித்தது போலே மாமுனிகளும் யதிராஜ விம்சதி உபதேசரத்தினமாலை முதலிய மூலக்ரந்தங்களுமருளிச் செய்தது ப்ரஸித்தம்.

**491.** பரிவதநகதாகந்த வைதேசிகத்வாத். பரிவதநமாவது பரீவாதம்; நிந்தையென்றபடி. அஸ்தாநே நிந்தாபரிஹாசங்களை நிரப்பி நூல்களெழுதுவாருமுளரே; அங்ஙனம் நிந்தையையோ பரிஹாசத்தையோ அணுவளவும் புகவிடாமல் பரமபவித்ர ஸ்ரீஸூக்திகளையருளுந்தன்மை ஸ்வாமிக்கும் மாமுனிகளுக்குமே யொக்கும்.

**492.** நாநா சாஸ்த்ரார்த்த ப்ருந்தப்ரசுரபணிதிபி: ப்ராஜ்ஞஹ்ருத் ரஞ்ஜகத் வாத்—தொட்ட தொட்டவிடமெங்கும் பலபல சாஸ்த்ரார்த்தத் திரள்களே மலிந்த ஸ்ரீஸூக்திகளினாலே பண்டிதர்களின் உள்ளத்தை உகப்பிக்குந் தன்மை ஸ்வாமிக்கும் மாமுனிகளுக்குமே யொக்கும்.

**493.** பூர்வாசார்யோக்திராகாத். எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யம் தொடங்கும்போதே "பகவத் போதாயந க்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு; தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யக்க்யாஸ்யந்தே" என்றருளிச் செய்து பூர்வாசார்ய ஸூக்திகளில்

தமக்குள்ள அதிவேசாதிசயத்தை விளங்கக் காட்டியருளினர். மாமுனிகளும்* முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டு* முன்னவராம் நங்குரவர் மொழிகள் உள்ளப் பெற்றோம் முழுதும் நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம்* இத்யாதிகளாலே தமக்குள்ள பூர்வாசார்யஸூக்தி பஹுமானத்தைக் காட்டியருளினதோடு நில்லாமல், தம்முடைய வியாக்கியான க்ரந்தங்களைப் பூர்வாசார்யஸூக்திமயமாகவே அவதரிப்பித்தருளினர்.

**494.** சடரிபுமுநிராட்ஸூக்தி ஸம்வர்த்தகத்வாத். ஸ்வாமியின் வாழி திருநாமத்திலே *மாறனுரை செய்த தமிழ் மறை வளர்த்தோன் வாழியே* என்று ஓதா நின்றோம். *ஆய்ந்த பெருஞ்சீரார் சடகோபன் செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராதவுள்ளம் பெற—ஏய்ந்த பெருங் கீர்த்தி யிராமானுச முனிதன் வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்* என்று அக்காலத்து சிஷ்ய வர்க்கங்கள் பணிக்கக் காணாநின்றோம். இதுபற்றி மாமுனிகள் திறத்திலே சொல்லவேணுமோ? *சேற்றுக் கமலவயல் சூழரங்கர் தம் சீர்தழைப்பப் போற்றித்தொழ நல்லவந்தணர்வாழ விப்பூதலத்தே, மாற்றற்ற செம்பொன் மணவாளமாமுனி வந்திலனேல், ஆற்றில் கரைத்த புளியல்லவோ தமிழாரணமே * என்ற வொரு பாசுரம் போதுமே.

**495.** பீடாதீப்ரபதிஷ்டாபநக்ருதி கரணாத்=ஸ்வாமி எழுபத்து நான்கு ஸிம்ஹாஸநாதிபதி ஸ்தாபித்தருளி அவர்கள் வழியாக தர்சந நிர்வாஹம் செய்தருள்வது ஸுப்ரஸித்தம். *லக்ஷ்மீ நாதாக்ய ஸிந்தௌ சடரிபுஜலத:* இத்யாதி ச்லோக ரத்னத்தினாலும் இது ஸுவ்யக்தம். மாமுனிகளும் "திரமாக திக்கஜங்களிட்டருளும் பெருமான்" என்கிறபடியே அஷ்ட திக்கஜாசாரியர்களை ஸ்தாபித்தருளி அவர்கள் வழியாக தர்சந நிர்வாஹம் செய்தருள்வது நாடு நகரமும் நன்கறிந்தது.

**496.** திவ்யதேசாபிமாநாத்= (இதற்கு இரண்டு வகையாகப் பொருள்.) *மன்னியதென்னரங்கரபுரி மாமலை மற்றுமுவந்திடு நாள்* என்றும், *ஸ்ரீரங்கம் கரிசைல மஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலௌ...... ஸ்ரீரங்கேசஜ பத்வஜோ விஜயதே ராமாநுஜோயம் முநி:* என்றும் சொல்லுகிறபடியே ஸ்வாமி ஸகல திவ்ய தேசங்களிலும் அபிமானம் காட்டியருளினவர். மாமுனிகளும் *அடைவுடனே திருப்பதிகள் நடந்த வேர்வை பாறவோ * என்கிறபடியே திவ்யதேசயாத்திரைகள் செய்தருளி அவற்றில் அபிமானம் காட்டியருளினபடி ஸுப்ரஸித்தம்.

**497.** (அதவா) திவ்யதேசாபிமாநமாவது—திவ்ய தேசச்ரேணியில் சேராதிருந்த ஸ்தலத்தை திவ்யதேசமாக அபிமானித்தல். ஸ்வாமி திருநாராயணபுரத்திற்கு *ஒரு நாயகமாய்* என்கிற திருவாய்மொழியை ஸமர்ப்பித்து அத்தலத்தை திவ்யதேசமாக அபிமாநித்தருளினதும், மாமுனிகள் ராஜமன்னார் ஸன்னிதிக்கு * தீர்ப்பாரையாமினி* என்கிற திருவாய்மொழியை ஸமர்ப்பித்து அப்பதியை திவ்யதேசமாக அபிமானித்தருளினதும் அநுஸந்தேயம். [ * வண்துவராபதிமன்னனை. * ]

**498.** பணிராஜாவதாரத்வாத்=ஸ்வாமி சேஷாவதாரமென்பது ஸுப்ரஸித்தம். கருடவாஹன பண்டிதர் பணித்த திவ்யஸூரி சரிதத்திலும், வடுகநம்பி பணித்த யதிராஜ வைபவத்திலும் மற்றும்பல பிரபந்தங்களிலும் இது விசதம். மாமுனிகள், வரவரமுநி சதகத்திலே *துக்தோதந்வத் தவளமதுரம் சுத்தஸத்வைகரூபம் ரூபம் யஸ்ய ஸ்புடயதி தராம் பணீந்த்ராவதாரம்* என்றருளிச் செய்தபடியும் மற்றும் சரித்ரப்ரஸித்தியின்படியும் திருவனந்தாழ்வான் திருவவதாரமென்பது ஸுவ்யக்தம்.

**499.** ஸ்ரீரங்க ஸ்ரீவிவர்த்தநாத்=ஸ்வாமி *தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே * என்று எண்டிசையும் வாழ்த்துகிறபடியும், கோயிலொழுகு முதலானவற்றில் காண்கிற இதிஹாஸ விஸ்தாரப்படியும் ஸ்ரீரங்கஸ்ரீயை வளர்த்தருளினவர் என்பது விச்வவிதிதம். மாமுனிகள் திறந்து மிங்ஙனமேயன்றோ? "அரங்கநகர்வாழ இன்னுமொரு நூற்றாண்டிரும்" என்றன்றோ நிச்சலும் வாழ்த்துகின்றதுலகம்.

**500.** ஆக இத்தன்மைகளாலே, யதீந்த்ரப்ரவணஸ் ஸாக்ஷாத் யதீந்த்ரோ பாஷ்ய க்ருத் த்ருவம்—யதீந்த்ரப்ரவணரென்று திருநாமம் பெற்ற மணவாளமாமுனிகள் ஸாக்ஷாத் எதிராசரே யென்னத்தட்டில்லையென்றதாயிற்று. இங்ஙனே நிர்வஹிக்கக்கூடிய உபபத்திகள் மற்றும்பலவுள. அவற்றை அடியேனுடைய பிறநூல்களிற் கண்டுகொள்வது. ... ... ...

# ஸ்ரீராமாநுஜ பக்த ஹஸ்தபூஷணத்தில்

## விசிஷ்டாத்வைத ஸித்தாந்த ஸாரம்

**501**. "வணங்கும் துறைகள் பலபலவாக்கி மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பலபலவாக்கி" என்று நம்மாழ்வாரருளிச்செய்தபடியே உலகில் பலபலமதங்கள் தோன்றியிருந்தாலும் அவை வைதிகமதமென்றும் அவைதிக மதமென்றும் பொதுவாக இருவகுப்பாகும். வேதத்தைப் பிரமாணமாகக்கொள்ளும் மதம் வைதிகமதம். வேதத்தைப் புறக்கணித்து ஸ்வதந்திரமாகத் தோன்றிய மதம் அவைதிக மதம். அவைதிக மதங்களிற் காட்டிலும் வைதிக மதம் சிறந்ததென்னுமிடத்தை நாம் விவரிக்க வேணுமோ?

**502**. வைதிக மதங்களுள் பரமபவித்திரமான விசிஷ்டாத்வைத தரிசனம் மிகச் சிறந்து விளங்குகின்றது. நம்மாழ்வார் திருவாய்மொழி தொடங்கும்போது "உளன் சுடர் மிகுசுருதியுள் இவையுண்டசுரனே" என்கிற பாசுரத்திலே 'நாம் போதிக்கும் பரமபுருஷன் வேதங்களிலும் வேதாந்தங்களிலும் விளங்குபவன்' என்றருளிச்செய்கையாலே இக்கலியுகத்தில் அவ்வாழ்வார் தொடக்கமாகப் பரவியுள்ள விசிஷ்டாத்வைதஸம்பிரதாயம் பரம வைதிகமென்னத்தட்டில்லை. ப்ரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம் என்ற மூன்று வகுப்புகளும் நம் தரிசனத்தில் சீர்மைபெற்று விளங்குவன.

**503** "ஆழ்வார்கள்வாழி, அருளிச்செயல்வாழி, தாழ்வாதுமில் குரவர் தாம் வாழி— ஏழ்பாரு முய்ய அவர்களுரைத்தவைகள் தாம்வாழி, செய்யமறை தன்னுடனே சேர்ந்து" என்னுமுபதேசரத்தினமாலைப்பாசுரத்தில் ப்ரமாணங்களும் ப்ரமாதாக்களும் ஸாரமாகத் தெரிவிக்கப்பட்டார்கள். ஸம்ஸ்க்ருத த்ராவிட வேதங்களாகிற உபய வேதங்களும் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதிகளும் நமக்கு ப்ரமாணம். யதார்த்தஜ்ஞான நிதிகளான ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் போல் வாரான மஹாசார்யர்களே ப்ரமாதாக்களில் தலைசிறந்து விளங்குபவர். ஸகல சேதநாசேதநசரீரகனாய் ஸமஸ்த கல்யாண குணாத்மகனாக ஸ்ரீமந் நாராயணனே பரதத்துவமென்றும், அவனுடைய திருவடித் தாமரைகளில் பண்ணும் ப்ரபத்தியே பரமஹிதமென்றும், கலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யாநந்தமயமான நித்ய கைங்கர்யமே பரம புருஷார்த்தமென்றும் இங்ஙனே கூறப்படும் அர்த்த விசேஷங்களே ப்ரமேயச்ரேஷ்டங்களாக விளங்குகின்றன. ஆக இத்தகைய ப்ரமாண ப்ரமாத்ரு ப்ரமேய வைசிஷ்ட்யமே நம்முடைய தரிசனத்தின் சிறப்புக்கு ஹேதுவாகாநின்றது.

**504**. பரமவைதிகர்களென்கிற ஏற்றம் நமக்கே உரியது. ப்ரத்யக்ஷத்தாலோ அநுமானத்தாலோ அறிந்துகொள்ள முடியாத அர்த்த விசேஷங்களை யறிவிக்கும் வாங்மயமே வேதமெனப்படும். *ப்ரத்யக்ஷேணாநுமித்யா வா யஸ்தூபாயோ ந புத்த்யதே, யத் தம் விதந்தி வேதேந தஸ்மாத் வேதஸ்ய வேததா* என்கிற ப்ரமாணம் இங்கே அநுஸந்தேயம்.

**505**. வேதத்தை ப்ரமாணமாக இசையாத சார்வாக ஜைந பௌத்தாதிகள் பாஹ்யர்களெனப்படுவர். வேதத்தைப் பரமப்ரமாணமாக இசைந்துவைத்தும் பரப்ரஹ்மம் குண சூந்யமென்றும் அலக்ஷ்மீகமென்றும் அசரீரமென்றும் விபூதிவிரஹிதமென்றும் இங்ஙனே மனம்போனபடி யெல்லாம் பேசுபவர்கள் குத்ருஷ்டிகளெனப்படுவர். குத்ருஷ்டிகளானாலும் வேதத்தை ப்ரமாணமாக இசையுமவர்கள் வேதபாஹ்யர்களிற் காட்டிலும் மேம்பட்டவர்களன்றோ வென்று சிலர் நினைக்கக்கூடும். பாஹ்யர்களோடு குத்ருஷ்டிகளோடு ஒரு வாசியில்லை யென்றருளிச் செய்கிறார் கூரத்தாழ்வான் :

**506** [ஸ்ரீவைகுண்டஸ்தவே] *பாஹ்யா : குத்ருஷ்டய இதி த்விதயேபி அபாரம் கோரம் தமஸ் ஸமுபயாந்தி நஹீக்ஷஸே தாந், ஐக்தஸ்ய காநந ம்ருககர் ம்ருகத்ருஷ்ணிகேப்ஸோ : காஸாரஸத்வ நிஹதஸ்ய ச கோ விசேஷ :?* என்கிற ச்லோகம் இங்குக் காணத்தக்கது. வேதபாஹ்யர்களும் வேத குத்ருஷ்டிகளும் துல்யயோக க்ஷேமர்களென்பதற்கு ஒரு அற்புதமான த்ருஷ்டாந்தம்

காட்டுகிறார்தில். விடாய் மிகுத்துத் தண்ணீரைத் தேடியோட இரண்டு மிருகங்கள் புறப்பட்டன; அவற்றில் ஒரு மிருகமானது தடாகத்திற் புகாதே கானலைக் கண்டு பாயே ப்ரவாஹமாக மயங்கி யோடிக்கொண்டே யிருக்கையில் வழியில் புலியின் வாயிலே விழுந்து மாண்டொழிந்தது. இது இப்படியாக, மற்றொரு மிருகமானது விடாய் தீரப்பெறுவதற்கு உண்மையாகத் தண்ணீருள்ள தடாகத்திலேயே சேர்ந்தும் துறைதப்பி யிழியவே அங்குக் கிடந்த முதலையினாலே கதுவப்பட்டு மாண்டொழிந்தது. ஆக இரண்டு மிருகங்களும் தடாக ப்ரவேச அப்ரவேசங்களாலே சிறிது வைலக்ஷண்யம் பெற்றிருந்தாலும் விநாசம் இரண்டுக்கும் துல்யமே. அதுபோலவே குத்ருஷ்டிகளும் பாஹ்யர்களும் வேதப்ராமாண்ய அங்கீகார அநங்கீகாரங்களாலே சிறிது வாசிபெற்றிருந்தாலும் விநாசத்தில் வாசியற்றவர்களே யென்றதாயிற்று. அந்த பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் கிடக்கட்டும். வேதக் கடலில் நாம் உள்ளபடி அவகாஹித்து அர்த்த ரத்னங்களைக் கொள்ளைகொண்டு அநுபவித்து ஆனந்திக்கக் கடவோம்.

**507.** **வேதத்தில் காண்டமிரண்டென்கை.** வேதம் கர்மகாண்ட மென்றும் ப்ரஹ்ம காண்டமென்றும் இரு வகுப்பாகவுள்ளது. பூர்வபாகம் கர்மகாண்ட மென்றும், உத்தர பாகம் ப்ரஹ்மகாண்டமென்றும் வழங்கப்படும். உபநிஷத்துக்களையே ப்ரஹ்மகாண்டமென்பது. பகவானுக்கு ஆராதன ரூபங்களான யஜ்ஞம் முதலிய கரும விசேஷங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் கர்ம காண்ட மென்றும், அக்கருமங்களினால் ஆராதிக்கப்படுகின்ற பகவானுடைய ஸ்வரூப ரூப குணங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் ப்ரஹ்மகாண்ட மென்றும் சொல்லிற்றாயிற்று.

**508.** இதுவே உபநிஷத்தென்கிறபெயராலும் வழங்கும். உப-நிஷீததி என்கிற வ்யுத்பத்தி கொண்டது உபநிஷத்தென்கிற பதம், பகவானுடைய அருகேயுள்ளதென்கை. *வேதைச்ச ஸர்வைரஹமேவவேத்ய:* என்கிற கீதையின்படி கர்மகாண்டமுங்கூட பகவானை ப்ரதிபாதிக்கவல்லதேயாயினும் அந்த ப்ரதிபாதனம் வ்யவஹிதமாயிருக்கும். உபநிஷத்து அவ்யவதாநேந ப்ரதிபாதகமாயிருக்கும்.

**509.** **உபயமீமாம்ஸைகள் அவதரித்தமை** கூறுதல். கர்மகாண்டத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக ஜைமினியென்னும் மஹர்ஷி யெழுந்து பதினாறு அத்யாயங்களோடு கூடிய ஒரு சாஸ்த்ரத்தை யியற்றினார். அதற்குப் பூர்வமீமாம்ஸை யென்று பெயர். இதில் பன்னிரண்டு அத்யாயங்களே ஜைமினியால் இயற்றப்பட்டவை யென்றும், மேல் நான்கு அத்யாயங்கள் காசக்ருத்ஸ்ந மஹர்ஷியால் இயற்றப்பட்டவை யென்றும் ஒரு பக்ஷமுண்டு. இதைப்பற்றி இங்கு விசாரவிரிவு வேண்டா. * வ்ருத்திக்ரந்தே து ஜைமிந்யுபரசித தயா ஷோடசாத்யாய்யபாத்த* இத்யாதியான அதிகரண ஸாராவளி ச்லோகம் காண்க. "ஜைமினீயம் ஷோடசலக்ஷணம்" என்பது பொதுவான வார்த்தை. போதாயந வ்ருத்திக்ரந்தத்தில் பதினாறு அத்யாயங்களும் ஜைமினிப்ரோக்த மென்று கூறப்பட்டுள்ளது. (லக்ஷண மென்று அத்யாயத்திற்குப் பெயர்).

**510.** ப்ரஹ்மகாண்டமென்னும் உபநிஷத் பாகத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக வ்யாஸ மஹர்ஷி யெழுந்து நான்கு அத்யாயங்கள் கொண்டவொரு சாஸ்த்ரத்தை இயற்றினார். அதற்கே சாரீரகமீமாம்ஸை யென்று பெயர். உத்தரமீமாம்ஸை யென்றும் வழங்குவர். ப்ரஹ்மஸூத்ரமென்பது இதனையே. ஒவ்வோரத்யாயத்திலும் நான்கு பாதங்களுள்ளன. ஆகவே பதினாறு பாதங்கள் கொண்டது சாரீரகமீமாம்ஸை யென்றதாயிற்று. இதில் ஒவ்வொரு விஷயத்தைப் பற்றி சர்ச்சை செய்து நிர்ணயிக்கும் பகுதிக்கு அதிகரணமென்று பெயரிடப்பட்டுள்ளது. அப்படிப்பட்ட அதிகரணங்கள் இந்த மீமாம்ஸையில் (156) நூற்றைம்பத்தாறு உள்ளன. சில அதிகரணங்களில் ஒரே ஸூத்ரமிருக்கும். பல அதிகரணங்களில் பல ஸூத்ரங்களிருக்கும். மொத்தம் ஸூத்ரங்களின் லக்கம் (545) ஐந்நூற்றுநாற்பத்தைந்து என்று கணக்கிடப்பட்டிருக்கின்றது. ஆக, நான்கு அத்யாயங்களையும், பதினாறு பாதங்களையும் நூற்றைம்பத்தாறு அதிகரணங்களையும் ஐந்நூற்று நாற்பத்தைந்து ஸூத்ரங்களையுங்கொண்டது ப்ரஹ்மஸூத்ர சாஸ்த்ரமென்றதாயிற்று.

**511.** **சாரீரகமீமாம்ஸா பாஷ்யங்கள் தோன்றியது.** தத்வஹித புருஷார்த்தங்களை நாம் தெரிந்து கொள்வதற்கு உபநிஷத்துக்களே தஞ்சமாகும். அவ்வுபநிஷத்துக்களின் பொருள்களை ஸம்சய விபர்யயமற நிஷ்கர்ஷித்து விளக்கக்கூடியது இந்த ப்ரஹ்ம ஸூத்ர சாஸ்த்ரமேயாதலால் வேதாந்திகளுக்கு இதுவே புகலாயிற்று. இந்த சாஸ்த்ரத்தின் பொருளை நிஷ்கர்ஷமாகவும் நிஷ்கல்மஷமாகவும் தெரிந்துகொண்டவர்களே வேதாந்திகளென்றும் ப்ரஹ்மஜ்ஞானிகளென்றும் சொல்லத் தகுதியுடையார். மஹர்ஷிகளியற்றிய ஸூத்ரங்களின் பொருளை நம் போல்வார் சிறிதும் அறியகில்லார்களாதலால், நம்போன்ற அல்பமதிகளிடத்தில் பரமகருணை கொண்ட பூர்வர்கள் அந்த ஸூத்ரங்களின் அர்த்தத்தை விளக்கி பாஷ்யங்கள் இயற்றியுள்ளார்கள். த்வைதம் அத்வைதம் விசிஷ்டாத்வைதம் என மூன்று மதங்கள் உலக ப்ரஸித்தமாக வழங்குமவை. இம்மூன்று மதங்களிலும் பாஷ்யங்கள் அவதரித்துள்ளன. அத்வைத மதத்திற்காக சங்கராசாரிய ஸ்வாமிகள் பாஷ்யமியற்றினர். த்வைத மதத்திற்காக ஆனந்த தீர்த்த ஸ்வாமிகள் (மத்வாசார்) பாஷ்யமியற்றினர். நமது விசிஷ்டாத்வைத மதத்திற்காக பகவத் ராமாநுஜாசார்யரென்கிற ஸ்வாமியெம்பெருமானார் ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்தார்.

**512.** வட இந்தியாவில் அதிக ப்ரஸித்தி பெற்றுள்ள வல்லபமதம் நிம்பார்க்க மதம் முதலிய மதங்களுக்காகவும் பாஷ்யங்கள் தோன்றியுள்ளன. சைவ மதத்திற்காக நீலகண்ட பாஷ்யம் தோன்றியுள்ளது. இப்படி மற்றும் பல பாஷ்யங்களிருந்தாலும் மதத்ரயபாஷ்யமென்று மூன்று பாஷ்யங்களே நமது நாட்டில் குலாவப்படுகின்றன. ஸ்ரீவைஷ்ணவர்களென்றும் விசிஷ்டாத்வைதிகளென்றும் பகவத் ராமாநுஜ தர்சநஸ்தர்களென்றும் வழங்கப்படுகின்ற நமக்கு ஸ்வாமியின் ஸ்ரீபாஷ்யமே ஜீவாதுவாகும். சங்கரபாஷ்யம் மத்வபாஷ்யம் நீலகண்ட பாஷ்யம் என்பவை போலல்லாமல் ஸ்ரீபாஷ்யமென்றே தோன்றியுள்ள ப்ரஸித்தி இதன் ஒப்பற்ற பெருமையைப் புலப்படுத்தும்.

**513.** **ஸ்ரீபாஷ்யத்தின் பெருமை விளக்கம்.** உபநிஷத்துக்களின் உண்மைப் பொருளை ஸூத்ரகாரருடைய உள்ளத்திற்கு ஒத்ததாக நிஷ்பக்ஷபாதமாய் நிரூபிக்கப்பட்டது ஸ்ரீபாஷ்யமேயென்று மேனாட்டுப் புலவர்களும் மெச்சியுள்ளார்கள். அது நிற்க; ஸ்வாமி ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்யத் தொடங்கும் போதே "பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்ம ஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ்ஸஞ்சிக்ஷிபு:; தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே என்று [முன்னோர் மொழிந்த முறைதப்பாமே வியாக்யானிப்பதாக] அருளிச்செய்திருப்பதனால் ஸ்ரீபாஷ்யத்தின் ப்ராமாணிகத்வம் அசைக்க முடியாது விளங்குகின்றது.

**514.** இக்காலத்து அஸூயுக்கள் சிலர் மேலே உதாஹரித்த பங்க்தியின் மேல் வீணான விவாதத்தைக் கிளப்பி நாசமடைந்துபோனார்களென்பது நம்முடைய சததூஷணீ வஜ்ரகுடார — தத்விஜயத்வஜ — சாங்கரசிரோபூஷா — தத்விபூஷணாதிக்ரந்தங்களினால் விசதமாதலால் அதனை இங்கு விவரித்துரைக்கின்றிலோம். ஆர்ஷவ்யாக்க்யாந கவசிதமாயும் அபிப்ராசீநமாயும் பரம பவித்திரமாயுமுள்ளது விசிஷ்டாத்வைதமேயென்றும், அதைநிலை நாட்டவல்ல பாஷ்யம் ஸ்ரீ பாஷ்யமேயென்றும் ப்ராமாணிக வைதிகோத்தமர்களின் கொள்கை.

**515.** **விசிஷ்டாத்வைத சப்தார்த்த விவரணம்.** விசிஷ்டாத்வைத ஸித்தாந்தமென்னுஞ் சொல்லுக்குப் பொருள் விவரிக்கப்படுகிறது. ஸித்தாந்தமென்பதற்கு ப்ராமாணிகமாகப் பரிக்ரஹிக்கப்பட்ட அர்த்தமென்று தேர்ந்த பொருள். மதம் என்றவாறு. இரண்டாயிருக்கும் தன்மை (த்விதா) எனப்படும். த்வைதமென்றாலும் அதுவே பொருள். பேதம் என்றதாயிற்று. அத்தோடு நஞ் சேர்ந்தால் அத்வைதம் என்றாகிறது. அபேதமென்று பொருள். விசிஷ்டஸ்ய அத்வைதம்—விசிஷ்டாத்வைதம். ஸமஸ்த சேதநாசேதந வஸ்துக்களோடு கூடின ப்ரஹ்மம் ஒன்று என்று அங்கீகரிக்கப்படுவதால் இந்த தரிசனம் விசிஷ்டாத்வைதமெனப்படுகிறது. சித்தும் அசித்துமாகிய இரண்டு தத்துவங்கள் உண்மையில் இடையவே இடையாதென்றும்

ப்ரஹ்மமொன்றே உள்ளதென்றும் கொள்ளுகின்ற பிறருடைய மதத்தைத் தள்ளி, மூன்று தத்துவங்களும் உண்மையாகவுள்ளனவென்று கொள்ளுவதே இந்த தரிசனத்தில் ஸாரமானது.

**516.** **விசிஷ்டாத்வைதமென்பதற்கு வேறுவிதமான பொருளின் பொருத்தாமை** 'விசிஷ்டஸ்ய அத்வைதம்—விசிஷ்டாத்வைதம்' என்று கொள்ளுகையன்றிக்கே, 'விசிஷ்டம் ச விசிஷ்டம் ச விசிஷ்டே; விசிஷ்டயோ: அத்வைதம்—விசிஷ்டாத்வைதம் 'என்று கொண்டு ஸூக்ஷ்மசிதசித் விசிஷ்ட ப்ரஹ்மத்திற்கும் ஸ்தூல சிதசித்விசிஷ்ட ப்ரஹ்மத்திற்கும் ஐக்யம் கொள்ளுகை விசிஷ்டாத்வைதம்-என்பாருமுளர். இதில் உபபத்திகாண்பதரிது. விசிஷ்டஸ்ய அத்வைதமென்பதே உபபந்நமாகும். 'ப்ரஹ்மமொன்றே ஸத்யமானது; மற்றவையெல்லாம் மித்யை' என்று சொல்லுகிற அத்வைதிகள் ப்ரஹ்மத்தினிடத்தில் சிதசித்விசிஷ்டத்வத்தை ஒப்புக்கொள்ளுவதில்லை ப்ரஹ்மம் போலவே ஜகத்தும் ஸத்யமேயென்று அங்கீகரிக்கிற த்வைதிகளும் [மாத்வர்களும்] சேதநாசேதநங்களுக்கும் ப்ரஹ்மத்திற்கும் ரக்ஷ்யரக்ஷகபாவ ரூபமான ஸம்பந்தம் தவிர ஐக்யவ்யபதேசத்திற்குரிய ஸம்பந்த விசேஷமொன்றும் அங்கீகரிக்கின்றிலர். ஆகவே அவர்களும் ப்ரஹ்மத்தினிடத்தில் சிதசித்வை சிஷ்ட்யத்தை ஏற்றுக்கொள்வதில்லையென்பது தேறிற்று.

**517.** நமது ஸித்தாந்தத்திலோவென்னில், சேதநாசேதநாத்மகமான ப்ரபஞ்சத்தையும் ப்ரஹ்மத்தையும் ஸத்யமென்று கொள்வதோடு அவற்றுக்கு ஐக்யவ்யபதேசத்தை நிர்வஹிக்கக் கூடியதான சரீர சரீரிபாவ ரூபமான ஸம்பந்த விசேஷத்தையும் கொள்வதனாலே, உலகத்தில் உடலுக்கும் உயிருக்கும் வேற்றுமை அபலபிக்கமுடியாததாயிருக்கச் செய்தேயும் "சைத்ர: ஏக:'' என்கிற வியவஹாரம் எப்படி காணப்படுகிறதோ அப்படியே இங்கும் சேதநாசேதந சரீரகமான ப்ரஹ்மத்திற்கு ஏகத்வேந வ்யபதேசமும் பரஸ்பரம் ஸ்வரூப பேதமும் பொருந்தக் குறையில்லை. இவ்வர்த்த தத்துவத்தைக் காட்டவல்லதான 'விசிஷ்டஸ்ய அத்வைதம்-விசிஷ்டாத்வைதம்' என்னும் வ்யுத்பத்தியே யுக்தமானதென்று கொள்க.

**518.** **த்வைதத்தையும் அத்வைதத்தையும் பற்றின நிரூபணங்கள்.** ச்ருதிவாக்யங்களை யுற்று நோக்கினால் அவற்றில் இருவகையான பாகுபாடு காணப்படும். (1) பேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். (2) அபேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். **க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:** என்பது முதலான ச்ருதி வாக்யங்கள் சேதந அசேதந—ஈச்வரரூப தத்வத்ரயத்தின் உண்மையைத் தெரிவிக்கும் முகத்தால் பேதத்தைக் காட்டுகின்றன. ***நேஹ நாநாஸ்தி கிஞ்சந *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம *தத் த்வமஸி** இத்யாதிகளான ச்ருதி வாக்யங்கள் பலவகைப்பட்ட வஸ்துக்களில்லாமையைத் தெரிவிக்கும் முகத்தால் அபேதத்தைக் காட்டுகின்றன. ஆக, ச்ருதிகளில் சிலவிடத்து பேதப்ரதிபாதநமும் சிலவிடத்து அபேதப்ரதிபாதநமுமிருப்பதாகத் தேறுகையாலே பரஸ்பர விரோதம் ஸ்பஷ்டமாகிறது.

**519.** விருத்தமான அர்த்தத்தைத் தெரிவிக்கையாகிற அவத்யம் ச்ருதிகளில் இடம்பெறத்தகாது. விரோதமோ உள்ளதென்று காட்டியாயிற்று. விரோதத்தைப் போக்கி ஸமந்வயம் காட்ட வேண்டிய பொறுப்பு விமர்சகுசலர்களான வைதிகர்களுக்குள்ளது. ப்ரஹ்மமொன்றுதான் ஸத்யமென்றுகொள்ளுகிற அத்வைதிகள் அபேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களை மட்டும் முக்யமாகப் பரிக்ரஹித்து பேதத்தைக் காட்டும் ச்ருதிவாக்யங்களை உபேக்ஷித்து விட்டார்கள். த்வைதிகளோவென்னில் பேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களை மட்டும் முக்யமாகப் பரிக்ரஹித்து அபேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களை உபேக்ஷித்து விட்டார்கள்.

**520.** *யஸ்யாத்மா சரீரம், யஸ்யப்ருதிவீ சரீரம், ய ஆத்மநி திஷ்டந்* இத்யாதி வாக்யங்கள் பகவான் ப்ருதிவி முதல் ஆத்மா வரையிலுமுள்ள ஸகல வஸ்துக்களிலும் அந்தர்

யாமி யாயிருக்கிறா னென்பதை ப்ரதிபாதிக்கின்றன; இவற்றை த்வைதிகளும் அத்வைதிகளுமான இரு வகுப்பினரும் அறவே விட்டிட்டார்கள். ஸுபாலோபநிஷத்து முதலான அந்தர்யாமி ப்ராஹ்மணவாக்யங்களுக்கு உபய மதத்திலும் ஆதரவு கிடையாதென்பது ஸ்பஷ்டம். ஆக, த்வைதாத்வைத மதங்களிரண்டிலும் அநேக ச்ருதி வாக்யங்களை அமுக்யார்த்தங்களாகக் கொள்ளுதல், உபேக்ஷித்தல் இத்யாதியான பலீயஸ்ஸான தோஷமுள்ளது. இத்தகைய தோஷம் சிறிதும் தட்டப்பெறாதது நமது மதமென்னுமிடம் அடுத்தபடியாக விவரிக்கப்படுகின்றது.

**521.** மேலே யெடுத்துக்காட்டிய மூன்று வகுப்பான ச்ருதிவாக்யங்களையும் ஒரு நேராக ஆதரிப்பவர்கள் விசிஷ்டாத்வைதிகளேயாவர். ஒரு ச்ருதி வாக்யத்திலும் அமுக்யார்த்த கல்பனை யென்பது கிடையாது. எங்ஙனேயென்னில், கடைசியாக எடுத்துக்காட்டப்பட்ட *யஸ்யாத்மா சரீரமித்யாதிகளான ச்ருதி வாக்யங்களுக்கு கடக ச்ருதிகளென்று பெயர். பேதத்தையும் அபேதத்தையும் விரோத லேசமுமின்றிக்கே பொருந்தச் செய்ய வல்லவை அந்தர்யாமி ப்ராஹ்மண வாக்யங்கள் என்கிற காரணத்தினால் இவற்றுக்கு கடகச்ருதிகளென்னும் பெயர் மிகப் பொருத்தமானது.

**522** *நேஹ நாநாஸ்தி கிஞ்சந* இத்யாதிகளான அத்வைத (அபேத) ச்ருதிகளிலேற்பட்ட அபேதத்தையும் *க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர: *இத்யாதிகளான த்வைத (பேத) ச்ருதிகளிலேற்பட்ட பேதத்தையும் பொருந்தவிடும் வழி கேண்மின். சேதநாசேதந ஈச்வரர்களான மூன்று தத்துவப் பொருள்களின் ஸ்வரூப பேதம் உண்மையாதலால் க்ஷரம் ப்ரதாந மித்யாதி பேதச்ருதியானது பேதத்தைச் சொல்லி நிற்பது பாங்கே. ப்ரஹ்மம் சேதநாசேதந விசிஷ்டமாய்க்கொண்டு ஒன்றேயாகி நிற்பதால் *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* இத்யாதியான அபேத ச்ருதிகளும் பொருந்தக் குறையில்லை. *யஸ்யாத்மாசரீரமித்யாதி அந்தர்யாமி ப்ராஹ்மண ச்ருதிகளானவை ஸர்வேச்வரனை ஸர்வாந்தர்யாமி யென்று தெரிவிக்கும் முகத்தால் பேதத்தையும் பொருந்த விடுகின்றன என்பது நம் ஆசார்யர்களின் நிரூபணம்.

**523.** சிதசிதீச்வரர்களாகிற மூன்று தத்துவங்களிலும் தனிப்படக் கண்செலுத்தினால் பேதம் க்ரஹிக்கப்படுகிறது. அசேதநமாகிய சரீரம் வேறு; அதனுள்ளுறையும் சேதநன் வேறு; அவனுக்கும் அந்தர்யாமியான பரமாத்மா வேறு என்று பேதப்ரதிபத்தி சாஸ்த்ர ஸம்மதமேயாகும். பல அவயவங்களின் கூட்டரவான சரீரத்திலே கை, கால், காது, மூக்கு முதலானவற்றைத் தனியே பார்க்குமிடத்து பேத ப்ரதிபத்தியும் 'அவயவஸங்காதம் ஒன்று' என்று பார்க்குமிடத்து அபேத ப்ரதிபத்தியும் பொருந்துகின்றது. தேவதத்தன் ஒருவன், யஜ்ஞதத்தன் ஒருவன் இத்யாதி வ்யவஹாரங்களில் தேவதத்தனுக்கும் யஜ்ஞதத்தனுக்கும் ஒருமை எங்ஙனம்? என்று விமர்சிக்கவேணும்.

**524.** தேவதத்த: க்ருச:, யஜ்ஞதத்த: ஸ்தூல: இத்யாதிவ்யவஹாரங்களில் க்ருசத்வமும் ஸ்தூலத்வமும் சரீர தர்மமாகையாலே தேவதத்த யஜ்ஞதத்த சப்தங்கள் சரீர பரங்களே யென்று அறுதியிடப்படுகிறது. 'தேவதத்தோ மேதாவீ, யஜ்ஞதத்த: ப்ரதிபாவாந்' இத்யாதி வ்யவஹாரங்களில் மேதையும் ப்ரதிபையும் ஆத்ம தர்மமாகையாலே அந்த தேவதத்த யஜ்ஞதத்த சப்தங்களே ஆத்ம பரங்களென்று நிர்ணயிக்கப்படுகிறது. ஆத்மாவும் சரீரமும் ஒன்றல்ல வெவ்வேறுபட்டவை. ஆக அநேக வஸ்துக்களிருக்கச் செய்தேயும் ஏகத்வவ்யவஹாரம் நிகழ்ந்து வருவது 'சரீர விசிஷ்டனான சரீரீ ஒருவன்' என்னுமபிஸந்தியாலத்தனையன்றோ. இவ்வண்ணமாகவே 'ப்ரஹ்ம ஏகமேவ' என்ற ச்ருதியும் விசிஷ்டைக்யத்தைச் சொல்லுவதாகக் கொள்ளக் குறையில்லையே.

**525.** ஏவஞ்ச பேதத்திற்கும், அபேதத்திற்கும் அபாயமொன்றுமில்லை'யென்றதாயிற்று. சரீரங்களும் சரீரிகளுமாகிற நாநா வஸ்துஸத்பாவம் ப்ராமாணிக மாகையாலே அபலபிக்க வொண்ணாததே. இங்ஙனே விசிஷ்டைக்யமும் அநுபவஸித்தமாகையாலே அபல

பிக்க வொண்ணாததே. ஆக, சரீரி பாவ நிபந்தநமாகவே ஒன்றாக வழங்கப்படுவதாய் ஸித்திக் கையாலே அப்படிப்பட்ட சரீரசரீரிபாவத்தை யுணர்த்துகின்ற அந்தர்யாமிப்ராஹ்மணாதி ரூபங்களான ச்ருதி வாக்யங்களுக்கு நமது மதத்தில் மிகுந்த கௌரவமுள்ளது. அத்வைதிகள் பேதச்ருதிகளை அநாதரிப்பது போலவும், த்வைதிகள் அபேத ச்ருதிகளை அநாதரிப்பதுபோல வும் நாம் ஒருவகையான ச்ருதியிலும் அநாதரம் காட்டுகின்றிலோம். ஆகவே ஸர்வச்ருதி ஸாமரஸ்யம் நமக்கே யொழியப் பிறர்க்கில்லையென்பது கல்வெட்டாகத் தேறி நின்றது.

**526.** சரீராத்ம பாவமே ப்ரதாநப்ரதிதந்த்ரார்த்த மென்பது. மதாந்தரஸ்தர்கள் ஒப்புக் கொள்ளாத பல அர்த்தங்களை நாம் ஒப்புக்கொண்டிருக்கின்றோம். நித்யஸூரிஸத்பாவம், எம்பெருமானுடைய கல்யாண குணாச்ரயத்வம், திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்டத்வம் முதலா னவை அவை. இவற்றை யெல்லாம் விட்டு சரீர சரீரிபாவத்தையே கொண்டு விசிஷ்டாத்வைத மென்று பெயரிடுவதில் என்ன விசேஷமென்னில்,

**527.** கேண்மின். ஸித்தாந்தத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்ற அர்த்த விசே ஷங்களுள் ஜகச்சரீரகத்வ மென்பதே ப்ரதாநமானது. அதைப் பற்றியே இது ப்ரதாந ப்ரதி தந்த்ரார்த்த மெனப்படுகிறது. இதுவே ப்ரதாந மென்பது எங்ஙனமென்னில் ஸர்வச்ருதிகளி னுடையவும் முக்கியமான அர்த்தத்தைத் தெரிவிப்பதாய், ஸர்வச்ருதிகளுக்கும் ஸாமரஸ் யத்தை நிர்வஹித்து வாதி விஜய ப்ரயோஜகமாயிருப்பதனாலே, இதற்கு ப்ராதாந்ய மென் றுணர்க. இந்த சரீராத்ம பாவத்தைத் தெரிந்து கொள்ளாமையினாலன்றோ பிற மதத்தவர்கள் ஸர்வ ச்ருதிஸாமரஸ்யத்தை நிர்வஹிக்க மாட்டாமல் தளருகின்றார்கள். குத்ருஷ்டிகளின் குசோத்யங்களை அவலீலயா பரிஹரித்துத் தருவது இந்த சரீராத்மபாவமே யென்க.

**528.** இங்கு "யத்யேதம்யதி ஸார்வபௌமகதிதம்" இத்யாதியான வேதாந்ததேசிகர் ச்லோக ரத்நத்தைத் திடமாகக்கொள்க. இந்தப் ப்ரதாந ப்ரதிதந்த்ரார்த்தத்தை நன்கு தெரிந்து கொண்ட வொருவ்யக்தி ஸிம்ஹபீடத்தில் விமதர்கள் எத்தனை பேர்கள் கூடி எவ்வளவு வாத கோலாஹலங்களைச் செய்தாலும் அவர்களுக்கு பங்கமேதவிர வேறில்லை யென்பது இதன் கருத்து.

**529.** சரீராத்மபாவம் ஸூத்ரகாராபிமதமென்று விவரித்தல். ஸித்தாந்தத்தில் சரீராத்ம பாவமே பிரதானமென்பது கீழே உபபாதிக்கப்பட்டது. ப்ரஹ்மஸூத்ரகாரருக்கும் இதுவே அபிமதமென்பது ஸூசிக்கப்படுகிறது. இவ்விஷயத்தில் சாரீரகமீமாம்ஸை முழுவதுமே பிரமாணமாகக் காட்டக்கூடியதாயினும் வ்யுத்பித்ஸுக்களின் புத்தியில் ஏறுவதற்காக ஸம்க்ஷேபமாய் நிரூபித்தல் நலமென்று கருதி அந்த சாரீரக மீமாம்ஸையில் ஒரு அதிகர ணத்தை மட்டும் எடுத்துக் காட்டிப் பிராமாணிகர்களின் மனத்தில் பதியவைக்கிறோம். அதில் முதலத்யாயம் நான்காவது பாதத்தில் வாக்யாந்வயாதிகரணமென்பது ப்ரஸித்தமானது. நான்கு ஸூத்ரங்கள் கொண்டது இவ்வதிகரணம். ப்ருஹதாரண்யகோபநிஷத்தில் ப்ரஸித்த மான மைத்ரேயிப்ராஹ்மணமென்னும் பகுதியில் அம்ருதத்வோபாயமேதென்று கேட்ட மைத்ரேயியைக் குறித்து யாஜ்ஞவல்க்யருடைய விடை: *ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:* என்பது. இதில் ஆத்மா என்னும் சப்தத்தால் குறிக்கப்பட்டவன் பரமாத்மாவா? ஜீவாத்மாவா? என்று விசாரம் ப்ரஸக்தமாக, பரமாத் மாவே யென்று நிர்ணயம் செய்வது இவ்வதிகரணத்தின் ப்ரமேயம்.

**530.** இது *வாக்யாந்* வயாத் என்கிற முதல் ஸூத்ரத்தினால் தேறியது. மைத்ரேயி ப்ராஹ்மணத்திலுள்ள மஹாவாக்யம் ஸமஞ்ஜஸமாக அந்வயிக்க வேண்டுகையாலே அந்த வாக்யத்தில் பிரதிபாதிக்கப்பட்ட ஆத்மா கருமபலனையநுபவிப்பவனான ஜீவாத்மாவாக இருக்கமுடியாது, பரம புருஷனேயாகவிருக்கும் என்று சொல்லப்பட்டதாயிற்று.

**531.** இதற்குமேல் ஒரு கேள்வி எழுந்தது. அதாவது, இங்குப் பரமாத்மா விவக்ஷித முகில் ஜீவாத்மவாசகமான ஆத்மா என்கிற சொல்லையிட்டுச் சொல்லுவானேன்? பரமாத்மா வென்றே பிரயோகிக்கலாகாதா? என்று. இக்கேள்விக்கு ஸூத்ரகாரரான வியாஸரால் மேலே மூன்று ஸூத்ரங்களினால் ஸமாதானம் தெரிவிக்கப்பட்டுள்ளது. அடைவே ஆச்மரத்ய மதம், ஔடுலோமிமதம், காசக்ருத்ஸ்ந மதம் என மூவருடைய மதம் காட்டப்பட்டுள்ளது. மூறையே ஸூத்ரங்கள்—

1. ப்ரதிஜ்ஞாஸித்தோ லிங்கமாச்மரத்ய :-
2. உத்க்ரமிஷ்யத ஏவம்பாவாதித்யௌடுலோமி:
3. அவஸ்திதேரிதி காசக்ருத்ஸ்ந:

என்கிற இம்மூன்று ஸூத்ரங்களும் மூன்று மஹர்ஷிகளின் நிர்வாஹங்களைத் தெரிவிப்பன வாம். இவற்றை அடைவே சிறிது விவரிக்கிறோம்.

**532.** [ஆச்மரத்யமதம்] ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு கார்ய காரண பாவம் சுருதி யில் சொல்லப்பட்டிருக்கின்றது; ஆதலால் அவர்களுக்கு அபேதம் ஏற்படுகிறது. காரணமான மண்ணுக்கும் அதன் கார்யமான பானைக்கும் அபேதம் காண்கிறதன்றோ. ஆக இவ்வபேதத்தைத் தெரிவிப்பதற்காக பரமாத்ம ஜீவாத்மாக்களுக்கு ஐக்யோக்தியுள்ள தென்றார் ஆச்மரத்யர்.

**533.** [ஔடுலோமிமதம்] கீழே காட்டிய ஆச்மரத்ய மதத்தில் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவினிடத்திலிருந்து உத்பத்தியைக் கொள்ளுகையாலே *ந ஜாயதே ம்ரியதே வா விபச்சித்* இத்யாதி ப்ரமாணங்களோடு அது விரோதிக்கையாலும் மற்றும் அநேக தோஷப்ர ஸங்கத்தாலும் ஆச்மரத்ய மதம் ஸாருவன்றென்று கொண்ட ஔடுலோமியானவர்—முக்தி தசையில் பவிஷ்யத்தான ஜீவாத்ம பரமாத்ம அபேதத்தையவலம்பித்து ஐக்யம் சொல்லிற்றாக நிர்வஹித்தார்.

**534.** [காசக்ருத்ஸ்நமதம்] கீழே விவரித்த ஔடுலோமி மதத்தில் மோக்ஷம் வரையில் ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு பேதமுண்டென்றும், முக்தி தசையில் அபேதமென்றும் கொள்ளப்படுகிற விது, *பரமாத்மாத்மனோர்யோக: பரமார்த்த இதீஷ்யதே, மித்யைதத் அந்யத் த்ரவ்யம்ஹி நைதி தத் த்ரவ்யதாம் யத:* என்கிற ஸ்ரீ விஷ்ணுபுராணவசனவிருத்தம். வெவ்வேறுபட்ட பொருள்கள் ஒன்றோடொன்று சேருமேயொழிய ஐக்யத்தையடைய மாட்டாவென்று இதில் ஸ்பஷ்டமாகக் கூறியிருக்கின்றதன்றோ. முக்தி தசையில் ஜீவாத்மா வுக்கு அபஹத பாப்மத்வாதி ஸ்வரூபம் ஆவிர்ப்பவிக்குமதொழிய பரமாத்மாவோடு ஐக்யா பத்தியென்பதில்லை யென்னுமிடம் (4-4-1) ஸம்பத்யாவிர்ப்பாவாதிகரணத்தில் நிர்ணயிக்கப் பட்டுள்ளது. ஆக இத்தன்மைக்கும் முரணாக நிர்வஹிப்பது அநுசிதம் என்றுகொண்ட காசக்ருத்ஸ்நர்—பரமாத்மா ஜீவாத்மாவினுள் அந்தராத்மாவாக இருப்பதும், ஜீவாத்மாவுக்குப் பரமாத்ம சரீரத்வமும் *ய ஆத்மநி திஷ்டந்...யஸ்யாத்மா சரீரம்* இத்யாதி ச்ருதிஸித்தமாகை யாலும், சரீர வாசகங்களான சப்தங்களுக்கு சரீரி பர்யந்த வாசகத்வம் ஆக்ருத்யதி கரண ஸித்தமாகையாலும் ப்ரக்ருதத்தில் ஜீவாத்மவாசியான ஆத்ம சப்தத்தைப் பரமாத்மபர்யந்த வாசகமாக நிர்வஹிப்பதுதான் உசிதமென்று கருதினர்.

**535.** இங்ஙனே வரிசையாக மூன்று மதங்களை உதாஹரித்த ஸூத்ரகாரர் மேலே நான்காவது மதத்தைச் சொல்லாமையினால் காசக்ருத்ஸ்ந மதமே ஸூத்ரகாராபி மதமென்று நிஸ்ஸந்தேஹமாக நிர்ணயிக்கப்படுகிறது. இது விசிஷ்டாத்வைத மதத்திற்கு விஜயத்வஜ மானது.

**536.** காசக்ருத்ஸ்நமதத்தை நன்கு உபபாதித்தல். இங்கே அத்வைதிகள் சொல்லுவ தென்னவென்றால், காசக்ருத்ஸ்நமதந்தான் ஸூத்ரகாராபிமதமென்பதிது எமக்கும் ஸம்மதம்.

ஆனால் அவஸ்திதே: என்பதற்கு—'பரமாத்மாவானவர் ஜீவாத்மாவினிடத்தில் அந்தர்யாமியா யிருப்பதனாலே' என்று நீங்கள் கூறுகின்ற பொருள் ஸாதுவன்று. 'பரமாத்மாதானே ஜீவாத்மாவாக இருப்பதனாலே' என்கிற பொருள்தான் அவஸ்திதே: என்பதற்கு ஸமஞ்ஜஸமாகும். ப்ரக்ருதத்தில் ஐக்யத்தைப் பொருந்தவிட வேண்டியது ப்ரதானம். இங்ஙனே பொருள் கூறினாலும் ஐக்யம் பொருந்திவிடுகின்றதன்றோ காசக்ருத்ஸ்நர் சரீராத்மபாவத்தை யவலம்பித்தே ஐக்யத்தைப் பொருந்தவிட்டாரென்று ஏதுக்குச் சொல்லவேண்டும்? என்கிறார்கள் அத்வைதிகள்.

**537.** இது ஸமஞ்ஜஸமானவாதமன்று என்பதை நன்கு நிரூபிக்கிறோம். *அத்தா சராசரக்ரஹணாத்* என்கிற உபக்ரமஸூத்ரத்தைக் கொண்ட அத்த்ரதிகரணத்தில் *குஹாம் ப்ரவிஷ்டாவாத்மாநௌ ஹி தத்தர்சநாத்* என்கிற ஸூத்ரத்தில் த்விவசநாந்தமான ஆத்மாநௌ என்கிற சப்தத்தினால் பரஸ்பரபிந்நஸ்வரூபசாலிகளான ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு ஹ்ருதயகுஹாப்ரவேசம் ச்ருதி ஸித்தமென்று தெரிவிக்கப்பட்டுள்ளது. இதனால் ஜீவ ப்ரஹ்மங்களுக்கு நிருபாதிகமான பேதமான ச்ருதிக்கு அபிமதமென்று ஸூத்ரகாரர் அபிப்ராயப்பட்டிருப்பது ஸ்பஷ்டமாகத் தெரியவருகிறது.

**538.** ஆக ஜீவப்ரஹ்மங்களுக்கு ச்ருத்யபிமதமான ஸ்வரூப பேதம் பழுதுபடாதபடி நிர்வஹிப்பதுதான் ஸூத்ரகாராபிமதமென்று இசைந்து தீரவேணும். ஏவஞ்ச, ஜீவப்ரஹ்மங்களுக்கு ஸ்வரூபைக்யத்தை யவலம்பித்து நிர்வஹிக்க வந்தது *அவஸ்திதேரிதி காசக்ருத்ஸ்ந:* என்கிற ஸூத்ரமென்று சொல்லுவது பொருந்தமாட்டாது

**539** மேலும், அவஸ்திதி: என்கிற சப்தமானது "பூதலே கட: அவதிஷ்டதே, ப்ராஸாதே தேவதத்த: அவதிஷ்டதே" இத்யாதி வ்யவஹாரங்களிற்போல ஒரு வஸ்துவில் மற்றொரு வஸ்து இருப்பதைத்தான் சொல்லக்கடவது: "ப்ருதிவ்யாம் திஷ்டந் அப்ஸு திஷ்டந் தேஜஸி திஷ்டந் வாயௌ திஷ்டந் ஆகாசே திஷ்டந் ஆத்மநி திஷ்டந்." இத்யாதிகளான உபநிஷத் வாக்யங்களில் பலகால் காணப்படுகிற ஸ்தாதாது ப்ரயோகத்தை அடியொற்றியே அவஸ்திதே: என்கிற ஸௌத்ர ப்ரயோகமுள்ளதென்பதை ப்ராமாணிகர்களின் உள்ளம் அநாயாஸமாக க்ரஹிக்கும்.

**540.** ஆக காசக்ருத்ஸ்ந மதம் அத்வைதிகள் கூறுகிறபடி பொருந்தாது. ஏவஞ்ச வாக்யாந்வயாதிகரணத்தில் விசிஷ்டாத்வைதமே ஸித்தாந்தீகரிக்கப்பட்டதென்று தெளிவாயிற்று. இஃது சாரீரக மீமாம்ஸா சாஸ்த்ரத்திற்கு அத்வைதத்தில் நோக்கில்லை யென்பதும் அத்வைத கண்டனத்தில் தான் முழு நோக்கு என்பதும் பல பல ப்ரஹ்ம ஸூத்ரங்களைக் கொண்டே நிரூபிக்கப்பட்டது. இனி அந்த சாரீரக மீமாம்ஸா சாஸ்திரத்திற்கு நாராயண பாரம்ய ப்ரதிபாதனத்தில்தான் முழு நோக்கென்னுமிடம் ஸூசிக்கப்படுகின்றது.

**541.** ஜகத்காரண வஸ்துவாதிகளான வேதாந்த வாக்யங்களெல்லாம் ஸ்ரீமந் நாராயணனிடத்திலே தான் பர்யவஸிக்கின்றன என்று ஸூத்ரகாரர் தாமே ஸித்தாந்தம் செய்திருக்கிறாரென்பதை நன்கு நிரூபித்துக் காட்டுகிறோம். *அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா* என்று ப்ரஹ்ம விசாரத்தை ப்ரஸ்தாவித்து *ஜந்மாத்யஸ்ய யத*; என்கிற அடுத்த ஸூத்ரத்தினாலே, 'எந்த வஸ்துவினிடத்தில் நின்றும் ஜகஜ் ஜந்ம ஸ்திதி லயங்கள் ஆகின்றனவோ அது ப்ரஹ்மம்' என்று ப்ரஹ்ம லக்ஷணம் காட்டினார் வியாஸர். வேதாந்தங்களில் ஜகத்காரண வஸ்துவைத் தெரிவிக்கின்ற வாக்யங்கள் ஒரே விதமாக இல்லை. பரஸ்பர விருத்தங்கள் போல் தோன்றுகின்றன என்பது ப்ரஸித்தமான விஷயம். ஏதோ ஒரு வஸ்துதான் ஜகத் காரணமாக இருக்க முடியுமே ஒழிய பல வஸ்துக்கள் அப்படி யிருக்க முடியாதென்கிற நிச்சயம் ஆவச்யகமானது. பரஸ்பர வாக்யங்களாலே இந்த நிச்சயம் எப்படி உண்டாகுமென்று தோன்றக் கூடிய சங்கையை ஸூத்ரகாரர் பரிஹரித்தே யிருக்கிறார். எப்படி பரிஹரித்திருக்கிறாரென்றால், ஸகல காரண வாக்யங்களுக்கும் ஐககண்ட்யத்தைக் காட்டிப் பரிஹரித்திருக்கிறார்.

ஸாகாங்க்ஷ வாக்யங்களுக்கு நிராகாங்க்ஷ வாக்யங்களில் பர்யவஸானம் ந்யாய்யமென்பது யாவருமிசைந்த தொன்றாம். இதையே நெஞ்சில் கொண்ட வ்யாஸ மஹர்ஷியானவர் ஈக்ஷத்யதிகரணம் முதலானவற்றால் காரண வாக்யங்கள் எல்லாவற்றிற்கும் புருஷஸூக்த ப்ரதிபாத்யனான நாராயணனிடத்தில் பர்யவஸாநத்தைக் காட்டியுள்ளார். இது தன்னை இங்கு விளக்கமாக உபபாதிக்கிறோம்.

**542.** **காரண வாக்யங்களில் ஸாகாங்க்ஷம் நிராகாங்க்ஷம் என்கிற பேதத்தை விவரித்தல்.** ஜகத்காரண வஸ்துவை ப்ரஸ்தாவிக்கின்ற வாக்யங்கள் காரண வாக்யமெனப்படும். அந்த வாக்யங்களை ஸாகாங்க்ஷ வாக்யங்களென்றும், நிராகாங்க்ஷ வாக்யங்களென்றும் இருவகையாகப் பிரித்துக்கொள்ள வேண்டியது முதற் காரியம். ஸாகாங்க்ஷ வாக்யங்களென்பவை தாமும் இரு வகையாயிருக்கும். 1, ஸாமான்ய சப்தத்தோடு கூடியிருந்து விசேஷப்ரதிபத்தியை அபேக்ஷித்திருக்குமவை, 2, அநுவாத ரூபமாய்க் கொண்டு புரோவாதத்தை அபேக்ஷித்திருக்குமவை—என்று. *ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்* ஸேயம் தேவதைக்ஷத* இத்யாதி வாக்யங்களில் 'ஸத்' என்றும் 'தேவதா' என்றும் ஸாமான்ய சப்தங்களேயிருக்கையாலே இவை விசேஷ ப்ரதிபத்தி ஸாகாங்க்ஷங்களென்பது ஸ்பஷ்டம். *யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே* இத்யாதி வாக்யங்கள் யச்சப்த கடிதங்களாயிருப்பது பற்றி அநுவாத ரூபங்களாகையாலே புரோவாத ஸாகாங்க்ஷங்களென்பதும் ஸ்பஷ்டம். ஸாகாங்க்ஷ வாக்யங்களில் மேற்சொன்ன இரண்டு வகைகள் தவிர மூன்றாவது வகையும் ஒன்று சொல்லவேண்டியதாகிறது:

**543.** அதாவது, அயோக்யமான அர்த்தத்தைத் தெரிவிக்கும் வாக்யங்கள் யோக்யார்த்த ப்ரதிபத்தி ஸாகாங்க்ஷமாயிருப்பதாம். ப்ரதர்தந வித்யையில் *மாமுபாஸ்வ ஏதத்தேவாஹம் மநுஷ்யாய ஹிததமம் மந்யே* என்று இந்திரன் சொன்ன வாக்யம் போன்றவை இந்த வகுப்பில் சேரக் கூடியவை. ஆக மூவகுப்பாகப் பிரிவுற்ற ஸாகாங்க்ஷங்களான காரண வாக்யங்கள் வஸ்து விசேஷத்தை நிர்ணயிப்பதில் ஸ்வதந்திரமாக அசக்தங்களாகையாலே நிராகாங்க்ஷங்களான வாக்ய விசேஷங்களைக் கொண்டே வஸ்து விசேஷத்தை நிர்ணயிக்க வேண்டியதாகிறது. யோக்யார்த்த விசேஷ ப்ரதிபாதகங்களாய்க் கொண்டு இதர வாக்யங்களை எதிர்பாராத வாக்யங்களே நிராகாங்க்ஷ வாக்யங்களென்று தேறிற்று.

**544.** *ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசாந:* இத்யாதி வாக்யங்களே அப்படிப்பட்டவை என்று ஸாரஜ்ஞர்கள் நிஷ்கர்ஷித்துள்ளார்கள். மேலே காட்டிய வாக்ய விசேஷத்தில் ஸாமாந்ய சப்தம் சேர்ந்திருக்கவில்லை, அநுவாத ரூபத்வமுமில்லை; அயோக்யார்த்த ப்ரதிபாதநமுமில்லை. ஸத், ப்ரஹ்ம, ஆத்மா, தேவதா இத்யாதிகளான பதங்களிருந்தாலன்றோ ஸாமான்ய சப்தம் சேர்ந்திருப்பதாக ஆகும். அவை இல்லையே, யச்சப்த கடிதமாயிருந்தாலன்றோ அநுவாத ரூபமாக ஆகும், அதுவுமில்லையே. அயோக்யார்த்த ப்ரதிபாதகத்வமில்லாமையோடு கூடின அயோக்யார்த்த ப்ரதிபாதகத்வமே யுள்ளதென்பது நிரூபிக்கப்பட வேண்டியதாக நிற்கையாலே அது நிரூபிக்கப்படுகிறது அடுத்தபடியாக.

**545.** **ஈக்ஷத்யதிகரணத்தினால் நாராயணனுக்கே ஜகத்காரணத்வம் விளக்கப்படுவது.** சாரீரக மீமாம்ஸையில் சாஸ்த்ராரம்ப ஸமர்த்தநார்த்தமான சதுஸ்ஸூத்ரீ முடிந்ததும் ஐந்தாவது அதிகரணம் ஈக்ஷத்யதிகரணம். இதில் விசேஷித்துக்குறிக் கொள்ளத்தக்க ஸூத்ரங்கள் இரண்டு; *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத் *கதிஸாமாந்யாத்* என்னுமிவை; ஸாதாரணமான ஸச்சப்தத்தையும் தேவதா சப்தத்தையும் கொண்டிருக்கிற ஸத்வித்யையானது புருஷஸூக்த ப்ரதிபந்நனான ஸ்ரீமந் நாராயணன் பக்கலிலே பர்யவஸிப்பதாக இவ்விரண்டு ஸூத்ரங்களாலும் காட்டப்படுகிறது. *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்* என்கிற ஸூத்ரத்தின் பொருளை முன்னம் தெரிந்து கொள்ளவேணும். 'தந்நிஷ்டஸ்ய' என்கிற [illegible]த்துள்ளதான தச்சப்தத்தினால்—ஸூத்ரகாரர் கருதிய விஷய வாக்யத்திலுள்ள ஸச்சப்தவாச்யமான வஸ்து கொள்ளப்

படுகிறது. ஆகவே, ஸத்தை உபாஸிப்பவனுக்கு என்பதாகப் பொருள் தேறிற்று. ஸத்தை உபாஸிப்பவனுக்கு முக்தி கிடைப்பதாக ஓதப்படுவதால் ப்ரக்ருத ஸச்சப்த வாச்யமான வஸ்து ப்ரதானமாக மாட்டாது என்றதாக ஸூத்ரார்த்தம் தேறும். 'ப்ரதானந்தான் ஜகத் காரணம்' என்பவர்களை நிரஸிப்பதன்றோ ப்ரஸ்துதம். புருஷஸூக்தத்திலும் உத்தர நாராயணத்திலும் *தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி நாந்ய: பந்தா அயநாய வித்யதே* என்றும், *நாந்ய: பந்தா வித்யதே அயநாய* என்றும் மோக்ஷோபாயமான உபாஸநத்திற்கு இலக்காகுந்தன்மை நாராயணனுக்கே ஓதப்பட்டுள்ளது.

**546.** இந்த ஸத்வித்யா ப்ரகரணத்திலும் [அதாவது, ச்சாந்தோக்யத்தில்] *ஆசார்யவாந் புருஷோ வேத; தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே* என்று ஸதுபாஸனமே மோக்ஷோபாயமாகச் சொல்லப்பட்டது. இந்த ச்ருதி வாக்யத்தின் பொருளாவது, எவனுக்கு உபதேஷ்டாவான ஆசார்யன் இருக்கிறானோ அவனே ப்ரஹ்ம வித்தாவான், சரம சரீரத்திலிருந்து விடுபடுமளவே அவனுக்குக் கால தாமதம்; சரம சரீரம் விழுந்தவுடனே ஸச்சப்த நிர்திஷ்டனும் ஜகத் காரண பூதனுமான பரம புருஷனை அடைகின்றான். ஸதுபாஸன நிஷ்டனுக்கு சரீரம் விழுமளவுதான் மோக்ஷப்ராப்தியில் தாமதம்; சரீரம் தொலைந்தவுடனே முக்தனாகிறான்—என்பதாம். இதனால் நாராயணனே ஸச்சப்த வாச்யனென்று அறுதியிடப்படுவதனால் ப்ரக்ருதமான ஸத்து ப்ரதானமன்று என்றதாக ஸூத்ர தாத்பர்யம் தேறுகிறது. *தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி* இத்யாதிகளான உதாஹ்ருத வாக்யங்களாலே நாராயணோபாஸனந்தான் மோக்ஷோபாய மென்று நிச்சயிக்கப்பட்ட வளவில் *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்* என்று ஸூத்ர மியற்றின மஹர்ஷியானவர் நாராயணோபாஸகனையே விவக்ஷித்தாராகிறார் என்று நிர்ணயிப்பதில் தட்டுண்டோ?

**547. *தந்நிஷ்டஸ்யேத்யாதி ஸூத்ரத்தின் விவரணம்** இங்கே நாம் விவரித்த விஷயத்தில் பிறர் சொல்லக்கூடிய தொன்றுண்டு; அதாவது: தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேச மாகிற ஹேதுவைக் கொண்டு ப்ரதானம் ஜகத்காரணமன்று என்று நிரஸிப்பது மட்டுமே இங்கு ஸூத்ரகாரருக்கு உத்தேச்யமானது; நாராயணனே ஜகத்காரணபூதனென்று ஸ்தாபிப்பதில் இங்கு நோக்கே கிடையாது. சப்தத்தினால் கிடைப்பதற்கு மேற்படக் கொள்ளத்தகாது என்று. (இதற்கு மறுப்பு) இங்ஙனம் சொல்வது தவறு, இதர ப்ரதிக்ஷேபத்தில் மட்டுமே ஸூத்ர தாத்பர்ய மென்று கொண்டால் ந்யூநதையாகும். இந்த வேதாந்த சாஸ்த்ரம் எதற்காக ஆரம்பிக்கப்பட்டதென்று பார்க்க வேணும்; முமுக்ஷுவானவனை மோக்ஷோபாய பூதமான வஸ்துவை உபாஸிப்பதில் ப்ரவர்த்திக்கச் செய்வதன் பொருட்டு விசிகித்ஸையற்ற ப்ரஹ்மஜ்ஞாநோத்பாதநத்தின் பொருட்டு சாஸ்த்ரம் ஆரம்பிக்கப்பட்டது. சாஸ்த்ராரம்பத்திற்குப் பலன் இதுதானென்பதை வேதாந்திகள் யாவரும் ஸமரூபமாக இசைந்தே தீருவார்கள். 'ஜகத் ஜந்மாதி காரணம் ப்ரஹ்ம' என்று ப்ரஹ்ம லக்ஷணம் சொல்லி ப்ரதாநாதிகள் ஜகத் காரணமன்று என்று கண்டித்த வளவில் விசிகித்ஸையற்ற ப்ரஹ்மஜ்ஞாநோத்பாதனம் செய்ததாக ஆய்விடுமோ? ஒரு நாளுமாகாது. ப்ரஹ்ம ருத்ராதிகளிடையில் எந்த தேவதை ஜகஜ்ஜந்மாதி காரணம்? என்கிற விசிகித்ஸை பரிஹரிக்கப்படாத அளவில் நிஸ்ஸம்சய ப்ரஹ்மஜ்ஞாநோத்பாதனம் செய்யப்பட்டதாக ஆகாமாட்டாதென்பதைப் பேதையருமறிவர். ஏவஞ்ச, இன்ன தேவதைதான் ஜகத்காரணமென்று நிஸ்ஸந்தேஹமாகத் தெரிவிக்கப்படாத அளவில் சாஸ்த்ராரம்ப ப்ரயோஜனம் தேறாமையாலே ந்யூநதைக்குப் பரிஹாரமே ஏற்படாது.

**548.** ஆகவே, ஜகத்காரண பூதப்ரஹ்ம சப்தவாச்யமான தேவதா விசேஷம் இன்னதென்று நிர்த்தாரணம் செய்வதிலும் சாஸ்த்ரம் தத்பரமானது என்று இசைந்து தீர வேண்டும். *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்* என்கிற ஹேத்வுக்தியின் ஸ்வாரஸ்யத்தினாலும் தேவதா விசேஷ நிர்ணயத்தை ஸூத்ரகாரர் செய்யக் கருதியுள்ளாரென்பது செவ்வனே விளங்காநின்றது. மோக்ஷோபாய பூதமான வஸ்துவுக்கு உபாஸந விஷயத்வம் யாதொன்று இங்குச் சொல்லப்பட்டிரா நின்றதோ இது ப்ரதாநாதி ப்ரதிக்ஷேபக மாத்ரமே யன்று, தேவதா

விசேஷ விஷயகத்வத்தை ஸாதிப்பதாகவுமாகின்றது. *தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி* என்கிற ச்ருதி வாக்யத்திலுள்ளதான தச்சப்தமானது எந்த தேவதா விசேஷத்தைச் சொல்லுகின்றதோ, அதனையே *தந்நிஷ்டஸ்ய* என்கிற ஸூத்ரத்திலுள்ள தச்சப்தமும் சொல்லக்கடவதென்பது திண்ணம். *வாஸுதேவ மநாராத்ய கோ மோக்ஷம் ஸமவாப்ஸ்யதி* என்பது முதலான பல ப்ரமாண வசனங்களை இங்கு அநுஸந்திப்பது.

**549.** ஆக, மோக்ஷ ஹேதுத்வமாகிற லிங்கத்தினால் ஸச் சப்தத்தின் பொருளை நிஷ்கர்ஷிப்பவரான வியாஸ முனிவர் தமது ஸூத்ரத்தில் நாராயணனையே கருதினாரென்பது நிச்சயம். ஸச்சப்த வாச்யன் நாராயணனே என்பது மற்றொரு ப்ரகாரத்தாலும், நிர்ணயிக்கத்தக்கதாம். அதாவது, புருஷ ஸூக்தத்திலும், உத்தர நாராயணத்திலும் *ஸர்வாணி ரூபாணி விசித்ய தீர: நாமாநி க்ருத்வா அபிவதந் யதாஸ்தே* என்பதனால் நாமரூபவ்யாகர்த்தாவாக இருக்கும் தன்மை சொல்லப்பட்டது. இது ஸத்வித்யா ப்ரகரணத்திலும் *ஸேயம் தேவதா இமாஸ்திஸ்ரோ தேவதா அநேந ஜீவேநாத்மனா அநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரோத்'' என்றோதப்பட்டிருப்பது. ஸச்சப்தவாச்யன் நாராயணனே என்பதற்கு ப்ரத்யபிஜ்ஞாபகமாகும்.

**550.** *கதிஸாமாந்யாத் என்கிற ஸூத்ர விவரணம்*. ஈக்ஷத்யதிகரணத்திலிருந்து மேலே நாமெடுத்துக் காட்டின இரண்டு ஸூத்ரங்களில் *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்* என்கிற முந்தின ஸூத்ரத்தைப் பற்றிச் சொல்ல வேண்டுமவை சொன்னோம் கீழ்; இனி *கதிஸாமாந்யாத்* என்கிற அடுத்த ஸூத்ரத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். [*கதிஸாமாந்யாத்.] கதியாவது ப்ரவ்ருத்தி; அதாவது அர்த்த போதகத்வம். [ஸாமாந்யாத்] அது ஸமாநமாயிருக்க வேண்டியது ஆவச்யகமாகையாலே என்று பொருள். காரண வாக்யங்களெல்லாம் ஒருமிட்டிருக்க வேண்டுகையாலே என்றபடி.

**551.** **அதிகரணந்தோறும் விஷயவாக்யங்கள் நாராயண பரங்களே.** பலசொல்லி என்? ஸாரமாகச் சொல்லலாவதிவ்வளவே. ஸூத்ரங்களின் பொருளை நிர்வஹிப்பதற்கு உபநிஷத்துக்களிலிருந்து விஷயவாக்யங்கள் கொள்ளப்படுகின்றனவென்பது யாவருமறிந்ததே. சங்கர பாஷ்யத்திலும் ஸ்ரீபாஷ்யத்திலும் பெரும்பாலும் விஷயவாக்யங்கள் வெவ்வேறாகக் கொள்ளப்படாமலிருப்பதையும் காண்கிறோம். அந்தவிஷயவாக்யங்களிலெல்லாம் சொல்லப்படுகிற தன்மைகள் ஸ்ரீமந்நாராயணனுக்கே அஸாதாரணங்களென்பது ச்ருதிபுராணாதிகளில் ப்ரஸித்தம்—என்கிற விதத்தையும் முக்யமாகக் குறிக்கொள்க ஆனந்தமயத்வம், ஆதித்ய மண்டலத்திலுள்ளிருத்தல் புண்டரீகாக்ஷத்வம், அபஹதபாப்மத்வம், மோக்ஷார்த்த உபாஸந விஷயத்வம், அக்நி இந்திரன் முதலிய ஸர்வ தேவதைகளுக்கும் அந்தர்யாமியாயிருத்தல், ஸர்வ பூதங்களுக்கும் அந்தர்யாமியாயிருத்தல் இத்யாதிகளான தரும விசேஷங்களுக்கு இருப்பிடமான வஸ்துவே ஜகத்காரணமாகக் கூடியதென்று நிஷ்கர்ஷிக்கின்ற ஸூத்ரகாரருடைய உள்ளத்தில் ஸ்ரீமந்நாராயணனே உறைந்திருக்கின்றானென்பது ப்ராமாணிகர்களுக்கு அறிவரிதன்று. இனி ஆதிசங்கராசாரியர் நாராயணபாரம்யத்தையே ஸ்தாபித்தவரென்பது நிரூபிக்கப்படுகிறது.

**552.** **ஆதிசங்கராசார்யருடைய நாராயண பக்தியை விளக்குதல்** பகவத்பாதர் இயற்றிய விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் தேவதாந்தரங்களுக்கு அவரத்வத்தை நிலைநாட்டி ஸ்ரீமந்நாராயணனுக்குப் பரத்வம் ஸ்தாபித்திருப்பது கதிராயிரமிரவி கலந்தெறித்தாலொப்ப விளங்காநின்றது. விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கு பாஷ்யம் செய்த பகவத் பாதர் சிவ ஸஹஸ்ர நாமத்திற்கு ஏன் பாஷ்யம் செய்யவில்லை என்று வினவினால், "அப்போது சிவ ஸஹஸ்ரநாமஸ்துதியில்லை; பிற்பட்டகாலத்தில்தான் அது உண்டாயிற்று; ஆதலால்தான் அதற்கு பாஷ்யம் செய்ய ப்ரஸக்தியுண்டாகவில்லை'' என்கிறார்கள். அது நிற்க. பாஞ்சராத்ராகம ப்ராமாண்யாதிகரணத்தில், *உத்பத்த்ய ஸம்பவாத்* என்கிற ஸூத்ரபாஷ்யத்தில் ''தத்ர பாகவதா மந்யந்தே'' என்று தொடங்கி பாஞ்சராத்ராகம ப்ரமேயங்களான விஷயங்கள் மூன்றென்று ஸங்க்ரஹித்து, அவற்றுள் இரண்டு விஷயங்களில் தம்முடைய ஸம்மதியைக் காட்டி,

மூன்றாவதான ஒரு விஷயத்தில் மட்டும் வைமத்யம் காட்டியுள்ளார், பகவத்பாதர். தமக்கு ஸம்மதமாகக் காட்டின இரண்டு விஷயங்கள் இவை ;—(இங்கு அவருடைய பங்க்திகளையே உதாஹரிப்போம்). "தத்ர யத்தாவதுச்யதே யோஸௌ நாராயண: ப்ரஸித்த: பரமாத்மா ஸர்வாத்மா இதி, தத் ந நிராக்ரியதே. யதபிதஸ்ய பகவத: அபிகமநாதிலக்ஷணமாராதநம் அஜஸ்ரமநந்யசித்ததயா அபிப்ரேயதே, ததபி ந ப்ரதிஷித்யதே; ச்ருதி ஸ்ம்ருத்யோரீச்வரப்ரணிதாநஸ்ய ப்ரஸித்தத்வாத்" என்பன அவருடைய பாஷ்ய பங்க்திகள். இவற்றால், ஸ்ரீமந் நாராயணனுக்கே பாரம்ய ப்ரதிஷ்டாபநத்தில் பகவத் பாதர் ஊக்கமுடையவரென்பது மறுக்கத்தக்கதன்று. சர்வாதி ஸாமாந்ய சப்தங்களுள்ளவிடங்களில் வாஸுதேவ நாராயணாதி விசேஷ சப்தங்களையிட்டு வியாக்யானம் செய்யத் தொடங்கினவரும் பகவத் பாதரேயாவர். மேலெடுத்துக்காட்டின *உத்பத்த்யஸம்பவாதிகரணபாஷ்யபங்க்தியில் "பகவதோ நாராயணஸ்யாபிகமநாதிலக்ஷணமாராதநமஜஸ்ரம்" என்றவிடத்தில் [அநந்யசித்ததயா] என்றெழுதப்பட்டுள்ளதில் இதாலிக்கனர்கள் கண்மூடிகளாயிருக்கின்றனர். ருத்ராதிகளான அந்யர்களிடத்திலும் சித்தத்தை வைத்துச் செய்யப்படுகிற ஸ்ரீமந்நாராயணாராதநம் அநந்யசித்தகருமாக எப்படியாகுமென்பதை அவர்கள் ஆலோசிக்க மாட்டுகிறிலர். நாராயணனைப் பரிவாரத்தோடுங்கூட ஆராதிப்பதும் சிந்திப்பதும் செய்தால் இது அநந்யசித்தத்வத்திற்கு விரோதமாகுமோ! என்று அவர்கள் கேட்கக்கூடும். ருத்ராதிகளிடத்தில் ஸ்ரீமந் நாராயண பரிவாரத்வ ப்ரதிபத்தி குறைபற்றதால் குசலமேயாகுமிவர்களுக்கு.

**553** ஆதிசங்கராசார்யருடைய கீதாபாஷ்ய ஸூக்திவிசேஷங்களைக் காட்டுதல். சங்கர பகவத்பாதர் விஷ்ணு பக்தரா? சிவ பக்தரா? என்று விசாரித்து நிர்ணயிக்க வேண்டுவது அவசியமானது. ச்ருதிஇதிஹாஸ புராணாதி ஸமஸ்தப்ரமாண விசேஷங்களுள் பகவத்கீதையே முன்னணியில் நிற்கின்றதென்பதில் யார்க்கும் விவாதமிராது. எம்பெருமான்தானே சோதிவாய் திறந்து பணித்ததென்கிற மிக்க சிறப்பன்றோ இதற்குள்ளது. அப்பெருமான் ஸ்ரீமந் நாராயணனேயென்றும் ஸ்ரீமஹாவிஷ்ணுவேயென்றும் இதில் வைதிகர்களும் ஏக கண்டர்களே யாவர். இதில் விப்ரதிபத்தி கொண்ட வைதிகர் ஒருவருமிலர். இத்தகைய நூலில் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பரத்வமும் தேவதாந்தரங்களின் அபரத்வமும் அடிக்கடி விளக்கப்பட்டுள்ளது. (10-8) அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ்ஸர்வம் ப்ரவர்த்ததே" என்றவிடத்தில் சங்கர பாஷ்யபங்க்தி இது காணீர்;—அஹம் பரம் ப்ரஹ்ம வாஸுதேவாக்யம், ஸர்வஸ்ய ஜகத: ப்ரபவ:—உத்பத்தி:, மத்த ஏவ ஸ்திதிநாசக்ரியாபலோபபோகலக்ஷணம் விக்ரியாரூபம் ஸர்வம் ஜகத் ப்ரவர்த்ததே" இத்யாதி. மூலத்தில் நாராயணபதமோ விஷ்ணுபதமோ காணப்படாதவிடங்களிலெல்லாம் விசேஷ விஷ்ணு நாராயண வாஸுதேவ பதங்களையிட்டே பாஷ்யமியற்றுகிறார், பகவத்பாதரென்பது வ்யபிசரியாத விஷயம். *அநந்யாச் சிந்தயந்தோமாம்" என்றவிடத்தில் "பரம் தேவம் நாராயணம்...பர்யுபாஸதே—தேஷாம் பரமார்த்ததர்சிநாம்" என்று பாஷ்யமிட்டிருக்கின்ற பகவத்பாதர் பரதேவதையான நாராயணனை உபாஸிப்பவர்கள் யாவரோ அவர்களே உண்மையறிவாளிகள் என்று காட்டுமாறாகிறார். ஸ்ரீ மஹாவிஷ்ணுவுக்குப் போல ருத்ரனுக்கும் பாரம்யமுண்டு என்கிற வாதத்தை ஸஹிப்பவரல்லர் பகவத்பாதர்.

**554** ஸ்ரீமந்நாராயண வ்யதிரிக்த தேவதைகளை பஜிப்பவர்களைப் பற்றின ப்ரஸ்தாவம் கீதையில் இல்லாமற் போகவில்லை. (7-20) *காமைஸ்தைஸ்தைர் ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே அந்யதேவதா:* என்று தொடங்கிச் சொல்லி வருகையில் * அந்தவத்து பலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம்* என்று தலைக்கட்டப்பட்டுள்ளது. இந்த ச்லோகத்தின் முடிவில் பகவத்பாதர் எழுதியுள்ள வாக்கியம் பரம பக்தர்களை அவசமாகவே கண்ணீர் பெருக்கவைக்கின்றது. அவ்விடத்திலுள்ள வாக்யமிது காணீர்: "ஏவம் ஸமாநே அப்யாயாஸே மாமேவ ந ப்ரபத்யந்தே அநந்தபலாய; அஹோ கலு கஷ்டதரம் வர்த்ததே இத்யநுக்ரோசம் தர்சயதி பகவான்* என்று. ஸ்ரீமந்நாராயணனை பஜிப்பவர்களுக்கே அநந்தாக்ஷய பலன் பெறுவதற்கு அவகாசமுள்ளதென்று அறிந்தவர்களுங்கூட க்ஷுத்ரபலன்களை விரும்பி தேவதாந்தர பஜனம் செய்கிறார்களே! என்று பகவான் தானே கண்ணீர் விட்டழுததாக ஸாக்ஷாத்கரித்தன்றோ பகவத்பாதர் இதையெழுதியுள்ளார்.

**555.** அதிலே பதினோராமத்யாயத்தில் விச்வரூபக் காட்சி என்பது அமைந்திருப்பதானது தேவதாந்தரங்களின் அவரத்வத்தைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டுவதற்கே யன்றோ. அதில் மூன்றுவது ச்லோகத்தில்:—"பகவானே! நீயே பரமேச்வரனென்பது உண்மையே; அதைக்கட்கூடாகக் காண விரும்புமெனக்கு உன்றால் வைச்வரூபத்தைக் காட்டிக் கொடுக்க முடியுமா? என்று அர்ஜுனன் தனது கருத்தை ஸூசிப்பித்தவளவில் *பச்யாதித்யாந் வஸூந் ருத்ராநச்விநௌ மருதஸ்ததா* என்று தன்னுடைய திவ்யமங்கள விக்ரஹத்தினேகதேசத்தி லொடுங்கியிருக்கு ஸமஸ்த தேவர்களையும் காணுமாறு காட்டிக் கொடுத்தருளினன் ஸ்ரீமந்நாராயணன். பிறகு அவனருளிய திவ்ய சக்ஷுஸ்ஸாலே கண்ட அர்ஜுனன் *பச்யாமி தேவாம்ஸ்தவ தேவ தேஹே* என்று தொடங்கி ப்ரஹ்மருத்ராதி ஸகல தேவதா கணங்களையும் அத்திருமேனியில் காண்பதாகப் பேசினன்) இதை இந்திரஜாலமென்று சொல்லாமையினாலே அத்வைதவாதம் அடியறுப்புண்டது. தேவதாந்தர பாரம்யவாதமோ நெடுந்தூரத்தில் தள்ளப்பட்டொழிந்தது. நாராயணனில் வேறுபட்டதொரு தேவதை இங்ஙனே விச்வரூபம் காட்டித்தன் பக்கலில் நாராயணன் லீனனாயிருக்கும் படியைக் காட்டிற்றுண்டோ? காட்டத்தான் முடியுமோ? *ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா விச்வேச்விநௌ மருதச்சோஷ்மபாச்ச, கந்தர்வ யக்ஷாஸுர ஸித்தஸங்கா வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாச்சைவ ஸர்வே* என்னுமிந்த ச்லோகமானது விசேஷித்து ருத்ராதிகளின் அவரத்வத்தை அறுதியிடாநின்றதாயிற்று.

**556.** பகவத்பாத ஸூக்தி ஸார முணர்த்துதல். பகவத்கீதை ஆறுமத்யாயத்தில் முடிவான சுலோகமிது. *யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா, ச்ரத்தாவாந் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத:* என்பது. இங்கு சங்கர பாஷ்ய பங்க்தி வருமாறு—"யோகிநாமபி ஸர்வேஷாம் ருத்ராதித்யாதி பராணாம். மத்கதேந-மயி வாஸுதேவே ஸமாஹிதேந, அந்தராத்மநா-அந்த:கரணேந, ச்ரத்தாவாந்-ச்ரத்ததாந:ஸந், பஜதே-ஸேவதே யோ மாம், ஸ மே-மம யுக்ததம: அதிசயேந யுக்த: மத:—அபிப்ரேத:" என்று. இதற்கு விவரணம் அநபேக்ஷிதம். பக்ஷபாதமற்றவர்கள் நற்றெளிவு பெறுவர்கள்.

**557.** சங்கராசாரியருடைய ஸஹஸ்ர நாம பாஷ்ய ஸூக்திகள் காட்டுதல். பகவத்பாதர் ஸஹஸ்ரநாமபாஷ்யத்திலும் பல பல இதிஹாஸங்களை யெடுத்துக் காட்டி நாராயண பாரம்யத்தைத் திடப்படுத்தியுள்ளார். விஷ்ணுவின் தாழ்மையோ, தேவதாந்தரத்தின் உயர்வையோ ஓரிடத்திலும் அவர் காட்டினதில்லை. கேசவநாம பாஷ்யத்தில் *கோ ப்ரஹ்மேதி ஸமாக்யாத ஈசோஹம் ஸர்வதேஹிநாம், ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவநாமவாந்* என்று சொல்லிக் கொண்டே சிவபெருமான் இந்த கேசவ நாமத்தை ஸமர்ப்பித்ததாக ஹரிவம்சத்தில் சொல்லப்பட்டுள்ள இதிஹாஸத்தை உதாஹரித்துள்ளார் பகவத்பாதர். [அர்க்க:] என்னும் திருநாமத்தின் பாஷ்யத்தில் "ப்ரஹ்மாதிபி: பூஜ்யதமைரபி அர்ச்சநீயத்வாத் அர்க்க:"—என்ற விவரணம் காட்டினார். இங்கு ஆதிசப்தத்தால் முக்கூற மும்மைம் க்ரஹிக்கக் கூடியவர் பார்வதீபதியல்லவோ? ஏன்? *ஸ ப்ரஹ்மா ஸ சிவ:* என்றோதுகிற வேதபுருஷன் பிரமனுக்கடுத்தபடி சிவபிரானைச் சொல்லி வைத்திருப்பது பிரஸித்தமன்றோ? [அமிதாசந:] என்னும் திருநாமத்தின் பாஷ்யத்திலும் ஸம்ஹாரஸமயே விச்வமச்நாதீதி அமிதாசந:". என்று விவரித்தார் பகவத்பாதர். சிவபெருமான் விச்வபஹிர்ப்பூதனல்லனே. *நளிர்மதிச் சடையனும் நான்முகக்கடவுளும்* என்கிற திருவாசிரியப் பாசுரமும் இங்கு நினைக்கத் தக்கது. *அத்தா சராசரக்ரஹணாத்* என்கிற ஸூத்திரத்தில் க்ருத்ஸ்நமான சராசரத்தையும் உண்டவனென்று நிர்ணயிக்கப்பட்ட நாராயணன் சிவபெருமானை விட்டிட்டானென்னப்ரஸக்தியில்லையே. உட்கொள்ளப்பட்டவர்களில் சிவபெருமானே முதல்வனென்பது பகவத்பாத ஸித்தாந்தம். *ஸர்வவாகீச்வரேச்வர:* என்கிற நாமபாஷ்யத்திலும் "ஸர்வேஷாம் வாகீச்வராணாம் ப்ரஹ்மாதீநாமபி ஈச்வர:* என்றார் அவர்தாமே.

**558** நிர்க்குண ப்ரஹ்ம வாதத்தை நிராகரித்தல். பரப்ரஹ்மம் நிர்க்குணம் என்று பிறர் செய்யும் வாதம் மிகவும் வருந்தத்தக்கது. ஹேய குணமில்லாமையைத் தெரிவிக்க வேண்டி உபநிஷத்து சில விடங்களில் ப்ரஹ்மத்தை நிர்க்குணமென்றுசொல்லியிருப்பதுண்டு. எண்ணிறந்த திருக்கல்யாண குணமுடைமையை ஓதியிருக்கின்ற ச்ருதிசதங்களுக்கு விரோதமின்றிக்கே நிர்வாஹம் செய்யவேண்டுமன்றே; அங்ஙனே நிர்வஹிக்குமளவில் நிர்க்குண ச்ருதிகளுக்கு ஹேயகுணமில்லாமையைக் கூறுவதில் தாத்பர்யம் என்றே சொல்லித்தீர வேண்டும். ப்ரதானம் முதலானவை ஜகத் காரணமாகக்கூடுமென்று நேர்ந்த சங்கைகளைப் பரிஹரியாநின்ற சாரீரக மீமாம்ஸையானது பெரும்பாலும் அதிகரணந்தோறும் பரப்ரஹ்மத்தினிடத்திலுள்ள திருக்குணங்களை யெடுத்துக்கொண்டே அத்தகைய குணங்களில்லாத வஸ்துக்களுக்கு காரணத்வம் ஸம்பவிக்கமாட்டாது' என்று தலைக்கட்டுகின்றது. இக்காலத்தவர்களான அத்வைதிகள் தங்கள் நூல்களில் "ஆதிசங்கராசாரியரும் ஸகுணப்ரஹ்மத்தையும் ஸசரீரப்ரஹ்மத்தையும் ஒப்புக்கொண்டிருப்பதுண்டு" என்றெழுதுகிறார்கள். இங்ஙனே யெழுதுமவர்களுக்கு அவ்யவஸ்தித சித்தத்வம் தவிர வேறொன்றும் தேறாது. நையாயிகர்கள் "உத்பந்நம் த்ரவ்யம் க்ஷணமகுணம் திஷ்டதி" என்பர்கள். பரப்ரஹ்மத்திற்கு உத்பத்தி யொப்புக்கொண்டாலாவது அது க்ஷணகாலம் நிர்க்குணமாக இருக்கவுமாகும். முமுக்ஷுக்களும் முக்தர்களும் நித்யர்களுமான ஸமஸ்த ஜீவராசிகளையும் தன்னுடைய குணானுபவத்தினாலேயே உஜ்ஜீவிப்பிக்குமதான பரப்ரஹ்மம் க்ஷணமாத்ரமும் நிர்க்குணமாக இருக்கவில்லை.

**559.** கூரத்தாழ்வானருளிச் செய்த ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில் *தூரே குணாஸ் தவ து ஸத்வரஜஸ்தமாம்ஸி தேந த்ரயீ ப்ரதயதி த்வயி நிர்க்குணத்வம், நித்யம் ஹரே நிகில ஸத்குணஸாகரம் ஹி த்வாமாமநந்தி பரமேச்வரமீச்வராணாம்* என்றுள்ள ச்லோக ரத்நம் இங்கு நித்யாநுஸந்தேயமாகக் கடவது. நாமெழுதி வெளியிட்டுள்ள ஸ்ரீவைகுண்டஸ்தவவ்யாக்யானத்திலிருந்து சில பங்க்திகளை உதாஹரித்தே இதன் பொருளுணர்த்துகிறோம்; (நமது வியாக்யான பங்க்திகள்) நிர்க்குணச்ருதிகளுக்கு என்ன கதியென்ன: அவற்றை நிர்வஹிக்க வேண்டும் வழி காட்டுகிறாரிதில் *நிர்குணம் நிரஞ்ஜநம்* இத்யாதி ச்ருதிகள் எம்பெருமான் பக்கலிலே குணங்களின் அத்யந்தாபாவத்தைச் சொல்லுகின்றனவல்ல. அப்படியாகில் *யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்* இத்யாதிகளான பரச்சத வாக்யங்களினால் எம்பெருமானுக்குச் சொல்லப்பட்ட குணபௌஷ்கல்யம் வ்யாஹதமேயாகும். ஒரு ச்ருதியும் வ்யாஹதார்த்தமாகாதபடி நிர்வஹிக்க வேண்டுமே. நிர்க்குணத்வத்தைச் சொன்னவிடம் ஹேயகுணராஹித்யத்தைச் சொல்லிற்றாகக் கொள்ளுமளவில் ஒரு விரோதமுமில்லையே. உத்ஸர்க்காபவாதந்யாயம் இதற்குக் கை கொடுக்குமே. *[ஸத்வ ரஜஸ் தமாம்ஸி குணாஸ் தவ தூரே]* ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் தேவரீருக்கு நெடுந்தூரத்திலுள்ளன. எம்பெருமான் பக்கலில் ரஜஸ்தமோ குணங்கள் இல்லையென்று சொல்லலாமத்தனை போக்கி ஸத்வகுணமும் இல்லையென்று சொல்லலாமோவென்று ஒரு சங்கை தோன்றும். *பரம ஸத்வ ஸமாச்ரய: க:* என்னும்படியுள்ள எம்பெருமான் பக்கலில் ஸத்வ குணமில்லை யென்னப் போகாது; ரஜஸ்தமோமிச்ரமான ஸத்வ குணமில்லை என்கிற தத்தனை. [தேந த்ரயீ ப்ரத்யதி த்வயி நிர்க்குணத்வம்] அதையிட்டே வேதத்தில் நைர்குண்ய வாதம் ப்ரவ்ருத்தமாயிற்று. குணஸாமான்யாபாவத்தையே ச்ருதி விவக்ஷிக்கிறதென்ன வொண்ணாதோவென்னில்; ஒண்ணாமையை உபபாதிக்கிறது உத்தரார்த்தம் [நித்யம் ஹரே! நிகில ஸத்குண ஸாகர மித்யாதி] *பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியாச* ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப:* இத்யாதி ச்ருதிகள் எம்பெருமானை ஸகல கல்யாண குண நிதியாக ஓதாநிற்க, அதற்கு மாறாகப் பொருள் கொள்ள வொண்ணாதிறே. *அக்நீஷோமீயம் பசுமாலபேத* இத்யாதிகளில் விஹிதமான ஹிம்ஸையைத் தள்ளியன்றோ *மா ஹிம்ஸ்யாத் ஸர்வா பூதாநி* இத்யாதி நிஷேத ச்ருதிகளுக்குப் பொருள் நிர்வஹியாநின்றோம். அது போலவென்க.

**560.** இதரர்கள் ஸர்வாத்மநா ப்ரமாண வைதேசிகர்களென்று நிரூபித்தல். முக்கியமாகக் குறிக்கொண்மின்; "பாஞ்சராத்ரம் அப்ரமாணம்" என்கிற பிறர் உபநிஷத்துக்கள் ப்ரஹ்ம

ஸூத்ரங்கள் இதிஹாஸ புராணங்கள் முதலியவற்றை ப்ரமாணமாக ஒப்புக்கொள்பவர்கள் போதும். இது வாங்மாத்ரேண அங்கீகாரமேயொழிய வேறில்லை. "பாஞ்சராத்ரத்தை ப்ரமாணமாக வொப்புக்கொண்டால் என்ன ஹானி விளைந்திடும்? ச்ருதிஇதிஹாஸ புராண ஸூத்ரங்களை ப்ரமாணமென்று ஒப்புக்கொண்டதனால் என்ன லாபம் விளைந்திட்டது? என்று இவர்களை வினவினால் இவர்கள் என்ன விடையிறுப்பர்களோ, பார்க்கவேணும்.

**561**. *வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா* என்று வேதப்ரதார்ப்பாவ விசேஷமாகக் கொண்டாடப்படுகிற ஸ்ரீராமாயணத்தில் ஆதியோடந்தமாகத் திருக்கல்யாண குணகண ப்ரஸ்தாவமே விளங்கா நின்றது. வான்மீகிமுனிவர் தம்மிடம்வந்து சேர்ந்த நாரதமஹர்ஷியிடத்தில் கதைகேட்க விரும்பிற்றிலர்; திருக்குணங்கள் கேட்கவே விருப்பத்தை வெளியிட்டார். அதில், *கோந்வஸ்மின் ஸாம்ப்ரதம் லோகே குணவாந்* என்றும் *பஹவோ துர்லபாச் சைவ யே த்வயா கீர்த்திதா குணா:* என்றும் உபக்ரமத்தில் காணும் வினாவிடைகளினால் இது அறியலாகும்

**562**. எம்பெருமானுடைய திருவவதாரங்களெல்லாம் குணபரீவாஹ ரூபங்களென்று ஸாரஜ்ஞர்கள் நிஷ்கர்ஷித்துள்ளார்கள். எம்பெருமான் ஸ்வாத்மாவிலே நிரம்பியுள்ள திருக்குணங்களை வெளியிட்டுத் தரிப்பதற்காகவே திருவவதாரங்கள் செய்தருளினனென்கை. ஸ்ரீராமக்ருஷ்ணாதி ரூபேண திருவவதரித்து வேதவித்தர்களும் ஸ்வாபாவிகங்களுமான திருக்குணங்களை ஸகல பக்தர்களும் அநுபவிக்கும்படி செய்தருளினன் பகவான். இதை அறியாதாரில்லை. 'ப்ரஹ்மம குணரூபமே' என்பவர்கள் ஸ்ரீராமாயணம் முதலான இதிஹாஸ புராணங்களுக்கும் அவற்றுக்கும்மூலமான ச்ருதிகளுக்கும் பேதிக் ராஜ்யத்திலிருக்கத் தக்கவர்களென்பது அதிகாரமுமன்று, ஆக்ரஹவார்த்தையுமன்று. *இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ருஹ்மயேத்* என்று பொதுவாகவும் *வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு:* என்று சிறப்பாகவும் சொல்லியுள்ள மஹர்ஷிகள் வேதப்பொருள்களே இதிஹாஸ புராணங்களில் வெட்ட வெளிச்சமாகக் காணப்படுகின்றனவென்று ப்ரதிஜ்ஞை செய்தவர்களாயினர்.

## எம்பெருமானருளிச் செய்த கத்யத்ரயம் வேதார்த்த ஸங்க்ரஹம் முதலியதிவ்ய க்ரந்தங்களிலிருந்து குணாநுபவரூபங்களான திவ்ய ஸூக்திகளை பக்தர்களின் நித்யாநுஸந்தானத்திற்குடலாக எண்டெடுத்துக் காட்டுகிறோம்.

---

**563.** இவ்வகையில் அநுபவம் கேளீர். (சரணாகதிகத்யே) பகவந் நாராயண அபிமதாநுரூப ஸ்வரூபரூபகுண விபவைச்வர்ய சீலாத்யநவதிகாதிசய அஸங்க்யேய கல்யாண குணகணாம் பத்மவநாலயாம் பகவதீம் ச்ரியம் தேவீம் நித்யாநபாயிநீம் நிரவத்யாம் தேவதேவ திவ்யமஹிஷீம் அகில ஜகந்மாதரம் அஸ்மந்மாதரம் அசரண்ய சரண்யாம் அநந்யசரண: சரணமஹம் ப்ரபத்யே.

**564**. அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந ஸ்வேதர ஸமஸ்த வஸ்துவிலக்ஷணாநந்த ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூப!

**565**. ஸ்வாபிமதாநுரூபைக ரூபாசிந்த்ய திவ்யாத்புத நித்ய நிரவத்ய நிரதிசயௌஜ்ஜ்வல்ய ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யநந்த குணநிதி திவ்யரூப!

**566.** ஸ்வோசித விவித விசித்ராநந்தாச்சர்ய நித்ய நிரவத்ய நிரதிசயஸுகந்த நிரதிசய ஸுகஸ்பர்ச நிரதிசயௌஜ்ஜ்வல்ய கிரீட மகுட சூடாவதம்ஸ மகரகுண்டல க்ரைவேயக ஹாரகேயூர கடக ஸ்ரீவத்ஸ கௌஸ்துப முக்தா தாமோதரபந்தந பீதாம்பர காஞ்சீகுண நூபுராத்யபரிமித திவ்ய பூஷண!

**567.** ஸ்வாநுரூப அசிந்த்யசக்தி சங்கசக்ரகதா (அஸி) சார்ங்காத் யஸங்க்யேய நித்ய நிரவத்ய நிரதிசய கல்யாண திவ்யாயுத!

**568.** ஸ்வாபிமத நித்ய நிரவத்யாநுரூபஸ்வரூப ரூப குண விபவைச்வர்ய சீலாத்ய நவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணகணஸ்ரீவல்லப! ஏவம் பூதபூமிநீளா நாயக!

**569.** ஸ்வச்சந்தாநுவர்த்தி ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி பேதாசேஷசேஷதைகரதிரூப நித்ய நிரவத்ய நிரதிசய ஜ்ஞாநக்ரியைச்வர்யாத்யநந்த கல்யாணகுணகணசேஷசேஷாசந கருடப்ரமுகநாநாவிதாநந்த பரிஜந பரிசாரிகா பரிசரித சரணயுகல!

**570.** ஸ்வஸங்கல்பாநுவிதாயிஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி ஸ்வசேஷதைகஸ்வபாவ ப்ரக்ருதி புருஷகாலாத்மக விவித விசித்ரா நந்தபோக்ய போக்த்ருவர்க்க போகோபகரண போகஸ்தாநரூப நிகிலஜகதுதய விபவலயலீல!

**571.** ஸத்யகாம! ஸத்யஸங்கல்ப! பரப்ரஹ்மபூத! புருஷோத்தம! மஹாவிபூதே! ஸ்ரீமந்நாராயண! ஸ்ரீவைகுண்டநாத! அபாரகாருண்ய ஸௌசீல்ய வாத்ஸல்ய ஔதார்ய-ஐச்வர்ய ஸௌந்தர்ய மஹோததே! அநாலோசித விசேஷாசேஷலோகசரண்ய! ப்ரணதார்த்திஹர! ஆச்ரிதவாத்ஸல்யைக ஜலதே! அநவரதவிதிதநிகிலபூதஜாதயாதாத்ம்ய! அசேஷசராசரபூத நிகிலநியமநிரத! அசேஷசிதசித்வஸ்து சேஷிபூத! நிகில ஜகதாதார! அகிலஜகத் ஸ்வாமிந்! அஸ்மத் ஸ்வாமிந்! ஸத்யகாம! ஸத்யஸங்கல்ப! ஸகலேதரவிலக்ஷண! அர்த்திகல்பக! ஆபத்ஸக! ஸ்ரீமந்நாராயண! அசரண்ய சரண்ய!

**572** (ஸ்ரீரங்ககத்யே). ஸ்வாதீந த்ரிவித சேதநாசேதநஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்தி பேதம் க்லேசகர்மாத் யசேஷ தோஷாஸம்ஸ்ப்ருஷ்டம் ஸ்வாபாவிகாநவதிகாதிசய ஜ்ஞாந பலைச்வர்ய வீர்ய சக்தி தேஜஸ் ஸௌசீல்ய வாத்ஸல்ய மார்த்தவார்ஜவ ஸௌஹார்த ஸாம்ய காருண்ய மாதுர்ய காம்பீர்யௌதார்ய சாதுர்யஸ்தைர்ய சௌர்ய பராக்ரம ஸத்யகாம ஸத்யஸங்கல்ப க்ருதித்வ க்ருதஜ்ஞதாத்யஸங்க்யேய கல்யாண குணகணௌக மஹார்ணவம் பரப்ரஹ்மபூதம் புருஷோத்தமம் ஸ்ரீரங்கசாயிநம் அஸ்மத் ஸ்வாமிநம்.

**573.** அபாரகருணாம்புதே! அநாலோசிதவிசேஷா சேஷலோகசரண்ய! ப்ரணதார்த்திஹர! ஆச்ரிதவாத்ஸல்யைக மஹோததே! அநவரதவிதிதநிகில பூதஜாதயாதாத்ம்ய! ஸத்யகாம! ஸத்யஸங்கல்ப! ஆபத்ஸக! காகுத்ஸ்த! ஸ்ரீமந்நாராயண! புருஷோத்தம! நமோஸ்துதே.

**574.** (ஸ்ரீவைகுண்டகத்யே) ஸ்வாதீநத்ரிவிதசேதநாசேதநஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்தி பேதம், க்லேசகர்மாத்யசேஷ தோஷாஸம்ஸ்ப்ருஷ்டம் ஸ்வாபாவிகாநவதிகாதிசய ஜ்ஞாநபலைச்வர்ய வீர்யசக்திதேஜ: ப்ரப்ருதி- அஸங்க்யேயகல்யாணகுணகணௌக மஹார்ண பரமபுருஷம் பகவந்தம் நாராயணம்.

**575.** (வேதார்த்த ஸங்க்ரஹே) தஸ்யைதஸ்ய பரஸ்ய ப்ரஹ்மணோ நாராயணஸ்ய அபரிச்சேத்யஜ்ஞாநாநந்தாமலத்வஸ்வரூபவத், ஜ்ஞாநசக்தி பலைச்வர்யவீர்யதேஜ: ப்ரப்ருத்ய நவதிகாதிசயாஸங்க்யேயகல்யாணகுணவத், ஸ்வாபிமதஸ்வாநுரூபைகரூப திவ்ய ரூப— ததுசிதநிரதிசயகல்யாணவிவிதாநந்த பூஷண ஸ்வசக்தி ஸத்ருசாபரிமிதாநந்தாச்சர்ய நாநாவித யுத ஸ்வாபிமதஸ்வாநுரூபஸ்வரூப ரூபகுணவிபவைச்வர்ய சீலாத்யநவதிகமஹிம மஹிஷீ—

ஸ்வாநுரூபகல்யாண ஜ்ஞாநக்ரியாத்யபரிமேயகுணாநந்த பரிஜநபரிச்சத—ஸ்வோசித நிகில போக்ய போகோபகரணாத்யநந்தமஹாவிபவாவாங்மநஸ கோசரஸ்வரூப ஸ்வபாவ திவ்யாஸ்த்தாநாதி—நித்யதா நிரவத்யதாகோசராச்ச ஸஹஸ்ரச: ச்ருதயஸ்ஸந்தி.

**576-580.** (வேதார்த்த ஸங்க்ரஹே) பரஸ்ய ப்ரஹ்மணோ ரூபவத்வம் ஸூத்ரகாரச்சவததி * அந்தஸ்தத்தர்மோபதேசாத் * இதி. யோஸாவாதித்ய மண்டலாந்தர்வர்த்தீ தப்த கார்த்தஸ்வரகிரிவரப்ரப: ஸஹஸ்ராம்சுசதஸஹஸ்ரகிரண:, கம்பீராம்பஸ்ஸமுத்பூத ஸும்ருஷ்டநால ரவிகரவிகஸித புண்டரீகதலாமலாயதேக்ஷண: ஸுப்ரூலலாட:, ஸுநாஸ: ஸுஸ்மித தாதரவித்ரும:, ஸுருசிரகோமல கண்டம், கம்புக்ரீவ:, ஸமுந்நதாம்ஸவிலம்பீ சாருரூபதிவ்யகர்ணகிஸலய:, பீநவ்ருத்தாயதபுஜ, சாருதராதாம்ரகரதலாநுரக்தாங்குலீபிரலங்க்ருத:, தநுமத்ய:, விசாலவக்ஷஸ்தல:, ஸமவிபக்த ஸர்வாங்க:, அநிர்தேச்யதிவ்யரூபஸம்ஹநந:, ஸ்நிக்தவர்ண:, ப்ரபுத்த புண்டரீக சாருசரணயுகல:, ஸ்வாநுரூப பீதாம்பரதர: அமலகி, ரீடகுண்டலஹாரகௌஸ்துப கேயூரகடக நூபுரோதரபந்தநாத்ய பரிமிதாச்சர்யாநந்ததிவ்யபூஷண:, சங்கசக்ரகதாஸி சார்ங்க ஸ்ரீவத்ஸவநமாலாலங்க்ருத:, அநவதிகாதிசய ஸௌந்தர்யாஹ்ருதா சேஷமநோத்ருஷ்டிவ்ருத்தி:, லாவண்யாம்ருதபூரிதாசேஷசராசர பூதஜாத:, அத்யத்புதாசிந்த்ய நித்யயௌவந:, புஷ்பஹாஸஸுகுமார:, புண்யகந்த வாஸிதாநந்த திகந்தராள:, த்ரைலோக்யாக்ரமண ப்ரவ்ருத்த கம்பீரபாவ:, கருணாநுராகமதுரலோசநாவலோகிதாச்ரிதவர்க்க:, புருஷவரோ த்ருச்யதே, ஸ: நிகில ஜகதுதயவிபவலயலீல:, நிரஸ்த ஸமஸ்தஹேய:, ஸமஸ்தகல்யாணகுணநிதி:, ஸ்வேதர ஸமஸ்தவஸ்துவிலக்ஷண:, பரமாத்மா, பரம்ப்ரஹ்ம, நாராயண இத்யவகம்யதே, *தத்தர்மோபதேசாத்*

**581-590.** கீதாபாஷ்யம்—அவதாரிகை ச்ரிய: பதி: நிகிலஹேய ப்ரத்யநீக கல்யாணைகதாந:, ஸ்வேதரஸமஸ்த வஸ்து விலக்ஷணாநந்த ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூப: ஸ்வாபாவிகாநவதி காதிசய—ஜ்ஞாநபலைச்வர்ய வீர்ய சக்தி தேஜ: ப்ரப்ருத்யஸங்க்யேயா, கல்யாணகுணகணமஹோததி:, ஸ்வாபிமதாநுரூபைக ரூபாசிந்த்ய திவ்யாத்புத நித்யநிரவத்ய, நிரதிசயௌஜ்வல்ய—ஸௌந்தர்யஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யநந்த குணநிதிதிவ்ய ரூப:, ஸ்வோசிதவிவித விசித்ராநந்தாச்சர்ய நித்ய நிரவத்யாபரிமிததிவ்யபூஷண: ஸ்வநு ரூபாஸங்க்யேயா சிந்த்யசக்தி நித்ய நிரவத்யநிரதிசய கல்யாண திவ்யாயுத:, ஸ்வாபிமதாநுரூப நித்ய நிரவத்ய ஸ்வரூபரூபகுணவிபவைச்வர்ய சீலாத்யநவதிகாதி சயாஸங்க்யேய கல்யாண குணகண ஸ்ரீவல்லப:, ஸ்வஸங்கல்பாநு விதாயி ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திபேதாசே—சேஷதைகரதிரூப நித்யநிரவத்ய நிரதிசய ஜ்ஞாநக்ரியை ச்வர்யாத்யநந்த குணகணாபரிமித ஸூரிபிரநவரதாபிஷ்டுத சரணயுகல:, வாங்மநஸாபரிச்சேத்ய ஸ்வரூபஸ்வபாவ:, ஸ்வோசித விவிதவிசித்ராநந்த போக்ய போகோபகரண போகஸ்தாந ஸம்ருத்தநந்தாச்சர்யாநந்த மஹாவிபவாநந்தபரிமாண நித்யநிரவத்யாக்ஷர பரமவ்யோம நிலய:, விவித விசித்ராநந்த போக்ய போக்த்ருவர்க்க பரிபூர்ண நிகில ஜகதுதயவிபவலயலீல: பரம ப்ரஹ்ம, புருஷோத்தமப நாராயண:, ப்ரஹ்மாதி ஸ்தாவராந்தமகிலம் ஜகத் ஸ்ருஷ்ட்வா, ஸ்வரூபேணாவஸ்திதஷ ப்ரஹ்மாதிதேவமநுஷ்யாணாம் த்யாநாராதநாத்ய கோசர:, அபார காருண்ய ஸௌசீல்ய வாத்ஸல்யௌதார்ய மஹோததி:, ஸ்வமேவ ரூபம் தத்தத்ஸஜாதீயஸம்ஸ்தாநம் ஸ்வஸ்வபாவம ஜஹதேவ குர்வந் தேஷு தேஷு லோகேஷ்வவதீர்யா வதீர்ய தைஸ்தைராராதித: தத்ததிஷ்டாநுரூபம் தர்மார்த்த காமமோக்ஷாக்க்யம் பலம் ப்ரயச்சந், பூபாராவதரணாபதேசேந அஸ்மதாதீநாமபி ஸமாச்ரயணீயத்வாய அவதீர்யோர்வ்யாம் ஸகலமநுஜநயந விஷயதாம் கத:, பராவரநிகிலஜந மநோ நயநஹாரி திவ்யசேஷ்டிதாநி குர்வந், பூதநா சகடயமலார்ஜுநாரிஷ்ட ப்ரலம்ப தேநுககாளீய கேசிகுவலயாபீட சாணூர முஷ்டிகதோஸலகம்ஸாதீந் நிஹத்ய, அநவதிகதயாஸௌஹார்த்தாநு ராககர்ப்பாவலோக நாலாபாம்ருதை: விச்வமாப்யாயயந், நிரதிசய ஸௌந்தர்ய ஸௌசீல்யாதிகுணகணாவிஷ்காரேண அக்ரூரமாலாகாராதீந் பரமபாகவதாந் (பூதாந்) க்ருத்வா.

**591.** கீதாபாஷ்யம். 9-26. (பத்ரம் புஷ்பம்) அஹம்—ஸர்வேச்வர: நிகிலஜகதுதய விபவலயலீல: அவாப்த ஸமஸ்தகாம:, ஸத்யஸங்கல்ப:, அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணகண:, ஸ்வாபாவிகாநவதிகாதிசயாநந்தஸ் வாநுபவே வர்த்தமாநோபி மநோரதபதது்ர வர்த்தி ப்ரியம் ப்ராப்யேவ அச்நாமி.

**592** 9-34 மந்மநா பவ. மந்மநா பவ—மயி ஸர்வேச்வரேச்வரே நிகிலஹேய ப்ரத்ய நீகைகதாநே ஸர்வஜ்ஞே ஸத்யஸங்கல்ப, நிகிலஜகதேககாரணே பரஸ்மின் ப்ரஹ்மணி, புருஷோத்தமே, புண்டரீகதலாமலாயதாக்ஷே, ஸ்வச்சநீலஜீமூதஸங்காசே, யுகபதுதிததிநகர ஸஹஸ்ரஸத்ருசதேஜஸி, லாவண்யாம்ருதமஹோததௌ, உதார பீவர சதுர்பாஹௌ, அத்யுஜ்வலபீதாம்பரே, அமலகிரீடமகர குண்டல ஹாரகேயூரகடக பூஷிதே, அபார காருண்ய ஸௌசீல்யஸௌந்தர்யமாதுர்யகாம்பீர் யௌதார்ய வாத்ஸல்ய ஜலதௌ, அநாலோசித விசேஷாசேஷலோக சரண்யே, ஸர்வஸ்வாமிநி தைலதாராவத் அவிச்சேதேந நிவிஷ்டமநா பவ.

**593.** ஸ்ரீபாஷ்யம் (1-1-1) ஆரம்பத்தில்—"ப்ரஹ்மசப்தேந ச ஸ்வபாவதோ நிரஸ்த நிகிலதோஷ: அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாணகுணகண: புருஷோத்தம: அபிதீயதே,

**594.** (1-1-2) அஸ்ய......ஜாயதே, யத:—யஸ்மாத் ஸர்வேச்வராத் நிகிலஹேயப்ரத்ய நீக ஸ்வரூபாத் ஸத்யஸங்கல்பாத் ஜ்ஞாநாநந்தாத்யநந்த கல்யாணகுணாத் ஸர்வஜ்ஞாத் ஸர்வசக்தே: பரமகாருணிகாத் பரஸ்மாத் பும்ஸ: ஸ்ருஷ்டிஸ்த்தி ப்ரலயா: ப்ரவர்த்தந்தே தத் ப்ரஹ்மேதி ஸூத்ரார்த்த:

**595** (1-1-12) அது ஸர்வஜ்ஞ: ஸர்வசக்தி: ஸர்வேச்வரேச்வர: நிரஸ்த நிகிலதோஷ கந்த: அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாணகுணகணைக மஹார்ணவ: புருஷோத்தமோ நாராயண ஏவ நிகிலஜகதேக காரணம் ஜிஜ்ஞாஸ்யம் ப்ரஹ்மேதி ஸ்த்திதம்.

**596.** (1-2-12) க்ரமப்ராப்த துஷ்ஹதாஸ்து நிகிலஜகதேக காரணஸ்ய, அசேஷஹேயப் ரத்யநீகாநந்த ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபஸ்ய, ஸ்வாபாவிகாநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணாகரஸ்ய, ஸகலேதரவிலக்ஷணஸ்ய, ஸர்வாத்மபூதஸ்ய பரஸ்ய ப்ரஹ்மண:......ஜீவஸ்ய...... பரமாத்மாநுபவமேவ மோக்ஷமாசக்ஷதே

**597.** (1-2-12) உக்தம் பரமபுருஷார்த்த லக்ஷண மோக்ஷஸாதநதயா ஜிஜ்ஞாஸ்யம் ஜகஜ்ஜந்மாதி காரணம் ப்ரஹ்ம அசித்வஸ்துந: ப்ரதாநாத: சேதநாச்ச பத்தமுக்தோபயா வஸ்த்தாத் விலக்ஷணம் நிரஸ்தஸமஸ்தஹேயகந்தம் ஸர்வஜ்ஞம் ஸர்வசக்தி ஸத்யஸங்கல்பம் ஸமஸ்த கல்யாண குணாத்மகம் ஸர்வாந்தராத்மபூதம் நிரங்குசைச்வர்யமிதி.

**598.** (2-1-1) ப்ரதமேத்யாயே ப்ரத்யக்ஷாதி ப்ரமாண கோசராத் அசேதநாத் தத்ஸம்ஸ்ருஷ்டாத் தத்வியுக்தாச்ச சேதநாதர்த்தாந்தராபூதம் நிரஸ்த நிகிலாவித்யாத்ய புருஷார்த்த கந்தம் அநந்தஜ்ஞாநாநந்தைகதாநம் அபரிமிதோதாரகுண ஸாகரம் நிகில ஜகதேக காரணம் ஸர்வாந்தராத்மபூதம் பரம் ப்ரஹ்ம வேதாந்த வேத்யமித்யுக்தம்

**599.** (2-1-13) ஸர்வா ஹி ச்ருதய: ஸஸ்ம்ருதீதிஹாஸபுராணா: ஸர்வேச்வரேச்வரம் ஸைநதவ ஸர்வஜ்ஞம் ஸர்வசக்திகம் ஸத்யஸங்கல்பம் நிரவத்யம் தேசகாலாநவச்சிந்நாநவதி காதிசயாநந்தம் பரமகாரணம் ப்ரஹ்ம ப்ரதிபாதயந்தி.

**600.** (4-4-22) யதா நிகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந: ஜந்மாதி காரணம் ஸமஸ்தவஸ்து விலக்ஷண: ஸர்வஜ்ஞ: ஸத்யஸங்கல்ப: ஆச்ரிதவாத்ஸல்யைகஜலதி: பரம காருணிக: நிரஸ்த ஸமாப்யதிக ஸம்பாவந: பரப்ரஹ்மாபிதாந: பரமபுருஷோஸ்தீதி சப்தாத வகம்யதே.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜ பக்தஹஸ்த பூஷணத்தில்

## ரஹஸ்யார்த்த விவரணப்பகுதி



**601.** முமுக்ஷுக்களுக்கு உபஜீவ்யங்களான ஸகல க்ரந்தங்களினுள்ளும் ரஹஸ்ய க்ரந்தங்களே மிகச் சிறந்தவை. ரஹஸ்யார்த்தங்களில் தெளிவுள்ளவர்களுக்கே இதிஹாஸ புராணாதிமஹார்த்தங்களும் பகவத்விஷயார்த்தங்களும் ரஸிக்கும். ஆகவே ரஹஸ்யார்த்தங்களில் தெளிவுபெற வேண்டியது முக்கியம். திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகம் என்கிற மூன்று ரஹஸ்யங்களின் பொருளை பட்டர் அஷ்டச்லோகி யென்கிற வடமொழிச் சிறுநூலில் அதிஸங்க்ஷேபமாக அருளிச் செய்தார். தேவப்பெருமாளுடைய அபராவதார பூதரும், வடக்குத் திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரரும் ஸர்வஜ்ஞருமான பிள்ளை லோகாசாரியர் தாம் ரஹஸ்யார்த்த விவரணக்ரந்தங்களை மிக விரிவாகவும் அழகாகவும் அநவத்யமாகவும் அருளிச் செய்தவரென்பது புநருக்தம். அஷ்டாதசரஹஸ்யமென்று ஸுப்ரஸித்தமான க்ரந்தஜாலம் பிள்ளை லோகாசாரியர் பணித்ததென்பதும் புநருக்தம்.

**602.** உபதேச ரத்னமாலையில் *ஓராண் வழியாய்* என்னும் பாசுரத்தில் *ஏரார் எதிராசரின் அருளாலென்று தொடங்கிப் பரமகாருணிகராகப் போற்றப்பட்ட எம்பெருமானார்தாமும் ப்ரபந்தரூபேண வெளியிட்டருளாமல் மறைத்து வைத்திருந்த மஹார்த்தங்களைப் பிள்ளை லோகாசாரியர் ஒருவரே பல பிரபந்தங்களினால் வெளியிட்டருளினவராதலால் க்ருபா மாத்ரப்ரஸந்நாசார்யர்களில் எம்பெருமானாரைக் காட்டிலும் இவரே முதல் ஸ்தானம் பெற்றவராவர். இப்பேராசிரியர் மூலமருளிச் செய்திருந்தும், ஸூத்ரம் போன்ற அந்த திவ்ய ஸூக்திகளின் பொருளையும் கருத்தையுமறிவதற்கு எளிய வழியில்லாதிருந்த காலத்தில் விசதவாக்சிகாமணிகளான மணவாளமாமுனிகள் தேனும் பாலுமமுதுமான வியாக்கியானங்களை யிட்டருளி மஹோபகாரம் செய்தருளினவராதலால் பிள்ளை லோகாசாரியரையுங் காட்டில் மணவாளமாமுனிகளே பரமகாருணிகரென்று போற்றுதற்குரியராவர். மாமுனிகளின் வியாக்கியானங்கள் திருவவதரிக்கவில்லை யென்றால் உபயவேதாந்தங்களிலும் மற்று எத்தனை க்ரந்தங்கள் அவதரித்திருந்தால் அவை பகல்விளக்கு என்னத்தக்கவையேயாகும். ... ... *

**603** பிள்ளை லோகாசாரியர் அருளிய அஷ்டாதச ரஹஸ்யங்களுள், யாத்ருச்சிகப்படி, பரந்தபடி, ச்ரிய:பதிப்படி என்னும் க்ரந்தங்கள் ரஹஸ்யத்ரய வியாக்கியானமாக அவதரித்திருந்தவைகளிருந்தாலும் முமுக்ஷுப்படி யென்னும் திவ்யக்ரந்தமே பலபடியாலும் பெருமை பெற்று விளங்கா நின்றது. மற்ற க்ரந்தங்கள் அதிஸங்க்ரஹம், அதிக விஸ்தாரம், ஸம்ஸ்க்ருத வாக்ய பாஹுள்யம் முதலியவற்றால் குறை பெற்றிருக்குமென்றும், அவ்வகைக் குறைகளுக்கு இடமின்றியே அவையெல்லாவற்றுக்கும் பின்பு முமுக்ஷுப்படி யென்னும் திவ்யக்ரந்தம் அருளிச் செய்யப்பட்டதென்றும், இதன் சீர்மையைக் கண்டு ஆஸ்திகர்கள் அனைவரும் இந்த க்ரந்த ரத்னத்தையே விசேஷித்துப் பரிக்ரஹிக்கலாயினர் என்றும் மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியிலிருந்து அறியக்கிடக்கின்றது. மற்ற க்ரந்தங்களில் அருளிச் செய்யப்படாத பல அபூர்வ விஷயங்களும் இதனில் குடிகொண்டிருக்கின்றன வென்பதும் இதற்குத் தன்னேற்றம். ... ... *

**604.** பகவன்மந்த்ரங்களின் பாகுபாடும் திருமந்த்ரத்தின் சிறப்பும் திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகம் என்கிற மூன்று ரஹஸ்யங்களும் முமுக்ஷுக்களுக்கு நித்யாநுஸந்தேயங்கள். இவற்றுள் திருமந்த்ரமென்கிறது ஸ்ரீமதஷ்டாக்ஷர மஹா மந்த்ரம். இது ஸ்ரீபதரிகாச்ரமத்திலே வெளியிடப்பட்டது. எம்பெருமானைப் பற்றின மந்த்ரங்கள் அபரிமிதங்களாயிருக்கும் அவற்றுள் வ்யாபகமந்த்ரங்களென்றும் அவ்யாபகமந்த்ரங்களென்றும் இரு வகுப்புண்டு. பகவானுடைய ஸர்வத்ர வ்யாப்தியைத் தெரிவிக்கும் மந்த்ரங்களே வ்யாபக மந்த்ரங்களெனப்படும். அவை எவையென்னில், விஷ்ணு மந்த்ரம், வாஸுதேவ மந்த்ரம், நாராயண மந்த்ரம் என்பவை. இம்மூன்று மந்த்ரங்களே பகவானுடைய மற்றெல்லா மந்த்ரங்களிற் காட்டிலும் சிறந்தவை. இம்மூன்றினுள்ளும் நாராயண மந்த்ரமே மிகச் சிறந்தது. விஷ்ணு மந்த்ரமானது ஆறெழுத்துடையதாகும். வாஸுதேவ மந்த்ரமானது பன்னிரண்டெழுத்துடையதாகும். நாராயண மந்த்ரமானது எட்டெழுத்துடையதாகும். இதனையே திருவஷ்டாக்ஷர மஹா மந்த்ரமென்பர். இதன் பெருமையையே ஆழ்வார்கள் "எட்டெழுத்து மோதுவார்கள் வல்லர் வானமாளவே" என்பது முதலான பல பல பாசுரங்களினால் வெளியிட்டுள்ளார்கள். ... *

**605.** திருமந்த்ரத்தின் முதற்பதமான ப்ரணவத்தின் பொருள் விளக்கம். இந்த மந்த்ரத்தில் முதல் பகுதி (ஓம்) என்னும் ப்ரணவம் அகாரம், உகாரம், மகாரம் ஆகிய மூன்றெழுத்துக்கள் சேர்ந்து (ஓம்) என்று ஒரே எழுத்தாயிற்று. ஸகல ஜகத்துக்கும் காரண பூதனும் ஸர்வரக்ஷகனுமான எம்பெருமானைச் சொல்லுகிறது அகாரம். எம்பெருமான் ஸ்ரீமஹாலக்ஷ்மியோடு கூடியிருந்தே ரக்ஷணைத் தொழிலை நடத்தவல்லனாதலால் இவ்வகாரத்திலே பிராட்டியையும் சேர்த்து அநுஸந்திக்க வேணுமென்பது நூற்கொள்கை. அகாரத்தின் மேல் நான்காம் வேற்றுமையுருபு ஏறியிருந்து அது வேதத்திற்கு உரிய இலக்கணத்தினால் லோபமடைந்துவிட்டது. அதன் பொருள் உரிமைப்பட்டிருத்தல் (சேஷத்வம்) ஆகும். மூன்றாவதான எழுத்தாகிய மகாரத்திற்கு அறிவுள்ளவனான [சேதனனாகிய] ஜீவாத்மா அர்த்தமாதலால் ஜீவாத்ம ராசிகளெல்லாம் பகவானுக்கும் பிராட்டிக்கும் சேஷப்பட்டவை என்றதாயிற்று. ... ... ... *

**606.** இடையில் இருக்கின்ற உகாரத்தின் பொருள் யாதெனில் வடமொழியில் அவதாரணப்பொருள் எனப்படும்; தமிழில் 'பிரிநிலைப் பொருளெனப்படும். ஸ்ரீமந்நாராயணனுக்குத் தவிர மற்ற எவர்க்கும் சேஷப்பட்டவனல்லன் என்றதாகத் தேறிற்று. உலகில் ஒருவனுக்கு உரியவனானவன் மற்றும் பலர்க்கும் உரிமைப்பட்டிருத்தலைக் காணா நின்றோம். இங்கு அப்படியல்லாமல் நாராயணனுக்கு சேஷப்பட்டவன் நாராயணனுக்கேயன்றி மற்றொருவற்கும் சேஷப்பட்டவனல்லன் என்றதாயிற்று. இதுதான் உகாரத்தில் தேறின பொருள். ஆக, ப்ரணவத்தினால் எம்பெருமானுக்கே உரிமைப்பட்ட தன்மையும் பிறர்க்கும் தனக்கும் உரிமைப்படாத தன்மையும் சொல்லிற்றாயிற்று. ... ... ... *

**607.** நம: பதார்த்த விவரணத்தில் விரோதிகளின் விவரணமும் அவை கழியும் விதங்களும். இனிமேல் (நம:) என்பதும் (நாராயணாய) என்பதும் நிற்கிறது. இவை மந்த்ரசேஷமெனப்படும். இதனால் கீழ்ப் பிரணவத்தில் (ஓம் என்றதில்) சொன்ன பொருளே விவரிக்கப்படுகிறது. (நம:) என்பதனால் விரோதி கழிக்கப்படுகிறது. மூன்று வகையான விரோதிகள் அறியத்தக்கன. ஸ்வரூப விரோதியென்றும் உபாய விரோதியென்றும் புருஷார்த்த விரோதியென்றும் விரோதிகள் மூவகைப்படும். அஹங்கார மம காரங்களோடு கூடியிருக்கும் நிலை ஸ்வரூப விரோதியெனப்படும். அந்த நிலையை ஆழ்வார் "**யானே யென்னையறியகிலாதே யானே**

**யென்றனதே யென்றிருந்தேன்** '' என்ற பாசுரத்திலும். இந்த விரோதி கழிந்த நிலையை '' **யானே நீ என்னுடைமையும் நீயே** '' என்ற பாசுரத்திலும் அநுஸந்தித்துக் காட்டினர். ... ... ... ... ... *

**608.** தன்னைக் காப்பாற்றிக் கொள்ளத் தான் முயற்சி செய்கை உபாய விரோதியெனப்படும். அது கழிந்த நிலையை ஆழ்வார் '' **களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண்மற்றிலேன்** '' என்ற பாசுரத்தினல் காட்டினர். தமது துன்பத்தை எம்பெருமான் தீர்த்தாலும் தீர்க்காவிட்டாலும் ஒருவிதமான முயற்சியையும் செய்ய கில்லோம் என்றிருக்கையே உபாய விரோதி கழிந்த நிலையாகும். இனி புருஷார்த்த விரோதியாவது, பலனை யனுபவிக்கும்போது அதனல் தான் ஆனந்தப்படுகை. அது இவனுக்குத் தகாது; அந்த ஆனந்தம் எம்பெருமானுடையதே யென்று கொண்டிருக்கை — புருஷார்த்த விரோதி கழிந்த நிலையாகும். இது * மற்றை நங்காமங்கள் மாற்று * என்ற ஆண்டாள் பாசுரத்தில் காணத்தகும். ஆக, இம் மூன்று விரோதிகளின் கழிவும் (நம:) என்னுமதில் தெரிவிக்கப்படுகிறது. ... *

**609.** பாகவத சேஷத்வம் உய்த்துணரும் வகையும் அதன் பெருமையும். இனி (நம:) என்றவதின் ஆழ்பொருள் விவரிக்கப்படுகின்றது. ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் பகவானுக்கு சேஷப்பட்டிருப்பதிற் காட்டிலும் பாகவதர்களுக்கு சேஷப்பட்டிருத்தல் மிகச் சிறந்ததாகக் கொள்ளப்படுகிறது. திருமங்கையாழ்வார் '' மற்றுமோர் தெய்வமுளதென் றிருப்பாரோடுற்றிலேன், உற்றது முன்னடியார்க் கடிமை. மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்தும் கற்று நான் கண்ண புரத்துறையம்மானே '' [பெரிய திருமொழி 8-10-3] என்றருளிச் செய்துள்ள பாசுரத்தையே முக்கியமான பிரமாணமாகக்கொண்டு பாகவத சேஷத்வத்தைத் திருமந்திரத்திற்குத் தலையான பொருளாகக் கூறுவது பேராசிரியர்கள். இதில் எந்த எழுத்தினல் (அல்லது) எந்த பதத்தினல் பாகவத சேஷத்வம் தெரிவிக்கப்படுகிற தென்று ஆராயவேண்டும்; ஒன்றினலும் தெரிவிக்கப்படவில்லையென்றே நினைக்கக் கூடியதாயிருக்கும். அப்படியில்லை; ப்ரணவத்தில் அகாரத்திலே இதை யநுஸந் திப்பாருளர்; எங்ஙனேயென்னில்; அகாரத்தின்மேல் சதுர்த்தி விபக்தி [நான்காம் வேற்றுமையுருபு] ஏறிக் கழிந்திருப்பதாக (லோபித்திருப்பதாக)க் கீழே விவரிக்கப்பட்டது; லுப்த சதுர்த்தியோடு கூடின அந்த அகாரத்தினல் பகவானுக்கு சேஷப்படுந்தன்மை தெரிவிக்கப்பட்டதன்றோ? பாகவத சேஷத்வ மென்பது பகவத் சேஷத்வத்தின் எல்லைநிலமே யாதலால் அந்த அகாரத்திற்குப் பொருளுரைக்கும்போதே இதையும் சேர்த்துப் பொருளாக உரைத்திடுவர்கள் சில ஆசாரியர்கள். வேறு சிலர், அந்த அகாரத்திற்கு அடுத்த உகாரத்தில் பாகவத சேஷத்வத்தையநுஸந்திப்பர்கள். எங்ஙனே யென்னில்; உகாரத்தினல் பகவா னுக்குத் தவிர மற்றையோர்கட்கு சேஷப்பட்டவனல்லன் என்பது [அநந்யார்ஹத் வம்] தெரிவிக்கப்படுகிறதல்லவா? பாகவதர்கள் பகவானுடைய திருவடிஸ்தானத் திலேயே சேர்ந்தவர்களாகையாலே உகாரத்தின் பொருளை அநுஸந்திக்கும்போதே இந்த பாகவதசேஷத்வத்தையும் சேர்த்து அநுஸந்திப்பர்களென்றதாயிற்று. *

**610.** பாகவத சேஷத்வத்தை நம: பதத்தில் அநுஸந்திப்பதின் ஔசித்ய நிரூபணம். ஆகவிப்படி முதற்பதமான ப்ரணவத்திற்றன்னேயே பாகவத சேஷத்வம் அநுஸந்திக்கத் தக்கதாயிருந்தாலும் இடையிலுள்ள (நம:) என்னும் பதத்திலே இதனை யநுஸந்திப்பது மிகவும் பொருத்தமானதென்று பேராசிரியர்களின் திருவுள்ளம். ஏனென்னில்; அஹங்கார மமகாரங்களை அறவே விட்டுத் தொலைத்தவர்களுக்கே பாகவத சேஷத்வம் ருசிக்கும். நமச்சப்தார்த்தம் ஸாரஹற அஹங்கார மமகாரங்கள் அறவே நீங்குமாதலால், இங்ஙனம் நீங்க

பெற்ற அதிகாரிகளுக்கே பாகவத சேஷத்வம் உறைத்திருக்குமென்று கொண்டு நம் ஆசார்யர்கள் பாகவத சேஷத்வத்தை (நம:) என்பதில் அநுஸந்திக்கும்படி நியமித்தருளினது மிகப் பொருத்தமானது. ... ... ... *

**611.** பகவச்சேஷத்வத்தின் காஷ்டையே பாகவதசேஷத்வம் என்னும் மருமமுணர்ந்துகல் பாகவத சேஷத்வம் என்பதன் உண்மைஸ்வரூபத்தை யறியாதார் பலர் இதில் ஆக்ஷேபங்களைச் செய்து கொண்டிருப்பர்கள்; பகவானுக்கே அடிமைப்பட்டிருக்கக் கடமைப்பட்டிருக்கின்ற நாம் வேறு சில வழிப்போக்கர்களுக்கு அடிமைப்படுகையாவது என்? ப்ரணவத்தில் உகாரத்தினால் உறுதி செய்யப்பட்ட அநந்யார்ஹ சேஷத்வத்தோடு முரண்பட்டதன்றோவிது; இதைத் திருமந்திரார்த்தமாகக் கொள்வது எப்படி சேரும்? என்று ஆக்ஷேபிப்பதுண்டு. அன்னவர்களைத் தெளிவிக்கிறோம். ... ... ... *

**612.** ஒரு வஸ்துவிலே நாம் அன்பு வைத்தால் அவ்வன்பு அந்தவொரு வஸ்துவோடு முடிந்து நிற்பதில்லை; அதோடு ஸாக்ஷாத் ஸம்பந்தமும் பரம்பரா ஸம்பந்தமும் பெற்ற வஸ்துக்களிலேயும் அன்பு பரந்து செல்லா நின்றது. மனைவியினிடத்திலே கணவன் வைக்கிற அன்பு அவளோடு ஸம்பந்த ஸம்பந்தம் பெற்றவர்களிடத்தும் பெருகிச் செல்வதை எங்கும் காண்கிறோம். எம்பெருமானும் நம்மிடத்திலே வைக்கிற அன்பு நம்மளவிலே நிற்காமல் "கேசவன் தமர் கீழ்மேலெமரேழெழு பிறப்பும் மாசதிரிது பெற்று" என்று ஆழ்வார் அருளிச்செய்தபடியே நம்மோடு உறவுபெற்றோரிடத்திலும் பெருகிச்செல்வதை இதிஹாஸ புராண கதைகளினாலுமறிகிறோம். இவ்விதமாகவே நம்முடைய அன்பும் எம்பெருமானளவிலே சுவறிப் போகாமல் அடியாரடியார் தம்மடியாரடியார் தமக்கடியாரடியார் பக்கலிலும் பெருகிச் சென்றால் இது பகவத் பக்தியின் ஒரு உறைப்பேயொழிய வேறன்று. ஆக, பாகவத பக்தியென்பது பகவத் பக்தியின் ஒரு காஷ்டையேயொழிய வேறுபட்டதன்று என்றதாயிற்று. இதில் செய்யும் ஆக்ஷேபங்கள் இதன் உண்மையை உணராதார் செய்யுமவை யத்தனையென்று விடுக்க. ... *

**613.** நாராயண பதார்த்தவிவரணமும், ஸ்வரூபநித்ய — ப்ரவாஹ நித்யங்களின் விவரணமும். இனி (நம:) என்பதற்கு அடுத்ததான நாராயண பதத்திற்குப் பொருள் விவரிக்கப்படுகிறது. நார - அயந என்று இரண்டு பதங்கள் சேர்ந்து நாராயண என்றாகிறது. நாரங்களுக்கு அயநமாயிருப்பவன் நாராயணன். நித்ய வஸ்துக்களின் திரள்களுக்கு ஆதாரமாயிருப்பவனென்றபடி. நாராயணன் நித்ய வஸ்துக்களுக்கு ஆதாரமாயிருந்தால் அநித்ய வஸ்துக்களுக்கு ஆதாரமாயிருப்பவன் யாவன்? என்று கேள்வி பிறக்கும்; கேண்மின்; வேதாந்த ஸித்தாந்தத்தில் அநித்ய வஸ்துவே கிடையாது; எல்லாம் நித்ய வஸ்துக்களேயாகும். அழிந்தொழியும் பொருள்களை நாம் கட்கூடாகக் காணாநிற்க, அநித்ய வஸ்துவே கிடையாதென்றால் எப்படி பொருந்துமென்று கேள்வி பிறக்கும். இங்குத் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயமாவது — நித்ய வஸ்துக்கள் இருவகைப்படும்; ஸ்வரூப நித்யமென்றும், ப்ரவாஹ நித்யமென்றும். எப்போதும் எவ்விதத்தாலும் அழிவில்லாத பொருள்கள் ஸ்வரூப நித்யமெனப்படும். ஆன்மா, மூலப்ரக்ருதி, காலம் முதலானவை இந்த வகுப்பிற் சேர்ந்தவை. இனி ப்ரவாஹ நித்ய வஸ்துக்கள் யாவையெனில்; உற்பத்தியையும் விநாசத்தையுமுடையனவாக இருக்கச் செய்தேயும் முன்னிருந்த நாமம் உருவம் லிங்கம் முதலானவற்றின் மாறுபாடின்றிக்கேயிருக்கப்பெற்ற பொருள்கள் ப்ரவாஹ நித்யங்களெனப்படும். பஞ்ச பூதங்களின் விகாரப் பொருள்களாக உலகிற் காணப்படுகின்ற செடி கொடி மரம் பானை துணி முதலான ஸகல வஸ்துக்களும் ப்ரவாஹ நித்யங்களாம். ஒரு பானை

உடைந்து போனாலும் அதே விதமான பல பானைகளை எந்நான்றும் காணா நின்றோம்; ஒரு துணி கிழிந்து போனாலும் அதே விதமான பல துணிகளை எந் நாளும் பார்க்கின்றோம். இங்ஙனே ஒவ்வொரு பொருளின் விஷயத்திலும் கண்டு கொள்ளலாம். இவையெல்லாம் ப்ரவாஹதோ நித்யமெனப்படும். ... *

**614.** ப்ரஸங்காத் உத்பத்தி விநாசஸ்வரூபத்தின் உபபாதனம். அன்றியும், வேதாந்திகளின் மதத்தில் ஒரு வஸ்துவுக்கும் புதிதாக உற்பத்தியும் அழிவும் ஒப்புக்கொள்ளப்படவில்லை. ஒரு அவஸ்தையிலிருந்து மற்றோரவஸ்தைக்கு மாறு வதே உற்பத்தியாகும். அந்த நிலைமையினின்று மற்றோர் நிலைமைக்கு வருவதே விநாசமாகும். ஆக ஸூக்ஷ்மாவஸ்தைக்கும் ஸ்தூலாவஸ்தைக்கும் மாறி மாறி வருவதே உத்பத்தி விநாசங்களாகையாலே இந்த வகையில் எல்லாப் பொருள் களையும் நித்யங்களென்று கொள்ளக்குறையில்லை. நாராயண னென்பதற்குப் பொருள் அருளிச் செய்யா நின்ற பிள்ளை லோகாசாரியர் முமுக்ஷுப்படியில் "நாரா யண னென்றது, நாரங்களுக்கு அயநமென்றபடி; நாரங்களாவன நித்ய வஸ்துக் களினுடைய திரள்" என்று பணித்து உடனே அந்த நித்ய வஸ்துக்களை விவரிக்கத் தொடங்கி, "அவையாவன — ஜ்ஞாநாநந்த அமலத்வாதிகளும்...பெரிய பிராட்டி யார் தொடக்கமான நாச்சிமார்களும் நித்யஸூரிகளும்...ப்ரக்ருதியும் பத்தாத்மாக் களும்...அண்டங்களும் அண்டத்துக்குட்பட்ட தேவாதி பதார்த்தங்களும்" என்று அருளிச் செய்தார். இதனால் விண்ணுலகிலும் மண்ணுலகிலும் ஒரு பொருளையும் விடாமல் எல்லாமும் நாரமென்னுஞ் சொல்லுக்குப் பொருளாக சொல்லிற்றாயிற்று. இப்பொருள்களுக்கெல்லாம் ஆதாரமாயிருப்பவன் நாராயணன் — என்று முடிக்கப் பட்டது. ... ... ... ... *

**615.** நாராயண பதத்தின் தத்புருஷ பஹுவ்ரீஹி ஸமாஸங்களினால் தேறின பொருள். பகவான் இப்பொருள்களிலே யிருக்கின்றானா? அல்லது இப் பொருள்கள் பகவானிடத்து இருக்கின்றனவா? என்று பார்க்குமளவில் இரண்டு வகைக்கும் குறையில்லையென்றே நூற்கள் கூறுகின்றன. எல்லாப் பொருள்களிலும் பகவானுளன்; எல்லாப் பொருள்களும் பகவானிடத்து உள்ளன என்பதே நூற் கொள்கை. பகவானிடத்துள்ள பரத்துவம் ஸௌலப்யம் என்கிற இரண்டு திருக் குணங்களும் மேற்கூறிய இருவகைப் பொருள்களினாலும் விளக்கம் பெற்றனவாகும்.

**616.** எல்லாப்பொருள்களும் பகவானிடத்தேயுள்ளன வென்னும்போது எல்லாப் பொருள்களுக்கும் தான் ஆதாரமாயிருக்கையாகிற பரத்துவம் விளங்கிற் றாகும். எல்லாப் பொருள்களிலும் பகவானுளன் என்னும் போது அறப் பெரியனான தான் ஸகல சேதநாசேதநங்களிலும் தன்னை அமைத்துக் கொண்டு புகுந்திருக்கை யாகிற ஸௌலப்யம் [எளிமை] விளங்கிற்றாம் ஆக நாராயணபதத்தின் பொருள் ஒருவாறு விவரிக்கப்பட்டதாயிற்று. ... ... ... *

**617.** நாராயண பதத்தின் மேலுள்ள விபக்தியின் பொருள் விளக்கம். இனி நாராயண பதத்தின் மேலுள்ள நான்காம் வேற்றுமையின் பொருளாவது, கைங்கர்ய ப்ரார்த்தனை யென்பர்; அதாவது, நாராயணனுக்கே எல்லாவடிமை களும் செய்யப் பெறுவேனாக வேணுமென்று கோரப்படுகிறதென்கை. எவ்விதமான கைங்கர்யம் செய்ய வேணும்? என்கிற கேள்விக்கு இடமில்லை; ஸகல தேசங்களி லும் ஸகலகாலங்களிலும் ஸகலாவஸ்தைகளிலும் ஸகலவிதமான கைங்கர்யங்களை யும் செய்வதற்கே இட்டுப் பிறந்தோம். இதனை நம்மாழ்வார் "ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டு நாம்" என்கிற பாசுரத்தினால் தெளிவித்தார். ... ... ... ... ... *

**618.** கைங்கர்ய ஸ்வரூபசோதனமும், கைங்கர்யத்தில் இருவகைகளின் நிருபணமும். கைங்கர்யம் செய்வது மனம் மொழி மெய்களாலும் பொருளாலுமாகக் கூடியது. இவற்றுள் மனத்தினாலும் வாக்கினாலும் கைங்கரியம் செய்வதில் அருமையில்லை; உடலைச் சிரமப்படுத்தி அடிமை செய்வது அரிது; அதுதான் முக்கியமானது. பொருளைச் செலவு செய்து கைங்கரியம் செய்வதுதான் மிகச் சிறந்ததென்று சிலர் நினைக்கக்கூடும்; அது மிகத் தாழ்ந்ததென்பதை நிருபிக்கிறோம் காண்மின்; ஒருவன் தவறு செய்து ராஜ தண்டனைக்கு உட்படுகிறான்; அரசன், ஒரு மாதம் கடுங்காவல், அல்லது ஆயிரம் ரூபாய் அபராதம் என்று விதித்தால் எப்படிப்பட்ட ஏழையும் சிரமப்பட்டாகிலும் பணத்தைச் செலுத்தப் பார்க்கிறானேயொழிய, தேஹத்தை நலிவுறுத்தக் கூசி சிறைவாஸத்திற்கு உடன்படுவதில்லை. இதனால் அனைவர்க்கும் தேஹத்திலே தான் அதிகமான அன்பு என்றும், பொருளில் அன்பு கிடையாதென்றும் கண்டு கொள்கிறோமல்லவா? நாம் எதை அதிகமாக அபிமானிக்கிறோமோ அதைச் சிரமப்படுத்திச் செய்யும் கைங்கர்யமே சிறந்ததாகுமென்பதில் தட்டில்லை. ஆகவே, திரவியத்தைக்கொண்டு செய்யும் பணிவிடையிற்காட்டிலும் உடலைக் கொண்டு செய்யும் பணிவிடையே மிகச் சீரியதென்று தேறுகின்றது. ... ... ... *

**619.** கோவில்களில் பெருமானுக்குத் திருத்தேர்த்திருவிழா நடைபெறுகின்றது; அன்பர்களே! திருத்தேரை யிழுக்க வாருங்கள் என்றழைத்தால், பத்தெட்டு ரூபாயைக் கொடுத்து கைகூப்பி நிற்கும் அதிகாரிகளே மலிந்துள்ளார்கள். உடலைச் சிரமப்படுத்திக் கைங்கரியம் செய்வோமென்று குதுகலிப்பவர்கள் மிகச் சிலரே. அத்தகைய கைங்கர்யமே எம்பெருமானுக்குப் பரம ப்ரீதியை விளைக்கும்.

**620.** கைங்கரியம் துக்கரூபமன்று என்பதன் நிருபணம். ஒருவற்குப் பணிவிடை செய்வதென்பது உலகில் க்லேசமாகக் காணப்படுகிறதேயொழிய ஆனந்தமாகக் காணப்படவில்லை. "ஸேவா ச்வவ்ருத்தி ராக்யாதா தஸ்மாத் தாம் பரிவர்ஜயேத்" என்று மநுமஹர்ஷியும் கூறியுள்ளார்; இதன் பொருளாவது, பணிவிடை செய்வதென்பது நாய்த் தொழிலாதலால் அதனை விட்டுவிடவேண்டுமென்பதாம். ஆனந்தமயனான ஆன்மா ஆனந்த ஹேதுவான செயல்களைச் செய்து ஆனந்தப்பட வேண்டியிருக்க, கிலேசத்திற்கே ஹேதுவான பணிவிடையைச் செய்து வருந்தலாமோ வென்னில்; இதற்கு ஸமாதானம் கேண்மின்;

**621.** பணிவிடைகள் இரண்டு வகையாகவுண்டு. தேஹபோஷணத்திற்காகப் பணிவிடை செய்வது ஒன்று; அதாவது கூலி வேலை செய்வது. ஆத்மானந்தத்திற்காகப் பணிவிடை செய்வது மற்றொன்று. அதாவது பகவத் பாகவதாசார்ய விஷயத்தில் கைங்கரியஞ் செய்வது. இவற்றுள் முந்தின பணிவிடையினால் கிலேசம் விளையுமே யல்லது பிந்தின பணிவிடையினால் சிறிதும் கிலேசம் விளையாது; பரமானந்தமே கொந்தளிக்கும். சிஷ்யன் ஆசார்யனுக்குச் செய்யும் பணிவிடைகளையும், காமுகன் காமினிக்குச் செய்யும் பணிவிடைகளையும் பார்க்கின்றோம். இவை வெகு மகிழ்ச்சியுடன் நடைபெறுகின்றன வென்பதை உலகிற் காண்கிறோம். (ஒரு சிறு கதை கேண்மின்.) ... ... *

**622.** துஷ்யந்த மஹாராஜன் வேட்டையாடிக்கொண்டு செல்லும்போது ஒரு மஹர்ஷியின் ஆச்ரமத்தில் இளைப்பாறப்புகுந்தான்; அங்கே சகுந்தலையென்னும் தெய்வமாதைக் கண்டு காதல் கொண்டான்; அவளோடு ஸம்பாஷிக்கவும் பெற்றான்; அப்போது சொல்லுகிறான்:—"ஸம்வீஜயாமி நளிநீதள தாளவ்ருந்தை: அங்கே நிதாய கரபோரு! யதாஸுகம் தே ஸம்வாஹயாமி சரணாவுத

பத்மதாம்ரௌ ” என்கிறான்; சகுந்தலையின் முகத்தில் வேர்வை நீர் பெருகுவதைக் கண்டு அரசன் பொறுக்கமாட்டிற்றிலன்; தாமரையிலையை விசிறியாகக் கொண்டு விசிறட்டுமா? உன்னுடைய பாத பல்லவங்களை மடியிலே யிட்டுக்கொண்டு நோவு தீர வருடட்டுமா? என்று கேட்கிறான்; கேட்டுக்கொண்டே அப் பணிவிடைகளையும் செய்கிறான். இவனோ சக்ரவர்த்தி: அவளோ ஒரு காட்டுப்பெண்; காதல் விளைந்ததே காரணமாகக் கைங்கர்யம் செய்வதில் அன்பு ததும்பிய குதூஹலம் விளைகின்றது. இதனால் என்ன தெரிந்து கொள்ளுகிறோம்? உகப்பில்லாதவிடத்தில் செய்ய நேரும் பணிவிடையே துக்கரூபமானதென்றும், உகப்புள்ளவிடத்தே செய்ய ப்ராப்தமாகும் கைங்கர்யமானது ஆனந்த மயமாகவே யிருக்குமென்று முணருகிறோம். ... ... ... ... ... *

**623.** கைங்கர்ய ப்ரார்த்தனை பண்ணுவது ஸ்வரூபாநுரூபமேயென்று சொல்லித் திருமந்த்ரப் பொருளை நிகமித்தல். ஆகவே எம்பெருமானிடத்தில் ஸ்வரூபத்தாலும் திருக்குணங்களடியாகவும் உகப்புகொண்டவர்களுக்குக் கைங்கர்யம் ருசித்திருக்குமே யொழிய க்லேச ரூபமென்று வெறுக்கத் தக்கதாயிராதென்று தெரிந்து கொள்ளுகிறோம். இவ்விஷயத்தைப் பிள்ளைலோகசார்யர் எவ்வளவு அழகாகத் தெரிவித்தருளுகிறார் பாருங்கள் — “சேஷத்வம் துக்கரூபமாகவன்றோ நாட்டில் காண்கிறதென்னில்; அந்த நியமமில்லை; உகந்த விஷயத்துக்கு சேஷமா யிருக்குமிருப்பு ஸுகமாகக் காண்கையாலே ” என்பது அவ்வாசார்ய சிகாமணியின் திவ்யஸூக்தி. ... ... ... ... *

**624.** வேதார்த்த ஸங்க்ரஹமென்னும் நூலின் முடிவில் ஸ்வாமி ராமாநுஜர் தாமும் அருளிச்செய்த அர்த்தமிது. கைங்கர்யப் பிரார்த்தனை செய்வது ஸ்வரூபாநுரூபமே யாதலால் * நாராயணாயவென்பதனால் அது செய்யப்படுவதில் குறையொன்றுமில்லை யென்க. ஆக இவ்வளவாலும் திருமந்திரப் பொருள் விளக்கப் பட்டதாயிற்று. ... ... ... ... ... *

## மந்த்ரரத்னமென்கிற த்வயத்தின் பொருட் சுருக்கம்.

**625.** த்வயமந்த்ரத்தின் ஏற்றத்தை விரியவுரைத்தல். நமது ஸம்பிரதாயத்தில் திருமந்திரத்திற் காட்டிலும் த்வயத்திற்கே ஏற்றமதிகம். திருமந்திரத்திற்கு **மந்த்ரராஜ**மென்று பெயர்; த்வயத்திற்கு **மந்த்ரரத்ன**மென்று பெயர். ராஜாவும் விரும்பக்கூடிய வஸ்து ரத்னமாதலால் ரத்னமென்று திருப்பெயர் பெற்ற த்வயமே சிறந்ததாகும். ... ... ... ... ... *

**626.** நம் ஸ்ரீவைஷ்ணவஸம்பிரதாயத்தில் மூன்று ரத்னங்கள் பிரஸித்தமாக வழங்கப் பெறுகின்றன. பராசரமஹர்ஷி பணித்த விஷ்ணு புராணம் **புராணரத்ன**மென்றே ப்ரஸித்திபெற்றது. ஆளவந்தார் “ஸந்தர்சயந் நிரமிமீத **புராணரத்நம்** தஸ்மை நமோ முனிவராய பராசராய ” என்றருளிச் செய்தது காண்க. ஆளவந்தாரருளிச் செய்தஸ்தோத்ரமானது **ஸ்தோத்ரரத்ன**மென்றே புகழ்பெற்றுளதின்றது. த்வயமந்த்ரம் மந்த்ரரத்னமென்று வழங்கப்பெறுகின்றதென்று சொன்னோம். எறும்பியப்பா பணித்த மணவாள மாமுனிகளின் திநசர்யையில் “மந்த்ர ரத்நாநு ஸந்தாந ஸந்தத ஸ்புரிதாதரம், ததர்த்ததத்வ நித்யாந ஸந்நத்த புலகோத்கமம் ” என்றருளிச் செய்திருப்பது காண்க. ... ... *

**627.** திருமந்த்ராநுஸந்தானத்திற்குக் காலநியதியுண்டு; த்வயத்தின் அநுஸந்தானத்திற்கு அஃது இல்லை. சரணாகதி கத்யத்தில் “**த்வயம் அர்த்தாநு**

**ஸந்த்யக்தேந ஸஹ ஸதா ஏவம் வக்தா யாவச்சரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ**'' என்று எம்பெருமானுர்க்கு அழகிய மணவாளன் இட்டருளின கட்டளை. நம் பூர்வாசாரியர்கள் அந்தேவாஸிகளையும் அந்தரங்கர்களையும் ஆசீர்வதிக்க வேண்டுமிடத்து '' திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயைகநிரதராவீர் '' என்று ஆசீர்வதிப்பர்களென்று ப்ரஸித்தம். ... ... ... *

**628.** திருமந்திரத்திற்காட்டிலும் மூன்றும் ரஹஸ்யமான சரமச்லோகத்திற்காட்டிலும் த்வயம் மிகச் சிறந்ததென்பதை யாவரும் எளிதாகவறியலாம். எங்ஙனேயென்னில் ; '' இதிலே ஸ்ரீ ஸம்பந்த மநுஸந்தேயம் '' என்று பிள்ளையுலகாசரியரருளிச் செய்தபடியே திருமந்திரத்தில் பிராட்டி ஸம்பந்தம் ஆர்த்தமாகக் கிடைப்பதேயன்றி ஸ்பஷ்டமாகவில்லை. சரமச்லோகத்தில் லக்ஷ்மீஸம்பந்த ப்ரஸ்தாவமே செய்தார்களில்லை. இக்குறைதீர த்வயத்தில் பூர்வகண்டத்தின் தொடக்கத்திலும் உத்தர கண்டத்தின் தொடக்கத்திலும் லக்ஷ்மீஸம்பந்தம் ஸுஸ்பஷ்டமாக விளங்கா நிற்பது ஒரு விசேஷம். ... ... ... *

**629.** அவ்விரண்டு ரஹஸ்யங்களிலும் பகவானுடைய திருவடிகளின் ப்ரஸ்தாவமேயில்லாமை பெரியகுறை. அக்குறையும் தீர இதில் திருவடிகளையே தஞ்சமாகக் காட்டிக் கொடுத்தது மற்றொரு விசேஷம். ஆகப் பல படிகளாலும் த்வயத்தின் சிறப்பை அறிவித்தோமானோம். ... ... *

**630.** வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்களை நிரூபித்தல்' ஸ்ரீவைஷ்ணவனுயிருப்பானொருவனுக்கு த்வயரஹஸ்யம் மிகவும் உபாதேயம், இந்த ப்ரஸங்கத்திலே வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்களானவற்றை முந்துற முன்னம் தெரிந்துகொள்ள வேண்டுவதும் முக்கியமாகும். பத்து விஷயங்கள் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்களாம். அவையாவன :— (1) * **பிதரம் மாதரம் தாராந்** * இத்யாதிப்படியே பாஹ்ய விஷயஸங்கங்களையுடைய மறுவிடாதபடி ஸவாஸநமாக விடுகை. (2) வேறொன்று தஞ்சமென்கிற நினைவு கலசாதபடி நிருபாதிகரக்ஷகனை ஸர்வேச்வரனையே தஞ்சமாகப் பற்றுதல், (3) பேறு கனத்திருப்பதையும் அதற்குரிய உபாயம் நம்பக்கலில் இல்லாமையையும் நாம் செய்யும் பாபங்கள் அளவு கடந்திருப்பதையும் நோக்கித் தளும்பாமல் பலன் தப்பாது கைபுகும் என்று விச்வஸித்திருக்கை. (4) இப்படி விச்வஸித்து ' பேறு ஸித்தித்தபோது காண்கிறோம் என்று ஆறியிராமல் * தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே கூவிக் கொள்ளுங்காலம் இன்னங் குறுகாதோ * என்கிறபடியே க்ரமப்ராப்தி பற்றாமல் பதறுகை. (5) பரமபதத்திலே போய் பகவதநுபவகைங்கரியங்களைப் பண்ணுகையாகிற பேற்றில் பதற்றம் நடவா நிற்கச் செய்தேயும் இந்த வுடம்போடேயிருக்கும் வரை திவ்ய தேசங்களிலே * கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று மண்டுகையாகிற ப்ராவண்யத்தை யுடையனாய், அந்த திவ்ய தேசங்களிலே நிற்கிறவனுடைய கல்யாண குணாநுபவமும், அது அடியாகக் கரணத்ரயத்தாலும் அவன் விஷயத்தில் பண்ணும் கைங்கர்யமுமே காலக்ஷேப விஷயமாம்படியிருக்கை. (6) கீழ்ச்சொன்ன விவையெல்லா முடையராயிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களைக்கண்டால் ' இந்தளத்திலே தாமரை பூத்தாற்போலே இந்த விபூதியிலே இப்படியும் சில மஹான்கள் உண்டாவதே ! என்று அவர்களது வைபவத்தை யறிந்து உகந்திருக்கை. (7) இதர மந்த்ரங்களின் அருகே மறந்தும் செல்லாமல், த்யாஜ்யோபாதேயங்களைத் தெளியவறிவிக்கும் திருமந்த்ரத்திலும் அதின் அர்த்தத்திற்கு விவரணமான த்வயத்திலும் நிஷ்டனாயிருக்கை. (8) கீழ்ச்சொன்னவற்றையெல்லாம் உபதேசத்தாலே தனக்குண்டாக்கின ஆசார்யன் விஷயத்தில் பக்தி அதிசயித்திருக்கை. (9) நித்ய ஸம்ஸாரியான தன்னை நித்ய

ஸூரிகளநுபவிக்கும் பேற்றுக்கு உரியனும்படி இரும்பைப் பொன்னுக்குவாரைப் போலே திருத்தின அந்த ஆசார்யனிடத்திலும், அந்த ஆசார்ய ஸம்பந்தத்தை யுண்டாக்கின எம்பெருமானிடத்திலும் இடையருது நன்றி பாராட்டுதல் (10) தான் கலங்கினாலும் கலங்காமல் நோக்குவதற்காகவும் கீழ்ச்சொன்னவை தனக்கு வளர்ந்து செல்லுகைக்காகவும் ஜ்ஞாந பக்தி விரக்தி சாந்தி ஸம்பந்நனுய்ப் பரம ஸாத்விகனுயிருப்பானொரு பாகவதனோடே ஸஹவாஸம் பண்ணுகை – ஆக இவை இத்தனையும் வைஷ்ணவனென்றிருப்பானொரு அதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்கள்.

**631.** த்வயத்தின் பொருளின் மேன்மையை விளக்குதல். இனி த்வயத்திற்சொல்லுகிறஅர்த்தத்தின் அதிசயத்தை யறிவிப்போம். ஸகல சாஸ்த்ரங்களிலும் இன்னது சொல்லுகிறது, திருமந்திரத்தில் இன்னது சொல்லுகிறது, சரமச்லோகத்தில் இன்னது சொல்லுகிறது என்று தெரிந்துகொண்டு பிறகு த்வயத்திற் சொல்லுகிறது இன்னது என்று தெரிந்துகொண்டால் நலமாகும். ஸகல சாஸ்திரங்களுக்கும் சேதநனுடைய விசிஷ்ட வேஷத்திலே நோக்கு, விசிஷ்ட வேஷமாவது தேஹவிசிஷ்டவேஷம். ப்ராஹ்மணாதி வர்ணதர்மங்களைப் பற்றியும் ப்ரஹ்மசர்யாதி ஆச்ரமதர்மங்களைப் பற்றியும் பேசுவதே ஸகல சாஸ்திரங்களுக்கும் விஷயமாகையாலும், அந்த வர்ணாச்ரமங்கள் தேஹத்தைப்பற்றி நிற்கையாலும் ஸகல சாஸ்திரங்களுக்கும் தேஹவிசிஷ்ட வேஷத்திலே நோக்கு என்னத் தட்டில்லை. அப்படிப்பட்ட ஸகல சாஸ்திரங்களிலும் தேறுகிற அர்த்தமாவது – ஸாதநநுஷ்டானயோக்யமானதேஹத்தாலே இவனுக்குப் புருஷார்த்த லாபம் என்பதாம்.

**632.** திருமந்திரத்திற்கு நிஷ்க்ருஷ்ட வேஷத்திலே நோக்கு. (அதாவது, சுத்த ஆத்மவஸ்துவிலே நோக்கு என்றபடி.) திருமந்திரமானது ஸகலாத்மாக்களுக்கும் பொதுவான தன்மையைத் தெரிவிப்பதேயன்றி ஜாத்யாச்ரம ஸம்பந்தியான விஷயமொன்றையும் தெரிவிப்பதல்லாமையாலே திருமந்திரத்திற்கு நிஷ்க்ருஷ்ட வேஷத்திலே நோக்கு என்னத் தட்டில்லை. அப்படிப்பட்ட திருமந்திரத்தில் இவன் தன்னைத்தான் ரக்ஷித்துக்கொள்வதில் நின்றும் கைவாங்கினாலொழிய ஈச்வரனுடைய ரக்ஷகத்வம் ஜீவியாதாகையாலே அந்த ஈச்வரனுடைய ப்ரவ்ருத்திக்கு விரோதியான ஸ்வப்ரவ்ருத்தியை விட்டிருக்கும் ஆத்மாவாலே புருஷார்த்தலாபம் என்கிறது. நம:பதார்த்தப்ராதாந்யத்தையிட்டு இங்ஙனே சொல்லுகிறதென்க.

**633.** ஈச்வரனுடைய ஸ்வாதந்திர்யத்திலே நோக்கான சரம ச்லோகத்தில் இவனுடைய ஸ்வீகாரமும்மிகையாம்படி தானே கைக்கொண்டு ப்ராப்தி ப்ரதிபந்தகங்களான ஸகலபாபங்களையும் தள்ளிப்போகட்டுத் தன் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளும் ஈச்வரனாலே புருஷார்த்தலாபமென்கிறது. ... *

**634.** இனி, ஈச்வரனுடைய லக்ஷ்மீவிசிஷ்ட வேஷத்திலே நோக்கான த்வயத்திலோ வென்னில், விசேஷணபூதையான பெரிய பிராட்டியாராலே புருஷார்த்தலாபமென்கிறது. பேறுபெறுவதற்கு தேஹமும் வேணும், ஆத்மாவும் வேணும், ஈச்வரனும் வேணும், பிராட்டியும் வேணும்; முக்கியமாக வேண்டுவது பிராட்டியாகையாலே அவளாலே புருஷார்த்தலாபமென்று தெரிவிக்கிற த்வயம் மிகச் சிறந்தது என்றதாயிற்று. ... ... ... ... *

**635.** உபாயம் எம்பெருமானாயிருக்க, பெரியபிராட்டியாராலே புருஷார்த்தலாபமென்றால் என்ன அர்த்தம்? என்னில், இவனுடைய குற்றங்களைப் பாராதே ரக்ஷிக்கும்படி இவள் புருஷகாரமானாலொழிய எம்பெருமான் இவனுக்குக் காரியம் செய்யானென்பதே தேறின தாற்பர்யம். ... ... *

**636.** த்வயாதிகாரியின் அருமையும், த்வயத்தின் திரண்ட பொருளும். ஸித்தோபாய வரணத்தைக் கூறுமதான த்வய ரஹஸ்யத்திற்கு அதிகாரிகள் கிடைப்பது அரிது. ஆகிஞ்சந்யமும் அநந்ய கதித்வமுமாகிற இரண்டுமுடையவனே த்வயாதிகாரியாவான். ஆகிஞ்சன்யமாவது — *நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்* என்கிறபடியே ஒருவிதமான கைம்முதலுமில்லாமை; அநந்ய கதித்வமாவது — *புகலொன்றில்லாவடியேன்* *களைகண் மற்றிலேன்* என்கிறபடியே வேறு ரக்ஷகனை நெஞ்சிலும் நினையாமை. ஆக இவ்விரண்டும் வாய்க்கப் பெற்ற அதிகாரியே த்வயாதிகாரியாவான். ... ... *

**637.** இரண்டு கூறாக [கண்டங்களாக] இருக்கின்ற இந்த த்வயத்தில் முதற்கண்டத்தினால் – பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகப் பற்றி எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது. **ஸ்ரீமத்** என்பதனால் பெரிய பிராட்டியாரை முன்னிடுகிறது; **நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே** என்பதனால் எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது. உத்தரகண்டத்தாலே, பெரிய பிராட்டியாரும் அவனுமான சேர்த்தியிலே கைங்கரியம் பண்ணவேணுமென்கிற ப்ரார்த்தனை காட்டப்படுகிறது. [**ஸ்ரீமதே** என்று பிராட்டியும் அவனுமான சேர்த்தி; நாராயணாய பதத்தின் பேறுள்ள சதுர்த்தி கைங்கர்யப் பிரார்த்தனையைக் காட்டும். நமஸ்ஸு கைங்கர்ய விரோதி நிவ்ருத்தியைக் காட்டும்.] ... ... *

**638.** த்வயத்தின் பிரதிபதார்த்த விவரணங் காட்டுகை. ஸ்ரீ என்கிற சொல்லுக்கு, ஸம்பத்து முதலிய பலவும் பொருளானாலும் இங்கே இச்சொல் பெரிய பிராட்டியார்க்குத் திருநாமமாயிரா நின்றது. ***ஸ்ரீரிதி ப்ரதமம் நாம லக்ஷ்ம்யா:*** என்கிற ப்ரமாணவசனம் காண்க. “ஸ்ரீரித்யேவ ச நாம தே” என்றும் ஆளவந்தாரும். இந்த ஸ்ரீ சப்தமானது, *ச்ரீஞ் — ஸேவாயாம்* என்கிற தாதுவிலே இரண்டுவகையான வ்யுத்பத்தியால் நிஷ்பந்நமாகும். ஸ்ரீயதே இதி ஸ்ரீ; (இது கர்மணி வ்யுத்பத்தி,) ச்ரயதே இதி ஸ்ரீ; (இது கர்த்தரி வ்யுத்பத்தி) கர்மணி வ்யுத்பத்தியில் எல்லாராலும் ஸேவிக்கப்படா நின்றாள் என்று பொருள்படுகின்றது. ஸகல சேதநர்கட்கும் இவளைப்பற்றியே தங்களுடைய சேஷத்வரூபமான ஸ்வரூபம் ஸித்திக்குமென்றவாறு. கர்த்தரி வ்யுத்பத்தியில் ஈச்வரனை இவள் ஸேவியா நின்றாளென்று பொருள்படுகிறது. இவள் தனக்கும் ஈச்வரனைப்பற்றித் தன்னுடைய ஸ்வரூப லாபமாயிருக்குமென்றவாறு. ஸகல சேதந விஷயத்தில் சேஷித்வத்தையும் ஈச்வர விஷயத்தில் சேஷத்வத்தையும் உடையவள் என்று ஸ்ரீ சப்தார்த்தம் தேறிற்று. எம்பெருமானுக்கு உபாயத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டானாப் போலே இவளுக்குப் புருஷகாரத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டு; புருஷகாரத்வமென்கிற தன்மையை நினைத்து இப்போது இவளைச் சொல்லுகிறது. உபாய வஸ்துவில் விசேஷணமாயிருக்கிற தன்மையை யிட்டு இவளுக்கும் உபாயத்வமுண்டென்கிற பக்ஷம் சேராது. இதை நாம் ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதி, ஸத்ஸம்ப்ரதாய ஸுதாநிதி முதலிய நூல்களிலே பரக்க உபபாதித்தோம். வேதாந்தவாசிரியரும் ரஹஸ்யரத்நாவளி முதலிய ரஹஸ்யங்களிலும் சரணாகதிகத்ய பாஷ்யத்திலும் “பிராட்டிக்குப் புருஷகாரத்வம் மட்டுமேயுள்ளது. எம்பெருமான்தான் பலப்ரதன்” என்பதைப் பன்னிப்பன்னிப் பேசியுள்ளார். ... ... ... ... ... *

**639.** பிராட்டியின் புருஷகாரத்வத்தின் ஆவச்யகத்வமுணர்த்துதல். எம்பெருமானுடைய நாராயணத்வ ப்ரயுக்தமான ஸ்வாபாவிக ஸம்பந்தத்தைத் தெளிந்துகொண்டு அவனை ஆச்ரயிக்கிற இச்சேதநனுக்கு இவளைப் புருஷகாரமாக முன்னிட வேண்டிய அவசியம் என்ன? என்னில்; குளிர்ந்த ஜலத்திலுங்கூடக்

கொடிதான நெருப்பு [படபாக்நி] கிளருமாபோலே, ஸர்வ பூத ஸுஹ்ருத்தானவன் திருவுள்ளத்திலே சேதனன் அளவு கடந்து பண்ணின அபராதமடியாகச் சீற்றம் பிறப்பதுமுண்டே; அங்ஙனே சீற்றம் பிறந்தால் அவ்வபராதத்தைப் பொறுப்பது இப் பிராட்டிக்காக இவள் தன்னுடைய உபதேசாதிகளாலே அச் சீற்றத்தையாற்றி தயையையுண்டாக்குவள். ஆகையாலே ஸம்பந்த வுணர்ச்சி யுள்ளவனுக்கும் அபராத பயத்தாலே புருஷகாரத்தை முன்னிடுகை அவசியமேயென்க. பிராட்டியின் புருஷகாரம் அவ்வளவு காரியம் செய்யுமோ வென்னில், * அகில ஜகந்மாதா * என்கிறபடியே சேதநர்கட்கு இவள் மாதவாய், அந்த ஸம்பந்தமடியாக இவர்களுடைய வருத்தங்கண்டு பொறுத்திருக்கமாட்டாதேயிருக்கிறவொரு தன்மையும், எம்பெருமானுக்குப் பத்நியாய் * பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு * என்கிறபடியே அவன் தன் வைலக்ஷண்யத்தைக்கண்டு பிச்சேறித் தன் சொற்படி நடக்கும்படி அபிமதவிஷயமாயிருக்கிறவொரு தன்மையும் உடையவளாகையாலே ஒருவகையாலும் விபலமாக மாட்டாத புருஷகாரம். உலகில் புருஷகாரம் செய்பவர்களுக்கு இரண்டு தன்மைகள் வேண்டும்; எவர் விஷயத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவர் விஷயத்தில் நெஞ்சார்ந்த அன்பு இருக்கவேண்டியது ஒன்று. யாரிடத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவரிடத்தில் தம் வாக்கு வெற்றிபெற்றே தீரும்படியான வால்லப்ய மிருக்கவேண்டியது மற்றொன்று. இவ்விரண்டும் பிராட்டியிடத்தே புஷ்கலமென்று நிரூபிக்கப்பட்டதாயிற்று. ... ... *

**6·40.** ப்ரஸங்காத் பிராட்டியின் திருவாக்கின் வெற்றியை நிரூபித்தல். இதெல்லாம் வாஸ்தவந்தான்; ஈச்வரனோ கேட்பாரற்ற ஸ்வதந்திரன்; அவன் சேதநருடைய குற்றங்களை நிறுத்து அவற்றுக்குத் தக்கபடி தண்டனை செலுத்தியே தீர்வேன் என்று நிற்குமளவில் பிராட்டிதான் என்ன செய்ய முடியும்? என்னில்; இது இவளுடைய செய்தியறியாதார் செய்யும் ஆக்ஷேபமாகும். இவள் சிறையிருந்த காலத்தில் இவளைப் பத்துமாதம் இடைவிடாது படாத பாடுகளைப் படுத்தின ராக்ஷஸிகளின் கொடுமையை மரத்தின்மேல் மறைந்திருந்து கண்ட அனுமன் "பெருமாள் வெற்றிபெற்ற பின்பு இவர்களைப் பார்த்துக்கொள்வோம்" என்று ஆறியிருந்து, ராவணவதமான பின்பு ஓடிவந்து "இவ்வரக்கிகளின் அபராதங்களைக் கணக்கிட்டு சித்திரவதம் பண்ண நினைத்திருக்குமெனக்கு இடமளிக்கவேணும்" என்று (பிராட்டியை நோக்கிக்) கேட்டவளவிலே, சொல்பிறங்கனுனை அவ்வனுமனையுமுட்பட இவள் உபதேசத்தாலே பொறுப்பித்தாளென்பது ஸ்ரீராமாயணப் பிரஸித்தம். [* பாபாநாம் வா சுபாநாம் வா * இத்யாதி.] அப்படிப்பட்டவிவள் * அல்லிமலர் மகள் போகமயக்குகளாகியும் நிற்கு மம்மான் * என்கிறபடியே தன் போக்யதையிலே மிகவும் ஈடுபட்டிருப்பவனாய், * நின்னைப்பின் தொழி நின்று சிலைபிடித்தெம்பிரானேக * என்கிறபடியே 'மாயாமிருகத்தின் பின்னே போ' என்றாலும் விளைவதறியாதே அதன் பின்னே தொடர்ந்து போமவனாய் இப்படி தனக்கு விதேயனாய் ரஸிகனாயிருக்குமவனைப் பொறுப்பிக்க வல்லளென்பது சொல்லவேணுமோ? ... ... ... ... *

**6·41.** பூர்வகண்டத்தில் ஸ்ரீமத் பதார்த்த நிரூபணம். 'ஸ்ரீமத்' என்கிற பதத்தில் ப்ரக்ருதியான ஸ்ரீ என்பதன் பொருள் விவரிக்கப்பட்டதாயிற்று. அதன்மேல் ஏறிக்கிடக்கும் மதுப்பென்கிற ப்ரத்யயத்தின் பொருள் கேண்மின். 'எப்போதும் கூடியிருத்தல்' என்னும் பொருளில் 'மதுப்பு' வந்திருப்பதாகக் கொள்க. "நித்யயோகே மதுப்" என்பது வியாகரணம். இத்தால் புருஷகார பூதையான பிராட்டியும் ஈச்வரனுமான இருவருடைய சேர்த்தியும் எப்போதும் முண்டென்பது தேறும். ... ... ... ... ... *

**642.** இந்த நித்யயோகம் எப்படிப்பட்டதென்னில், ஸ்வரூபாநுபந்தித்வ ப்ரயுக்தமான நித்யயோகமென்று கொள்ளக்கடவது. ஞானம் ஆனந்தம் முதலியவை எப்படி பகவானுக்கு ஸ்வரூப நிரூபகங்களோ அப்படி ஸ்ரீபதித்வமும் நிரூபகமாகையாலே இவளோடே கூடியே ஈச்வரவஸ்துவின் ஸத்தையுளதாகக் கொள்க.

**643.** இவளுடைய குணப்ரயுக்தமாகவும் நித்ய யோகமுண்டு; அபராதங்களைக் கணக்கிட்டு தண்டிக்க வல்லனான ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ரியத்தையும் சேதனர் செய்யும் குற்றங்களின் அளவில்லாமையுங் கண்டு "ஐயோ என்னுமோ!" என்கிற பயத்தாலே ஈச்வரனை விட்டு ஒரு நொடிப்பொழுதும் அகலமாட்டாள். இப்படி இவளிருந்து நோக்குகையாலே, ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ரியத்தைக் கண்டோ தன்னுடைய அபராதங்களை நினைத்தோ சேதனன் அஞ்சவேண்டிய ப்ரஸக்தியில்லை. அன்றியும், பிராட்டி எப்போதும் எம்பெருமானோடு கூடியேயிருக்கிறாளென்று தெரிந்துகொள்ளுமளவில், எந்த ஸமயத்திலும் எம்பெருமானை ஆச்ரயிக்கலாம் என்பது தேறிற்றாகும். 'புருஷகாரம் செய்பவள் அருகே யிருக்குங் காலம் பார்த்து ஆச்ரயிக்கவேணும்' என்று ஸமய ப்ரதீக்ஷை வேண்டியதில்லை; ஆச்ரயிக்க வேணுமென்கிற ருசி பிறக்க வேண்டுவ தத்தனையே. பிராட்டியின் புருஷகாரம் அவசியம் வேண்டியதே யென்பதை விபவாவதார காலத்துச் செய்தியாலும் தெரிந்து கொள்ளலாம்; ராமாவதாரத்தில், அளவுகடந்த அபராதத்தைச் செய்து ப்ரஹ்மாஸ்த்ரத்திற்கு இலக்காய்த் தலையறுப்புண்ண வேண்டின காகம் க்ருபைக்கு இலக்காய்த் தலை பெற்றுப்போனது பிராட்டியின் ஸந்நிதியினாலேயாம். அவ்வளவு அபராதியல்லாத ராவணன் ராமசரத்துக்கு இலக்காய் முடிந்துபோனது இவளுடைய ஸந்நிதி யில்லாமையினாலேயாம். ஆகவே பிராட்டியின் ஸந்நிதானம் பழுதுபடாதென்று உணர்க. ஆக இவ்வளவும் ஸ்ரீமத் பதார்த்தம் சொன்னோம். ... *

**644.** த்வயபூர்வகண்டத்தில் நாராயண பதார்த்த விவரணம். இனி நாராயண பதார்த்தம் கேண்மின். '**நாராயணன்**' என்பதற்குப் பல பொருள்கள் உண்டு; ஆங்காங்கு ஸந்தர்ப்பாநுகுணமாகப் பொருள் கொள்ள வேண்டியதாகும். இங்கு வாத்ஸல்யம் ஸ்வாமித்வம் ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஜ்ஞாநம் சக்தி ஆகிற இத்திருக்குணங்களை யுடையவன் என்கிற பொருள் கொள்ளக்கடவது ஏனென்னில், ஆச்ரயிக்க ருசியுடைய சேதநன் அநாதிகாலமாகப் பண்ணின அபராதங்களைப் பார்த்துச் சீற்றங்கொண்டு 'இவனை அங்கீகரிக்கமாட்டேன்' என்றிருக்கும் எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியமானது உபதேசத்தாலும் அழகாலும் வசீகரித்துக் காரியங்கொள்ளவல்ல புருஷகாரபலத்தாலே தலைமடிந்தொழிந்த பிறகு, அந்த ஸ்வாதந்திரியத்தின்கீழ்த் தலையெடுக்கப் பெறுமலிருந்த கஷ்டம் தீர்ந்து தலையெடுக்குமவையான குணங்கள் இவையாதலால் இக்குணங்கள் இங்கு நாராயண பதத்திற்கு அர்த்தமாகக் கொள்ளப்படவேணும். ... ... *

**645.** நாராயண பதார்த்தமாகச் சொல்லப்பட்ட திருக்குணங்களின் உபயோக விவரணம். இக்குணங்களுக்கு இவ்விடத்தில் விநியோகம் என்னவெனில்; ஆச்ரயிக்க வந்த இந்த சேதநன் தன் தோஷங்களைப் பார்த்து அஞ்சாமைக்கு உறுப்பு **வாத்ஸல்யம்**; வாத்ஸல்யமாவது கன்றினிடத்திலே பசு இருக்குமிருப்பு; அதாவது அதனுடைய தோஷங்களை போக்யமாகக் கொள்ளுகையும் பாலைக் கொடுத்து வளர்க்கையும், எதிரிட்டவர்களைக் கொம்பிலும் குளம்பிலுங் கொண்டு நோக்குகையுமாம். அப்படியே எம்பெருமானும் ஆச்ரிதருடைய தோஷத்தை [* என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார் * என்கிறபடியே] போக்யமாகக்கொண்டு * பாலேபோல் சீர் * என்கிற குணங்களாலே தரிப்பித்து. * **ந த்யஜேயம் கதஞ்சந** * என்று ஒரு நிலை நின்று ரக்ஷித்தருள்வன்.

ஆகவே இந்த வாத்ஸல்ய குணமானது தன் குற்றங்களைக் கண்டு அஞ்சாமைக்கு உடலாகும். 'நமது காரியம் செய்வனோ மாட்டானோ வென்று சங்கியாமல் 'அவசியம் காரியம் செய்வன்' என்று நம்பியிருப்பதற்குறுப்பு **ஸ்வாமித்வம்**. உடைமையை யுடையவனா யிருக்கைதான் ஸ்வாமித்வமென்பது, சேதநன் விமுகனான தசையிலும் விடாமல் நின்று ஸத்தையை நோக்கிக்கொண்டு போருகைக்கு ஹேதுவான உறவுமுறையாம். ஆகவே இழவுபேறு தன்னதாம்படியான ஸ்வாமித்வமானது, எம்பெருமான் நம் காரியத்தைச் செய்தே தீருவனென்று துணிகைக்கு உடலாம். உபய விபூதிக்கும் கடவனாயிருக்கும் பெருமைக்கு ப்ரகாசமான ஸ்வாமித்வத்தைக் கண்டு (சேதநன்) தன் தாழ்வை யநுஸந்தித்து அகலாமைக்கு உறுப்பு **ஸௌசீல்யம்**. எல்லாரோடும்பொக்க மேல்விழுந்து புரையறக் கலக்கையே ஸௌசீல்யமாதலால் இது ஸ்வாமித்வங்கண்டு பின் வாங்காமைக்கு உடலாம் அதீந்த்ரியன் [அதாவது கண்ணுக்கு விஷயமாகாதவன்] என்று பிற்காலியாமல் கண்ணாலே கண்டு ஆச்ரயிக்கைக்கு உறுப்பு **ஸௌலப்யம்** தன் வடிவைக் கண்ணுக்கு இலக்காக்குவதே யன்றோ ஸௌலப்யமாவது. * ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி * என்கிறபடியே ப்ராப்தி விரோதியைப்போக்கி ப்ராப்யனான தன்னை உபகரிக்கைக்கு உறுப்பு **ஜ்ஞாந சக்திகள்**. இந்த சேதநன் கீழ்நின்றநிலையையும் மேல் போக்கடியையும் எம்பெருமானறிந்து கொள்ளுகைக்கு **ஜ்ஞாநம்** உறுப்பு; அறிந்தபடியே செய்து தலைக்கட்டுகைக்கு **சக்தி** உறுப்பு; ஆகவே விரோதியைப் போக்கித் தன்னைக் கொடுக்கைக்கு ஜ்ஞாநசக்திகள் உடலாம். ... ... ... *

**646** விசேஷித்து ஸௌலப்ய குணத்தின் விவரணம். கீழ்ச் சொன்ன குணங்களில் ஸௌலப்யம் மிக முக்கியமானது; அந்த ஸௌலப்யத்திற்கு எல்லை நிலம் எதுவென்றால் * தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந்தானே * என்கிறபடியே அன்பர்கள் உகந்ததொன்றைத் திருமேனியாகக்கொண்டு நித்ய ஸந்நிதி பண்ணியிருக்கும் அர்ச்சாவதாரமாம். அர்ச்சாவதாரமானது தேசவிப்ரகர்ஷத்தாலே கண்ணுக்கு இலக்காகாத பரவ்யூஹங்கள் போலல்லாமல், காலவிப்ரகர்ஷத்தாலே கண்ணுக்கிலக்காகாதபடி போன விபவாவதாரங்கள் போலுமல்லாமல் அணித்தாகி ஸதா ஸந்நிதி பண்ணிக்கொண்டிருக்கையாலே எப்போதும் கண்ணாலே காணலாம்படி யிருக்கும். ஆனது பற்றியே ஆழ்வார்கள் அர்ச்சாஸ்தலங்களையே தங்களுடைய ப்ரபத்திக்கு இலக்காக்கினார்கள். ... ... *

**647**. திருவாய்மொழியில் * அகலகில்லேனிறையுமென்று * என்கிற பாசுரத்தினால் திருவேங்கடமுடையான் திருவடிகளில் ப்ரபத்தி செய்யுமிடத்து த்வயத்தின் பூர்வவாக்யத்தை அநுஸந்தித்துக்கொண்டே செய்தாரென்பது அப்பாசுரத்தினால் ஸ்பஷ்டமாக விளங்குகின்றது. எங்ஙனேயென்னில் * அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா! * என்பதனால் ஸ்ரீமத்பதார்த்தாநுஸந்தானம். * நிகரில் புகழாயென்று தொடங்கி * திருவேங்கடத்தானே * என்னுமளவும் நாராயண பதார்த்தத்தின் அநுஸந்தானம், (எவ்வாறென்னில்;) நாராயண பதத்திற்கு வாத்ஸல்யம் ஸ்வாமித்வம், ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஞானம் சக்தி என்னும் ஆறு குணங்களுடைமையே அர்த்தமாதலால், **நிகரில்புகழாய்** என்று வாத்ஸல்யம்: **உலகம் மூன்றுடையாய்** என்று ஸ்வாமித்வம். **என்னையாள்வானே** என்று ஸௌசீல்யம். **திருவேங்கடத்தானே** யென்று ஸௌலப்யம், சக்திமான்களான அமரர்களும் ஞானவான்களான முனிவர்களும் வந்து தொழுகிறார்களென்று தெரிவிக்குமதான **நிகரிலமரர்முனிக்கணங்கள் விரும்பு** மென்கிற விசேஷணத்தினால் ஜ்ஞான சக்திகள். * புகலொன்றில்லா வடியேனுன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே * என்கிற ஈற்றடியினால் * சரணௌ சரணம் ப்ரபத்யே * என்பதன் அநுஸந்தானம்—என்று சுருக்கமாக வநுஸந்திப்பது. ... ... ... *

**648.** சரண சப்தார்த்தமும் த்விவசனத்தின் பொருட் சுவையும். இனி ‘**சரணௌ**’ என்கிற பதத்திற்கு ‘திருவடிகளை’ என்று பொருள். இது த்விவசநாந்த பதமாகையாலே இரண்டு திருவடிகளைச் சொல்லிற்றுகிறது. இரண்டு திருவடிகளையும் சொல்லுகிற வித்தால் *இணைத்தாமரை யடியெம்பிரான்* என்கிற படியே இரண்டு தாமரைப் பூவை ஒழுங்குபடச் சேர்த்து வைத்தாற்போலே யிருக்கிற சேர்த்தியழகு சொல்லப்படுகிறது. அதுவன்றியும் உபாய பூர்த்தியும் சொல்லப்பட்டதாகிறது. அது எங்ஙனே யென்னில்; ஏகவசந ப்ரயோகம் பண்ணுமிடங்களில் ஜாத்யேகவசநமென்று கொண்டு பல பொருள்கள் பொருளாகவுங் கூடும்; பஹுவசநமுள்ளவிடங்களில் ‘பூஜாயாம் பஹுவசநம்’ ‘ஆத்மநி பஹுவசநம்’ என்கிற முறைகளாலே ஒரு வ்யக்தியே பொருளாகவுங்கூடும். த்விவசநமோ வென்னில், இரண்டுக்குக் குறைவாகவும் இரண்டுக்கு மேற்படவும் கொள்ளுவதற்கு இடந்தரமாட்டாதாகையாலே, உபாயமாமளவில் ஸஹாயாந்தரத்தை அபேக்ஷியாமையாகிற பூர்த்தியைச் சொல்லுகிறது. ... ... *

**649.** ஸ்ரீமந்நாராயணனைப் பற்றுகிறேனென்னுமல் அவனுடைய திருவடிகளைப் பற்றுகிறேனென்று சொல்லுகையாலே உபாயத்துக்கு உற்றதான குணச்சிறப்பு திருவடிகளுக்குள்ளதென்னுமிடம் தோன்றுகிறது. கீழே புருஷகாரமாகச் சொல்லப்பட்ட பிராட்டியும்; ரக்ஷகனுகச் சொல்லப்பட்ட எம்பெருமானுங்கூட கைவிட்டாலும் திருவடிகள் கைவிடமாட்டா; *வண்புகழ் நாரணன் திண்கழல்* என்கிறபடியே பற்றினரை ஒருகாலும் நழுவவிடாத திண்மையையுடைத்தாயிருக்கும். * **அநதிக்ரமணீயம் ஹி சரணக்ரஹணம்** * என்றுநின்றார்களன்றே. திருவடிகளுக்கு இப்படிப்பட்ட குணச்சிறப்பு இருப்பதும் தவிர, இவனுடைய ஸ்வரூபத்துக்குச் சேரவும் திருவடிகளிலே யிழிகை ப்ராப்தம். ஸ்தநந்தய ப்ரஜையானது தாயினுடைய அவயவமெல்லாங் கிடக்கத் தனக்கு வகுத்ததாயுள்ள முலையிலே வாய் வைக்குமாபோலே சேஷியைக் ஆச்ரயிக்க விழியும் சேஷபூதன் தன் ஸ்வரூபத்துக்குச் சேர இழியும் துறை திருவடிகளாம். ... ... ... *

**650.** திருவடிகளைச் சொன்னவிது திருமேனிக்கு உபலக்ஷணமாகும். ‘விக்ரஹத்தில் ஏகதேசமான திருவடிகளைச்சொன்னபோதே புருஷகாரபூதையான பிராட்டிக்கு இருப்பிடமாய், நாராயணபதத்திற் சொன்ன குணங்களுக்கு ப்ரகாசகமாய் நிச்சலும் பழித்த சிசுபாலனையுங்கூடத் திருத்தி *செப்பால்பழம்பகைவன் சிசுபாலன் திருவடி தாட்பாலடைந்த* என்கிறபடியே சேர்த்துக் கொள்ளுமியல்வினதான திவ்யமங்கள விக்ரஹத்தை நினைக்கிறதென்க. ... *

**651.** ‘சரணம்’ என்கிற பதத்தின் பொருள் விளக்கம். த்வயத்தில் இரண்டாவது பதம் ‘சரணம்’ என்பது. இஷ்டத்தைப் பெறுகைக்கும் அநிஷ்டத்தைத் தவிர்க்கைக்கும் தப்பாத உபாயமாக என்று இதன் பொருளாம். அவித்யை யென்ன, அதடியாக வரும் ராகத்வேஷங்களென்ன, புண்ய பாப ரூப கருமங்களென்ன அவற்றின் பயனான தேவாதி சரீரங்களென்ன, பலவகைப்பட்ட துக்க பரம்பரைகளென்ன — ஆகிய இவை அநிஷ்டங்களாம். அர்ச்சிராதி மார்க்கத்தாலே செல்லுகையும் பரமபதத்தை ப்ராபிக்கையும் பரம புருஷனைக் காண்கையும் குணாநுபவ கைங்கரியங்களுமாகிய இவை இஷ்டங்களாம், ஆக இந்த இஷ்டங்களைப் பெறுகைக்கும் அந்த அநிஷ்டங்களைத் தவிர்க்கைக்கும் தப்பாத உபாயமாக என்றதாயிற்று. ... ... ... ... *

**652.** திருவடிகளையே உபாயமாகச் சொன்னதனால் உபேயமானது தானே உபாயமென்பது சொல்லிற்றாகும். உபாயம் வேறும் உபேயம் வேறுமாயிருக்கிறபடி கிடையாதென்க. ஆனால் உபேயமானதுதன்னையே உபாயமாக்கு

கிறது ஏதினாலெனில்; அகிஞ்சநனும் அநந்யகதியுமாயிருக்கிறவிவன் தன் செயல் மாட்சியாலே [ அதாவது வேறொன்றும் செய்யமாட்டாமையாலே ] உபேயமானது தன்னையே உபாயமாக்குகிறானித்தனை. உலகில், போக்யமான பாலையே மருந்தாக்கும்படியாக நேர்ந்துவிடுகிறதன்றோ. அதுபோலவென்று கொள்க. உபேயமான வஸ்துவையே உபாயமாகச் சொல்லுகையாலே உபேயம் வேறும் தான் வேறுமாயிருக்கிற உபாயாந்தரங்களிற்காட்டில் விலக்ஷணமான வுபாயம் இது என்றதாயிற்று. ... ... ... ... *

**653.** 'ப்ரபத்யே' என்றதன் பொருள் விளக்கம். **ப்ரபத்யே** என்றது பற்றுகிறேனென்றபடி. ரக்ஷிக்கவேணுமென்று வாயினால் பிரார்த்திக்கையாகிற கேவல வாசிகமாகவும், கைகூப்புதல் நமஸ்கரித்தல் முதலியவையாகிற கேவலகாயிகமாகவும் பற்றினாலும் பலன் ஸித்திக்கக் குறையில்லை; ஆனாலும், * **தத்வஜ்ஞாநாந் முக்தி:** * என்று ஞானத்தாலே மோக்ஷமென்கையாலே இங்கு மாநஸமான பற்றுதலே சொல்லிற்றாகக் கடவது. எம்பெருமானுடைய ரக்ஷகத்வத்தை இசைகையாகிற ஒரு அத்யவஸாயமே இந்த ஞானமாம். ... *

**654.** மாநஸிகமாத்திரமே போதுமோ? * சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவபிரானையே அடைந்த * என்கிறபடி மனமொழி மெய்கள் மூன்றாலும் ஸ்வீகரிக்கவேண்டாவோவென்னில், இம்மூன்றும் வேண்டுமென்கிற நிர்ப்பந்தமில்லை ஏனென்னில், பற்றப்படுகிற ஈச்வரனே பலன் ஸித்திக்கைக்கு உபாயமாகையாலும், மனமொழி மெய்களாலுண்டான பற்றுதல்களான இவை மேலெழ உபாயம்போல் தோற்றிக் கழிந்து போமதொழிய ஸாக்ஷாத் உபாயமல்லாமையாலும், பலன் ஸித்திப்பதற்கு அத்யவஸாயரூபமான ஸ்வீகாரமொன்றுமே போதுமானது. ... ... ... ... *

**655.** * நின்னடியிணையடைந்தேன் * அடிக்கீழமர்ந்துபுகுந்தேன் * என்றாப்போலே இறந்தகாலமாகச் சொல்லுகையன்றிக்கே [ப்ரபத்யே - பற்றுகிறேன்] என்று நிகழ்காலமாகச் சொல்லுகிறது ஏதுக்காகவென்னில், ப்ரக்ருதியோடேயிருக்கிறவிவன் ரஜோகுண தமோகுணங்களாலே கலங்கி உபாயாபாயங்களில் ஏதேனுமொன்றிலே அந்வயித்து, பின்னை ஸத்வகுணம் தலையெடுத்து அநுதாபம் பிறந்து பயப்பட்ட காலத்திலே ப்ரபத்தியொழிய அதுக்குப் பரிஹாரமில்லாமையாலும் அது தான் ஒருகால் செய்தற்ற பின்பு மீண்டும் செய்யலாகாமையாலும் முந்துற்ற ப்ரபத்தியை அநுஸந்திக்கைக்காகக் கொழுந்துவிட்டுக் கிடக்கிறபடி. ஆக, பூர்வவாக்யார்த்தம் சொல்லிற்றாயிற்று. ... ... ... *

**656** த்வயத்தில் உத்தரவாக்யத்தின் திரண்ட பொருள். ஸர்வஸ்வாமியாயிருக்கிற ஸர்வேச்வரனது திருவடிகளில் பண்ணும் கைங்கர்யத்தைப் பிரார்த்திப்பதே இதற்குத்திரண்ட பொருள். பூர்வவாக்கியத்தில் உபாயஸ்வீகாரம் பண்ணி இப்போது உபேயம் சொல்லுகிறவிதனால் என்ன தேறுகிறதென்னில்; பூர்வவாக்கியத்தில் பிரதிபாதிக்கப்பட்ட ஸாதனம் ஸகல பலன்களுக்கும் பொதுவாகையாலே கீழ்ப்பண்ணின உபாயவரணம் வேறொருபலனுக்காகவன்று, பகவத்கைங்கர்ய ஸித்திக்காகவே என்றதாகத் தேறுகின்றது. மற்ற பலன்களை விட்டு இந்தப் பலனை அபேக்ஷிக்க வேண்டுவானென்னென்னில்; உபாயவரணம் பண்ணுகிறவளவில் அநந்யோபாயத்வரூபமான ஸ்வரூபத்துக்குத் தகுதியாக கர்மஜ்ஞானபக்திகளாகிற உபாயாந்தரங்களை விட்டு சரமமான ஸித்தோபாயத்தைப் பற்றினாப்போலே உபேய ப்ரார்த்தனை பண்ணுகிறவளவிலும் அநந்யபோக்யத்வரூபமான ஸ்வரூபத்துக்குத் தகுதியாக உபேயாந்தரமான ஐச்வர்ய கைவல்யங்களைவிட்டு சரமமான உபேயத்தை [பகவத்கைங்கர்யத்தை] வேண்டுவது ப்ராப்தமேயன்றோ.

**657.** * உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்தறிதி * என்கிறபடியே நினைவறியுமவனான எம்பெருமான் பக்கலிலே ப்ரார்த்தனை வேணுமோ? ஸர்வஜ்ஞனான அவன் இவனது நினைவை அறியமாட்டானோ வென்னில் நெடுங்காலமாக இதரபலன்களில் நசையாகிற நோய்கொண்டு இந்த உபேயத்தில் நசையற்றுக் கிடந்தவன், இதிலே ருசிபிறந்து தன்பக்கலிலே வந்து இத்தை அபேக்ஷிக்கிறதித்தனை. ரோகத்தாலே சோற்றில் ஆசையற்றுக் கிடந்த குழந்தை, ரோகம் தீர்ந்து பசிவிளைந்து சோறு என்றபேக்ஷித்தால், அதுகேட்டுப் பெற்றதாய் உகக்குமா போலே இதனைக்கொள்க. ... ... ... *

**658.** ஸ்ரீமதே என்றதன் பொருள் விவரணம். ஸ்ரீசப்தத்திற் அப் பூர்வவாக்யத்தை விவரிக்கும்போது சொன்ன இரண்டு வ்யுத்பத்திகளும் குர்த்த மூர் மதுப்புக்கு அர்த்தமான நித்யயோகமும் அப்படியே அநுஸந்திக்கத்தக்கது. ஆகவே ஸ்ரீமதே என்பதற்கு பெரியபிராட்டியாரோடே கூடியிருக்குமவனுக்கு என்று பொருளாம். பிராட்டியின் நித்ய யோகமானது இரண்டிடத்திலும் ஒரே விதமாக இருப்பதாலும் அந்தந்த நிலைமைக்குத் தக்கபடி இவளிருக்குமிருப்பை நிஷ்கர்ஷித்துக்கொள்ளவேணும். எம்பெருமான் சேதநர்களுக்கு அநிஷ்ட நிவ்ருத்தி இஷ்ட ப்ராப்திகளைக் குறித்து உபாயமாமளவில் அவள் புருஷகாரமாயிருப்பள்; அவன் சேதநர்களுக்கு கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாய் ப்ராப்யனுமளவில் தானும் அவனைப்போலே கைங்கர்ய ப்ரதிஸம்பந்தினியாய்க்கொண்டு ப்ராப்யையுமாய், இவர்கள் செய்யும் கைங்கர்யத்தை அவன் திருவுள்ளத்திலே ஒன்று பத்தாகப் படுத்தி உகப்பிக்குமவளாயிருப்பள். ஆகவே பூர்வ வாக்யத்தில் சொன்ன நித்யயோகம் புருஷகாரத்வோபயுக்தமென்றும், இப்போது உத்தரவாக்யத்தில் சொல்லுகிற நித்யயோகம் கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாகைக்காகவும் கைங்கர்யத்தை அவன் திருவுள்ளத்திலே ஒன்று பத்தாகப் படுத்துகைக்காகவும் அமைந்ததென்றும் சொல்லிற்றாயிற்று. ... ... ... ... *

**659.** முதல் ரஹஸ்யமான திருமந்திரத்திலே 'நாராயணாய' என்று சொல்லிற்று. நாராயணனுக்கே அடிமை செய்யப்பெறவேணுகவேணும் என்கிறவேயொழிய, அடிமை கொள்ளுமவன் பெரிய பிராட்டியாரோடு கூடியிருப்பவனாக வேணுமென்றும் அடிமை செய்யுமவன் மமகாரமற்றவனாக இருக்க வேணுமென்றும் அங்கு ஸ்பஷ்டமாகச் சொல்லிற்றில்லையே; அவையிரண்டும் இங்கே ஸுஸ்பஷ்டமாகச் சொல்லுகையாலே திருமந்திரத்தில் உத்தர பதத்திற்கு இவ்வுத்தர வாக்யம் விவரணமாயிருக்குமென்று கொள்ளக்கடவது. ... *

**660.** த்வயத்தில் 'நாராயணாய' என்றதன் பொருள் விவரணம். 'நாராயணாய' என்கிற பதத்தின் பொருள் கேண்மின். நாராயணத்வமாவது உபயவிபூதி நாதத்வமாகையாலே இப்பொருள்தான் இங்குப்பொருந்தும் கைங்கர்ய ப்ரதி ஸம்பந்தியாவான் சேஷியேயன்றோ. [சேஷி — ப்ராப்தனான ஸ்வாமி கைங்கர்ய ப்ரதி ஸம்பந்தியைச் சொல்லுகிற இப்பதத்திலே கைங்கர்யத்துக்கு முன்னாடி நேரும் அநுபவத்துக்கு இலக்கான திவ்யமங்கள விக்ரஹத்தையும் கல்யாண குணங்களையும் சொல்லுமாறுளும் இவ்விடத்திலே சேஷித்வமென்கிற குணத்திலே முக்யமான நோக்கு என்று கொள்ளவேணும். ஏனென்னில், இங்குச் சொல்லுகிற கைங்கர்யத்திற்கு மிகவும் அந்தரங்கமாயிருப்பது சேஷித்வமாகையாலே; அப்ராப்த விஷயத்தில் கைங்கர்யம் சாஸ்த்ரங்களிலே நிஷேதிக்கப்பட்டிருக்கும்; அதுபோலல்லாமல் விஹிதமான ப்ராப்த விஷயத்தில் பண்ணும் கைங்கர்யமன்றோ இவனுக்கு ரஸிப்பது; ஆகவே சேஷித்வத்திலே நோக்கென்றது நன்று. ... ... ... ... ... ... *

**661.** நாராயணபதத்தின் மேலுள்ள சதுர்த்தியானது கைங்கர்யப் பிரார்த்தனையைக் காட்டுகிறது. சேஷத்வஜ்ஞாநகார்யமான உபாயபரிக்ரஹத்துக்கு அடுத்தபடியாக ப்ராப்தமான இந்த சதுர்த்தியானது, பரிக்ரஹித்த உபாயத்தினுடைய பலனை கைங்கர்யத்தை ப்ரகாசிப்பிக்கின்றதென்கை மிகவும் உசிதம். சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபமாகையாலும், அந்த சேஷத்வமானது கைங்கர்யமில்லாதபோது ஸத்தைபெற்றதாகாமையாலும் கைங்கர்யம் ஆத்மாவுக்கு நித்யமாயிருக்கும். நித்யமாயிருக்குமாகில் பிரார்த்திக்க வேணுமோவென்னில், ப்ரார்த்தனை விசேஷமில்லாதபோது கைங்கர்யம் ஸித்தியாமையாலே அதை நித்தியமாகப் பிரார்த்தித்தே பெறவேணும். ... ... ... *

**662.** த்வயத்தின் முடிவிலுள்ள நமஸ்ஸின் பொருள். நமச்சப்தமானது பொதுவாக அஹங்காரமமகாரங்களைக் கழிக்குமதாகையாலே திருமந்திரத்தில் நடுவிலுள்ள நமச்சப்தம்போலே ஸ்வரூபவிரோதி உபாய விரோதி புருஷார்த்த விரோதி ஆக மூன்றையும் கழிக்க வல்லதாயிருந்ததேயாகிலும் இங்கு அப்படியல்லாமல் கைங்கர்யப் பிரார்த்தனைக்கு அடுத்தபடியாக வுள்ளதாகையாலே இந்த கைங்கர்யத்தில் விரோதியைக் கழிக்கிறது. கைங்கர்யத்தைத் தன்னுடைய உகப்புக்கு உறுப்பாக நினைத்துப் பண்ணுகையே இங்கு விரோதியாகும். அங்ஙனம் நினைத்துப் பண்ணலாகாது. "பகவந்முகவிகாஸ ஹேதுவாகையாலே இது நமக்கு ஆதரணீயம்" என்கிற பிரதிபத்தியே நடக்கக்கடவது இதில், தான் போக்தா என்கிற பிரதிபத்தியும், போகம் தன்னுடையது என்கிற பிரதிபத்தியும் நடக்குமாகில் அபுருஷார்த்தமாகும். ... ... ... ... *

**663.** ஆக, இரண்டு கண்டமான த்வயத்தின் பொருள் தேறினதாவது. புருஷகார பூதையான பிராட்டியும், அவளுடைய நித்யஸாஹித்யமும், அவளாலே தலையெடுக்கும்படி செய்யப்பட்ட வாத்ஸல்யாதி குண பூர்த்தியும் அந்த குணங்களுக்கு ப்ரகாசமான திவ்யமங்கள விக்ரஹமும், குணங்களோடும் விக்ரஹத்தோடுங்கூடின வஸ்துவின் உபாயத்வமும், அவ்வுபாய ஸ்வீகாரமும் பூர்வ கண்டத்தால் சொல்லிற்று. ... ... ... ... *

**664.** அவ்வுபாய ஸ்வீகாரத்திற்குப் பலனாக கைங்கர்யத்திற்கு விஷயம் திவ்ய தம்பதிகளாகிற மிதுனமென்பதும், அவ்வஸ்துவினுடைய ஸர்வசேஷித்வமும்; அவ்விஷயத்தில் கைங்கர்யமும், அக்கைங்கர்யத்தின் விரோதி நிவ்ருத்தியும் உத்தர கண்டத்தால் சொல்லிற்று. இதுவே த்வயத்தின் ஸாரமான பொருள்.

**665.** பட்டர் அருளிச்செய்த அஷ்டச்லோகியில் *நேத்ருத்வம் நித்ய யோகம்* என்கிற ஐந்தாவது சுலோகமும், *ஈசாநாம் ஜகதாம்* என்கிற ஆறாவது சுலோகமும் த்வயத்தின் பொருளை விவரிப்பனவாதலால் அவ்விரண்டு சுலோகங்களும் இங்கே அநுஸந்தேயங்கள். *நேத்ருத்வம் நித்யயோகம் ஸமுசிதகுண ஜாதம் தநுக்யாபநஞ்ச உபாயம் கர்த்தவ்யபாகம் து* என்கிற வளவால் பூர்வ கண்டத்தில் ஆறு அர்த்தங்கள் வகுக்கப்படுகின்றன வென்கிறது. எங்ஙனே யென்னில் [1. **நேத்ருத்வம்** ] புருஷகாரத்வமென்றபடி. த்வயத்தின் முதலில் ஸ்ரீ சப்தம் காண்பது அவள் புருஷகார பூதையென்று காட்டுவதற்காகவென்று கருத்து [2 **நித்ய யோகம்** ] ஸ்ரீ சப்தத்திற்கடுத்த மதுப்ப்ரத்யயத்தின் அர்த்தம் சொன்னபடி. * அகலகில்லேனிறையும் மென்றிருக்கும்படியைச் சொன்னவாறு. [3 **ஸமுசிதகுணஜாதம்** ] "புருஷகார பலத்தாலே ஸ்வாதந்த்ர்யம் தலைசாய்ந்தால் தலையெடுக்குங் குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம்" என்ற முமுக்ஷுப்படி ஸூக்தியை இங்கு

நினைப்பது. [4 நநுக்ஷயாபவஞ்ச.] 'சரணௌ' என்று திருமேனியில் ஏகதேசமான திருவடிகளைச் சொன்னவிது திருமேனிக்கு உபலக்ஷணமென்று கொள்ளக்கடவது. புருஷகார பூதையான பிராட்டிக்கு இருப்பிடமாய் நாராயணபதத்திற் சொன்ன குணங்களுக்கு ப்ரகாசகமான திவ்ய மங்கள விக்ரஹத்தைச் சொல்லிற்றென்க. [5 உபாயம்] ஸ்ரீமந்நாராயண சரணௌ வரையில் அர்த்தம் சொல்லிற்று கீழ்; இனி அடுத்தபதமான சரணம் என்பதற்கு — இஷ்டத்தைப் பெறுகைக்கும் அநிஷ்டத்தைத் தவிர்க்கைக்கும் தப்பாத உபாயமாக என்று பொருள். [6. கர்த்தவ்ய பாகம்.] 'ப்ரபத்யே' என்பதனால் சொல்லப்படுகிற மாநஸிக – வாசிக – காயிகங்களான ஸ்வீகாரங்களில் ஒரு பாகமான மாநஸிக ஸ்வீகாரம். ஆக இவ்வளவும் பூர்வகண்டார்த்தம். ... ... ... ... *

**666**. [அத மிதுநபரம் ப்ராப்யம்—ஸ்வாமித்வம் ப்ரார்த்தநாஞ்ச ப்ரபந்நாவிரோதி ப்ரஹாணம்] இனி உத்தரகண்டத்தின் பொருள் பணிக்கத் தொடங்குகிறபடியை 'அத' என்றிட்டுக் காட்டுகிறபடி. பெருமாளும் பிராட்டியுமாக இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்கையை ப்ரார்த்திப்பதே உத்தரவாக்யத்தின் திரண்ட பொருள் என்பதை 'மிதுநபரம் ப்ராப்யம்' என்பதனால் காட்டினபடி. இது (7) 'ஸ்ரீமதே' என்றதன் அர்த்தம் சொன்னபடி. பெரிய பிராட்டியாரோடே கூடியிருக்குமவனுக்கு என்று பொருள். ... ... ... *

**667**. பிராட்டியின் நித்ய யோகத்தை அநுஸந்தித்ததானது பூர்வகண்டமும் உத்தரகண்டமுமாகிற இரண்டிடத்திலும் ஒரே விதமாக இருந்தாலும் அந்தந்த நிலைமைக்குத் தக்கபடி இவளிருக்குமிருப்பை நிஷ்கர்ஷித்துக் கொள்ள வேணும். பூர்வகண்டத்தில் அநுஸந்திக்க நித்யயோகம் புருஷகார க்ருத்யத்திற்காக. உத்தரகண்டத்தில் அநுஸந்திக்கிற நித்யயோகம் எம்பெருமானுக்குப் போலவே பிராட்டிக்கும் கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வேந அந்வயம் உண்டென்கைக்காக. ஆகவே கைங்கர்யத்திற்கு உத்தேச்யம் மிதுனமேயென்றதாயிற்று. *

**668**. [8 ஸ்வாமித்வம்] இது நாராயண பதார்த்தம் சொன்னபடி. நாராயணத்வமாவது உபயவிபூதி நாதத்வமாகையாலே ஸர்வசேஷியாயுள்ளவனுக்கு என்றதாகும் கைங்கர்ய ப்ரகரணமாகையாலே இப்பொருள் தான் பொருந்தும். ப்ராப்தனான ஸ்வாமியேயன்றோ கைங்கர்ய ப்ரதி ஸம்பந்தியாவான். அப்ராப்த விஷயத்தில் பண்ணும் கைங்கர்யம் ரஸிக்கமாட்டாதே. [9 ப்ரார்த்தநாஞ்ச] நாராயணபதத்தின் மேலுள்ள சதுர்த்தீ விபக்தியின் அர்த்தம் ப்ரார்த்தனையென்க. [10. ப்ரபந்நா விரோதி ப்ரஹாணம்.] இது த்வயத்தின் முடிவிலுள்ள நமச்சப்தத்தின் பொருள் விவரணம். (294. லக்கத்தில் விவரணம் காண்க) ஆகப் பத்து அர்த்தங்கள் த்வய ரஹஸ்யத்தில் அநுஸந்திக்கத் தக்கனவென்றதாயிற்று. ... *

த்வயார்த்த விவரணம் முற்றிற்று.

---

**669**. சரமச்லோகங்கள் மூன்றென்று ரூகனித்தல், ஸம்ப்ரதாயத்தில் வராஹ சரமச்லோகமென்றும் ஸ்ரீ ராம சரமச்லோகமென்றும் ஸ்ரீ கிருஷ்ண சரமச்லோகமென்றும் மூன்று சரமச்லோகங்கள் ப்ரஸித்தமாக உண்டு. * ஸ்திதே மநஸி ஸுஸ்வஸ்தே..... அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம் * என்பது வராஹ சரமச்லோகம். * ஸக்ருதேவ ப்ரபந்நாய...ஏதத் வ்ரதம் மம * என்பது ஸ்ரீ ராம சரமச்லோகம். * ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ. அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச: என்கிற விது ஸ்ரீக்ருஷ்ண

சரமச்லோகம். இவை முறையே பூமிப்பிராட்டியை நோக்கியும், கடற்கரையிலே விபீஷணாழ்வானை நோக்கியும், திருத்தேர்த்தட்டிலே அர்ஜுனனை நோக்கியும் அருளிச் செய்யப்பட்டவை. ... ... ... *

**670** சரமச்லோக சப்தார்த்த நிரூபணம். சரமச்லோகமென்பதற்குக் கடைசியான சுலோகமென்று பொருள் தோன்றும். கீதையில் கடைசியான சுலோகம் * யத்ர யோகேச்வர: க்ருஷ்ணோ... த்ருவா நீதிர் மதிர் மம * என்பதேயொழிய * ஸர்வகர்மாநித்யாதி ச்லோகமன்று எழுபத்தெட்டு சுலோகங்கள் கொண்ட பதினெட்டாமத்யாயத்தில் அறுபத்தாறாம் சுலோகமான இதனை எங்ஙனே சரமச்லோக மென்றார்கள்? என்று சங்கை தோன்றும். கேண்மின். ... *

**671.** ஸமாஸங்களில் மத்யமலோபி ஸமாஸமென்று ஒன்றுண்டு; அதனை சாகபார்த்திவஸமாஸ மென்றும் சொல்லுவர்கள். ஒரு அரசன் கீரையிலே மிகவும் ப்ரீதி கொண்டிருந்தான். அவனை சாகப்ரிய பார்த்திவனென்ன வேண்டியது சாக பார்த்திவனென்றே சொல்லிவிடுவதுண்டு. "சாகப்ரிய: பார்த்திவ: சாக பார்த்திவ:" என்பர்கள். இங்கு மத்யமமான ப்ரிய பதம் லோபித்திருக்கையாலே மத்ய மலோபி ஸமாஸமென்று சொல்லுவர்கள். அதுபோலே இங்கும் "சரமோபாய ப்ரதிபாதக: ச்லோக:, சரமச்லோக:" என்றாகக் கடவது. கர்மஜ்ஞாநாதிகளான உபாயங்களில் சரமமான உபாயம் சரணாகதி; அதனைத் தெரிவிக்குமதான இந்த ச்லோகம் சரமச்லோக மென்று பேர்பெற்றதாயிற்று. ... ... *

**672.** இது, மா சுச: என்று முடிவு பெறுகின்றது. துக்கப்படாதே என்று பொருள் அர்ஜுனன் துக்கப்பட்டதாகத் தெரிந்தாலொழிய இங்ஙனே சொல்ல ப்ரஸக்தியில்லை. அவன் துக்கப்படும்படியாகக் கண்ணன் ஏதாவது சொல்லியிருக்கிறானோவென்று பார்க்குமளவில் அப்படியொன்றும் தெரியவில்லை. "கண்ணா! நீ சொன்னது எனக்கு துக்ககரமாக இருக்கிறது" என்று அர்ஜுனன் ஏதேனும் சொல்லியிருக்கிறானோ வென்று பார்த்தால் அதுவுமில்லை இப்படியிருக்க மா சுச: என்று எதுகொண்டு சொல்லிற்று? என்று விமர்சிக்கவேணும். ... *

**673.** (மா சுச:) என்றதில் தோன்றும் சோக நிரூபணம். முந்தின சுலோகங்களிலிருந்து ஒருவாறு துக்கத்தை யூஹிக்கலாம்; (61, 62 ச்லோகங்கள்) * ஈச்வரஸ் ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசே அர்ஜுந! திஷ்டதி * என்றும் * தமேவ சரணம் கச்ச ஸர்வபாவேந பாரத * என்றுமுள்ளன; இவற்றால் க்ருஷ்ணனாகிய தான் ஈச்வரனன்றுபோலவும், தன்னிற்காட்டில் வேறுபட்ட ஒருவன் ஈச்வரனாக வுளன் போலவும் காட்டுகையாலே, ஐயோ! தன்னையே தஞ்சமாகக் காட்டிக் கொடாமல் இப்படி நம்மை வஞ்சிக்கிறானே! என்று சோக முண்டாகியிருக்கலாம்.

**674** அன்றியும், (சுலோ. 63ல்) * யதேச்சஸி ததா குரு * (உனக்கு இஷ்டமானபடி செய்) என்று சொல்லித் தலைக்கட்டினானே! ஆதியிலே * யச் ச்ரேயஸ் ஸ்யாத் நிச்சிதம் ப்ரூஹி தந்மே * என்று நாம் பிரார்த்தித்திருக்க, தானே ஒன்றை அறுதியிட்டுச் சொல்லாமல் 'யதேச்சஸி ததா குரு' என்று சொல்லுகிறவிது என்ன வார்த்தை! என்றும் சோகமுண்டாகியிருக்கலாம். முக்கியமான சோகத்தை நம் ஆசாரியர்கள் தெரிவித்தருளுகிறார்கள்;—

**675.** முமுக்ஷுப்படியில், "கீழே சில உபாய விசேஷங்களை யுபதேசிக்க, அவை துஸ்சகங்களென்றும் ஸ்வரூபவிரோதிகளென்றும் நினைத்து சோகாவிஷ்டனான அர்ஜுனனைக்குறித்து" என்றுள்ள ஸ்ரீஸூக்தி மருமமுணர்ந்துரைக்கதாகும். கீழே பல அத்யாயங்களிலே கருமம் ஞானம் முதலிய சில உபாய விசேஷங்களை மோக்ஷஸாதனமாக விஸ்தரேண உபதேசித்தருளக் கேட்ட அர்ஜுனன் அவை

அனுஷ்டிக்க அரிதானவையென்று கண்டான்; ஏதனாலென்னில், அவை காயக்லேச ரூபமாகையாலும் இந்திரியங்களை வென்றே அவை அனுஷ்டிக்கவேண்டுகையாலே இந்திரிய ஜயம் அரிதாகையாலும், ஸாதனமாக நெடுங்காலம் ஸாதிக்கவேண்டி யிருக்கையாலும், முக்கியமாக பரதந்திரமான ஸ்வரூபத்துக்கு ஸ்வயத்நரூபங்களான இவை விரோதிகளாகையாலும். ... ... ... *

**676.** ஆக இவற்றாலே எம்பெருமானைப் பெறுவதென்ப தொன்றில்லை; இனி இழந்தே போமித்தனையன்றோ! என்று சோகித்து நின்றான்; அந்த சோகம் தீரவே இதில் சரமோபாயம் விதிக்கப்படுகையாலே இதில் **மாசு:** எனப்பட்டது என்பதாக ஆசாரியர்களின் திருவுள்ளம். ... ... ... *

**677.** சரமச்லோகத்தின் திரண்ட பொருள். இந்த ச்லோகமானது பூர்வார்த்தமென்றும் உத்தரார்த்தமென்றும் இரண்டு படியாக வகுப்புண்டிருக்கும். இவ்வுபாயத்துக்கு அதிகாரியானவன் செய்யவேண்டுமது பூர்வார்த்தத்தாலே சொல்லப்படுகிறது; உபாயபூதனான ஸர்வேச்வரன் இவனுக்குச் செய்யுமது உத்தரார்த்தத்தாலே சொல்லப்படுகிறது. அதிகாரியானவன் செய்ய வேண்டுமது இவ்வுபாயத்தை ஸ்வீகரிப்பதேயாகும்; [அதுதான் பூர்வார்த்தத்தால் பிரதிபாதிக்கப் படுகிறதென்க] ஆனால் அந்த உபாய ஸ்வீகாரத்தைமட்டும் சொல்லாதே * **ஸர்வதர்மாந்பரித்யஜ்ய** * என்று உபாயாந்தரங்களை விடுகையும் சொல்லப்படுகிறதே, அது எதற்காகவென்னில்; அங்கியான உபாய ஸ்வீகாரத்திற்கு அங்கமும் சொல்லப்பட வேண்டுகையாலும் உபாயாந்தர பரித்யாகமே அங்கமாகையாலும் அந்த அங்கத்தோடேகூட விதிக்கிறபடி. ... ... ... *

**678.** ஆசமனம் முதலியவற்றுக்கு அங்கமான கைகாலலம்புகை முதலானவற்றை யொழிய அவை [ஆசமநாதிகள்] அனுஷ்டிக்க வொண்ணாதாப் போலே இங்கும் அங்கமாகச் சொல்லுகிற உபாயாந்தர பரித்யாகத்தை யொழிய சரண வரணம் ஆகாதென்பது தேற்று. உபாயாந்தர பரித்யாகமே சரணவரணமாகக் கொள்ளத்தகும். "ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி: ப்ரபத்தி:" என்பது பூருவாசாரியர்களின் அருமையான வார்த்தை. ... ... ... *

**679.** [ஸர்வதர்மாந் என்ற முதற்பதத்தின் விவரணம். '**ஸர்வதர்மாந்**' என்பதற்கு 'எல்லா தர்மங்களையும்' என்று பொருள். ஒரு பலனுக்கு ஸாதனமாயிருக்குமது எதுவோ அதுவே தருமமெனப்படுவது. மோக்ஷோபாயங்களை உபதேசித்து வருகிற ப்ரகரணமாகையாலே இவ்விடத்திலுள்ள தர்ம சப்தமானது ஐஹிகமாயும் ஸ்வர்க்காதி ஆமுஷ்மிகமாயுமிருந்துள்ள த்ருஷ்ட அத்ருஷ்ட பலன்களுக்கு ஸாதனங்களானவற்றைச் சொல்லுகையன்றியே பகவத் ப்ராப்தி ரூபமான மோக்ஷபலத்துக்கு ஸாதனமாயுள்ளவற்றைச் சொல்லுகிறது. ... *

**680.** அந்த மோக்ஷபலஸாதனங்கள் ச்ருதி ஸ்ம்ருதிகளாலே விதிக்கப்பட்டவையாய்க் கொண்டு அநேகங்களாயிருக்கையாலே (**தர்மாந்**) என்று பஹுவசநமுள்ளது. அவை எவை யென்னில்; * **கர்மணைவ ஹி ஸம்ஸித்தம்** * இத்யாதிகளால் ஸ்வதந்த்ர ஸாதனமாகச் சொல்லப்பட்ட கர்மயோகமும், * **ஸர்வம் கர்மாகிலம் பார்த்த! ஜ்ஞாநே பரிஸமாப்யதே** * என்று சொல்லப்பட்ட கர்ம ஸாத்யமான ஜ்ஞாநயோகமும்; * **மந்மநா பவ மத்பக்த:** * இத்யாதிகளாலே சொல்லப்பட்ட கர்மஜ்ஞாந ஸஹக்ருதமான பக்தியோகமுமாகிற இவையும், * **ஜந்ம கர்ம ச மே திவ்யம்** * இத்யாதிகளால் பகவத் ப்ராப்திக்கு ஸாதனமாகச் சொல்லப்பட்ட அவதார ரஹஸ்ய ஜ்ஞானம், * **ஏதத் புத்த்வா புத்திமாந் ஸ்யாத் க்ருதக்ருத்யச் ச பாரத** * என்றவிடத்துச்

சொல்லப்படுகிற புருஷோத்தம வித்யை, * **தேரோயம் ஸர்வநாமநுக்** * என்று ளும் புண்ய க்ஷேத்ரவாஸம், * **ஸர்வபாப விசுத்தாத்மா யாதி ப்ரஹ்ம ஸநாதநம்** * என்று பகவத் ப்ராப்தி ஸாதநமாகச் சொல்லப்படுகிற திருநாமஸங்கீர்த்தனம் திருவிளக்கெரிக்கை திருமாலையெடுக்கை முதலாக ஸாதநபுத்தியோடு செய்யப் படுமவையும் இங்கு (**தர்மாந்**) என்பதனாலே விவக்ஷிதங்கள். ... ... *

**681.** (ஒரு சங்கை) பஹுவசநமே போதுமாயிருக்க, தர்ம சப்தத்திற்கு விசேஷணமாக ஸர்வசப்தமு மொன்று இருக்கிறதே, இதனால் சொல்லுகிறது என்னென்னில் ; பஹுவசநத்தால் சொல்லப்பட்ட அந்தந்த உபாய விசேஷங்களை அனுஷ்டிக்குமளவில் அவற்றுக்கு யோக்யதாபாதகங்களான ஸந்தியாவந்தந பஞ்ச மஹாயஜ்ஞாதிகளான நித்ய கருமங்கள் ஸர்வ சப்தத்தால் விவக்ஷிதங்களென்க.

**682.** ஆக, **ஸர்வதர்மாந்** என்பதற்குத் தேறின பொருள்யாதெனில் ; ச்ருதிஸ்ம்ருதிகளாகிற ப்ரமாணங்களாலே விதிக்கப்பட்டுள்ளவையாய் நித்ய நைமித்திகம் முதலானவற்றை வடிவாக வுடையதான கர்மயோகம் முதலான உபாயங்களை என்றதாயிற்று. [ஸஹஸா இங்கே தோன்றக்கூடிய சங்கைகள் மேலே தொலையும்.] ... ... ... ... *

**683.** [பரித்யஜ்ய என்கிற பதத்தின் பொருள்.] த்யாகமாவது விடுகை. இவ்விடத்திற் சொல்லுகிற த்யாகமாவது வெறும்விடுகையன்று. கீழ்ச்சொல்லப்பட்ட உபாயங்களின் படியை நன்கு நோக்கி, வெள்ளியல்லாததொரு சிப்பியிலே வெள்ளியென்கிற புத்திபைப் பண்ணுமவரைப்போலேயும், ஒரு திக்கிலே போக விரும்பி வேறொரு திக்கை அதுவாக நினைத்துப் போவாரைப் போலேயும் பகவத் ப்ராப்திக்கு உபாயத்தை விரும்புகின்ற நாம் உபாயமல்லாதவற்றிலே உபாயபுத்தி பண்ணினோமே! என்கிற அநுதாப புத்தி விசேஷத்தோடுகூட விடுகை. ... *

**684.** **பரி** என்கிற உபஸர்க்கம் ப்ரக்ருதிக்கு வாசகமாகி இங்குத் தெரிவிப்பதாவது ப்ரஹ்மஹத்யை ஸுராபானம் முதலிய பாதகங்களையும் மற்றும் நிஷித்தமானவற்றையும்விடுமளவில், அவற்றில் மறுபடியும் அந்வயிப்பதற்குறுப்பான ருசி வாஸனைகள்கூட இல்லாதபடி வென்கி விடுமாபோலே, உபாயாந்தரங்களை விடுமளவில் மீளவும் அவற்றில் அந்வயம்வாராதபடி விடவேணுமென்று தெரிவிக்கப் படுகிறது. ... ... ... ... *

**685.** **பரித்யஜ்ய** என்கிறல்யப்பாலே ஸித்தோபாயத்தைப் பற்றுமளவில் த்யாஜ்யமான உபாயாந்தரங்களை விட்டே பரிக்ரஹிக்க வேணுமென்கிற நியமம் என்னென்னில் ; உபாயாந்தரங்களான இவற்றிலே சிறிது அந்வயம் கிடந்தாலும் இவை பேற்றுக்கு ஸாதநமாகாத மாத்திரமன்றிக்கே பேற்றுக்குப் பிரதிபந்தகமாயும் நிற்கும். ஆதலால் விட்டே பற்ற வேணும். ... ... *

**686.** [ஸாத்ய தர்ம பரித்யாகத்தின் ஆவச்யகத்வ நிரூபணம்.] இதற்கொரு த்ருஷ்டாந்தமுண்டு ; இராவணன் ராமசரங்களாலே மிகவும் நொந்து நிலை கலங்கி எதிரம்பு கோக்கமுடியாமே நின்றான் ; அப்போதும் ராமபாணங்கள் மேன்மேலும் விழுந்துகொண்டிருந்தன. தருமயுத்தஞ் செய்யுமிராமன் நாம் அம்பு விடாமலிருக்கவும தான் அம்புகளை விடுவதற்கு என்ன காரணமென்று இராவணன் சிந்தித்தான் ; தன் கையில் வில் இருப்பதுதான் காரணமென்று தெரிந்துகொண்டு பிறகு அந்த வில்லையும் பொகட்டான். அப்போது பெருமாள் பாணப்ரயோகத்தை நிறுத்தி அவனுக்கு விடை கொடுத்தனுப்பினார் என்று ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. இராவணன் பொகட்ட அந்த வில் அவனது கையிலிருந்த

போது எதிரியை வெல்வதற்கு ஸாதநமாகாமலிருந்தவளவேயன்றிக்கே தன்னைப் பெருமாள் வாட்டுவதற்கும் ஹேதுவாயிருந்தது, * கச்சாநுஜாநாமி * [இராவணா புறப்பட்டுப்போ ; விடை தருகின்றேன்] என்கிற திருவாக்கு அப்போது அவதரியாமல் வில்லைப் பொகட்ட பின்பே அவதரித்தமையால் அந்த வில்லே இராவணனுக்குக் கால்கட்டாயிருந்ததென்று தெளிவாயிற்று. அதுபோலவேயாம் உபாயாந்தரங்களுமென்க. உபாயாந்தரப்பற்று உள்ளவரையில் பகவதநுக்ரஹம் தான் புகுவதற்கு அவகாசம் பெறாதென்றவாறு. ... ... *

**687**. உபாயாந்தரங்களில் அந்வயம் இழவுக்கு உடலாம் என்பதை மற்றொரு த்ருஷ்டாந்தத்தாலும் அறியலாம். தசரத சக்ரவர்த்தியானவன் ஆபாஸமான ஸத்யதர்மத்தைப்பற்றி நின்றமையாலன்றோ பெருமாளோடே கூடி வாழவிருந்த பேற்றை இழந்தான். * ராமோ விக்ரஹவாந் தர்ம: * என்கிற ஸித்ததருமமான பெருமாளைப்பற்றி ஆபாஸதர்மமான ஸத்யவசனத்தை தசரதன் விட்டிருக்க வேண்டுமன்றோ. 'முன்பே வரம் கொடுத்துவைத்து இப்போதாக மறுக்கவொண்ணாது' என்று ஆபாஸமான (ஸத்ய) தர்மத்தைப்பற்றி நின்றமையாலன்றோ பெருமாளை யிழந்தான். ததிபாண்டன் கிருஷ்ணனை மறைத்துவைத்து இங்கில்லையென்று யசோதைக்குப் பொய்சொல்லி மோக்ஷம் பெற்றான் ; தசரதன் ஸத்யவாதியென்று பேர்பெற்று பேற்றை இழந்தான். ... ... ... *

**688**. ஆக ஆபாஸமான உபாயாந்தரங்களிலே அந்வயித்துநிற்கையானது * க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம் * என்று ஸநாதனதர்மமான பகவத் விஷயத்தோடே கூடி வாழுகையாகிற பேற்றை இழப்பதற்கு உறுப்பாய்விடும். ஆகவே அவை பரித்யாஜ்யங்களென்னத் தட்டில்லை. ... ... *

**689**. மாம் என்ற மூன்றாவது பதத்தின் பொருளை விவரித்தல். எல்லாரையும் ரக்ஷிப்பதிலே தீக்ஷிதனாய், உனக்கு இஷ்டமானபடி ஏவிக் காரியம் கொள்ளலாம்படி கையாளாய், ரக்ஷ்யபூதனான உன்னுடைய இசைவு பார்த்து உன் குற்றங்களுக்கு நீ அஞ்சவேண்டாதபடி அவற்றையே பச்சையாகக்கொண்டு உனக்குப் புகலாய், * தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல் * என்கிறபடியே புருஷகாரம் செய்யக்கடவ பிராட்டியே குற்றத்தைக் காட்டி அகற்றப் பார்க்குமிடத்திலும் விடமாட்டாதே * என்னடியார் அது செய்யார் * என்று மறுதலைத்து ஒருதலை நின்று ரக்ஷிக்குமவனான என்னை யென்றபடி. ... ... ... *

**690**. அவதரித்துக் கண்ணுக்கிலக்காய் அணுகி நிற்கிற விபவரூபனான தன்னை மாமென்று குறிப்பிட்டு வரணீயனைச் சொன்னவித்தாலே — தேச விப்ரகர்ஷத்தாலே காணவும் கிட்டவுமொண்ணாதபடி இருக்கிற பரவ்யூஹங்களையும், அஸாதாரண விக்ரஹயுக்தமல்லாமல் உபாயாந்தர நிஷ்டர்க்கு உத்தேச்யமாயிருக்கிற அக்நீந்த்ராதி தேவதாந்தர்யாமித்வத்தையும் தவிர்க்கிறது. அவற்றிற் காட்டிலுமுண்டான வாசியைக் காட்டுகிறது மாமென்பது. இந்த மாம் என்கிற பதத்திலே ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்களான குண விசேஷங்களெல்லாம் விளங்கும், அவையாவன: வாத்ஸல்யமும் ஸ்வாமித்வமும் ஸௌசீல்யமும் ஸௌலப்யமும். ... ... ... ... *

**691**. அகர்மயுத்தியாலே ஸ்வதர்மத்தில்நின்றும் நிவ்ருத்தனான அர்ஜுநனுக்கு குற்றம் பாராதே அர்த்தங்களையெல்லாம் அருளிச்செய்கையாலே வாத்ஸல்யம் பிரகாசிக்கிறது. தன்னுடைய பரத்வத்தைப் பலகாலுமருளிச் செய்தமாத்திரமின்றிக்கே அர்ஜுநன் நேரே காணும்படி பண்ணுகையாலே ஸ்வாமித்வம்

ப்ரகாசிக்கிறது *ஹேக்ருஷ்ண ஹேயாதவ! என்று அர்ஜுநன் தானே சொல்லும்படி இவனோடே கலந்து பரிமாறுகையாலே ஸௌசீல்யம் ப்ரகாசிக்கிறது. இவையெல்லாவற்றிலும் வைத்துக்கொண்டு மிகவும் அபேக்ஷிதம் ஸௌலப்யமாகையாலே அவதார ப்ரயுக்தமான ஸௌலப்யத்தளவேயல்லாமல் ஸாரதியாயும் நிற்கிற ஸௌலப்யாதிசயம் மாம் என்று உறுத்திக் காட்டப்படுகிறது. குதிரைகளை நடத்து கைக்காசத் திருக்கையிலே பிடித்த உழவுகோலும் சிறுவாய்க்கயிறும் திருமுடியில் ஒன்றும் அணியாமல் நிற்கையாலே சேனைத்துகளாலே புழுதிபடைத்த திருக்குழலும், சாத்தின சிறு சதங்கையுடனே தேருக்குக் கீழே தொங்கவிட்ட திருவடிகளுமாய் நிற்கிற ஸாரதி வேஷத்தை மாமென்று காட்டுகிறான். ... *

**692.** ஏகம் என்கிற நான்காவது பதத்தின் பொருள் விவரித்தல். இவ்வுபாய விசேஷத்தைச் சொல்லுமிடங்களிலே பலவிடங்களிலும் *மாமேவ யே ப்ரபத்யந்தே* என்பது முதலானவிடங்களில் அவதாரண ப்ரயோக முண்டாகையாலே உகாரம் போலே இந்த ஏக சப்தமும் ஸ்தான ப்ரமாணத்தாலே அவதாரணமாகிற பொருளைக் காட்டுகிறது. இந்த அவதாரணத்தினால் **வ்ரஜ** என்று மேலே சொல்லுகிற சரணவரணத்தில் உபாயத்வத்தைக் கழிக்கிறது. இந்த ஸ்வீகாரமுண்டானால் பேறு; இல்லையாகில் இழவு, என்று அந்வயவ்யதிரேகங்களாலே இதில் ஸாதநத்வபுத்தி நடையாட ப்ரஸக்தி யுண்டாகையாலே இதின் ஸாதநத்வம் அவச்யம் கழிக்கப்படவேணுமன்றோ. ... ... *

**693.** அந்வயவ்யதிரேகங்களாலே உபாயமென்று திண்ணமாகத் தோற்றுகிற ஸ்வீகாரத்தில் உபாயத்வத்தைக் கழிக்கிறபடிதான் எங்ஙனேயெனில்; ஸ்வீகாரமானபிறகு இவனுக்கு அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் பண்ணுகை அவனாலேயானாப்போலே, அதற்கு முன்னம் நேருகின்ற ஸ்வீகாரந்தானும் அவனாலே யுண்டாமது என்பதே பரமார்த்தம். ஆகவே ஸ்வீகாரம் உபாயகார்யமேயொழிய உபாயமன்றென்க. இதுதான் முக்கியமாக நெஞ்சிற் படவேணும்.

**694.** ஸ்வீகாரம் அவனாலே வருகையாவதென்னென்னில்; கரணகளேபரங்களொன்றுமின்றிக்கே அசித்துப்போலே கிடக்கிற தசையிலே கரணகளேபரங்களைக் கொடுத்து ஸ்ருஷ்டி பண்ணி *எதிர்சூழல்புக்கு* என்கிறபடியே இவனை அங்கீகரிக்கைக்காக அவன் அநேகாவதாரங்களைப்பண்ணி, அவதரித்தவிடங்களிலே ஆச்ரயிப்பதில் ருசிவிச்வாஸங்களை விளைவிப்பதான தன் குணசேஷ்டிதம் முதலியவற்றைப் ப்ரகாசிப்பித்து இவ்வழியாலே அவன் பண்ணின க்ருஷியாலே பலித்ததன்றோ இந்த ஸ்வீகாரம். ஆகையாலே இது அவனாலே வந்ததென்னத் தட்டுண்டோ? ***அதுவுமவனதின்னருளே*** என்கிற ஆழ்வார் பாசுரம் காணத்தக்கது. இந்த ஸ்வீகாரத்துக்கும் தானே க்ருஷி பண்ணுவானொருவனாகையாலே அவன் இதுக்காக வன்று நமக்குக் காரியம் செய்கிறது. இது இல்லாமற் போனாலும் இவ்வாத்மாவை உய்விப்பதிலே நோக்குடையவனான தானே நம்முடைய இஷ்டப்ராப்தி அநிஷ்ட பரிஹார ரூபமான காரியத்தைச் செய்வனென்று நினைக்கவேண்டும்; இப்படி நினைக்காவிடின் [அதாவது — நம் ஸ்வீகாரமில்லையானாலும் காரியம் செய்வனென்று நினையாதே அவன் காரியம் செய்கைக்கு இதுவும் வேணுமென்று நினைக்குமளவில்] ஸித்தோபாயமானது ஒரு ஸஹாயத்தையும் எதிர்பாராததென்கிற பெருமை குலைந்ததாகும். ... ... *

**695.** சரணம் வ்ரஜ என்றவற்றின் பொருள் விவரித்தல். ஸர்வதர்மங்களையும் விட்டு தன்னையே பற்றச் சொல்லுகிற ப்ரகரணமாகையாலே, கீழோடே சேரவேண்டுகைக்காக **சரணம்** என்பதற்கு 'உபாயமாக என்பது பொருளாகக்

கடவது. ‘ உபாயமாக நெஞ்சிற்கொள்ளக்கடவாய் ’ என்பதே (சரணம் வ்ரஜ) என்பதன் பொருளாயிற்று, * சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் * என்கிறபடியே மனமொழிமெய்கள் மூன்றினாலுமுண்டான ஸ்வீகாரம் அதிகார பூர்த்திக்கு உடலாகையாலே வாசிகமும் காயிகமும் இந்த ஸ்வீகாரத்திற்கு வேண்டியிருக்கச் செய்தேயும், * ஜ்ஞாநாந்மோக்ஷ: மென்கையாலே அவையிரண்டையுமொழிய மாநஸமான அனுஷ்டான மாத்திரத்தைச் சொல்லுகிறது. ஆக, பூர்வார்த்தத்தால் சொல்லிற்றாயிற்றென்னென்னில் ; ஸர்வதர்மாந் என்று த்யாஜ்யத்தைச் சொல்லி பரித்யஜ்ய என்று த்யாக ப்ரகாரத்தைச் சொல்லி மாம் என்று பற்றப்படுமுபாயத்தைச் சொல்லி ஏகம் என்று அந்த உபாயம் இதர நிரபேக்ஷமென்பதைச் சொல்லி; சரணம் வ்ரஜ என்று உபாயஸ்வீகாரம் சொல்லிற்றாயிற்று. ... *

**696.** உத்தரார்த்தத்தை விவரிக்கத் தொடங்குதல். பூர்வார்த்தத்தில் அதிகாரி க்ருத்யமன்றோ சொல்லிற்று. உபாய பூதனை தன்னுடைய க்ருத்யம் சொல்லுகிறது உத்தரார்த்தத்தில். **அஹம்** — எல்லாமறிந்தவனாய் எதுவும் செய்ய வல்லவனாய் சேஷியாகையாலே ப்ராப்தனாயிருக்கிற நான். [த்வா] உன் காரியங்களை அறிகைக்குத்தக்க ஞானமில்லாதவனாய் அறிந்தாலும் செய்து தலைக்கட்டிக் கொள்ளுகைக்கு சக்தியில்லாதவனாய், சக்தியுண்டானாலும் தன்னைத்தான் ரக்ஷித்துக்கொள்ள உரிமையற்றவனாய், இப்படியிருக்கையாலே ஸர்வ தர்மங்களையும் விட்டு என்னையே உபாயமாகப்பற்றியிருப்பவனான உன்னை யென்றபடி. ... *

**697.** **ஸர்வபாபேப்ய:** — இஷ்ட விரோதியாயும் அநிஷ்ட ஹேதுவாயுமிருக்குமது பாபம் ; மோக்ஷப்ரகரண மாகையாலே எம்பெருமானையடைவதற்கு விரோதிகள் எவையோ அவையே இஷ்ட விரோதிகள். ஆகவே நீ என்னையடைவதற்கு விரோதிகளென்று எந்தெந்த பாபங்களில் நின்றும் பயப்படுகிறாயோ அந்தந்த பாபங்களெல்லாவற்றில் நின்றுமென்றவாறு. ... ... *

**698.** **மோக்ஷயிஷ்யாமி** — இவற்றில் நின்றும் விடுபட்டவனாம்படி பண்ணக்கடவேனென்கை. நானும் இதுக்கொரு முயற்சி செய்ய வேண்டா ; நீயும் இதற்கு ப்ரார்த்திக்க வேண்டா: நீ என்னை அடிபணிந்த பெருமையாலே உன்னைக் கண்டு தானே பயப்பட்டு, போனவழி தெரியாதபடி தன்னடையே விட்டுப்போம் அவை என்பது ணிச்சாலே தெரிவிக்கப்படும். ‘‘ **அஹம் த்வா ஸர்வபாபேப்ய: மோக்ஷயிஷ்யாமி** ’’ என்று சொல்லாமல் ‘‘ **த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி** ’’ என்று ணிஜந்த ப்ரயோகம் பண்ணினவிதனால் தேறின அர்த்தமிது. பாபமென்று ஒரு வஸ்து கிடக்கிறதன்றே; குப்பையில் ஆமணக்குப்போலேயெழுந்து பார்ப்போலே பிடுங்குவதன்றே பாபமென்பது. சேதநன் பண்ணின கருமங்கள் நொடிப் பொழுதில் நசித்துப்போம் ; கர்த்தாவான இவன் அஜ்ஞனாகையாலே மறந்து போவான் ; ஸர்வஜ்ஞனாய் ஒன்றொழியாமல் நினைத்திருந்து ஸமயங்களிலே தப்பாமல் பலாநுபவம் பண்ணுவிக்கிறவன் ஸர்வேச்வரன். ஆகவே அப்படி அனுபவிப்பிக்கிற என்னுடைய நிக்ரஹ ரூபமாகையாலே அந்த நிக்ரஹபலமாய் வந்தவை நிக்ரஹத்துக்கு ப்ரதிகோடியான அநுக்ரஹத்தை நான் பண்ணினால் பின்னையும் கிடக்குமோ வென்கை.

**699.** நெடுங்காலமாக அப்பாபங்களைக் கண்டு நீ நடுங்கின நடுக்கம் போய் உன்னைக் கண்டு அவை தாம் குடல் கரிந்து நடுங்கும்படி பண்ணக்கடவேன் என்றவாறு. இத்தனை காலமும் நம் காரியத்துக்கு நாம் கடவோமென்று நீ நினைக்கையாலே தன் காரியம் தானே செய்துகொள்கிறானென்றிருந்தேனத்தனை. எனக்கு நீ சரீரதயா சேஷமென்றறிந்து என்னைச் சரணமடைந்த பின்பு ‘ உன்னுடைய பாபம்

போகைக்கு நீயே ப்ரயத்னம் பண்ணிக்கொள்' என்று உன்கையிலும் உன்னைக் காட்டித் தரமாட்டேன். என்னுடலானவுன்னுடைய அவித்யையாகிற அழுக்கை சரீரியான நானே போக்கிக்கொள்ளேனோ? ... ... *

**700.** மாசுச: என்றதன் விவரணம். **மாசுச:** என்றது சோகப்படாதே கொள் என்றபடி. நீ உன் கார்யத்தில் கைவைத்திருந்தாயாகில் 'நம் கார்யத்துக்கு என்செய்வோம்' என்று நீ கரைந்து சோகிக்கலாம்; நான் உன் காரியத்திலே கைவைத்திலேனாகில் "நம் காரியத்தில் இவன் உதாஸீநனாயிருக்கிறனே! நாம் எப்படி உஜ்ஜீவிக்கப்போகிறோம்" என்று நீ சோகிக்கலாம்; இப்படியல்லாமல் உன்னுடைய ஸ்வரூபத்தை யுணர்ந்து நீ உன் ரக்ஷணகார்யத்திலே கைவாங்குகையாலும் ஸ்வாமியான நான் உன்னுடைய ரக்ஷண கார்யத்திலே ஊன்றிப் போருகையாலும் உனக்கு சோகிக்கைக்கு நிமித்தமில்லைகாணென்று முன்பு சோகித்து நின்ற அவனுடைய சோக நிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுக்கிறபடி. இவ்வளவும் சரமச்லோகார்த்தம் விவரித்தோம். ... ... *

**701.** உபஸம்ஹாரம். ஆக சரமச்லோகத்தின் பொருள் விவரிக்கப்பட்டதாயிற்று. இதில் உத்தரார்த்தத்திற் காட்டிலும் பூர்வார்த்தத்தில் தான் அறிக்கொள்ள வேண்டிய விஷயங்கள் நிரம்பிக்கிடக்கின்றன. முக்கியமாக இரண்டே விஷயங்களை இங்கு ஸாரமாகத் தெரிவிக்கிறோம். "**ஸர்வதர்மாந் பரித்யஜ்ய**" என்ற மூலத்தையும் அதன் வியாக்கியானத்தையும் மேலெழப் பார்த்துவிட்டுப் பலர் எல்லாவற்றையும் விட்டுவிட வேணுமென்பதே கீதாசார்யனுடைய திருவுள்ளம் என்று நினைக்கிறார்கள். இது மிகத் தவறான நினைவு. கீதார்த்த ஸங்க்ரஹத்தில் ஆளவந்தார் "நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபி:" என்று மிகத் தெளிவாக அருளிச் செய்துள்ளார். ... ... ... *

**702.** ஆளவந்தார் **குர்யாத்** என்றாரேயொழிய **த்யஜேத்** என்னவில்லை. மூலத்தில் த்யஜிக்கச் சொன்னது எது? என்பதையும் ஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளார் **உபாயதாம் பரித்யஜ்ய** என்று. அவை மோக்ஷோபாயம் என்கிற புத்தியை விடச் சொன்னதே யொழிய அவற்றையே விடச் சொன்னதன்று. கர்மஜ்ஞான பக்தி யோகங்களுக்கு உபாத்யா அநுஷ்டானம், ப்ரீத்யா அநுஷ்டாநம் என்று இருவகையுண்டு; ப்ரீத்யா அநுஷ்டானம் தவிர்க்கப்படவில்லை; உபாயதயா அநுஷ்டானம் மட்டுமே தவிர்க்கப்பட்டது. ஏவஞ்ச, புத்தி த்யாகமேயொழிய ஸ்வரூபத்யாகமன்று என்கை. ... ... ... *

**703.** ஸ்வரூபத்யாகமே யென்று கொண்டாலும் குறையில்லை. அப்போதும் புத்தித்யாகந்தான் தேறிநிற்கும். எங்ஙனே யென்னில்; "**ஸங்கல்பபேதேந கர்மபேத:**" என்பது சாஸ்த்ர ந்யாயம். உபாயமென்கிற ஸங்கல்பத்தோடே செய்யும் கருமம் உபாயப்படியாகச் செய்யும் கருமத்திற் காட்டிலும் வேறுபட்டதா யிருக்கையாலே முந்தின கருமத்திற்கு ஸ்வரூபத்யாகமேயாகும். ... ... *

**704.** பட்டர் ஸ்ரீ ரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் 'நித்யம் காம்யம் பரமபி கதிசித் த்வய்யத்யாத்ம ஸ்வமதிபிரமமா:, ந்யாஸ்யா ஸங்கா விததி விஹிதம் ஸ்ரீ ரங்கேந்தோ! விதததி நச தே" என்றருளிச் செய்த சுலோகம் இங்கு அநுஸந்திக்கத் தகும். "**விஹிதம் விததி, ந விதததி ச**" என்று இரண்டையும் சொல்லி வைத்ததை நிர்வஹிக்குமிடத்து இங்கே நாம் செய்த நிரூபணமே தேறி நிற்கும். ... ... ... ... ... *

**705.** கீழே நாம் உதாஹரித்த கீதார்த்த ஸங்க்ரஹ ச்லோகத்தில் "உபாயதாம் பரித்யஜ்ய" என்று ஸுஸ்பஷ்டமாக ஆளவந்தார் அருளிச் செய்திருக்கவும், சிலர் "உண்மையாக உபாயமாயிருக்குமவற்றிலே உபாயத்வ புத்தியை விடுகையென்று ஒன்றுண்டோ?" என்று சோத்யம் செய்து கொண்டேயிருப்பர்கள். அவர்களை கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷையிலே வேதாந்த வாசிரியர் தாமே நன்கு நிரஸித்துள்ளார். அவ்விடத்துப்பங்க்திகளை அப்படியே யெடுத்துக்காட்டுகிறோம். ... *

**706.** "முக்த்யவ்யாபாரத்யாகேந ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வாநுபபத்தி தர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதா புத்திரபி ஸ்யாதிதி பாவ:; அந்ததஸ் தைஸ்தை ராராதிதோ பகவாநேவஹி ஸர்வத்ரோபாய:......அதஸ் தஸ்மிந்நேவ *மாமேகம் சரணம் வ்ரஜ இத்யுக்தரீ உபாயதாபுத்தி: கார்யா" என்பன. இங்ஙனே விசாரித்தருளின அர்த்தத்தையே "நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:" என்று ரஹஸ்யத்ரயஸாரத்திலும், "இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம்ருந்தே கிம் புநஸ் ஸஹகாரிதாம்" என்று ந்யாய ஸித்தாஞ்ஜநத்திலும், "த்வதுபாயதீ: அபிஹித ஸ்வோபாய பாவாஸ்து மே" என்று ந்யாஸ திலகத்திலும் மற்றும் பலவிடங்களிலும் ச்லோகபத்தமாக்கி வைத்தருளினார் தேசிகன். ... ... ... ... *

ரஹஸ்யார்த்த விவரணப்ரகரணம் முற்றிற்று.

## தாடீபஞ்சகம்

**707.** ஐந்து ச்லோகங்கள் கொண்ட இந்த ஸ்துதி கூரத்தாழ்வானருளிச் செய்ததென்பர் சிலர்; ஆழ்வான் ஆண்டான் எம்பார் முதலான ஐவர் [ஒவ்வொருவர் ஒவ்வொரு ச்லோகமாக] அருளிச்செய்த ஸ்துதியிது என்பர் வேறு சிலர். உண்மை எதுவாயினும் கர்ணாம்ருதமாக அமைந்த இந்த ஸ்தோத்ரம் பக்தர்களுக்கு நெடுங்காலமாக நித்யாநுஸந்தாநத்தில் வந்திருக்கின்றது. எம்பெருமானாருடைய வெற்றிச் செல்வத்தைப் பேசுகின்ற ஐந்து ச்லோகங்கள் கொண்ட இந்த ஸ்துதிக்கு தாடீபஞ்சகமென்கிற திருநாமம் மிகப் பொருத்தமானது. ... ... *

பாஷண்டத்ருமஷண்டதாவதஹந: சார்வாகசைலாசநி:
பௌத்தத்வாந்தநிராஸவாஸரபதி: ஜைநேபகண்டீரவ:,
மாயாவாதிபுஜங்கபங்ககருட: த்ரைவித்யசூடாமணி:
ஸ்ரீரங்கேசஜயத்வஜோ விஜயதே ராமாநுஜோऽயம் முநி:

**708.** (பாஷண்டத்ருமஷண்டதாவதஹந:) ஸ்ரீராமாநுஜ முநிக்கு ஏழு விசேஷணங்கள் இடப்படுகின்றனவிதில். * அறுசமயச் செடியதனை யடியறுத்தான் வாழியே * என்றும் * நாட்டிய நீசச்சமயங்கள் மாண்டன * என்றும் * தர்க்கச் சமணரும் சாக்கியப்பேய்களும் தாழ்சடையோன் சொல்கற்ற சோம்பரும் சூனியவாதரும் நான்மறையும் நிற்கக் குறும்புசெய் நீசரும் மாண்டனர் நீணிலத்தே பொற்கற்பகம் எம்பிராமாநுசமுனி போந்தபின்னே * என்றும் சொல்லுகிறபடியே ஸகல துர்மதங்களையும் வேரோடு களைந்தொழித்தவர் என்கிற பெருமை இந்த ச்லோகத்தினால் சொல்லப்படுகிறது. பரம நாஸ்திகர்கள் பாஷண்டரெனப்படுகிறார்கள். அவர்கள் பேர்க்கவும் பேராதபடி வேரூன்றிக்கிடந்தார்கள்; அன்னவர்களுக்கு ஸ்வாமி தாம் காட்டுத்தீப்போன்றவரென்கிறது முதல் விசேஷணத்

தினல். காட்டுத்தீ கதுவினல் எப்படிப்பட்ட மரங்களும் ஒரு நொடிப்பொழுதில் எப்படி அவிந்தொழியுமோ; அப்படியே அவர்களையெல்லாம் அவலீலையாகத் தொலைத்தவர் ஸ்வாமி என்றதாயிற்று. ... ... *

**709.** (சார்வாக சைலாசநி:) கீழே பாஷண்டர்களென்று ஸாமாந்யசப்தத்தாலே சொல்லப்பட்டவர்கள் இனி விசேஷசப்தங்களாலே விவரிக்கப்படுகிறார்கள். சார்வாகர், பௌத்தர், ஜைநர், மாயாவாதிகள் என்று இங்கே விசிஷ்யா எடுத்துக் கூறப்படுமவர்கள், முதலிலே பாஷண்டர்களென்று சொல்லப்பட்டவர்களின் விவரண பூதர்களென்னவுமாம், சார்வாகாதிகளைப்போலே பாஷண்டர்கள் தனிப்பட்ட வகுப்பினர் என்னவுமாம். "**ப்ரத்யக்ஷமேகம் சார்வாக:**" என்கிறபடியே கண்ணால் கண்டதொன்றே ப்ரமாணமென்கிற சார்வாகமதஸ்தர்களாகிற மலைகளுக்கு அசநிபோன்றவர் ஸ்வாமி. வேறென்றாலும் மாய்க்கமுடியாத மலைகளும் அசநியினால் க்ஷணத்தில் மாய்ந்து போமிறே. ... ... *

**710.** (பௌத்தத்வாந்த நிராஸ வாஸரபதி:) பௌத்தர்களாகிற இருளுக்குக் கதிரவன் போன்றவர் ஸ்வாமி! * கதிரவன் குணதிசைச் சிகரம்வந்தணைந்தான் * என்றவாறே * கனவிருளகன்றது * என்னவேண்டியதன்றே. ஸூர்யோதயமானவாறே இருள்களெல்லாம் சிதைந்தோடுமாபோலே ஸ்வாமி திருவவதரித்தவன்றே பௌத்தமதம் தொலைந்தொழிந்தது என்க. ... ... *

**711.** (ஜைநேபகண்டீரவ:) ஜைநர்களாகிற மதயானைகளை மாய்ப்பதில் சீரியசிங்கமொத்தவர் ஸ்வாமி. சிங்கம் வாழ்கிற காட்டிலே யானைகள் தலைகாட்டமாட்டாதாப்போலே ஸ்வாமி ஸஞ்சரித்தருளுமிடத்தே ஜைநர்கள் தலைகாட்டமாட்டாதே பதுங்கிக்கிடந்தனர் என்றவாறு. * வலிமிக்க சீயமிராமாநுசன் * என்றார் அமுதனாரும். ... ... ... *

**712.** (மாயாவாதி புஜங்கபங்க கருட:) * த்ருச்யம் மித்யா த்ருஷ்டிகர்த்தாச மித்யா தோஷோ மித்யா * என்றும் "ப்ரபஞ்சமெல்லாம் மாயாவிலஸிதம்" என்றும் சொல்லித் திரிகிற மாயாவாதிகளாகிற ஸர்ப்பங்களைப் பங்கம் செய்யும் விஷயத்தில் கருடனையொத்தவர் ஸ்வாமி. கருத்மானுடைய நிழல்பட்டாலும் அரவங்கள் மாய்ந்து போமாப்போலே ஸ்வாமியின் நிழல்பட்டாலும் மடிந்து போவர்கள் மாயாவாதிகள் என்றபடி. ... ... *

**713.** (த்ரைவித்ய சூடாமணி:) ருக் யஜுஸ் ஸாமங்களாகிற மூன்று வேதங்களையும் பரம ப்ரமாணமாகக்கொண்டு அவற்றிலே போதுபோக்குமவர்கள் **த்ரைவித்ய**ர்களெனப்படுவார்கள்; அப்படிப்பட்ட பரமைகாந்திகளுக்குச் சிரோபூஷணமாக விளங்குமவர் ஸ்வாமி. பரம வைதிகர்கள் குலாவும் பெருமானென்கை. ... *

**714.** (ஸ்ரீரங்கேச ஜயத்வஜ:) * தென்னரங்கர் செல்வம் முற்றுந் திருத்தி வைத்தான் வாழியே * என்றும் * மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடு நாள் * என்றும் சொல்லுகிறபடியே ஸ்ரீரங்கஸ்ரீயை அநுதினம் அநுபத்ரவமாகச் சேமித்தருளின மஹாநுபாவராகையாலே **ஸ்ரீரங்கேச ஜயத்வஜ** மென்று விருதுசாத்தப் பெற்றவர் ஸ்வாமி. ஆக இப்படிப்பட்ட பெருமைவாய்ந்த எம்பெருமானார் பல்லாண்டு பல்லாண்டாக வாழ்ந்தருளா நின்றார் என்றதாயிற்று. ... *

**பாஷண்ட ஷண்ட கிரிகண்டந வஜ்ரதண்டா:**
**ப்ரச்சந்நபௌத்த மகராலய மந்ததண்டா:,**
**வேதாந்த ஸாரஸுகதர்சந தீபதண்டா:**
**ராமாநுஜஸ்ய விலஸந்தி முநேஸ் த்ரிதண்டா:.**

**715.** இந்த ச்லோகத்தினாலும் அடுத்த ச்லோகத்தினாலும் எம்பெருமானார் மூன்று கையிலேந்திய முக்கோல்தன்னழகு பேசப்படுகிறது. திருமழிசைப் பிரான் திருச்சந்த விருத்தத்திலே *சிற்றெயிற்று முற்றல் மூங்கில் **மூன்றுதண்ட** ரொன்றினர்* என்றருளிச் செய்தபடியே த்ரிதண்டபரிமண்டிதராகவன்றோ ஸ்வாமி தாம் ஸேவை ஸாதித்தது. அந்த த்ரிதண்டத்தின் பெருமை எப்படிப் பட்டதென்னில் ; ... ... ... ...

**716.** **(பாஷண்ட ஷண்ட கிரிகண்டந வஜ்ரதண்டா:)** பாஷண்ட ஷண்டங்களாகிற பெருமலைகளைக் கண்டித் தொழிப்பதிலே வஜ்ரதண்டங்கள் போன்றவையாம். எம்பெருமானார் பக்கலிலே சொல்லவேண்டிய பெருமையையே த்ரிதண்டத்தின் மேலேற்றிச் சொல்லுகிறது. இன்னமும் எப்படிப்பட்டவை யென்னில் ;

**717.** **(ப்ரச்சந்ந பௌத்த மகராலய மந்ததண்டா:)** சங்கரபாஸ்கரயாதவபாட்ட ப்ராபாகராதிகள் **ப்ரச்சந்ந பௌத்தர்க** ளெனப்படுகிறார்கள் ; பௌத்தர்கள் வெளிப்படையாக வேதங்களை அப்ரமாண மென்று பிதற்றிப் போந்தார்கள் ; மற்றையோர்கள் அங்ஙனன்றிக்கே வேதங்களை ப்ரமாணமாக இசைந்துவைத்தும் தத்வஹித புருஷார்த்தங்களின் உண்மைஸ்வரூப விளக்கத்தில் மாறாடியொழிந்தார்களாதலால் இவர்களையும் ஒருபடி பௌத்தர்களென்றே சொல்லலாமென்று, "அவர்கள் ப்ரகாச பௌத்தர்கள், இவர்கள் ப்ரச்சந்ந பௌத்தர்கள்" என்று பெரியார் வழங்கிவந்தனர். ஸங்கல்பஸூர்யோதயத்தில் ***யதி பாஸ்கர யாதவப்ரகாசௌ*** என்று தொடங்கிச் சொன்ன ச்லோகம் இங்கே அநுஸந்தேயம். அப்படிப்பட்ட *மாயாவாதிசங்கர ஸங்கரகதாகோலாஹலிகளாகிற கடலைக் கலக்குவதற்கு மத்துத்தடி போன்றதாம், ஸ்வாமியின் த்ரிதண்டம். த்ரிதண்டதாரியான ஸ்வாமி ப்ரசந்ந பௌத்தர்களையெல்லாம் பாற்றியருளினர் என்றவாறு. ... *

**718.** **[வேதாந்தஸார ஸுகதர்சந தீபதண்டா:]** த்ரிதண்டம் இன்னமும் எப்படிப் பட்டதென்னில் ; வேதாந்த விழுப்பொருள்களானவை இவ்விருள் தருமாஞாலத்தவர்க்குப் புலப்படாதபடி கிடக்க அவற்றை எளிதாகவும் ஸுவ்யக்தமாகவும் காண்பதற்கு ஏற்பட்ட தீபதண்டங்களோ இவை? என்னும்படியாகவுள்ளன. த்ரிதண்டதாரியான நம் ஸ்வாமி யொருவரே வேதாந்த தத்வார்த்தங்களையெல்லாம் உள்ளவாறு கண்டு வெளியிட்டருளினர் என்றதாயிற்று. *நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது* என்ற அமுதனார் பாசுரம் இங்கே அநுஸந்தேயம். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானார் த்ரிதண்டம் "ஐங்கோலுமொருகோலும் நீர்க்கோலம்போல்" என்று பிள்ளைப்பெருமாளையங்கார் பணித்தபடியே பஞ்சபாணனுடைய ஆஜ்ஞையையும் ஏகதண்டிகளுடைய அரவாரத்தையுமொழித்துச் செங்கோல் செலுத்தி விளங்கா நின்றது என்றதாயிற்று. ... ... *

**சாரித்ரோத்தாரதண்டம் சதுரநயபதாலங்க்ரியாகேதுதண்டம்**
**ஸத்வித்யாதீபதண்டம் ஸகலகலிகதாஸம்ஹ்ருதே: காலதண்டம்,**
**த்ரய்யந்தாலம்பதண்டம் த்ரிபுவநவிஜயச்சத்ரஸௌவர்ணதண்டம்**
**தத்தே ராமாநுஜார்ய: ப்ரதிகதசிரோவஜ்ரதண்டம் த்ரிதண்டம்.**

**719.** இந்த ச்லோகமும் த்ரிதண்டத்தின் பெருமைகூறுவது. உல்லேகாலங்காரரீதியில் பணிக்கிறபடி. **(ராமாநுஜார்ய: த்ரிதண்டம் தத்தே)** எம்பெருமானார் "முக்கோல் பிடித்தமுனி" யென்று உலகர்போற்ற த்ரிதண்டத்தை திருக்கையிலேந்தி விளங்குகின்றார் ; அந்த த்ரிதண்டமெப்படிப்பட்ட தென்னில் ; **(சாரித்ரோத்தாரதண்டம்)** நல்ல அனுஷ்டானங்களைப் பயில்விப்பதற்குக் கையிலேந்திய வேத்ர

தண்டமோ இது! என்னலாயிருந்தது. உலகில் உபாத்யாயர்கள் சிஷ்யர்களுக்கு ஜ்ஞாநாநுஷ்டானங்களை சிக்ஷிப்பதற்குக் கையிலே வேத்ரதண்டத்தை வைத்திருப்பதுண்டே. ... ... ... ... *

**720.** (**சதுரநயபதாலங்க்ரியாகேதுதண்டம்**) உபயமீமாம்ஸைகளிலும் பலபல ந்யாயங்கள் தேறியிருப்பதுண்டே; அவற்றை இதரர்கள் பாழ்படுத்திப் போந்தவர்; அப்படியன்றிக்கே ஸ்வாமி அந்த ந்யாயங்களையெல்லாம் சிறிதும் நிலைகுலையாமே ஸுரக்ஷிதமாக்கியருளினராதலால் அப்படிப்பட்ட ந்யாயமார்க்கங்களை யலங்கரிப்பதற்கு நாட்டியிட்ட த்வஜதண்டமோ இது! என்னலாயிருந்தது. இத்தால் ஸ்வாமி ந்யாயமார்க்கப்ரதிஷ்டாபகர் என்றதாகும். ... ... *

**721.** (**ஸத்வித்யாதீபதண்டம்**) வேதாந்தத்தில் ஸத்வித்யா, அக்ஷிவித்யா, வைச்வாநரவித்யா, உபகோஸலவித்யா என்று பல வித்யைகள் ஓதப்படுகின்றன; அவற்றுக்குத் தீபதண்டமென்னலாம்படியுள்ளது. ஸ்வாமி அந்த வித்யைகளையெல்லாம் ப்ரகாசிப்பித்தருளினவர் என்றவாறு. அன்றிக்கே, **ஸத்வித்யா** என்று மிகவுயர்ந்த வித்யையான உபநிஷத்தைச் சொன்னதாகவுமாம். ***ஸா வித்யா யா விமுக்தயே*** என்கிற ப்ரமாணப்படியே மோக்ஷஸாதனமான வித்யைதானே ஸத்வித்யை. ... ... ... ... *

**722.** (**ஸகலகலிகதாஸம்ஹ்ருதே: காலதண்டம்**) *கடலளவாய திசையெட்டினுள்ளும் கலியிருளே மிடைதரு காலத்திலே மிக்கநான்மறையின் சுடரொளியால் அவ்விருளைத் துரந்தவர் ஸ்வாமியன்றோ. *கலியுங்கெடுங் கண்டு கொண்மின்* என்றவிடத்து ஐதிஹ்யமுங் காண்க. கலிகோலாஹலங்களெல்லாவற்றையும் ஸம்ஹரிப்பதில் காலதண்டம் போன்றதாம். **ஸம்ஹ்ருதே:** என்றும் பாடமுண்டு. *

**723.** (**த்ரய்யந்த ஆலம்பதண்டம்**) *பிபேதி அல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி* என்கிறபடியே அபார்த்தஞ் சொல்லும் குத்ருஷ்டிகள் விளைத்த கஷ்டங்களினால் தளர்ந்துபோன வேதாந்தபுருஷனுக்குக் கைப்பிடிகொடுத்துக் கஷ்டந்தீர்க்கும் தண்டமோவிது! என்னலாம்படியுள்ளது. ... *

**724.** (**த்ரிபுவநவிஜயச் சத்ர ஸௌவர்ணதண்டம்**) மூவுலகங்களையும் திருவடிக்கீழ்ப்படுத்தி வெற்றிகொண்டமைக் கீடாகத் தாங்கிநிற்கும் கொற்றக்குடைக்கு இட்ட மணிக்காம்பு போன்றது (**ப்ரதிகதகசிரோவஜ்ர தண்டம்**) எதிர்வாதம் புரியும் துர்வாதிகளின் தலைகளைத் தகர்க்கும் வஜ்ரதண்டம்போன்றது. ஆக இப்புடைகளிலே உல்லேகிக்கும்படியமைந்த த்ரிதண்டத்தை எம்பெருமானார் ஏந்திநின்று திவ்யஸேவை தந்தருளா நின்றாரென்றதாயிற்று. ... ... *

**த்ரய்யா மாங்கல்யஸூத்ரம் த்ரியுகபதயுகாரோஹணாலம்பஸூத்ரம்**
**ஸத்வித்யாதீபஸூத்ரம் ஸகலகலிகதாஸம்ஹ்ருதே: காலஸூத்ரம்,**
**ப்ரஜ்ஞாஸூத்ரம் புதாநாம் ப்ரசமதநமந: பத்மிநீநாளஸூத்ரம்**
**ரக்ஷாஸூத்ரம் முநீநாம் ஜயதி யதிபதேர் வக்ஷஸி ப்ரஹ்மஸூத்ரம்.**

**725.** ஸ்வாமியினுடைய திருமார்பிலே திகழும் யஜ்ஞஸூத்ரத்தை யநுபவித்துப் பேசுவது இந்த ச்லோகம். புறமதங்களிலுள்ள **ஸந்ந்யாஸிகள்** சிகாயஜ்ஞோபவீதங்களை யறுத்தெறிந்து *காணிலு முருப்பொலார்* என்னும்படியாயிருப்பர்கள்; ஸ்வாமி அப்படியன்றிக்கே *உபவீதிநம் ஊர்த்வபுண்ட்ரவந்தம்* என்றும் ***விமலோபவீதம்*** என்றும் புகழலாம்படி திவ்யபோக்ய ஸேவைஸாதித்

கருணைகயாலே அந்த யஜ்ஞோபவீதத்தை நெஞ்சார அநுபவிக்கப்ராப்தமன்றே. அந்த யஜ்ஞஸூத்ரம் எங்ஙனே யிராநின்றதென்னில்; ஸ்வாமிபக்கலுள்ள அதிசயங்களே [கீழே த்ரிதண்டத்தில் ஏறிட்டுச் சொல்லப்பட்டதுபோல] இதில் யஜ்ஞஸூத்ரத்திலேறிட்டுச் சொல்லப்படுகின்றன. ... ... *

**726.** (**த்ரய்யா: மாங்கல்ய ஸூத்ரம்**) வேதமாதின் கழுத்திலே கட்டின மங்கலஸூத்ரமோ இது என்னலாயிருந்தது. பெண்டிர்க்கு மங்கள ஸூத்ரமில்லாத நிலைமை இரண்டுண்டு; கன்னிகைப்பருவமும் வைதவ்ய நிலையும். கன்னிகையைப் பார்த்துப் பலரும் பர்த்தாவாக அபிமானிப்பர்; விதவையைக்கண்டு இவளுக்கு பர்த்தா இல்லையென்று நினைப்பர்கள். அப்படியே ஸ்வாமி அவதரிப்பதற்கு முன்னே பல தெய்வங்களைப் பரதத்வமாகப் பேசுவாரும் "தெய்வமேயில்லை, ஜகத்து அநீச்வரம்" என்று பேசுவாரும் மலிந்திருந்தார்கள். ஸ்வாமி அவதரித்தபோதே பெண்டிர் கழுத்தில் மங்கல ஸூத்ரம், "இவளுக்கு பர்த்தாவுண்டு, ஒருவனே" என்று திண்ணமாக எண்ண நேருவதுபோல "ஜகத்து அநீச்வரமுமன்று, அநேகேச்வரமுமன்று; ஸ்ரீமந்நாராயணனொருவனே ஈச்வரன்" என்று நிர்ணயிக்க நேர்ந்தபடியாலே இதையிட்டு **த்ரய்யாமாங்கல்ய ஸூத்ரம்** என்கிறது. ... *

**727.** (**த்ரியுகபதயுக ஆரோஹணாலம்பஸூத்ரம்**) எம்பெருமானுக்கு **த்ரியுக**னென்று ஒரு திருநாமமுண்டு. வரதராஜஸ்தவத்தில் "குணாஷ் ஷட்பிஸ் த்வேதை:" என்கிற ச்லோகத்திலே அருளிச்செய்தபடியே ஜ்ஞாநசக்தி பலைச்வர்ய வீர்யதேஜஸ்ஸுக்களாகிற ஆறு திருக்குணங்களுடையவன் என்கிற காரணத்தினால் அத்திருநாமமாயிற்று. அப்படிப்பட்ட எம்பெருமானுடைய உபய பாதாரவிந்தங்களிலே யேறுவதற்கு ஆலம்பஸூத்ரமோ இது! என்னலாயிருந்தது. மேலேயேற வேண்டுவோர் ஒரு கயிற்றைப் பற்றிக்கொண்டு ஏறுவார்களே, அந்தக் கயிறுதானிது என்னலாம் போலும். அன்றிக்கே த்ரியுகயுகபத என்றொருபாடமுண்டு; அப்போது அர்ச்சிராதி மார்க்கமென்று பொருளாகக் கடவது. த்ரியுகமென்றால் மூவிரண்டு — ஆறு; அதற்கு மேலுள்ள யுகசப்தம் அந்த ஆறை இரட்டிக்கப்பண்ணிற்று; ஈராறு பன்னிரண்டு என்றதாயிற்று. *முக்தோர்ச்சிர் திநபூர்வபக்ஷ* என்கிற ச்லோகப்படிக்கும், *நடைபெறவங்கிப் பகலொளியநாள்* என்கிற பாசுரப்படிக்கும் அர்ச்சிராதிகள் பன்னிரண்டாதலால் **த்ரியுகயுகபத**மென்று அந்த அர்ச்சிராதி மார்க்கம் சொல்லிற்றாகிறது. அதிலேயேறுவதற்கு ஆலம்பஸூத்ரமென்னவுமாமே. ஸ்வாமியையடிபணிந்தவர்களுக்கு அர்ச்சிராதிமார்க்கம் எளிது என்பது தேறிற்று.

**728.** (**ஸத்வித்யாதீபஸூத்ரம்**) உயர்ந்த வித்யையான உபநிஷத்துக்களாகிற திருவிளக்குகள் மேன்மேலும் ஜ்வலிப்பதற்கான திரிநூல் என்னலாயிருந்தது. எண்ணெயிருந்தாலும் திரியில்லையாகில் விளக்கு எரியாதே. (**ஸகலகலிகதாஸம்ஹ்ருதே: காலஸூத்ரம்**) கலிகோலாஹலங்களெல்லாம் மடிவதற்கு யமபாசம் போன்றது; (**புதாநாம் ப்ரஜ்ஞாஸூத்ரம்**) தம்மடிபணிந்த வித்வான்களுக்கு ப்ரஜ்ஞையை விகஸிப்பிக்கவல்ல ப்ரஹ்மஸூத்ரமோ இது! என்னலாம்படியிருந்தது. முப்புரிநூலும் மார்புமான அழகை ஸேவித்தவாறே அடியார்களுக்கு ப்ரஜ்ஞாவிகாஸமுண்டாகுமென்று கருத்து. ப்ரஜ்ஞா என்றவிடத்தில் — *ஸம்நிதிர் யஸ்ய ஸ்வயம் மதிரீக்ஷணீயா ..., புத்திரா ... ப்ரோக்தா ப்ரஜ்ஞா த்ரைகாலிகீ மதா* என்பது நினைக்கத்தக்கது. ... *

**729.** [**ப்ரசமதமநம:பத்மிநீநாளஸூத்ரம்**] சமதமாதி குணங்களையே செல்வமாக வுடையவர்கள் யோகிகளெனப்படுவர்கள். ஸ்வாமிதிருவடிகளை யாச்ரயித்துள்ள எம்பார் அருளாளப் பெருமானெம் பெருமானார் போல்வார் இங்கு விவக்ஷிதர்கள். அந்த மஹான்களுடைய திருவுள்ளமாகிற தாமரை யோடைக்கு நாள

ஸூத்ரம்போல் அலங்காராவஹமென்றபடி. தாமரைத்தண்டுகள் விளங்குவது பொய்கைகளுக்கு அலங்காரமிறே. இத்தால் மஹான்கள் திருவுள்ளத்திலே சிந்திக்கும்படி ஸ்வாமியின் யஜ்ஞஸூத்ரம் என்றதாயிற்று. [ப்ருந்தாரம் ரக்ஷாஸூத்ரம்] கீழ் ப்ரசமநநர்களாகச் சொல்லப்பட்டவர்களே இங்கு முனிவர்களாகவும் சொல்லப்படுகிறார்கள். அவர்களை ரக்ஷித்தருளும் ஸூத்ர மென்னலாம்படியுள்ளது. புறமதத்தவர்களான யதிகள்போலே யஜ்ஞஸூத்ரத்தை அறுத்தெறியாமல் ஸ்வாமி அணிந்து கொண்டிருக்கும் மழகைச் சிந்தித்த மாத்ரத்திலே வீடுபெறுவார்களென்றதாயிற்று. ஆக இப்படிப்பட்ட திவ்யயஜ்ஞோபவீதம் ஸ்வாமியின் திருமார்பிலே திகழா நின்றதென்று அநுபவித்துப்பேசினராயிற்று. ... ... ... *

பாஷண்டஸாகரமஹாபடபாமுகாக்நி:
ஸ்ரீரங்கராஜசரணாம்புஜமூலதாஸ:,
ஸ்ரீவிஷ்ணுலோகமணிமண்டபமார்க்கதாயீ
ராமாநுஜோ விஜயதே யதிராஜராஜ:-

**730.** பாஷண்டர்களாகிற கடலுக்கு படபாக்நிபோன்றவரென்றது - அவர்களுடைய பொங்குதலையடக்கி யொழித்தவ ரென்றபடி. படபா என்று பெண் குதிரைக்குப் பெயர். கடலினிடையிலே ஒரு பெண்குதிரை யிருப்பதாகவும் அதன் முகத்திலே நெருப்பு ஒருகாலும் அவியா திருப்பதாகவும், மழைநீர் முதலியவற்றால் கடல் பொங்காதபடி அதிகமாய் வருகிறநீரை அது உறிஞ்சிநிற்பதாகவும், அதுவே பிரளயகாலத்துக் கடலினின்று வெளிப்பட்டு உலகங்களை எரித்து அழிப்பதாகவும் புராணங்கள் கூறும். *தென்னரங்கன் கழல் சென்னிவைத்து நீசச்சமயங்களை நீக்கி, அடியார்க்கு உஜ்ஜீவநோபாயம் காட்டியருளா நின்ற எம்பெருமானார் ஸகலவைபவங்களும்பொலிய வாழ்ந்தருளா நின்றாரென்றதாயிற்று. ... ... *

தாடீபஞ்சகஸ்துதியுரை முற்றிற்று.

---

# அருளிச்செயல் வியாக்கியானங்களில் எம்பெருமானார் ப்ரசம்ஸைகள்

## * அத்தூதனப்பூச்சி காட்டுகின்றான் *

**731.** பெரியாழ்வார் திருமொழியில் இரண்டாம்பத்தின் முதற்பதிகம் *மெச்சூது சங்கமிடத்தான்* என்பது. அதில் பாட்டுத்தோறும் ஈற்றடி ''அப்பூச்சி காட்டுகின்றான் அம்மனே யப்பூச்சி காட்டுகின்றான்'' என வருவது. நிகமனப் பாசுரத்தில் ''சொல்லார்ந்தவப்பூச்சிப் பாடலிவைபத்தும்'' என்றருளிச் செய்ததும் காணத்தக்கது. அப்பூச்சி காட்டுதலென்பதைப் பற்றி ரஸகனமான இதிஹாஸமொன்று கேளீர். மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தையடியொற்றி அடியேன் திவ்யார்த்த தீபிகையுரையில் எழுதியிருக்கும் பங்க்திகள் இவை. ''இப்பாசுரத்தை நம்பெருமாள் ஸந்நிதியில் உடையவர் கோஷ்டியிலே உய்ந்த பிள்ளை என்பாரொரு அரையர் அபிநயிக்குமளவில் 'அத்தூதன்' என்னும்போது ஸ்ரீக்ருஷ்ணனையும், 'அப்பூச்சி' என்னும்போது கண் இமையை மடக்கிக்கொண்டு வருவதையும் காட்டி அபிநயிக்க, உடையவர் பின்னே எழுந்தருளியிருந்த எம்பார், தம் திருக்கைகளைத் திருத்தோள்களோடு சேர்த்துக்காட்ட, அரையரும் தாம் முன்

அபிநயித்ததை விட்டு எம்பார் காட்டியது போலவே எம்பெருமான் திருத்தோள்களில் சங்கு சக்கரங்கள் தரித்துக் கொண்டிருப்பதை அபிநயிக்க, உடையவர் மிகவுமுகந்து, 'கோவிந்தப் பெருமாள்!' (எம்பார்) இருந்தீரோ' என்றாராம். இதனால் ஏற்படுவதாவது — தூதனுய்த் தன் ஸௌலப்யத்தை வெளியிட்டு 'நம்மிலே ஒருவன்' என்று இவ்வுலகத்தவர் கொள்ளும்படி யிருப்பவன் அவர்கள் அஞ்சும்படி சில காலங்களில் ஈச்வரத்வ சின்னங்களைக் காட்டுகிறனென்பது.

**732.** பெரியாழ்வார் திருமொழி 3—8—4. ஆழ்வான் திருநாட்டுக் கெழுந்தருளினபோது உடையவர், விச்லேஷம் பொறுக்க மாட்டாமல் "ஒருமகள் தன்னையுடையேன்" என்றும் "உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்த்தேன்" என்றும் "செங்கண்மால்தான் கொண்டுபோனன்" என்றும் அருளிச் செய்தாரென்று ப்ரஸித்தமிறே. * உபமாநமசேஷாணும் ஸாதூநாம் யஸ்ஸதாபவத் * என்கிறபடியே ஸாதுக்களுக்கெல்லாம் உபமாந பூமியாகச் சொல்லலாம்படியிருக்கையாலே உலகம் நிறைந்த புகழுள்ளது ஆழ்வானுக்கேயிறே.

**733.** பெரியாழ்வார் திருமொழி 5—4—1! * வேயர் தங்கள். **(சாயைபோலப் பாட வல்லார் தாமுமணுக்கர்களே)** எம்பாரைச் சிலர் இப்பதத்துக்குப் பொருளென்? என்று கேட்க, நான் உடையவர் ஸ்ரீபாதத்திலே இது கேட்டிலேன், ஆகிலும் நீங்கள் கேட்டவர்த்தம் போராதென்னவெண்ணுது; இப்போதே கேட்டு உங்களுக்குச் சொல்லவொண்ணுதபடி உடையவரும் திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதந் தேறவெழுந்தருளினர்; ஆகிலும் உங்களுக்கு இப்போதே சொன்னேனுகவேணும்... என்று உடையவருடைய திருவடிநிலைகளை யெடுத்துத் தம் திருமுடியிலே வைத்துக் கொண்டு, இப்போது உடையவரெனக்கருளிச் செய்தார், கேட்கலாகாதோவென்று "பாடவல்லார், சாயைபோலத் தாமும் அணுக்கர்களே" என்றருளிச்செய்தார்... **சாயைபோலப்பாடவல்லார்**; நிழலாவது குளிர்த்தி; குளிரப் பாடவல்லார் என்றுஞ் சொல்லுவர்கள். [விவரணம்; — பண்டு எம்பெருமானர் திருக்கோட்டியூர் நம்பியைத் திருவடி தொழுவதற்கென்று அங்கு எழுந்தருளினகாலத்தில் சிலர் எம்பாரிடம் வந்து "சாயை போலப் பாடவல்லார்" என்ற அடியின் கருத்தையருளிச் செய்ய வேணுமென்று பிரார்த்திக்க, அதற்கு எம்பார் 'நான் எம்பெருமானரிடத்தில் இதன் பொருளைக் கேட்டுணர்ந்ததில்லை; இப்போது அவரைக் கேட்டு உங்களுக்குச் சொல்லுவோமென்று பார்த்தால் அவர் திருக்கோட்டியூருக்கு எழுந்தருளியிருக்கிறர்; இதன் பொருள் எனக்குத் தெரியாதென்று சொல்லிவிடுவது அழகல்ல. உங்களுக்கு இப்போதே சொன்னேனுக வேணும்; சொல்லுகிறேன்; அதற்கொரு உபாயமுண்டு — என்று சொல்லிவிட்டு உடனே எம்பெருமானருடைய ஸ்ரீபாதுகைகளை யெடுத்துத் தம்முடிமீது வைத்துக்கொண்டு 'இப்போது ஸ்வாமியின் க்ருபையினலே தெரிந்து கொள்ளப் பெற்றேன், சொல்லுகேன் கேண்மின்' என்று சொல்லத்தொடங்கி "அந்தணர்தமமுதத்தினைப் பாடவல்லார் சாயைபோல அணுக்கர்கள்" என்று அந்வயித்துப் பொருள் விளக்கியருளினர், தம்முடைய நிழல் தம்மைவிட்டு அகலாதவாறுபோல எம்பெருமானைப் பாடுமவர்கள் அப்பெருமானை இறையும் அகலாது அவன்றனக்கே அந்தரங்க சேவகராகப் பெறுவரென்கை.

**734.** திருப்பாவை. (பா. 12.) * அனைத்தில்லத்தாருமறிந்து * "எம்பெருமானர் திருவவதரித்தாப்போலேகாணும் இப்பெண்பிள்ளையும்."

**735.** (திருப்பாவை — 18.) * உந்துமதகளிற்றன் * எம்பெருமானர் விசேஷித்து உகந்திருக்கும் பாட்டு இப்பாட்டு. *

[இதன் தொடர்ச்சி அடுத்தவொரு மலரில் வெளிவரும்.]

## ஸ்ரீ ராமாநுஜ பக்த ஹஸ்தபூஷணத்தில்

# யதீந்த்ர - யதீந்த்ர ப்ரவணர்களின் வடிவழகி லீடுபாடு

(திருமஞ்சனக் கட்டியம்)

**736 - 773** காஷாயஶோபி கமநீயஶிகாநிவேஶம்
தண்டத்ரயோஜ்வலகரம் விமலோபவீதம், |
உத்யத்திநேஶநிப முல்லஸதூர்த்வபுண்ட்ரம்
ரூபம் தவாஸ்து யதிராஜ த்ருஶோர் மமாகரே. ||

போதச்சிவந்து பரிமளம்வீசிப் புதுக்கணித்த
சீதக்கமலத்தை நீரேறவொட்டிச் சிறந்தடியேன்
ஏதத்தைமாற்று மெதிராசனுர்தமினிமைதரும்
பாதக்கமலங்கள் வாழியரோ பாதச்சபலங்கள் வாழியரோ.

பற்பமெனத்திகழ் பைங்கழலுன் றன் பல்லவமேவிரலும்
பாவனமாகிய பைந்துவராடை பதிந்த மருங்கழகும்
முப்புரிநூலொடு முன்கையிலேந்திய முக்கோல்தன்னழகும்
முன்னவர் தந்திடுமொழிகள் நிறைந்திடு முறுவல்நிலாவழகும்
கற்பகமேவிழி கருணைபொழிந்திடு கமலக்கண்ணழகும்
காரிசுதன்கழல்சூடியமுடியும் கனநற்சிகைமுடியும்
எப்பொழுதும் எதிராசன் வடிவழ கென்னிதயத்துளதால்
இல்லையெனக்கெதிரில்லை யெனக்கெதிரில்லையெனக்செதிரே.

தேவரீருடைய திருவடித்தாமரைகளின் போக்யதாதிசயத்துக்கு ஒரு போலியாக கம்பீராம்பஸ் ஸமுத்பூத ஸுஸம்ருஷ்டநாள ரவிகரவிகஸிதமான தோர் செந்தாமரைப்பூவை அதினுடைய கர்வஸர்வஸ்வ நிர்வாபண பூர்வகமாகத் திருவடிகளின்கீழமுக்கி அதின் தலைமேல் வெற்றியுடன் வீற்றிருக்கு மிருப்பினழகும்;

பங்கஜ ரஜஸ்ஸும் பாதாருந்துக மாம்படி சேம்ஜ்ஞ லோசந சர்ச்சா ஸஹ ஸௌகுமார்ய சாலிநிகளான பிராட்டிமாரும் பிடிக்கக் கூசும்படி புஷ்ப ஹாஸ ஸுகுமாரதரரான பெரிய பெருமாளுக்கும் மெத்தென்றபஞ்ச சயநமாய் அத்யந்த ஸுகுமாரரான தேவரீர் தமக்காஸநமாய்க்கொண்டு தொண்டுபூண்ட புண்டரீகத்துக்கு ஸ்வதாஸ்யார்ஹ ஸரஸ்யாதிகளை யூட்டுகைக்குத் ததாஸ்யாந் தரத்தில் சொருகியிட்டு வைத்தாற்போல் மறைத்திட்ட இடத்திருவடிகளும்;

ஸம்ஸரண கவதஹநதந்தஹ்யமாந ஸகல ஜகதவநபர ஸந்தத சிந்தா ஸமாக்ராந்தியாலே நிப்ருததயா பணிபதிசயந சயாநரான பெரிய பெருமாளுடைய யோகநித்ரா முத்ராநுகாரியாக இடத்தொடையின் மேல் வளர்த்திக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முற்றூட்டாகக் காட்டியிட்ட வலத்திருவடிகளும்;

பாப்ரஹ்மபூத பரபுருஷ விஷயக ஸங்கமாத்யுத்தீபகரான மன்னிய சீர்மாறனென்னும் மாறனுக்கு, தேவரீருடைய பதஸாஹிஜ வ்யாஜேந குஸுமசர ஸஹிதமாக அமைத்துவைத்த அம்பறுத்தூணிகள்போல் இணைத்து வைத்த கணைக்கால்களும்;

கீழ்நோக்கிக் கிளர்கின்ற சுடர்ச்சோதி வெள்ளங்கள் ஆஸநாபிகாதத்தால் மறியுண்டு சுழித்தாற்போல் இரண்டருகுந் திரண்டுருண்டு மடியுண்ட முழந்தாள்களும்;

கந்தளித கதளீகாண்ட கரிகர கரபங்களை வென்று அடி பெருத்து நுனிசிறுத்து மதுமதென்று மாம்ஸளங்களாய் விளங்குகின்ற திருத்தொடைகளும்;

சடப்ரமதந சமதந ஸார்வபௌம ஜைத்ரயாத்ராரதம்போன்ற தேவரீருடைய திருமேனிக்குக் கீழுருண்டுவரும் இரண்டு சக்ரமண்டலங்கள் போன்ற ப்ருதுநிதம்ப பிம்பங்களும்;

திருவரையின் மடிதொடங்கிக் கணைக்கால்கள் நடுவளவு முன்னுள்ள வடிவழகுக்கு அத்யந்த ப்ரகாசகமாய்ப் பொருத்தமுடன் தரித்திருந்த கமநீய காஷாயமும்;

இடவருகில் தொடையடியில் தொங்குகின்ற தலைப்புடனே நடுக்கோத்து மடித்துடுத்த ஸர்வோத்தரோத்தரீயமும்;

ஸந்த்யாராக ரஞ்ஜிதமான சாரதாப்ரத்தில் தனித்தெழுந்தோர் கொடிமின்னல் நிலைநின்று படர்ந்தாற்போல் அரைச்சிவந்த வாடையின்மேல் நெளிந்துகொண்டு திகழ்கின்ற பொன்வரை நாண்பூண்ட வழகும்;

பவதநுபவரஸ விவசருடைய அபிநிவேசபாச பரிப்ராமித மதிமந்தாந மத்யமாநமான ஸௌந்தர்ய துக்தஸிந்துவானது சுற்றேறும் திரைந்தெழுந்து நடுக்குழிந்திட்ட சுழிபோல் சுந்தரமாம் உந்திமலரும்;

விநயமுடன் வீசுகின்ற வெட்டிவேர் விசிறிகளால் அத்யந்த குமுகுமித சனைச்சனை: ப்ரஸரந் மந்தகந்தவஹ விஹரண விசேஷங்களாலே தேவரீருடைய திவ்ய லாவண்ய தரங்கிணீ பார்ச்வ பாகங்களில் இரண்டலைவரிசை பரம்பினாற்போல் இருபக்கமும் திகழ்கின்ற த்ரிவலிகளும்;

மாமேகமெனப்பதை அபிநயித்துக் காட்டுவதுபோல் நெஞ்சுக்கு நேராகக் கொஞ்சம் சாய்ந்து அஞ்சலித்த திருக்கைகளும்;

தங்கவளைமேல் தங்கித் தொங்குகின்ற சங்கிலிகளோடு இணக்கமுற்ற கணைக்கைகளும்;

அபிநவதர தரவிகஸ்வர ஸரஸிஜவர முகுளதளத்தளாயமாந நிஜாஞ்ஜலி கொங்குளி சோபையை நிஜஹ்ருதயஜலஜதனை ரஸிக ஹார்த்த ஜநார்த்தநனுக்கு அவதமித்துக் காட்டுகையால் முறுக்கியிட்ட முன் கைகளும்;

அகடித கடநாஸமர்த்த சதுர்ப்புஜ புஜ ஜாச்ப்பர விபூதித்வயபாபரார்த்தமாகக் கதகம்பஇரிவரங்களிதண்ணட வெளிறநக்சுழித்துப் புகரெழக்

கடைந்து தூணுக்கி மடுத்தாற்போல் இரண்டட்டத்திலுந் திரண்டுருண்டு நீண்டு த்ருடகரங்களுமாய், சிரீஷ குஸும ஸௌகுமார்யம் திரண்டிரண்டு வடிவுகொண்டாற்போல் அத்யந்த ம்ருதுளங்களுமாய், ஸாக்ஷாத்புஜகபதி போகாத்மகத்வ ப்ரத்யாயகங்களுமாய் விளங்குகின்ற பாஹு தண்டங்களும்;

ஹ்ருதயாந்தர்நிஹித ப்ரஹ்மபுரகோபுர கோபநார்த்தமிட்ட ஹாடகமய கவாடபுடம்போல் பளபளென்றகன்று கடவ்யூடமாய் வய:பரிணாம ஸூசகதுர்த்தமாகக் கொஞ்சந்தளர்ந்ததுபோல் விளங்குகின்ற விசாலவிமல வக்ஷஸ்ஸ்தலமும்

அழகு செண்டாடுகிற அம்மார்பினழகில் ஆழங்கால்பட்டு மயங்கி விழுகின்ற மநோநயன யுகளங்கள் மூன்றுக்கும் கைப்பிடி கொடுத்து அவற்றைத் தோளழகிலே துவக்குகைக்குத் தொங்கவிட்ட அவலம்பஸூத்ரத்ரயம் போன்ற ஸௌதாமநீ ஸவர்ண ஸௌவர்ண யஜ்ஞஸூத்ரமும்;

ஸேச்வர விபூதித்வயத்துக்கும் நிழல் கொடுத்து வளர்ந்து விசாலங்களுமாய், கிரிவரசிகர ஸுகப்ரதிஷ்டித ஸிம்ஹஸ்கந்த ஸந்நிபந்த ஸம்ஸ்தாந பந்தஸ்பர்த்தங்களுமாய்ச் சரிந்துயர்ந்து விளங்குகின்ற திருத் தோள்களும்;

கண்டருத்த ப்ரணவாக்ஷரங்கள் கழுத்துள்ளே நெருக்குண்டு விம்மிப் புறம் பொசிந்தாற்போல் ரேகாத்ரய விபக்தாங்கமாய், க்ரமுக தருண க்ரீவ கம்புப்ரதிமமாய் விளங்குகின்ற திருக்கழுத்தினழகும்;

*சுற்றுமொளிவட்டஞ் சூழ்ந்து சோதிபரந்தெங்கிறபடியே சாரத சர்வரீ பர்வாக்ர ஸமய ஸமேதித ஸகலகலா பரிபூர்ண ஸர்வாஹ்லாதகரமான மறுக்கழற்றின சந்த்ர மண்டலத்தையும் அப்போதலர்ந்த செந்தாமரைப் பூவையும் ஸஹஜகாந்தி சைத்யமார்தவ ஸௌரபாதிகளால் அத:கரித்துக் கிட்டினாரை மையலேற்றி மயக்கும் மாயமந்திரமாய் விளங்குகின்ற ஸ்மயமாந முகாரவிந்தமும்;

நின்றவா நில்லாநெஞ்சு பிணிப்புண்ணும்படி கண்ணிக்கயிற்றுச் சுருள்கள் போல் சுருண்டுருண்டு நீண்டு மநோஹரங்களுமாய், முன் சில நாள் சாத்திக் களைந்த கநகமய மகரகுண்டலத்வயத்தைத் தளர்ந்து வளர்ந்து வடுவிட்ட வடிவழகால் கோள்சொல்லித்தரக்கடவதுகளுமாய், மார்த்தவாதிசயத்தால் மெல்ல வசைந்தாடுவதுபோலத் தோளளவுந் தளதளென்று தொங்குகின்ற திருச் செவிகளும்;

இசைந்து கனிந்த த்ராக்ஷாத்வயம்போல் நடுப்பதிந்து வகுப்புண்டு திரண்டெழுந்த சுபுகலிகாஸமும்;

ஸ்வாந்த ஸ்வாந்தசீநிரந்தர சிந்த்யமாநாநந்தசயாநந்த சிரந்தநோதந்த ஸந்தாந ஸாக்ஷாத்கார ஹடாத்கார ஸமுதஞ்சித ரோமாஞ்ச விசேஷங்களாலே பரம புருஷ ஸம்ச்லேஷ ஹர்ஷாதிரேக ஸூசகங்களுமாய் அவ்யக்தாங்குரச்மச்ரு ஸமூஹதயா "யத்ரர்ஷய:ப்ரதமஜா யேபுராணா:" என்கிற நித்ய யுவத்வத்தைக் கோள்சொல்லித் தரக்கடவதுகளுமாய், புகர் படைத்துப்பெருத்து விளங்குகின்ற தாருமூலங்களும்;

ஸகலவிபுத ஸதாஸ்வாத்யமான தேவரீருடைய வதநஸுதாநிதி மண்டலாந்தராளத்தில் திரட்டியிட்ட அம்ருதரஸ ஸாரங்கள்போல் அத்யந்த போக்யங்களுமாய்ச் சிவந்து கனிந்த கோவைப்பழத்தையும் கடைந்து துண்டிட்ட பவளக்கொடியையும் பரிஹஸித்துச் சிரிப்பதுபோல் மந்தஸ்மித மனோஹரங்களுமாய். அதிருசிர பாவகர்ப்பமானதொரு வார்த்தை சொல்லத்தொடங்கித் துடிப்பதுபோல் விளங்குகின்ற திருப்பவளங்களும்;

அபிமதஜந தர்சநாநந்த வேகத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி வெளிவிழுகின்ற அவ்யக்த மதுர மந்தஹாஸ விலாஸமும்;

ஸ்படிகமய கண்டசைல க்ருதங்களான இரண்டு முகுர மண்டலங்களை மாசறக் கடைந்து தூளிட்டுத் துலக்கித் துடைத்திணைத்து வைத்தாற்போல் தளதளென்ற திவ்ய கபோலங்களும்;

எப்போதும் பார்த்துள்ள ஸகல ஜனங்களுக்கும் தங்களையே நோக்கினைப் போல் அத்யந்த ரஞ்ஜகங்களுமாய்ப் புடைபரந்து மிளிர்ந்து இலங்கொளிசேர் அரவிந்தம்போன்று நீண்டு விசாலங்களுமாய், சண்டையிடும் இரண்டு கெண்டைகள்போன்ற தண்டாமரைக் கண்களும்;

குணாரோபணங்கொண்டு வளைந்துநின்ற சார்ங்கவில்லை. நிஜமான வடிவழகால் வென்றுகொண்டு வளைந்துநின்ற திருப்புருவ வட்டங்களும்;

தொங்குகின்ற செண்பகப்பூப்போலே நுனிமலர்ந்துயர்ந்து அடிகுறுகி நீண்டு நளினாயுகம்போல் ரந்த்ரத்வய சோபிதமாய் மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோவென்று நித்யஸந்தேஹ ஜநகமாய் விளங்குகின்ற கோலநீள் கொடிமூக்கினழகும்;

அம்மூக்கினடியை விளாக்குலை கொண்டு விளங்குகின்ற ராமாநுஜாக்ய திவ்யபீட ஸம்யுதமான திவ்யோர்த்வ புண்ட்ரதிலக ப்ரகாசமும்;

அதனிடையில் ஸகல விபூதி பட்டாபிஷேக ஸாம்ராஜ்ய லக்ஷ்மியின் ஸ்வைச்சாவிஹாரவிகஸிதபதகமலலாக்ஷாரஸதாரா ரேகைபோலச்சிவந்துபடிந்து விளங்குகின்ற ரக்தவர்ண ஸ்ரீசூர்ணரேகையும்;

மலர்ந்துயர்ந்த திருமுடியும்; வளர்ந்து மடிந்து வ்யக்தாவ்யக்தமாய் விளங்குகின்ற திருக்குழலழகும்; சுற்றிச் சுற்றிக் குலைத்திட்டுமுடித்த சிகாபந்தமும்; பின்னெடுத்த பிடரியழகும்; திருவனந்தாழ்வான் பின்படம்போலே நடுப்பதிந்து பரந்து நெறித்திட்ட திருமுதுகும்; வலவருகில் கைமேலும் மார்பிலுமாய் முன்னுறட்டித் தாங்கியிட்ட த்ரிதண்டாச்ரயமும்; சீரியதோர் நிதிபோலே திருமுன்பே நோக்கிவைத்திட்ட பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளுமாய் தேவரீர் திருமஞ்சனங்கண்டருள வீற்றிருக்குமிவ்வழகு ஊழிதொறுமூழிதொறும் வாழ்ந்திடுக வாழ்ந்திடுகவே யதிஸார்வபௌமனே !

ஸ்ரீ

## ஸ்ரீராமாநுஜ பக்தஹஸ்தபூஷணத்தில்

# ஸ்ரீராமாநுஜ அஷ்டோத்தரசதநாமஸ்துதி;

## இராமாநுசநூற்றந்தாதிபாசுரங்களினெழுத்தடைவில் அமைத்தது.

| | | | |
|---|---|---|---|
| 674. | பூமன்னு | पूजित श्रीशठारातिः | மாறனடிபணிந்துய்ந்தவிராமானுசன். |
| 774 | கள்ளார் | कलिजित्सूरिसेवकः । | குறையல்பிரானடிக்கீழ்விள்ளாதவன்பன் |
| | பேரியல் | भेदश्रुत्यर्थतत्त्वज्ञः | க்ஷராத்ப்ரதாநமம்ருதாக்ஷரம்ஹர: இத்யாதி பேதச்ருதிகளின் உண்மைப்பொருளுணர்ந்தவர். |
| | என்னைப்புவி | एनःपुञ्जनिवारणः ॥ | (அடியார்களின்) பாவத்திரளைப் போக்குமவர். |
| 675. | எனக்குற்ற | एधमानयशोराशिः | மேன்மேலு மோங்கி வளரும் புகழுடையவர். |
| 775 | இயலும் | इन्दिरापाङ्गवीक्षितः । | (சரணாகதி கத்யத்தில்) ஸ்ரீரங்கநாச்சியாரால் கடாக்ஷிக்கப் பட்டவர். |
| | மொழியை | मोक्षदायकपादाब्जः | தமது திருவடி ஸம்பந்திகளுக்கு மோக்ஷமளிப்பவர். |
| | வருத்தும் | वन्दारुजनरक्षकः ॥ | தம்மை வணங்குகிறவர்களைக் காத்தருள்பவர். |
| 676. | இறைவனை | इष्टसर्वार्थसंदाता | அவரவர்கள் விரும்பும் ஸகலார்த்தங்களையுமளிப்பவர் |
| 776 | மன்னிய | महापूर्णपदाश्रितः । | பெரிய நம்பிகளின் திருவடி பணிந்தவர். |
| | சீரிய | शीधुतुल्यवचोराशिः | மிக மதுரமான ஸ்ரீஸூக்திகளையுடையவர். |
| | இடங்கொண்ட | इन्धानगुरुभक्तिकः ॥ | ஆசார்ய பக்தி மிக விளங்கா நிற்பவர். |
| 677. | செய்யும்பசும் | शेवधीभूतवाग्दाता | நவநிதிகள் போன்ற நவக்ரந்தங்களையளித்தவர். |
| 777 | கதிக்குப்பதறி | गहनार्थप्रदर्शकः । | நுட்பமான பொருள்களைக் காட்டிக்கொடுத்தவர். |
| | சோராத | शोकहर्षविदूरस्थः | இன்ப துன்பங்களைப் பாராட்டாதவர் |
| | தாழ்வொன் | तारकेशसमाननः ॥ | சந்திரன் போன்ற திருமுகமுடையவர் |
| 678. | முனியார் | मुकुन्दपादभक्ताग्र्यः | பகவத் பக்தர்களில் தலைவர். |
| 778 | எய்தற்கரிய | एधमानमहामतिः । | மேன்மேலும் வளர்கின்ற மதியுடைய வர். |
| | உறுபெருஞ் | उपप्लवौघशमनः | (அடியார்கட்கு நேரும்) தொல்லைகளைத் தீர்ப்பவர். |
| | ஆரப்பொழில் | आनन्द घनमानसः ॥ | ஆனந்தம் நிரம்பிய திருவுள்ளமுடையவர். |
| 679. | நிதியை | निर्विकल्प वचःपुञ्जः | அடியார்களுக்குச் சேமவைப்பான திருவாக்கையுடையவர். |
| 779 | கார்த்திகை | कारुण्यामृतसागरः । | கருணைக்கு அமுதக் கடலானவர். |
| | வைப்பாய | वैराग्यभक्ति भूषाढ्यः | விரக்தியும் பக்தியுமாகிற பூஷணமுடையவர். |
| | மொய்த்த வெம் | मोघीकृतमतान्तरः ॥ | புறச்சமயங்களைப் பழுதாக்கினவர். |
| 680. | காரேய் | कान्तोपयन्तृमुन्यात्मा | மணவாள மாமுனிகளாக வடிவெடுத்தவர். |
| 780 | திக்குற்ற | दिगन्तोज्ज्वलकीर्तिकः । | திசைகளெங்கும் பரவிய புகழுடையவர். |
| | கொள்ள | कोविदस्तुत्य वाग्गुम्भः | வித்வான்கள் புகழத்தக்க திருவாக்கு உடையவர். |
| | நெஞ்சில் | नेत्रानन्ददविग्रहः ॥ | காணவினிய திருமேனி படைத்தவர். |

| | | | |
|---|---|---|---|
| 681. | கூட்டும் | कूरनाथगुरुस्तुत्यः | கூரத்தாழ்வான் துதிக்க நின்றவர். |
| 781 | இன்பம் | इन्द्रलोकविरक्तधीः । | இந்திரலோக ஆட்சியிலும் வெறுப்புக்கொண்டவர். |
| | ஆண்டுகள் | आंध्रपूर्णगुरुस्तुत्यः | வடுகநம்பி துதிக்க நின்றவர். |
| | பொருந்திய | पोषितानेकशिष्यकः ॥ | பல சிஷ்யர்களை வளர்த்தவர். |
| 682. | அடையார் | अत्याश्चर्यगुणस्तोमः | அற்புதமான திருக்குணங்கள் வாய்ந்தவர். |
| 782 | நிலத்தை | नित्यमुक्तसमाकृतिः । | நித்யமுக்தர்களோடு ஒப்பிடத்தக்கவர். |
| | நயவேன் | नक्षत्रेशसमश्रीमान् | சந்திரன் போன்ற ஒளி பொருந்தியவர். |
| | அடல்கொண்ட | अप्रमेयगुणोदधिः ॥ | அளவிடவொண்ணாத குணக்கடல். |
| 683. | படிகொண்ட | पवित्रीकृतसच्छिष्यः | நல்ல சிஷ்யர்களைப் புனிதராக்கினவர். |
| 783 | ஆக்கியடிமை | आत्मलक्षणबोधकः । | சேஷத்வமே ஆத்மலக்ஷணமென்றுணர்த்தியவர். |
| | பொருளும் | प्रेक्षिताशेषसत्क्षेत्रः | திருப்பதிகளெல்லாவற்றையும் ஸேவித்தவர். |
| | சேமநல்வீடும் | क्षेमदायकवाक्ततिः ॥ | எல்லார்க்கும் நன்மை பயக்கும் திருவாக்கையுடையவர். |
| 684. | மண்மிசை | महनीयगुणस्तोमः | மதிக்கத்தக்க குணராசிகளையுடையவர். |
| 784 | ஆழிமழையார் | आर्तार्तिहरवाक्प्रदः । | ஆர்த்தர்களின் ஆர்த்தியைப் போக்கும் திருவாக்கையளித்தவர். |
| | சுரக்கும் | शुष्कीकृतभवांभोधिः | பிறவிக் கடலை வற்றச் செய்தவர். |
| | சொல்லார் | शोकमोहविदूरगः ॥ | சோக மோஹங்களுக்கு வசப்படாதவர். |
| 685. | பேறொன்று | भेदवादरिपुध्वंसी | பல தத்துவங்களுள்ளன வென்றிசையாதவர்களைத் தொலைத்தவர். |
| 785 | கூறும் | कूरेशसुतसंस्तुतः । | கூரத்தாழ்வான் திருமகனார் துதிக்க நின்றவர். |
| | இறைஞ்ச | इन्दिरापतिसद्भक्तः | திருமகள் கொழுநனுக்குச் சிறந்த தொண்டர். |
| | நிகரின்றி | निषेवितमहागुरुः ॥ | பெரியநம்பியடிபணிந்தவர். |
| 686. | ஆனது | आश्चर्यवैभवस्तोमः | அற்புதமான பல பெருமைகளையுடையவர். |
| 786 | உதிப்பன | उद्यद्भानु समप्रभः । | உதயஸூர்யனைப்போல் விளங்குபவர். |
| | அடியை | अच्युतप्रेमभरितः | வழுவாத பக்தி வாய்ந்தவர். |
| | பார்த்தான் | पाराशर्यवचोऽर्थदः ॥ | ப்ரஹ்ம ஸூத்ரப் பொருள் பணித்தவர். |
| 687. | அற்புதன் | अद्भुतप्रज्ञशिष्याढ्यः | மஹாப்ராஜ்ஞர்களான சிஷ்யர்கள் நிறைந்தவர். |
| 787 | நாட்டிய | नारायणपरायणः । | நாராயணனையே பரகதியாக உடையவர். |
| | கண்டவர் | कण्ठीरव समाकारः | சீரிய சீயம் போன்றவர். |
| | கோக்குல | कोमलाकृति शोभितः॥ | அழகிய திருமேனி கொண்டவர் |

| | | | |
|---|---|---|---|
| 688. | மற்றொரு | मन्त्रमन्त्रार्थविज्ञाता | மந்திரங்களையும் மந்திரப்பொருள்களையு முணர்ந்தவர். |
| 788 | பேதையர் | भेददर्शनपालकः । | ஜீவாத்ம பரமாத்ம பேதத்தை நிலைநிறுத்துபவர். |
| | கடலளவாய | कलिकोलाहलध्वंसः | கலியின் மிடுக்கைக் கெடுத்தவர். |
| | உணர்ந்த | उद्वेलकरुणोदधिः ॥ | கரைகடந்த கருணைக்கடல். |
| 689. | கொழுந்து | घोरसंसारतापघ्नः | கொடிய ஸம்ஸார தாபத்தைத் தொலைப்பவர். |
| 789 | இருந்தேன் | इहभोगविरक्तधीः । | இஹிக போகங்களில் நசையற்றவர். |
| | பிடியை | पिङ्गलाब्दसमुद्भूतः | பிங்களாவாண்டில் அவதரித்தவர். |
| | பண்டரு | पण्डितोत्तमसेवितः ॥ | மஹாவித்வான்கள் அடிபணிய நின்றவர். |
| 690. | வாழ்வற்றது | वादिमत्तेभपंचास्यः | வாதிகளாகிற மதயானைக்குச் சிங்கமானவர். |
| 790 | ஞானம் | ज्ञानदीप प्रदायकः । | ஞானவிளக்கேற்றி வைத்தவர். |
| | சரணம் | शरणागतितत्त्वज्ञः | சரணாகதியின் தத்துவமுணர்ந்தவர். |
| | ஆரெனக்கு | आचार्यगुणसंभृतः ॥ | ஆசாரிய லக்ஷணமமைந்தவர். |
| 691. | சிந்தையினோடு | चिन्तातीतप्रभावाढ्यः | சிந்தைக்கும் கோசரமல்லாத பெருமை வாய்ந்தவர். |
| 791 | என்னையும் | एनस्संचयदाहकः । | பாவத்திரள்களைக் கொளுத்துபவர். |
| | சார்ந்தது | चार्वाकबौद्धविध्वंसी | சார்வாக பௌத்தர்களைத் தொலைத்தவர். |
| | கைத்தனன் | कैंकर्यकरणोत्सुकः ॥ | வழுவிலாவடிமை செய்ய விருப்பமுடையவர். |
| 692. | வண்மையினாலும் | वक्रदुर्मतिदूरस्थः | கோணலான புத்தி சிறிதுமில்லாதவர். |
| 792 | தோளர் | तेजःपुंजास्पदाननः । | தேசுபொலிந்த திருமுகமுடையவர். |
| | செய்த்தலை | शेषत्वकाष्ठानिष्ठात्मा | சேஷத்வத்தின் எல்லையில் நிற்பவர். |
| | நின்றவண் | निर्मलज्ञानदेशिकः ॥ | களங்கமற்ற ஞானத்தையளிப்பவர். |
| 693. | நந்தனன் | ईक्षिताशेषसद्ग्रन्थः | சிறந்த நூல்களெல்லாவற்றையும் கடாக்ஷித்தவர் |
| 793 | கருத்தில் | कपिलादिमतान्तकः । | கபிலமதம் முதலானவற்றைக் கண்டித்தவர். |
| | பொய்யை | परमार्थपरित्राता | உண்மைப் பொருளைக் காத்தருளினவர். |
| | நல்லார் | नश्वरार्थविदूरगः ॥ | நிலைநின்ற பொருளில் விருப்பமுடையவர். |
| 694. | சோர்வின்றி | शोचनीयमतध्वंसी | வருந்தத்தக்க மதங்களைத் தொலைத்தவர் |
| 794 | தெளிவுற்ற | तेजोराशिवदुज्ज्वलः । | தேஜஸ்ஸுக்களின் திரள்போல் விளங்குபவர். |
| | சீர்கொண்டு | श्रीमद्यामुनसंदृष्टः | ஆளவந்தாரால் கடாக்ஷிக்கப்பட்டவர். |
| | கண்டு | कटाक्षाधीन वैभवः ॥ | (அவருடைய) கடாக்ஷத்தினால் பெருமை பெற்றவர். |

| | | | |
|---|---|---|---|
| 695. | ஓதியவேத | ओंकारार्थपरित्राता | ப்ரணவார்த்தத்தைக் காத்தருளினவர். |
| 795 | பற்றுமனிசரை | परमैकान्तिसेवितः । | பரமைகாந்திகள் ஸேவிக்க நின்றவர். |
| | பெரியவர் | परिरक्षितवेदार्थः | மறைப்பொருள்களைக் காத்தருளினவர் |
| | கலிமிக்க | कलिजित्सूक्तिवर्धनः ॥ | கலியன் திருவாக்குகளை வளர்த்தருளினவர் |
| 696. | போற்றரும் | पोष्यवर्गपरित्राता | போஷிக்கவேண்டியவர்களைப் போஷிப்பவர். |
| 796 | கீர்த்தியார் | निश्चितार्थविलेखकः । | நிஸ்ஸந்தேஹமான பொருள்களை வரைந்தருள்பவர் |
| | மருள்சுரந்து | मनीषिगणसंमान्यः | வித்வான்கள் பஹுமானிக்க நின்றவர். |
| | புண்ணிய | पुण्यतीर्थाटनोत्सुकः ॥ | புண்யதீர்த்தங்களில் அவகாஹித்தவர். |
| 697. | கட்டப்பொருளை | क्लिष्टार्थखण्डनोत्साही | நலிந்து கொள்ளும் பொருள்களை மறுப்பவர். |
| 797 | தவந்தரும் | तपस्स्वाध्यायनिष्ठितः । | தபஸ்ஸிலும் ஸ்வாத்யாயத்திலும் ஊக்கமுடையவர். |
| | உண்ணின்று | उत्तुंगार्थ परित्राता | சிறந்த பொருள்களைச் சேமித்தருளினவர். |
| | வளரும் | वरिष्ठार्थविबोधकः ॥ | சிறந்த பொருள்களை உபதேசித்தருளினவர். |
| 698. | தன்னையுற்று | तरुणादित्यसंकाशः | முதிர்ந்த இரவிபோல் விளங்குபவர். |
| 798 | இடுமே இனிய | इन्दुजैत्रमुखांबुजः । | சந்திரனை வென்ற திருமுகமுடையவர். |
| | தர்க்கச்சமணர் | तर्कव्याकरणादिज्ञः | நியாய வியாகரணாதிகளையுணர்ந்தவர் |
| | போந்தது | बोधिताशेषसत्कृतिः ॥ | எல்லா நற்கலைகளையும் உணர்த்தினவர். |
| 699. | மயகரும் | महिष्ठज्ञानसंपन्नः | மிகச் சிறந்த ஞானம் படைத்தவர். |
| 799 | நையும்மனம் | नैष्ठिकाग्रेसरार्चितः । | சிறந்த பரமைகாந்திகளாலாராதிக்கப்பட்டவர் |
| | வளர்ந்தவெங் | वर्धमानयशोराशिः | மேன்மேலுமோங்கும் புகழுடையவர். |
| | கையில் கனி | कैतवादिविदूरगः ॥ | கள்ளம் கவடுகளறியாதவர் |
| 700. | செழுந்திரை | शिष्टाग्रगण्यसंसेव्यः | சிறந்த சிஷ்டர்களால் ஸேவிக்கத்தக்கவர் |
| 800 | இருப்பிடம் | इष्टैश्वर्य प्रदायकः । | அவரவர்கள் விரும்பும் செல்வத்தையளிப்பவர். |
| | இன்புற்ற | इतिहासपुराणज्ञः (च) | இதிஹாஸ புராணங்களுணர்ந்தவர். |
| | அங்கயல் | अङ्गीकृतमदुक्तिकः ॥ | அடியேனது புன் சொற்களை ஏற்றுக் கொண்டவர் |

ஸ்ரீ ராமாநுஜ அஷ்டோத்தர சதநாமஸ்துதி முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீராமாநுஜபக்தஹஸ்தபூஷணத்தில்-
ப்ரபந்நகாயத்ரீவர்ணாநுக்ரமஸ்துதி

801. (பூமன்) ❋ पूता वयमिह सततं भगवद्रामानुजार्यमननेन ।
गङ्गायमुनाविसरित्त्रिषेवणे नैव जायते कुतुकम् ।। १ ।।

எம்பெருமானாரை நிச்சலும் சிந்தைசெய்வதனால் தூய்மைபெற்றோமாகிறோம்; கங்கை எமுனை முதலிய தீர்த்தங்கள் குடைந்காடுவதில் வேட்கையுண்டாவதில்லை.

802. (கள்ளார்) ❋ कलिजिन्मुनिपदसक्तः कमनीयशिखानिवेशनः कान्तः ।
काषायाम्बरधारी यतिपतिरास्ते सदैव मम मनसि ।। २ ।।

*குறையல்பிரானடிக்கீழ் விள்ளாதவன்பரும் கனநற்சிகைமுடியையுடையவரும் வடிவழகுவாய்ந்தவரும் காஷாய மணிந்தவருமான எம்பெருமானார் எஞ்ஞான்றும் என்னுள்ளத்துள்ளேயுறைகின்றார்.

803. (பேரியல்) ❋ पेटी भगवद्गुणगण भूषणबृन्दस्य लक्ष्मणाचार्यः ।
संसारसागरान्नः सत्वरमुद्धर्तुमागतः पृथिवीम् ।। ३ ।।

எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களாகிற பூஷணங்களைச் சேமிக்கும் பெட்டி போன்றவரான எம்பெருமானார் நம்மைப் பிறவிக்கடலில் நின்றும் விரைவில் எடுக்க இந்நிலவுலகில் அவதரித்தருளினர்.

804. (என்னைப் புவியில்) ❋ एनःपुञ्जसमावृत मस्मादृशजन मपारया कृपया ।
पावनहृदयान् कर्तुम् प्रादुर्भूतो यतीश्वरो भुवने ।। ४ ।।

பாவங்கள் கூடு பூரித்துக் கிடக்கின்ற நம்போல்வாரைப் பரிசுத்தராக்குவதற்கு எம்பெருமானார் இவ்வுலகில் தோன்றியருளினர்.

805. (எனக்குற்ற செல்வம்) ❋ एष गुरुर्यतिराजः शठजित्कलिजिन्मुखैर्गुरूत्तंसैः ।
संदर्शितां समीचीम् सरणिं त्रातुं समाययौ भुवनम् ।। ५ ।।

நம்மாழ்வார் திருமங்கையாழ்வார்முதலான முன்னோர்கள் காட்டியருளின நன்னெறியைக் காத்தருள்வதற்காக இந்நிலத்தே போந்தனர்.

806. (இயலும்பொருளும்) ❋ इह जगति बहव एव हि चतुराः प्रादुर्बभूवुराचार्याः ।
भगवद्रामानुजमुनिरेको हि गुरुः प्रशस्यते प्राज्ञैः ।। ६ ।।

இவ்வுலகில் சிறந்த ஆசாரியர்கள்பலர் தோன்றியிருந்தாலும் எம்பெருமானாரொருவரே ஆசாரியராக அறிஞர்களால் குலாவப்படுகின்றார்.

807. (மொழியை) ❋ मोक्षप्रदो मुकुन्दः कथितः शास्त्रेषु दिशति स हि कृच्छ्रात् ।
भगवान् यतिपतिरेष तु केवलमात्मीय करुणया दत्ते ।। ७ ।।

முக்தியளிப்பவன் எம்பெருமானென்பர்கள், ஆனால் அவன் நம்மை சிரமப்படுத்திக் கொடுப்பன்; எம்பெருமானார் தமது திருவருளால் அதைக்கத்தருள்வர்.

808. (வருந்தும்) ❋ वदत यतीन्द्रोक्तिततीः नमत तदीयं पदाम्बुजद्वन्द्वम् ।
दिशत तदीयवचस्ततिदिव्यार्थान् साधुशिष्यबृन्देभ्यः ।। ८ ।।

எம்பெருமானாருடைய ஸ்ரீஸூக்தி மாலைகளை வாயாரச் சொல்லுங்கள்; அவரது திருவடித்தாமரையிணையைத் தொழுமின்கள். ஸாத்விகர்களான சிஷ்யர்களுக்கு அவருடைய ஸ்ரீஸூக்திகளின் சீரிய பொருள்களை உபதேசியுங்கள்.

809. (இறைவனை) ❋ इन्धे यतिपतिरनिशं सर्वेष्वपि दिव्यदेशवर्गेषु ।
शठरिपुसहस्रगीति प्रबन्धपारायणस्थलेष्वपि च ॥ ९ ॥

எம்பெருமானார் எங்கெங்கே யெழுந்தருளியிருப்ப ரென்றால், கோயில் திருமலை பெருமாள் கோயில் திருநாராயணபுரம் முதலான ஸகல திவ்ய தேசங்களிலும் திருவாய்மொழி ஓதுமிடங்களிலும் எழுந்தருளியிருப்பர்.

810. (மன்னிய) ❋ मन्त्रार्थसारबोधन संजीवित साधुशिष्य समुदायम् ।
गोष्ठीपूर्ण गुरूत्तमपादप्रवणं यतीश्वरं वन्दे ॥ १० ॥

ஸாரமான மந்திரப் பொருள்களை யுணர்த்தி சிஷ்யவர்க்கங்களை வாழ்வித்தவரும் திருக்கோட்டியூர் நம்பிபக்கல் ப்ராவண்யமுடையவருமான எம்பெருமானாரை வணங்குகிறேன்.

811. (சீரிய) ❋ श्रीमान् यतिपतिसूर्यो यदि भुवनेऽस्मिन् कृतोदयो न स्यात् ।
कलिकोलाहलविभवो वचसां वैदेशिकोहि सत्यं स्यात् ॥ ११ ॥

எம்பெருமானார் இவ்வுலகில் திருவவதாரம் செய்தருளாதிருந்தால் கலிகோலாஹல க்ரீடை வாசாமகோசரமாக வன்றோ இருந்திருக்கும்.

812. (இடங் கொண்ட) ❋ इदमेकमभिदधेऽहं सूनृतवचनं निशम्यतामखिलैः ।
उपदिशतेति यतीन्द्रो न वदेद्यदि मूक एव लोकस्स्यात् ॥ १२ ॥

உண்மையாக வொன்றுரைக்கின்றேன் கேண்மின்; ''பாருலகி லாசையுடையோர்க் கெல்லா மாரியர்காள் ! கூறுமின்'' என்று எம்பெருமானார் கட்டளையிட்டருளா திருந்தால் உலகமெல்லாம்வாய்திறக்கவழியில்லாமலூமையாகவன்றோ இருக்கும்.

813. (செய்யும்பசும்) ❋ शिष्यैरपरिमितैस्स्वैः साकं विरचय्य सर्वतो यात्राम् ।
सर्वा अपीह जनताः निन्ये यतिराट् पवित्रतामाशु ॥ १३ ॥

எப்பெருமானார் எண்ணிறந்த தமது சிஷ்யவர்க்கங்களோடு கூட எண்டிசையும் க்ஷேத்ரதீர்த்த யாத்திரை செய்தருளி எல்லாரையும் புனிதராக்கியருளினர்.

814. (கதிக்கு) ❋ गतिरहितमखिल भुवनं त्रातुं स्वीयोपदेशसाहस्रैः ।
आद्यो भोगी कृपया भगवद्रामानुजार्यरूपोऽभूत् ॥ १४ ॥

கதியற்ற உலகங்களை யெல்லாம் தமது ஆயிரக்கணக்கான உபதேசங்களினால் காத்தருள்வதற்காக ஆதிசேஷன் எம்பெருமானாராக வடிவெடுத்தபடி.

815. (சோராத) ❋ शोधयितुमस्मदादीन् स्वकीयदिव्योपदेश जाह्नव्या ।
यतिपतिरजहात्सत्यं पञ्चायुधरूपमिति वदन्त्यार्याः ॥ १५ ॥

எம்பெருமானார் நம்போல்வாரைத் தமது உபதேசங்களாகிற கங்கா தீர்த்தத்தினால் பரிசுத்தராக்குவதற்காகப் பஞ்சாயுதருபத்தை விட்டு இங்ஙனே அவதரித்தருளின ரென்பர் பெரியோர். [*அடையார்கமலத்து இத்யாதி.]

816. (தாழ்வொன்) * तात्पर्यसारवेदी सर्वेषाञ्चैव शास्त्रबृन्दानाम् ।
श्रीमान् यतिपतिरेको नान्यः कोऽपीति सशपथं वच्मि ॥ १६ ॥

ஸகல சாஸ்த்ரங்களினுடையவும் உண்மைப் பொருளையுணர்ந்தவர் எம்பெருமானாரொருவரேயன்றி வேறொருவரில்லையென்பதை ஆணையிட்டுரைப்பேனடியேன்.

817. (முனியார்:-) * मुनिवरकृतिललितकथितान् अखिलानर्थान्विमृश्य संशोध्य ।
परम कृपालुर्यतिराट् स्वीयग्रन्थेषु तान् न्यवीविशत ॥ १७ ॥

வ்யாஸ பராசராதி மஹர்ஷிகள் பணித்த ஸகலக்ரந்தங்களிலும் கூறியுள்ள ஸகலார்த்தங்களையும் அருள்மிகு எம்பெருமானார் ஆராய்ந்து பரிஷ்கரித்து அவற்றைத் தமது திவ்யக்ரந்தங்களில் பொறித்து வைத்தார்.

818. (எய்தற்கரிய) * एतद्विमृशत निभृतं श्रीभाष्यमिति प्रथा यतीन्द्रकृते ।
भाष्ये केवलमभवत् तदिदं वैभवमनन्यसामान्यम् ॥ १८ ॥

ப்ரஹ்மஸூத்ரத்திற்கு பாஷ்யங்கள் பல இருந்தாலும் ஸ்ரீபாஷ்யமென்கிற வ்யபதேசம் எம்பெருமானாருடைய பாஷ்யமொன்றுக்கேவந்தது; இந்தப் பெருமை நம்ஸ்வாமியின் பாஷ்யத்திற்கு அஸாதாரணமானது.

819. (உறுபெருஞ்) * उच्चा अमी इमे खलु नीचा इति तारतम्यमनवेक्ष्य ।
सर्वत्र भक्तवर्गे समरूपकृपां हि यतिपतिश्चक्रे ॥ १९ ॥

இவர்கள் உயர்ந்தவர்கள், இவர்கள் தாழ்ந்தவர்கள் என்கிற வாசிபாராமல் பக்தர்களெல்லார் பக்கலிலும் ஒருநிகரான அருளைச் செய்தவர் எம்பெருமானார்.

820. (ஆரப்பொழில்) * आनन्दमधिकमाप्तुं सर्वेऽपि जनाः स्पृहां परां दधते ।
यदि सत्यमेतदवनौ यतिपतिगीर्भिर्हि सुलभ आनन्दः ॥ २० ॥

பேரின்ப வெள்ளத்தில் ஆழ்ந்திருக்கவேணுமென்பதே உலகில் எல்லாருமாசைப்படுவதாம்; இது உண்மையாகில் எம்பெருமானார் ஸ்ரீஸூக்திகளால் தான் ஆனந்தம் பெற முடியும்.

821. (நிதியைப்) * निधिमिह ददति वदान्या इति कतिपयनीचनृपगृहद्वारि ।
नाहमुपविश्य याचे यतिपतिकृपया समृद्ध एवास्मि ॥ २१ ॥

இவர்கள் நிதியைப் பொழியும் வள்ளல்கள் என்று சொல்லிச் சில நீசர்களின் வாசலில் துவள்கின்றிலேன்; எம்பெருமானார் திருவருளால் நான் புஷ்கலனாயிராநின்றேன்.

822. (கார்த்திகை) * कारणलवलेशमृते यतिपतिवर्यो मयि प्रकाशितवान् ।
दासे परमकृपां स्वां तत एवाहं तनोमि नुतिमेनाम् ॥ २२ ॥

எம்பெருமானார் காரணலேசமுமின்றிக்கே அடியேன்மீது பரமக்ருபையைச் செய்தருளினர்; ஆகவேதான் அடியேன் அவரை இங்ஙனம் துதிக்கின்றேன்.

823. (வைப்பாய) ❀ वैयाकुली न मे स्यात् क्वचिदप्यर्थे दृढं त्विदं वच्मि ।
वरवरमुनीन्द्ररूपी यतिपतिरद्भुतकृपां यतश्चक्रे ॥ २३ ॥

எம்பெருமானார் மணவாள மாமுனிகளாக வடிவெடுத்து அடியேன்மீது அற்புதமான அருளைச் செய்தருளினபடியால் அடியேனுக்கு எந்த அர்த்தத்திலும் தடுமாற்றமில்லை யென்று திடமாகச் சொல்லுவேன்.

824. (மோமிந்த) ❀ मोघीभावमगान्मे नैकोऽपि मनोरथो यतीश्वरभोः ! ।
कांक्षितमखिलं सिध्यति बिना विलंबं त्वदीयथा दयया ॥ २४ ॥

வாரீர் எம்பெருமானாரே! அடியேன் மநோரதிப்பது எதுவும் பழுதுபடுவதில்லை; விரும்புவதெல்லாம் விரைவில் கைகூடுவது தேவரீர் திருவருளாலேதான்.

825. (காரேய்) ❀ कारणभूतं जगतामखिलानामच्युतं हि कथयन्ति ।
ईदृशकृतिततिकरणे कारणमेका यतीश्वरस्य दया ॥ २५ ॥

உலகில் எல்லாவற்றுக்கும் காரண பூதன் எம்பெருமானே யென்பர்கள்; ஆனால் அடியேன் இங்ஙனே துதியியற்றுவதில் காரணம் எம்பெருமானார் திருவருளொன்றேயாம்.

826. (நீக்குற்ற) ❀ दिक्षु विदिक्षु च सततं सर्वे घुष्यन्ति वर्धतामाज्ञा ।
दिव्या यतीश्वरस्येत्येतावद्वैभवं न कस्यापि ॥ २६ ॥

❀ ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம் ❀ என்று திசைகள் தோறும் கோஷித்து வருகிறார்களல்லவா? இந்த பெருமை வேறுயார்க்குமில்லையே.

827. (கொள்ளக்) ❀ को वा मया समानो विलसति यतिराज ! दृप्त एवास्मि ।
यस्मादीदृशनुतिततिमारचयन्नहमिह प्रहृष्यामि ॥ २७ ॥

எம்பெருமானாரே! எனக்குநிகராவார் யாரென்று நான் செருக்கிக் கிடக்கிறேன்; ஏதனாலென்னில், இப்படிப்பட்ட துதிநூல்களை இயற்றிக்கொண்டே நான் மகிழ்ந்திருப்பதனால்.

828. (நெஞ்சில்) ❀ नेहास्ति किमपि नानेत्यवेक्ष्य वाचं विमुग्धहृदयानाम् ।
भ्रान्तिमपोह्य यतीन्द्रो निगमान्तार्थं यथार्थमातेने ॥ २८ ॥

❀ நேஹ நாநாஸ்தி கிஞ்சந ❀ என்கிற ச்ருதிவாக்யத்தின் பொருளையுணராமல் உள்ளம் கலங்கி நிற்பாருடைய மயக்கத்தைப்போக்கி எம்பெருமானார் உண்மைப் பொருளை உலகில் பரப்பி யருளினர்.

829. (கூட்டும்) ❀ कूले जलधेरथ च स्यन्दनकोणे च रामकृष्णाभ्याम् ।
कथितौ श्लोकौ रङ्गी संस्मार्य त्वां यतीन्द्र ! हर्षमवात् ॥ २९ ॥

எம்பெருமானாரே! விபீஷணாழ்வானை நோக்கிக் கடற்கரையிலும், அர்ஜுநனை நோக்கித் திருத்தேர்த்தட்டிலும் ஸ்ரீராமக்ருஷ்ணாவதாரங்களில் சொன்ன இரண்டு சுலோகங்களை (சரணாகதிகத்யத்தில்) ஸ்ரீரங்கநாதன் நினைவூட்டி தேவரீரை மகிழ்வித்தருளினன்.

830. (இன்பந்தரு) ❀ इच्छथ यदीह लोके नित्यानन्दानुभूतिमधिगन्तुम् ।
भगवद्भाष्यकृदुक्ती स्ससतं सेवध्वमादरातिशयात् ॥ ३० ॥

உலகர்களே! நீங்கள் இவ்வுலகில் நிலைநின்ற ஆனந்தத்தை யநுபவிக்க விரும்பில், எம்பெருமானாருடைய திவ்ய ஸூக்திகளை விரும்பி ஸேவியுங்கள்.

831. (ஆண்டுகள்) ❀ आशामपथेष्वधिकां बिभ्रति हाहन्त ! मूर्खजननिवहाः ।
आशा भगवद्यतिपतिपदाब्जभक्तौ भवेद्यदि क्षेमम् ॥ ३१ ॥

அந்தோ! மூர்க்கஜனங்கள் தீயவழிகளில் ஆசை கொண்டொழிகின்றனர்; எம்பெருமானார் திருவடிகளில் பக்திபண்ண வேணுமென்று ஆசை கொள்ளுவார்களாகில் ஒரு குறையுமில்லையாம்.

832. (பொருந்திய) ❀ पुष्यति निस्तुलबोधं विपुलां कीर्तिं च दिव्यमैश्वर्यम् ।
औदार्यसंपदं च श्रीमद्यतिराजचरणयुगभक्तिः ॥ ३२ ॥

எம்பெருமானார் திருவடிகளில் அன்பூண்டால் நிகரற்றஞானமும் உலகம்நிறைந்த புகழும் சிறந்த செல்வமும் உதாரகுணமுமுண்டாகும்.

833. (அடையார்) ❀ अनवरत मतुलयशसो यतिराजस्यैव दिव्यसूक्तीनाम् ।
गद्यत्रयादिकाना मनुसन्धानेन नयत भोः ! कालम् ॥ ३३ ॥

ஆரியர்களே ! பெரும்புகழ்படைத்த எம்பெருமானாருடைய கத்யத்ரயம் முதலான திவ்யஸூக்திகளையநுஸந்தித்துக்கொண்டே காலத்தைக் கழியுங்கள்.

834. (நிலத்தை) ❀ नित्यग्रन्थे यतिपतिरचिते कथितं यथावदाचरितुम् ।
शक्तिदरिद्राणामपि तच्चिन्तनमात्रमात्मनां योग्यम् ॥ ३४ ॥

எம்பெருமானார் நித்யக்ரந்தத்திலருளிச் செய்தபடியே ஆசரிக்க முடியாதாகிலும் அதைச்சிந்தனைசெய்ய ப்ராப்தம்.

835. (நயவேன்) ❀ नयत सकलं च कालं यतिपतिगुणचिन्तयैव भो मर्त्याः ! ।
एषा चिन्ता भवतां श्रेयस्सन्दोहमूलमिति सत्यम् ॥ ३५ ॥

மானிடப்பிறவிபெற்ற பாக்யசாலிகளே ! எம்பெருமானார் திருக்குணங்களைச் சிந்தனை செய்து கொண்டே நாட்காலைக்கழிமின் ; இதனால் உங்கட்கு எல்லா நன்மைகளும் விளையுமென்பது திண்ணம்

836. (அடல்கொண்ட) ❀ अभिमान एव भवतो यतिराजास्माकमक्षतं शरणम् ।
श्रीवचनभूषणस्थस्सिद्धान्तो ह्येष सर्वशास्त्रार्थः ॥ ३६ ।

"ஸ்வாபிமானத்தாலே ஈச்வராபிமானத்தைக் குலைத்துக்கொண்ட விவனுக்கு ஆசார்யாபிமானமொழிய வேறுகதியில்லை" யென்று ஸ்ரீவசந பூஷணத்தில் ஸாதித்தது ஸர்வ சாஸ்த்ர ஸித்தாந்தமாகையாலே எம்பெருமானாரே! எமக்கு தேவரீருடைய அபிமான மொழிய வேறு தஞ்சமில்லை.

837. (படிகொண்ட) ❋ पटिमा जगति बहूनां कवितायामस्ति किं फलं तेन ? ।
ये खलु यतिपतिनवने प्रवणास्तेषां हि वाचि साफल्यम् ॥ ३७ ॥

ஶ்லோகங்களியற்றுவதில் பலர்க்கு ஸாமர்த்தியமுண்டு; அதனுல் யாது பயன்? எம்பெருமானுரைத் துதிப்பதில் ஊக்கமுடையார்யாவரோ, அவர்களுடைய வாக்கே ஸார்த்தகமானது.

838. (ஆக்கியடிமை) ❋ आहुः पूर्वे गुरवास्सर्वेऽप्यर्थान् प्रयासमनुभाव्य ।
यतिपतिरेको गुरुराट् केवलकृपयैव बोधयामास ॥ ३८ ॥

எம்பெருமானுர்க்கு முற்பட்ட ஆசாரியர்கள் சிஷ்யர்களுக்கு சிரமப்படுத்தியே அர்த்தங்களை உபதேசித்தனர்; எம்பெருமானு ரொருவரே கிருபாமாத்ரப்ரஸந்நராய் உபதேசித்தருளினர்.

839. (போருளும்) ❋ पोतं जलनिधितरणे सापायं साधनं वदन्ति भुवि ।
संसृतिजलनिधितरणे निरपायं साधनं यतीन्द्रांघ्रिः ॥ ३९ ॥

கடலைக் கடப்பதற்குத் தோணியிருந்தாலும் அதற்குப்பல அபாயங்களுண்டென்பர்; பிறவிக்கடலைக் கடப்பதற்கு எம்பெருமானுர் திருவடி நிரபாயமான ஸாதனமாம்.

840. (சேமநல்) ❋ क्षेमस्स एव हीति श्रीमद्यतिराजविंशतिप्रोक्ताम् ।
सूक्तिं चिन्तयतां नः क्षेमस्यामुष्मिकस्य का हानिः ? ॥ ४० ॥

மணவாள மாமுனிகள் யதிராஜவிம்சதியில் ❋ க்ஷேமஸ்! ஸ! ஏவ! ஹி! யதீந்த்ர! பவச்சரித்ர நாம ❋ என்றருளிச் செய்திருப்பதைச் சிந்திக்குமெமக்கு உபயவிபூதியிலும் க்ஷேமத்திற்கு ஒரு குறையில்லை.

841. (மண்மிசை) ❋ महीमिह हरिरसकृज्जातोऽपि फलं न किञ्चिदुपलेभे ।
उदिते यतीन्द्रभानौ अभवन् सर्वेऽपि भगवति प्रवणाः ॥ ४१ ॥

எம்பெருமான் இந்நிலவுலகில் அடிக்கடி அவதாரங்கள் பண்ணியும் பயனொன்றும் பெற்றிலன்; எம்பெருமானுராகிற ஸூர்யன் உதித்தவுடனே அனைவரும் நாரணற்காயினர்.

842. (ஆயிழை) ❋ आदौ शेषः प्रथितः पश्चात्सौमित्रिरथ हली जातः ।
अथ च भगवान् यतीन्द्रः प्रादुरभूत्सर्वजनरिरक्षिषया ॥ ४२ ॥

முந்துற முன்னம் ஆதிசேஷரூபம்; பிறகு லக்ஷ்மண ரூபம்; அதன்பிறகு பலராம ரூபம்; பிறகு ஸகல ஜனங்களையும் காத்தருளவேண்டி எம்பெருமானுராக அவதரித்தருளினபடி.

843. (சுரக்கும்) ❋ शुष्यतु संसृतिसागर इति मन्वानेन भगवता प्रहितः ।
भोगिपति राविरासीत् रामानुजदिव्यमूर्ति मवलम्ब्य ॥ ४३ ॥

பிறவிக் கடல் வற்றித் தொலையட்டுமென்று திருவுள்ளம் பற்றின எம்பெருமானுல் அனுப்பப்பட்ட ஆதிசேஷன் பகவத்ராமாநுஜ ரூபமெடுத்து அவதரித்தனன்.

844\. (சொல்லார்) ❋ शुद्धे यतिपतिसृष्टे समये लब्धोदया महात्मानः ।
ये केऽपि वा भवन्तु श्रेयस्तत्पादसेवनं प्राहुः ॥ ४४ ॥

பரமபவித்திரமான எம்பெருமானார் தரிசனத்தில் ஜனிக்கப் பெற்றவர்கள் ஆராயினு மாகுக; அவர்களுடைய திருவடிகளைத் தொழுதல் நன்மை பயக்கும் என்பர் பெரியோர்.

845\. (பேறொன்று) ❋ भेषजमतुलं भविनां भगवद्रामानुजार्यभक्तानाम् ।
पादपयोरुहपांसुः सत्यमिदं मे वचोऽनुभवसिद्धम् ॥ ४५ ॥

ஸம்ஸாரிகளுக்கு எம்பெருமானாரடியார்களான ஸ்ரீவைஷ்ணவர்களின் பாததூளியே நிகரற்ற மருந்தாகும்; இது எனக்கு அனுபவ ஸித்தம்.

846\. (கூறு) ❋ कूरेशगुरुवरो यदि यतिराज ! भवत्पदाश्रितो न स्यात् ।
सत्यं श्रीभाष्यस्यावतारवार्तैव नो भवेज्जगति ॥ ४६ ॥

எம்பெருமானாரே! கூரத்தாழ்வான் தேவரீருடைய திருவடிகளைப் பணியாதிருந்தாரா கில், உலகில் ஸ்ரீபாஷ்யத்தின் பேச்சேயிருந்திருக்கமாட்டாது.

847\. (இறைஞ்ச) ❋ इन्दुरिव भाति चन्द्रो गगनं व्योमेव चेति कथनमिव ।
यतिराड्यतिराज इवेत्यभिधानं योग्यमितरथा नैव ॥ ४७ ॥

சந்திரன் சந்திரனைப்போல் விளங்குகிறான், ஆகாசம் ஆகாசம் போலுள்ளதென்கிறாப் போலே யதிராஜர் யதிராஜரைப்போன்றவர் என்று சொல்லத்தகுமேயல்லது மற்றைப்படி ஒருபமானமிட்டுச்சொல்லத்தகாது.

848\. (நிகரின்றி) ❋ निधिनिवहानां लाभे हृष्यन्ति जना यथा हि भुवनेऽस्मिन् ।
तद्वद्यतिवरसूक्तीः प्राप्याहं हर्षमनुभवाम्यमितम् ॥ ४८ ॥

உலகத்தவர்கள் நவநிதிகளைப் பெற்றால் எப்படி ஆனந்திப்பார்களோ அப்படி நான் எம்பெருமானாருடைய (நவநிதிபோன்ற) ஸ்ரீஸூக்திகளைப் பெற்று மகிழ்கின்றேன்.

849\. (ஆனதுசெம்மை) ❋ आचक्षते महान्तो यतिपतिमवनौ कृतावतारममुम् ।
शेषं सेनानाथं साक्षाद्भगवन्तमपि च तत्त्वज्ञाः ॥ ४९ ॥

இந்நிலவுலகில் அவதரித்தருளின எம்பெருமானாரை சேஷாவதாரபூதரென்பர்சிலர்; விஷ்வக்ஸேநாவதாரமென்பர்சிலர். ஸாக்ஷாத்பகவதவதாரமேயென்பாருமுளர்.

850\. (உதிப்பன) ❋ उद्यद्भानुसहस्रप्रतिममुखाब्जं यतीश्वरं साक्षात् ।
संसेव्य हर्षविवशा वैकुण्ठाप्तौ च निस्स्पृहा जाताः ॥ ५० ॥

கதிராயிரமிரவிகலந்தெரித்தாலொத்த திருமுகமண்டலத்தையுடையரான எம்பெருமானாரை நேரில்ஸேவித்து மகிழ்ந்தவர்கள் வைகுந்தம் புகவும் ஆசையற்றவர்களாயினர்.

851. (அடியைத்தொடர்) ❁ अतुलं गीताभाष्यं सततं संसेव्य मोदमानानाम् ।
तात्पर्यचन्द्रिकोक्तिप्रकरास्संवर्धयन्ति संमोदम् ॥ ५१ ॥

ஒப்பற்ற (ஸ்வாமியின்) கீதாபாஷ்யத்தை நிச்சலும் ஸேவித்துமகிழ்பவர்களுக்கு தாத்பர்யசந்திரிகாஸ்ரீஸூக்திகள் ஆனந்தத்தை அதிகப்படுத்துகின்றன.

852. (பார்த்தானறு) ❁ पारावारसमानान् भगवद्यतिराजगुणगणान् वक्तुम् ।
सत्यं भोगिपतेरपि शक्तिर्नैवेति सशपथं वच्मि ॥ ५२ ॥

எம்பெருமானாருடைய கடல்போன்ற திருக்குணங்களைப்பேசுவதற்கு ஆதிசேஷனுக்கும் ஆற்றல்கிடையாதென்று ஆணையிட்டுரைப்பேன்.

853. (அற்புதன்) ❁ अद्भुतमद्भुतमद्भुतमेतद्यतिराज ! विन्ध्यविपिनात्त्वम् ।
निश्चैकस्यां सहसा सत्यव्रतमागतो विनाऽऽयासम् ॥ ५३ ॥

எம்பெருமானாரே! தேவரீர் ஓரிரவில் விந்த்யாடவியிலிருந்து ஆயாஸமொன்றுமின்றிக்கே ஸத்யவ்ரத க்ஷேத்திரத்திற்கு வந்துசேர்ந்தது அற்புதமற்புதமற்புதம்!

854. (நாட்டிய) ❁ नाट्ये गानेऽन्यत्र च यतीन्द्र भवतस्स्तुतीः प्रयुञ्जानाः ।
त्वयि भक्तिसंपदं हि प्रजनय्य भवन्ति धन्यजन्मानः ॥ ५४ ॥

எம்பெருமானாரே! நாட்டியத்திலும் ஸங்கீதத்திலும் மற்றென்றிலும் தேவரீர்விஷயமான கீர்த்தனைகளை உபயோகப்படுத்துமவர்கள் தேவரீர்பக்கலில் பக்திப்பெருங்காதலை யுண்டாக்கிநன்மை பெற்றவர்களாகிறார்கள்.

855. (கண்டவர்:) ❁ कण्ठे कफादिरुद्धे सत्यपि भगवन् यतीन्द्र तव दिव्यम् ।
पादांबुजं पवित्रं स्तोतुं शक्तिं प्रदेहि कृपया मे ॥ ५५ ॥

எம்பெருமானாரே! ஐயார்கண்டமடைக்கிலும் தேவரீருடைய திவ்யபாதாரவிந்தங்களைத் துதிக்கும் பக்தியை அடியேனுக்கு நல்கியருளவேணும்.

856. (கோக்குலம்:) ❁ गोकुलरामस्यानुजमपि रामानुजमुशन्ति भुवि सन्तः ।
वसति स गोपीहृदये न तु यतिपतिवद्विपश्चितां हृदये ॥ ५६ ॥

ராமாநுஜனென்னும் திருநாமத்திற்குத் திருவாய்ப்பாடியில் வளர்ந்தபலராமாநுஜனென்னும் பொருளையும் பகர்வர்; ஆனால் அந்தராமாநுஜன் ஆய்ச்சியருள்ளத்தில் உறைபவனேயன்றி பகவத்ராமாநுஜரைப்போல் வித்வான்களின் உள்ளத்தில் உறைபவனல்லன்.

857. (மற்றொரு) ❁ मह्यं वितरतु यतिराट् स्वीयपदाम्भोजभक्तिभूमानम् ।
भक्तिस्सैव तु सकलां सम्पदमतुलां प्रदास्यति क्षिप्रम् ॥ ५७ ॥

எம்பெருமானார் அடியேனுக்குத் தமது திருவடித்தாமரைகளில் காதலை அநுக்ரஹிக்க வேணும்; அஃது உண்டானால் ஸகலவிதமான செல்வமும் சடக்கெனஸித்திக்குமன்றோ.

858. (பேதையர்) ❁ भेदं नैव हि पश्यन्त्यार्या रामानुजार्यगुरुवर्यात् ।
कान्तोपयन्तृयोगिनि अध्यवसायोऽयमनघतत्त्वविदाम् ॥ ५८ ॥

எம்பெருமானார்க்கும் மணவாள மாமுனிகளுக்கும் வாசிகாண்பாரில்லை ; தீதற்ற தத்வஜ்ஞானிகளின் உறுதி இதுவே காண்மின்.

859. (கடலளவாய) ❁ कलिसाम्राज्योद्भूतं ध्वान्तं निरसितुमिहोदितो न यदि ।
भगवान् यतिपतिरहह ! क्षोणी सर्वाऽपि तामसी हि स्यात् ॥ ५९ ॥

கலியிருளைக் கடிந்தருள எம்பிராமானுசன் அவதரித்திலனேல் உலகெல்லாம் இருள்மூடியன்றோ கிடக்கும்.

860. (உணர்ந்தமெய்) ❁ उर्वारुकमिव बन्धान्मृत्योर्मुच्येय तूर्णमिति येये ।
इच्छन्ति ते भवन्तु श्रीमद्यतिराजसेवया कृतिनः ॥ ६० ॥

''உர்வாருகமிவ பந்தநாத் ம்ருத்யோர் முக்ஷீய'' [வெள்ளரிக்காயானது காம்பைவிட்டு நீங்குவதுபோல் ஸம்ஸாரத்தை விட்டு நீங்கக்கடவேன் என்று வேதமுரைப்பதுபோல் ஸம்ஸாரத்தைவிட்டு விரைவில் விடுபடவிரும்புமவர்கள் எம்பெருமானார் திருவடிகளை ஸேவித்து க்ருதார்த்தர்களாகக் கடவர்கள்.

861. (கொழுந்துவிட்டு) ❁ को वा गुरुरिह भुवने दिक्षु विदिक्षु च निजं यशो विमलम् ।
प्रसृमरमतनोद्भगवद्भाष्यकृदन्यः पवित्रतमजन्मा ॥ ६१ ॥

எம்பெருமானாரைத்தவிர வேறு எந்த ஆசாரியர் உலகம் நிறைந்த புகழாளராய் விளங்கினவர் ?

862. (இருந்தேன்) ❁ इन्धे यतीन्द्र भवतश्चरणद्वंद्वं सदैव मम हृदये ।
अत एवान्तःकरणं मामकमाभाति संहृतध्वान्तम् ॥ ६२ ॥

எம்பெருமானாரே ! தேவரீருடைய திருவடியிணைகள் எப்போதும் என்னுள்ளத்துள்ளே ஒளிர்கின்றன ; ஆகவேதான் எனதுநெஞ்சம் இருளற்று விளங்குகின்றது.

863. (நீடியைத்தொடரும்) ❁ पिबत यतीन्द्रप्रवणप्रवणानां दिव्यपादसत्तीर्थम् ।
येन हि सकलान्येनांस्यविलम्बितमेव नाशमुपयन्ति ॥ ६३ ॥

ஸகல பாபங்களையும் நொடிப்பொழுதில் போக்கவல்லதான யதீந்த்ர பக்தபக்தர்களின் ஸ்ரீ பாததீர்த்தத்தைப் பருகுங்கள்.

864. (பண்டருமாறன்) ❁ पण्डितपामरभेदं विनैव सर्वेऽपि यतिपतेः कृपया ।
पूर्वमिव सांप्रतं च प्रयासलेशं विना समुत्तीर्णाः ॥ ६४ ॥

பண்டிதர்கள் பாமரர்கள் என்கிற வாசியின்றிக்கே எல்லாரும் எம்பெருமானாருடைய திருவருளால் முற்காலத்திற்போல இக்காலத்திலும் எளிதாக உய்ந்து போகின்றார்கள்.

865. (வாழ்வற்றது) ❋ वाक्पतिरेष हि साक्षाद् भुवीति वक्तव्यतां प्रपन्नाश्च ।
सत्यं यतिपतिमार्यं स्तुत्वैव भवन्ति धन्यजन्मानः ॥ ६५ ॥

'இவர் பூலோகப்ருஹஸ்பதியென்று சொல்லும்படியாகவுள்ளவர்களும் [மஹாபண்டிதர்களும்] எம்பெருமானாரைத்துதித்தே பிறவிப்பயன் பெற்றார் ஆகிறார்கள்.

866. (ஞானங்கனிந்த) ❋ ज्ञानं भगवद्विषयकमुदेतु मा वा धरातले मर्त्याः ।
यतिपतितत्प्रवणोक्तिज्ञानं खलु सर्वसंपदां मूलम् ॥ ६६ ॥

புவியில்வாழும் மனிசர்களே! உங்களுக்கு எம்பெருமானைப்பற்றின ஞானம் உண்டாகவுமாம், இல்லையாகவுமாம்; அதுபற்றி விசாரமில்லை; யதீந்த்ரதத்ப்ரவணர்களின் ஸ்ரீஸூக்திகளில்ஞானமுண்டாவதன்றோ ஸகலமானஸம்பத்துக்களுக்கும் மூலமாவது.

867. (சரணமடைந்த) ❋ शरणं यतीन्द्र भवतः चरणौ हि सर्व आचार्याः ।
प्राहुरनुकल्प एषः त्वत्प्रणतांघ्रिर्हि मुख्यकल्पो नः ॥ ६७ ॥

எதிலும் கௌணகல்பம் முக்கியகல்பமென்று இரண்டுண்டே; எம்பெருமானார் திருவடிகளைப்பணிதல் கௌணகல்பம்; அவரடியார்களின் திருவடிகளைப்பணிதல் முக்கியகல்பம் எமக்கு.

868. (ஆரெனக்கின்று) ❋ आचार्यसार्वभौम! श्रीमत् वरयोगिमूर्तिमिह नो चेत् ।
स्वीकृतवानभविष्यत् ध्रुवमेधिष्यत पुनः कलिध्वान्तम् ॥ ६८ ॥

ஆசார்யஸார்வபௌமரான எம்பெருமானாரே! தேவரீர் மீண்டும் மணவாள மாமுனிகளாகிற திருக்கோலத்தைப் பரிக்ரஹித்து அவதாரம் செய்தருளியிராவிடில் மீண்டும் கலியிருள்மிடைதந்திருக்குமென்பது திண்ணம்.

869. (சிந்தையினோடு) ❋ चिन्तयत नित्यमर्थान् अतिमधुरान् लक्ष्मणार्यकृतिबृन्दे ।
ये खलु लुंपन्तितमांतमांसि चित्ते विसृत्वराण्याशु ॥ ६९ ॥

மாந்தர்களே! நமது நெஞ்சில் பரவியுள்ள அஜ்ஞாநாந்தகாரங்களைப் போக்கவல்லவையாய் மிக இனியவையாய் எம்பெருமானாருடைய திவ்யக்ரந்தங்களிலுள்ளவையான பொருள்களை நிச்சலும் சிந்தனைசெய்யுங்கள்.

870. (என்னையும்பார்த்து) ❋ एतदवधेयमार्याः श्रीभाष्ये स्पष्टबोधरहिता ये ।
अर्थास्तेषां गद्यत्रयत उपजीवनं यतीन्द्रेष्टम् ॥ ७० ॥

ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்பஷ்டமாகக் கிடைக்காத அர்த்தங்களை கத்யத்ரயத்திலிருந்து உய்த்துணரவேணுமென்பது எம்பெருமானார் திருவுள்ளம். (நாராயணசப்தவாச்யத்வ லக்ஷ்மீபதித்வாதிகள்)

871. (சார்ந்ததென்சிந்தை) ❋ शार्ङ्गी तिष्ठतु कामं पुरतो मम तं विहाय यतिराजम् ।
सेवेयेत्यमृतकविः प्राह तदुक्तिं सुशोभनां मन्ये ॥ ७१ ॥

''திருவரங்கர் கைத்தலத்தாழியும் சங்கமுமேந்தி நங்கண்முகப்பே... உன்னைவிடேனென்றிருக்கிலும் நின்புகழேமொய்த்தலைக்கும் வந்து'' என்று அமுதனார் பணித்தது மிகவழகியதே.

872. (கைத்தனன்) ❋ कैटभकंसमुखानां दैत्यानां विदलने परं दक्षः ।
भगवान्, यतिपतिरार्यो दुरर्थवादिक्षयं हि भुवि कृतवान् ॥ ७२ ॥

மதுகைடபாதிகளான அசுரரை வதைப்பதில்மட்டுமே எம்பெருமான் நிபுணன்; தீய பொருள்கள் கூறுமவர்களையன்றோ எம்பெருமானார் தொலைத்தொழித்தது.

873. (வண்மையினாலும்) ❋ वन्ध्यातनयखपुष्पप्रवादतत्तुल्यवादनिरतानाम् ।
कुदृशां प्रलपितनिचयं यतिपतिरवलीलयैव वारितवान् ॥ ७३ ॥

‘மலடிமகன் ஆகாசத்தாமரை’ என்பதுபோன்ற சூந்யவாதங்களைச் செய்யும் குத்ருஷ்டிகளின் பிதற்றல்களை எம்பெருமானார் அநாயாஸமாகக் கண்டித்தொழித்தனர்.

874. (தேரார்மறை) ❋ ते खलु भुवने धन्या भगवल्लक्ष्मणार्यमुखकमलम् ।
साक्षादवेक्ष्य हर्षप्रकर्षमापुर्हि कूरनाथार्याद्याः ॥ ७४ ॥

எம்பெருமானாருடைய திருமுக மண்டலத்தை ஸாக்ஷாத்தாக ஸேவிக்கப்பெற்ற கூரத்தாழ்வான் முதலானவர்களே இந்நிலத்தில் பாக்யசாலிகள்

875. (செய்த்தலை) ❋ शंखसुदर्शनधारिणि शार्ङ्गिणि भगवति समक्षदृष्टेऽपि ।
तस्मिन् रुचिर्न मे स्यात् सत्यं यतिराजवपुषि सक्तोऽहम् ॥ ७५ ॥

கட்கிலியான எம்பெருமான் திருவாழி திருச்சங்கேந்தி எதிரேவந்து நின்றாலும் எம்பெருமானார் வடிவழகு காணவே விருப்புமவனடியேன்

876. (நின்றவண்) ❋ निपुणा बहवः कवयो वनिताचरितोपवर्णने सक्ताः ।
भगवद्यतिपतिनुतिषु प्रवणाः कवयो हि धन्यजन्मानः ॥ ७६ ॥

சகுந்தலை, மாலவிகை முதலான மாதரசிகளின் சரிதைகளைப் பேசவல்ல கவிகள் பலருளர்; எம்பெருமானாரைத் துதிக்கவல்ல கவிகளின் பிறப்பன்றோ போற்றத் தக்கது.

877. (ஈந்தனன்) ❋ ईषदपि नैव मिथ्या यतिपतिरेको हि गुरुपदार्होऽत्र ।
अन्धतमसं स एव हि निरास्थदत्यन्तमात्मकृतिरत्नैः ॥ ७७ ॥

எம்பெருமானாரொருவரே ஆசார்யரென்னத் தகுந்தவர் அவரொருவரேயன்றோ தமது திவ்யஸூக்திகளால் அகவிருளை யொழித்தவர்; இது பொய்யுரையன்று

878. (கருத்தில்) ❋ करुणावरुणालय ! भो ! यतीन्द्र ! सर्वांश्च गुरुवरान् भुवने ।
कारुणिकान् कथयामस्तव करुणैका हि निस्तुला लसति ॥ ७८ ॥

கருணைக் கடலான எம்பெருமானாரே! உலகில் ஆசாரியர்களெல்லோரையுமே காருணிகர்களென்கிறோம்; தேவரீருடைய கருணையொன்றே ஒப்பற்று விளங்குகின்றது.

879. (பொய்யை) ❋ पुनरपि पुनरपि भवतः गुणगणकथनेषु ! यतिपते भगवन्! ॥
जिह्वा ममोज्जिहीते लेखितुमेतान् समुत्सुकः पाणिः ॥ ७९ ॥

எம்பெருமானாரே! மீண்டுமீண்டும் தேவரீருடைய திருக்குணங்களைப் பேசுவதிலேயே எனது நாக்கு ஊக்கங்கொண்டிரா நின்றது; அவற்றையெழுதுவதிலேயே எனது கை உத்ஸாஹமுடையது.

880. (நல்லார்) ❋ नलिनसमवक्त्रलोचनकरचरणादे! यतीन्द्र! तव दिव्यम् ।
वपुरवलोकितवन्त स्सततं नान्यत्र पातयन्ति दृशम् ।। ८० ।।

தாமரை போன்ற திருமுகம் திருக்கண் திருக்கை திருவடி முதலான திவ்யாவயவங்களை யுடைய எம்பெருமானரே! தேவரீருடைய திருமேனியை ஸேவித்தவர்கள் மற்றொன்றில் கண் செலுத்தார்.

881. (சோர்வின்றி) ❋ शोधयितुमात्मदेहं गंगां यमुनां सरस्वतीं यान्ति ।
यतिराज ! तव पदांबुजतीर्थं सर्वांगशोधकं सत्यम् ।। ८१ ।।

எம்பெருமானரே ! அவரவர்கள் தம் மெய்யைப் புனிதராக்கிக் கொள்ள கங்கா யமுநா ஸரஸ்வதி நதிகளைத் தேடியோடுகின்றார்கள் ; தேவரீருடைய ஸ்ரீபாத தீர்த்தமே ஸர்வாங்கங்களையும் புனிதமாக்க வல்லதென்பது ஸத்யம்:

882. (தேர்வுற்ற) ❋ ते खलु जगति कृतार्थाः श्रीभाष्यादिषु भवन्निबन्धेषु ।
कालं क्षिपन्ति ये वै हन्तैते दुर्लभा यतीशान ! ।। ८२ ।।

எம்பெருமானரே! தேவரீர் பணித்த ஸ்ரீபாஷ்யாதி திவ்யக்ரந்தங்களில் போது போக்குமவர்களே நிலவுலகில் க்ருதார்த்தராவர்; ஆனால் அத்தகைய அதிகாரிகள் துர்லபர்கள்.

883. (சீர்கண்டு) ❋ श्रीमद्यामुनमुनिराट् कांचीमभ्येत्य करुणया निजया ।
व्यैक्षत भवन्तमारात् तत एव भवान् समृद्धकीर्तिरभूत् ।। ८३ ।।

ஆளவந்தார் தமது இயற்கையின் னருளால் கச்சிப்பதிக்கெழுந்தருளி ❋ ஆமுதல்வனிவனென்று தேவரீரைக் கடாக்ஷித்தருளினர்; அதனாலேயே தேவரீருடைய புகழ் ஓங்கிற்று.

884. (கண்டு) ❋ कथयतयतिपतिकरुणांप्रणमततत्पादपंकजद्वंद्वम् ।
विलिखततदुक्तिराशिप्रविशत तस्यावतारभूतपुरीम् ।। ८४ ।।

மாந்தர்களே! எம்பெருமானருடைய திருவருளைப் பேசுங்கள்; அவருடைய திருவடிகளைத் தொழுங்கள்; அவருடைய திவ்ய ஸூக்திகளை யெழுதுங்கள்; அவருடைய திருவவதாரஸ்தலமான ஸ்ரீ பெரும்பூதூர் சென்று புகுங்கள்.

885. (ஓதிய) ❋ ओषध्यधीशसंनिभवदनं यतिराज तावकं सततम् ।
नक्तंदिवं ममाग्रे विलसति धन्योऽस्मि भाग्यमिदमतुलम् ।। ८५ ।।

எம்பெருமானரே ! தேவரீருடைய திங்கள் திருமுகம் அல்லும்பகலுமிடைவிடின்றி என்னெதிரே விளங்கா நின்றது; ஒப்பற்ற பாக்கியம் பெற்றுக்ருதார்த்தனுகிறேன்

886. (மற்றுமனிசரை) ❋ पश्यन्ति जगति बहवो निरर्थकन्थाशतानि यतिराज ।
तावकमुखाब्जनिर्गतदिव्यग्रन्थेषु सत्सु भोग्येषु ।। ८६ ।।

எம்பெருமானரே! தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய பரமபோக்யமான ஸ்ரீஸூக்திகளிருக்கவும் உலகில் பலர் வம்புதும்பான சுவடிகளைப் பார்க்கின்றனர்.

887. (பெரியவர்) ❋ पेतुर्बहवो नरकेषु असेव्यसेवाविदुष्कृतैरहह !।
यतिपतिसेवाभाग्यं नाल्पस्य फलं हि तपस इत्याहुः ॥ ८७ ॥

எம்பெருமானாரைத் தொழும் பாக்கியம் சீரிய நற்றவப் பயனென்பர் பெரியோர்; ஆயினும் பலர் அஸேவ்ய ஸேவை முதலிய தீவினைகளினால் நரகத்தில் வீழ்ந்தனரந்தோ!

888. (கலிமிக்க) कलियुगमुखे हि शठजिन्मुनिरभिहितवान् कलिर्हतो भविता ।
इति यतिराज ! तदुक्तिस्सार्था भवतोऽवतारतोजाता ॥ ८८ ॥

நம்மாழ்வார் கலியுகம் தொடங்கும்போதே கலியுங்கெடுங் கண்டுகொண்மின் என்றார்; எம்பெருமானாரே! அவ்வருளிச் செயல் தேவரீருடைய திருவவதாரத்தினால் உண்மையாயிற்று.

889. (போற்றரும்) ❋ भोगेषु लौकिकेषु भ्राम्यन्ति जडा जनास्तु भोगिपते ।
तावकभोगे भव्ये मुग्धाः कूरेशदाशरथ्याद्याः ॥ ८९ ॥

ஆதிசேஷமூர்த்தியான எம்பெருமானாரே! பாமர ஜனங்கள் உலகத்திலுள்ள சிற்றின்பங்களில் மயங்குகின்றனர்; தேவரீருடைய திருமேனியழகில் ஈடுபடும் பாக்யசாலிகள் ஆழ்வான் ஆண்டான் முதலானவர்களேயாவர்.

890. (நினையார்) ❋ नित्यं यतीन्द्र ! तावकचरणांभोजस्मृतिं वितन्वानाः ।
इह भुवि नित्यान्मुक्तानतिशेरत इत्यनर्गलं वचनम् ॥ ९० ॥

எம்பெருமானாரே! நிச்சலும் தேவரீருடைய திருவடியிணைகளைச் சிந்திப்பவர்கள் இந்நிலத்திலிருந்துவைத்தே நித்யமுக்தர்களிற் காட்டிலும் சீரியரென்பது விவாதமற்ற வார்த்தையாம்.

891. (மருள்) ❋ मधु मधुरमथ च फाणितमतिमधुरमिति ब्रुवन्ति भुवि मूर्खाः ।
माधुर्यमप्रमेयं न विदन्ति यतीन्द्र तावकोक्तिततौ ॥ ९१ ॥

எம்பெருமானாரே! இந்நிலத்திலுள்ள மூர்க்கர்கள் தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளின் அப்ரமேயமான மாதுர்யத்தை யறியாமல் மதுவையும் கற்கண்டையும் மதுரமென்கிறார்கள்.

892. (புண்ணிய) ❋ पुण्यजन बाधनार्थं भुव्यवतीर्णो हि जानकीजानिः ।
यतिराज पुण्यपुरुषाः उदजीवन् बहव एव तव दयया ॥ ९२ ॥

எம்பெருமானாரே! ''யாதுதாந: புண்யஜந'' என்ற அமர கோசத்தின்படி புண்ய ஜநமென்னப் படுகிற அரக்கர்களைத் தொலைப்பதற்காக சக்ரவர்த்தி திருமகனார் அவதரித்தார்; தேவரீருடைய திருவருளால் புண்ய புருஷர்கள் யாவரும் உஜ்ஜீவித்தனர்.

893. (கட்டப்) ❋ कष्टं हा धिक् कष्टं प्रलपन्ति जडा जगन्निरीशानम् ।
वयमिह सत्यं ब्रूमः यतिराजेनैव नाथवान् लोकः ॥ ९३ ॥

சில பல மூர்க்கர்கள் உலகுக்கு ஈச்வரன் கிடையாதென்று பிதற்றுகிறார்கள்; உண்மையாக நாம் சொல்லுவது எம்பெருமானாரே உலகுக்கெல்லாம் ஈச்வரர்.

894. (தவந்தரும்) ❁ तपसा शरीरशोषणनिष्णातैर्हन्त किं फलं लब्धम् ।
यतिपतिकैङ्कर्यकृते वयमिह देहस्य पोषणं कुर्मः ॥ ९४ ॥

தவம் புரிந்து உடலை உலர்த்துகின்ற தாபஸர்கள் என்னபேறு பெற்றார்கள்? எம்பெருமானார்க்குக் கைங்கரியம் செய்யவே நாம் உடலைப் போஷித்துக் கொள்ளுகிறோம்.

895. (உண்ணின்று) ❁ उडुपं परिगृह्य तरन्त्युदधिं संसारसागरोत्तरणे ।
यतिराजनामकीर्तनमेकं प्लवतामुपैति विशयमृते ॥ ९५ ॥

உப்புக் கடலைக் கடப்பதற்குக் கப்பலைக் கொள்ளுகிறார்கள்; நாம் எம்பெருமானார் திருநாமஸங்கீர்த்தனத்தைத் தோணியாகக் கொண்டு திண்ணமாக பிறவிக்கடலைக் கடக்கிறோம்.

896. (வளரும்) ❁ वन्दे यतिपतिचरणौ मन्देतरमोदलब्धये सततम् ।
संदेह इह भवेत्किं ? संदोहो जायते हि मोदानाम् ॥ ९६ ॥

அளவு கடந்த ஸந்தோஷம் பெறுவதற்காக எம்பெருமானார் திருவடிகளை எஞ்ஞான்றும் தொழுகின்றேன்; இங்ஙனே தொழுவதனால் ஸந்தோஷ ஸந்தோஹமுண்டாவதில் என்ன ஸந்தேஹம்?

897. (தன்னையுற்) ❁ तपनो हरति तमिस्रां पुनरपि सा जायते हि नचिरेण ।
यतिराजतपननिहतं तम आविद्यं कदाऽपि नोदेति ॥ ९७ ॥

ஸூர்யன் இருளைப்போக்குகின்றானெனினும் அவ்விருள் உடனுக்குடனே வந்து மூடாநின்றது; எம்பெருமானாரால் போக்கப்பட்ட அகவிருள் பின்னையொரு நாளும் மறுவலிடாது.

898. (இடுமே) ❁ इषुभिर्जघान रामो रक्षोनिवहान् यतीन्द्र ! धनुषा च ।
कालेयराक्षसानां निवहं तु भवान् स्वसूक्तिभिर्हतवान् ॥ ९८ ॥

எம்பெருமானாரே! ஸ்ரீராகவன் அரக்கர்களின் திரளை அம்புகளாலும் வில்லினாலும் தொலைத்தருளினன்; தேவரீர் கலியுகத் தரக்கர்களைத் தமது ஸ்ரீஸூக்திகளால் தொலைத்தருளிற்று.

899. (தற்கச்) ❁ तर्कोऽप्रतिष्ठ इति यत् पाराशर्यो जगाद सत्यं तत् ।
अनवद्यशास्त्रवृन्दैः यतिपतिरखिलार्थसाधने दक्षः ॥ ९९ ॥

தர்க்கசாஸ்த்ரம் ப்ரமாணமன்று என்று வேதவ்யாஸர் ப்ரஹ்ம ஸூத்ரத்தில் ஸத்தாபித்திருப்பது ப்ரஸித்தம். இதை பலவித ச்ருதிகளைக் கொண்டு ஸ்தாபிப்பதில் ஸமர்த்தர் எம்பெருமானார் ஒருவரே!

900. (போந்தது) ❁ भोजनमथ च स्वापो विषयाणां भोग इत्यदः कृत्यैः ।
कालं क्षिपन्ति कितवाः हन्त यतीन्द्रोक्तिवृन्दसत्त्वेऽपि ॥ १०० ॥

நம்மிராமாநுசனுடைய அமுதமன்ன திவ்யஸூக்திகள் பலவிருந்தும் இவ்விருள் தருமாஞாலத்து மூடர்கள் தம் காலத்தை வாய்க்குக் கவளமுந்துவதிலும், தூங்குவதிலும்,

விஷய போகங்களை அநுபவிப்பதிலும் போதைப் போக்குகிறீர்களே! அந்தோ பரிதாபம்.

901. (மயக்கும்) ❋ मयि मतिविरहितजन्तौ यतिपतिरहह ! स्वकीयया कृपया ।
स्वीयप्रभावबोधं जनयामासेति नैव चित्रमिदम् ॥ १०१ ॥

நிகரின்றி நின்றவென் நீசதையைக் கருதாமல் அடியேனையும் கேவலம் தம்முடைய க்ருபையால் ஆட்கொண்டார், எம்பெருமானார். க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யரான எம்பெருமானார் விஷயத்தில் இது ஆச்சர்யமோ?

902. (நையும்) ❋ नैवास्ति जगति जेतुं मामिह कोऽपीति सशपथं वच्मि ।
यदहं यतीन्द्रचरणे तत्प्रवणांघ्रौ च बृढतरं प्रवणः ॥ १०२ ॥

எம்பெருமானாரையும், எம்பெருமானாரை ஆச்ரயித்த யதீந்த்ரப்ரவணரான மணவாளமாமுனிகளையும் பற்றின எனக்கார் நிகர் நீணிலத்தே? என்று சபதமிட்டுச் சொல்வேன்.

903. (வளர்ந்தவெங்) ❋ वस्तुत इदं ब्रवीमि श्रीमद्यतिराज एव वरयोगी ।
भूत्वा प्रपन्नगोष्ठीं सनाथयामास भाग्यभूम्ना नः ॥ १०३ ॥

எம்பெருமானாரே மணவாளமாமுனிகளாக அவதரித்து ப்ரபந்நகோஷ்டியைப் புனிதப்படுத்தியது அடியோங்களுடைய பாக்கியமாகும்.

904. (கையில்) ❋ कैतवमनृतोक्तिं वा परिहासं वाऽपि विप्रलिप्सां वा ।
न मनागपि जानीतो यतिवरवरवरमुनी उभावेव ॥ १०४ ॥

வஞ்சனை, பொய், பரிஹாஸம், ஏமாற்று இவை ஈஷத்தும் இல்லாதவர்களன்றோ நம்பி ராமாநுசனும் அவருடைய அபராவதாரமான மணவாளமாமுனிகளும்.

905. (செழுந்திரை) ❋ शेषत्वपारतन्त्र्ये लक्षणमात्मन इतीदृशं ज्ञानम् ।
यतिपतिवरवरयोगि-श्रीसूक्तिभिरेव जायते जगति ॥ १०५ ॥

'சேஷத்வ பாரதந்த்ர்யம் ஆத்மாவுக்கு லக்ஷணம்' என்னும் இந்த ஞானம், எம்பெருமானாருடையவும் மணவாளமாமுனிகளுடையவும் ஸ்ரீஸூக்திகளினாலன்றோ இந்தவுலகு நன்கறிந்து கொள்கிறது.

906. (இருப்பிடம்) ❋ इदमवलेपवचो मे शृणुत यतीन्द्राच्च सोऽहमुत्तुंगः ।
पंचकसप्ततिविंशतिचिन्ताभाग्यं यतो न तस्यास्ति ॥ १०६ ॥

எம்பெருமானாருக்குமில்லாத ஒரு பெருமை அடியேனுக்குள்ளது. அது எம்பெருமானார் விஷயமான தாடீபஞ்சகம், யதிராஜஸப்ததி, யதிராஜவிம்சதி இவற்றை நிச்சலும் சிந்தை கொள்வதே! இது அந்த எம்பெருமானாரால் முடியாதன்றோ!

907. (இன்புற்ற) ❋ इह बहवो गुरुवर्याः प्रादुरभूवन् तथापि यतिराजः ।
गुरुरद्वितीय आसीत् ध्वान्तं येनाखिलं च विध्वस्तम् ॥ १०७ ॥

இருள்தருமாஞாலத்தின் இவ்விருளைப் போக்கியதால் எம்பெருமானார் ஒருவரே எல்லா ஆசார்யர்களைக்காட்டிலும் மேம்பட்டவர்.

908. (அங்கயல்) ❋ अणणङ्गरार्यदासः परया भक्त्या यतीन्द्रनुतिमेनाम् ।
विज्ञाप्य हर्षमतुलं भेजे सेयं चकास्तु भक्तहृदि ॥ १०८ ॥

பெருமாள்கோயில் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யதாஸன் இயற்றிய இந்த ஸ்தோத்ரமானது பக்தர்கள் நெஞ்சில் எப்பொழுதும் திகழவேண்டும்.



ஸ்ரீ பெரும்பூதூர் எம்பெருமானார்.

909 *ந சேத் ராமாநுஜேத்யேஷா சதுரா சதுரக்ஷரீ
காமவஸ்தாம் ப்ரபத்யந்தே ஜந்தவோ ஹந்தமாத்ருஶ:,

(ராமாநுஜ) என்கிற சதிரான நான்கு திருவெழுத்து இல்லையாகில் நம்போல்வாரின் நிலைமை என்னாகுமந்தோ! (நாமெல்லாம் உருமாய்ந்திருப்போமென்றபடி)

910 புண்யாம்போஜவிகாஸாய பாபத்வாந்தக்ஷயாய ச ।
ஸ்ரீமாந் ஆவிரபூத் பூமௌ ராமாநுஜ திவாகர: ॥

ஆளவந்தாருடைய முடங்கின மூன்று திருவிரல்களாகிற புனிதமான தாமரை மலர்வதற்கும், பாபிகளாகிற இருள் தொலைவதற்குமாக இந்நிலத்தில் பகவத்ராமாநுஜ ஸூர்யப்ராதுர்ப்பாவமாயிற்று. ... ... •

911 *த்ருணீக்ருதவிரிஞ்சாதிநிரங்குஶவிபூதய: ।
ராமாநுஜபதாம்போஜஸமாச்ரயணஶாலிந: ॥

எம்பெருமானாருடைய திருவடித் தாமரைகளைச் சார்ந்தவர்கள் ப்ரஹ்மலோகைச்வர்யம் முதலான ப்ராக்ருத போகங்களையெல்லாம் த்ருணமாகநினைத்து வெறுத்தொழித்தவர்களென்று பகவத்ராமாநுஜ பக்தர்களின் பெருமை சொல்லிற்று. ... ... ... ... ... •

912 ‡காஷாயசோபி கமநீயசிகாநிவேசம்
தண்டத்ரயோஜ்ஜ்வலகரம் விமலோபவீதம் ।
உத்யத்திநேசநிபம் உல்லஸதூர்த்வபுண்ட்ரம்
ரூபம் தவாஸ்தி யதிராஜ! த்ருசோர் மமாக்ரே. ॥

இந்த ச்லோகம் கூரத்தாழ்வானருளிச்செய்தது. க்ரிமிகண்ட சோழனுடைய கொடுங்கோன்மையினால் திருக்கண்ணை யிழந்திருந்த கூரத்தாழ்வானை, திருநாராயணபுரத்தில் நின்றும் பன்னிரண்டாண்டு கழித்து மீண்டெழுந்தருளிய எம்பெருமானார் வருந்தி உசாவுகையில் "எனக்குக் கண் போயிற்றேயென்று குறையில்லை; தேவரீருடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை உள்ளவாறு ஸேவிக்கப் பெறுகின்றேன்" என்று விண்ணப்பிக்கையில் ஸாதித்தருளின ச்லோகமிது. முன்மூன்று பாதங்களிலுள்ள ஆறுவிசேஷணங்களும் மதாந்தரஸ்த ஸந்யாஸிகளின் வேஷத்திற்காட்டில் வாசி கூறுவன: [காஷாய சோபி] அந்த யதிகள் காஷாய மணிந்தாலும் கண்கொண்டு காணவொண்ணாத உடையன்றோ. [கமநீயசிகாநிவேசம்] முண்டித சிரஸ்கர்களன்றோ அவர்கள். [தண்டத்ரய உஜ்ஜ்வலகரம்] ஏகதண்டியன்றிக்கே *தண்டைஸ் த்ரிபிர்மண்டிதா மூர்த்தி:. [விமலோபவீதம்] பண்டாரச்சாமி போலே பூணூலை அறுத்தெறியுமவர்களன்றோ அவர்கள். [உத்யத்திநேசநிபம்] *உதயபருப்பதத்தின்மேல் விரியுங்கதிரே போலன்றவன் ஸ்வாமி. [உல்லஸதூர்த்வபுண்ட்ரம்] பன்னிருநாமம் அழகாக விளங்குந் திருமேனி. இத்தகைய திருக்கோலம் என்னெதிரே திகழ்கின்றதென்கை. ... ... ... •

## ஸ்ரீ தேசிக ரஹஸ்யங்களில் பகவத்பாஷ்யகார ப்ரஶம்ஸைகள்

913 ஸம்ப்ரதாய பரிசுத்தி ரஹஸ்யத்தில்—"ஆளவந்தாருடைய நியோகத்தாலே ஸ்ரீ பாஷ்யகாரரை அங்கீகரித்த பூர்ணரான பெரியநம்பி, இவரைத் தமக்கு

ஸப்ரஹ்மசாரிகளான திருக்கோட்டியூர்நம்பி பக்கலிலே அர்த்தஶிக்ஷை பண்ணவும், திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழி கேட்கவும் ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் பக்கலிலே நல்வார்த்தை கேட்கவும் நியோகித்ததும்—"பஹுப்ய: ஶ்ரோதவ்யம், பஹுதா ஶ்ரோதவ்யம்" "ஜ்ஞாநவ்ருத்தா மயா ராஜந்! பஹவ: பர்யுபாஸிதா:" இத்யாதிகளையும் சுகாதி வ்ருத்தாந்தங்களையும் பார்த்து ஶிஷ்யபூதரை பஹுமுகமாகத் திருத்தவேண்டுமென்கிற அபிஸந்தியாலே உபபந்நதமம்."

**914** (அதிலேயே "பாஷ்யகாரருடைய ஶிஷ்யஸம்ப்ரதாயங்களில் ஒன்றிலும் அர்த்தவிரோதமில்லை; வாக்யயோஜநாபேதமே யுள்ளது. தேஶகால அவஸ்தாவிஶேஷங்களாலே வரும் அநுஷ்டாந வைஷம்யம் சாஸ்த்ராநுமதம்."

**915** குருபரம்பராஸாரமென்னும் ரஹஸ்யத்தில் — "பெரியநம்பி ஸ்ரீபாதத்தை ஆச்ரயித்தவர்கள் அறுவர்;—அவர்களாகிறார், எம்பெருமானார், மலைகுனியநின்றார், ஆர்ய ஸ்ரீஶடகோபதாஸர், அணியரங்கத்தமுதனார், திருவாய்க்குலமுடையான் பட்டர், திருக்கச்சிநம்பி" (அவ்விடத்திலேயே) "எம்பெருமானார் திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்திலே ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித்தார். திருமாலையாண்டான் ஸ்ரீபாதத்திலே திருவாய்மொழி கேட்டார்; ஆளவந்தாராழ்வார் ஸ்ரீபாதத்திலே திருவாய்மொழியுமோதி ஸ்தோத்ராதிகளும் அருளிச்செய்யும் நல்வார்த்தைகளும் கேட்டருளினார். திருமலைநம்பி ஸ்ரீபாதத்திலே ஸ்ரீமத் ராமாயணம் கேட்டருளினார். இவரருளிச்செய்த ப்ரபந்தங்கள்—ஸ்ரீபாஷ்யம் தீபம் ஸாரம் வேதார்த்த ஸங்க்ரஹம், ஸ்ரீ கீதாபாஷ்யம், சிறிய கத்யம், பெரிய கத்யம், ஸ்ரீ வைகுண்ட கத்யம், நித்யம்—ஆக ஒன்பது. இவர் ஸ்ரீபாதத்தில் ஆச்ரயித்தமுதலிகளைத் தத்தம் ஸம்ப்ரதாயப்படிகளிலே அறிந்துகொள்வது."

**916** ஸ்ரீ ரஹஸ்யத்ரயஸார—அதிகாரி விபாகாதிகாரத்தில் — "ஒருமலையில் நின்று ஒருமலையிலே தாவும் ஸிம்ஹஶரீரத்தில் ஜந்துக்களைப்போல பாஷ்யகாரர் ஸம்ஸார லங்கனம் பண்ண அவரோடுண்டான குடல் துவக்காலே நாம் உத்தீர்ணராவுதோம்" என்று முதலியாண்டானருளிச்செய்த பாசுரம். அதிலேயே சரமச்லோகாதிகாரத்தில் "பாஷ்யகாரர் அந்திமதஶையிலும் வருந்தியெழுந்திருந்து ஸந்த்யாகாலத்திலே ஜலாஞ்ஜலி ப்ரக்ஷேபம் பண்ணியருளினார்." ... ... *

## மணவாளமாமுனிகளின் ரஹஸ்ய வியாக்கியானங்களில் எம்பெருமானார் ப்ரசம்ஸைகள்

**917** முமுக்ஷுப்படியில், சரமச்லோகப்ரகரண வியாக்கியான அவதாரிகையில் மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தி. 'இதில் அர்த்தங் கேட்கைக்காகவிறே எம்பெருமானார் பதினெட்டுபர்யாயம் திருக்கோட்டியூர்நம்பி பக்கல் எழுந்தருளிற்று; நம்பி தாமும் இதில் அர்த்தத்தினுடைய கௌரவத்தையும், இதுக்கு அதிகாரிகள் இல்லாமையையும் பார்த்திறே இவருடைய ஆஸ்திக்ய—ஆதரபரீக்ஷார்த்தமாகவும பலகால் நடந்து துவளப்பண்ணி, சூளுரவுகொண்டு மாஸோபவாஸங்கொண்டு அருமைப்படுத்தி அருளிச்செய்தருளிற்று. ... ... ... ... ... *

**918** (அதிலேயே, சரமச்லோக ப்ரகரணத்தில் (263) "உய்யக்கொண்டார் விஷயமாக உடையவர் அருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது" என்ற சூர்ணையின் வியாக்கியானத்திலே மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தி—"தத்வ நிர்ணயம் பண்ணின உய்யக்கொண்டார் பக்தி நிஷ்டராயிருக்கையாலே அவரை ப்ரபத்திநிஷ்டராம்படி பண்ணவேணுமென்று, அவருக்கு சரமச்லோகார்த்தத்தை யருளிச்செய்தவளவிலே, 'அர்த்தஸ்திதி அழகிதாயிருந்தது ஆகிலும், அத்தை விட்டு இத்தைப்பற்றத்தக்க ருசி எனக்கில்லை' என்ன, 'வித்வானுகையாலே அர்த்தத்துக்கு இசைந்தாய்: பகவத் ப்ரஸாதமில்லாமையாலே ருசி பிறந்ததில்லை" என்று அவர் விஷயமாக உடையவர் அருளிச்செய்த வார்த்தையை நினைப்பதென்கை" என்றுள்ளது.

**919** ஸ்ரீவசநபூஷணம் முதல் பிரகரணத்தில் (73) "அஹமர்த்தத்துக்கு ஜ்ஞாநாநந்தங்கள் தடஸ்தமென்னும்படி தாஸ்யமிறே அந்தரங்க நிரூபகம்" என்ற சூர்ணையின் வியாக்கியானத்தில் மாமுனிகள்—"திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்திலே ஆறுமாஸம் ஆழ்வான் ஸேவித்துநின்று மஹாநிதியாகப்பெற்ற அர்த்தமிறே இது" என்றருளிச்செய்தார். (இங்கு எம்பெருமானார் ப்ரஸ்தாவமில்லையாகிலும்) ஆழ்வான் திருக்கோட்டியூர் நம்பி ஸன்னிதிக்கெழுந்தருளினது எம்பெருமானாருடைய நியமனத்தினாலே யென்று அந்யத்ர அருளிச்செய்திருப்பது இங்கே அநுஸந்தேயம்.

**920** (அதிலேயே நான்காம் ப்ரகரணத்தில்—"பாஷ்யகாரர் காலத்திலே ஒருநாள் பெருமாள் புறப்பட்டருளுந்தனையும் பார்த்துப் பெரியதிருமண்டபத்துக்குக் கீழாக முதலிகளெல்லாரும் திரளவிருந்தவளவிலே இவ்வர்த்தம் ப்ரஸ்துதமாக, பின்பு பிறந்த வார்த்தைகளை ஸ்மரிப்பது" என்பது மூல ஸ்ரீஸூக்தி. இங்கு மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி—"ஸகல வேதாந்த தாத்பர்யார்த்தங்களெல்லாம் ஸம்சய விபர்யயமற நடந்து செல்லாநிற்கிற நல்லடிக்காலமான பாஷ்யகாரர் காலத்திலே"......இத்யாதிகளை அங்கு ஸேவிப்பது.

### ஆசார்யஹ்ருதயத்தில் எம்பெருமானார் ப்ரஸங்கங்கள்

**921** ஆசார்யஹ்ருதயம் முதற்பிரகரணத்தில்— (65) "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ர வாக்யங்கள் ஒருங்கவிடுவர்" என்றவிடத்து மணவாளமாமுனிகளின் வியாக்யான ஸ்ரீஸூக்தி வருமாறு—"பாஷ்யகாரர் ஸ்ரீபாஷ்யம் பண்ணியருளும்போது ஸூத்ர வாக்யங்களில் ஸந்திக்தங்களான அர்த்தங்களெல்லாம் அருளிச்செயலைக் கொண்டு நிர்ணயித்து ஒருங்கவிட்டருள்வரென்கை."

**922** (அங்கேயே; (85) "மலேச்சனும் பக்தனானால்" இத்யாதி சூர்ணையில் "புஷ்பத்யாக போக மண்டபங்களில் பணிப்பூவும் ஆலவட்டமும் வீணையுங்கையுமான அந்தரங்கரை முடிமன்னவனும் வைதிகோத்தமரும் மஹாமுனியும் அநுவர்த்தித்த க்ரமமும்" என்றவிடத்து மாமுனிகளின் வியாக்கியான ஸூக்தி—"த்யாகமண்டபமான பெருமாள்கோயிலில் திருவாலவட்டமும் கையுமாய்ப்பெருமானுக்கு அந்தரங்கராய் நின்ற திருக்கச்சிநம்பியை வைதிகோத்தமரான உடையவர் அநுவர்த்

தித்த க்ரமமும்...அறிவார்க்கன்றோ இன்ன ஜன்மம் உத்க்ருஷ்டம் இன்ன ஜன்மம் அபக்ருஷ்டம என்று ஜன்மத்தினுடைய உத்கர்ஷமும் அபகர்ஷமும் தோன்றுவ தென்றபடி''.

**923** (அதிலேயே, அந்த சூர்ணையிலேயே) ''யாகாநுயாகோத்தரவீதிகளில் காயாங்கஸ்தல சுத்திபண்ணின'' என்றவிடத்து—(மாமுனிகள்)—''யாக ஶப்தவாச்யமான திருவாராதனத்தில் பிள்ளையுறங்காவில்லி தாஸர் ஸ்பர்ஶத்தாலே காயசுத்திபண்ணின உடையவரும்'' இத்யாதி.

**924** ஆசார்ய ஹ்ருதயத்திலேயே இரண்டாம் ப்ரகரணத்தில் (91) ''தமிழ்மாமுனிதிக்குசரண்யமென்றவர்களாலே......*கலியுங்கெடுபோலே ஸூசிதம்* என்றவிடத்து, மாமுனிகள்—''ஆழ்வார்தாம் மயர்வற மதிநலம் பெற்றவராகையாலே *கலியுங்கெடுமென்று திருமங்கையாழ்வார் உடையவர் போல்வார் அவதரித்து, கலியுகஸ்வபாவமும் கழியுமென்று மேல்வரும் அம்ஶத்தை தர்ஶித்து அருளிச்செய்தாப்போலே'' இத்யாதி.

**925** (அதிலேயே, மூன்றாம் ப்ரகரணத்தில்) 155. *பூண்டநாள் சீர்க்க டலையுட்கொண்டு* இத்யாதி சூர்ணையில்—''குணந்திகழ்கொண்டல் போல்வாரை மேகமென்னும்'' என்றவிடத்து மாமுனிகள்—(இராமாநுச நூற்றந்தாதியில்) ஃகுணந்திகழ் கொண்டல்ஃ என்று குணோஜ்ஜ்வலமான மேகமாகச் சொல்லப்பட்ட எம்பெருமானார் போல்வாரை இந்த குணஸாம்யத்தையிட்டு மேகமென்று சொல்லு மென்றபடி.''

**926** (அதிலேயே, அந்தப்ரகரணத்திலேயே) 162 ஃவைஷ்ணவ வாமநத்தில்ஃ என்றவிடத்து மாமுனிகள்—''பாஷ்யகாரர் பக்கலிலே அர்த்தியாய் நின்று வேதார்த்தார்த்தம் கேட்டு 'நாமும நம்மிராமானுசனை யுடையோம்' என்கையாலே ஸ்ரீவைஷ்ணவநம்பி யென்று திருநாமமாய்'' இத்யாதி.

**927** (அதிலேயே, அந்த ப்ரகரணத்திலேயே) 204 ஃதாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடி பணிந்தவர்க்குமே இவையுள்ளதுஃ என்ற சூர்ணையில் ''இவரடிபணிந்தவர்க் கென்றவிடத்தில் மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி—''ஓராணவழியாகப் பூருவர்கள் உபதேசித்துப்போந்த நியமத்தைக் குலைத்துப் பலரையுமுபதேசிக்கும்படி பண்ணியும், பலகால் நடந்து துவண்டு கேட்ட பரமார்த்தத்தை ஒலக்கமாகவைத்து உபதேசித்தும்......இப்படி அதிகாரம் பாராமல் அவர்கள் துர்கதியைப் பார்த்து உபதேசித்தருளும் ஸ்வபாவராய் ஃபாமன்னு மாறனடிபணிந்துய்ந்தவன்ஃ என்று நிரூபகமாயிருக்கும் எம்பெருமானார்க்குமே இவ்வாகாரங்களுள்ள தென்கை.''

**928** (அதிலேயே, நாலாம் ப்ரகரணத்தில்) 224, புராண பௌராணிகர் த்யாஜ்யாம்ஶமாக்கின'' என்ற விடத்து மாமுனிகள்—''பிதரம் மாதரம் தாரான்...... என்று பவிஷ்யத் புராண ஸித்தமாகையாலும், புராணவித்தமராகையாலே பௌராணிகரான பாஷ்யகாரர் கத்யத்திலே இவ்வசநப்ரக்ரியையாலே த்யாஜ்யங்களினுடைய த்யாகபூர்வகமான ஶரணவரணத்தைப் பண்ணுகையாலும்.''

மணவாள மாமுனிகள் யதிராஜ விம்சதியில் "ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜ ராஜஹம்ஸமென்று ஸ்வாமியை ராஜஹம்ஸமாக அருளிச்செய்ததன் பொருத்தங்கள்.

**929** அபசூத்ராதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்வாமி விவரித்தருளியுள்ள ஒரு கதை கேண்மின். ச்சாந்தோக்ய உபநிஷத்தில் ஜாநச்ருதியின் உபாக்யானமொன்று சொல்லப்பட்டிரா நின்றது. ஜாநச்ருதி என்னும் க்ஷத்ரியன் மிக்கபெருஞ் செல்வம் படைத்தவனாகையாலே அன்னதானம் முதலியன விசேஷமாகச் செய்து கொண்டிருந்தான். ஆனால் அவனுக்கு ப்ரஹ்மஜ்ஞானமென்பது சிறிதுமில்லாமலிருந்தது; பல்லபல்லாக்ஷரென்கிற இரண்டு மஹர்ஷிகள் அவனிடத்திலே இரக்கங்கொண்டு இவனுக்கு ப்ரஹ்மஜ்ஞான முண்டாகவேணுமென்றெண்ணி இரண்டு ஹம்ஸரூபிகளாய் அவன் சயனத்தின் மேலே பறந்துகொண்டு போகையில் பல்லனென்கிற ஹம்ஸம் பல்லாக்ஷனென்கிற ஹம்ஸத்தைப்பார்த்து 'ஜாநச்ருதி மஹாப்ரபுவின் மேலே நிழல்படாதபடி கவனித்துப்போ' என்று சொல்லிற்று. அதுகேட்ட அந்த ஹம்ஸம் "இவன் மேல் நிழல்பட்டால் வரும் கெடுதல் என்ன? இவன் ரைக்வரைப்போல் ப்ரஹ்மஜ்ஞானியா என்ன? ஞானமற்றவனான இவனை நாம் கௌரவிக்கவேணுமோ?' என்று அவஹேளனமாகச் சொல்ல, அதைக்கேட்ட ஜாநச்ருதி துக்கங்கொண்டவனாய் அந்த ரைக்வரைத் தேடிக்கொண்டுசென்று அநுவர்த்தித்து ப்ரஹ்மவித்யையை உபதேசிக்கவேணுமென்று ப்ரார்த்திக்க, "சுச்ரூஷை பண்ணாதவனுக்கு உபதேசிக்கப் போகாது" என்று அவர் சொல்ல, "ப்ரஜைகளை ரக்ஷிப்பதாகிற பெரிய காரியத்திலீடுபட்டிருக்கிறவெனக்கு இங்கிருந்து சுச்ரூஷை பண்ண அவகாசமில்லையே" என்ன, ஆசரபரீக்ஷார்த்தமாக "ஆனால் பஹுத்ரவ்யம் கொண்டுவா" என்று ரைக்வர் சொல்ல, அப்படியே ஜாநச்ருதி ஸர்வஸ்வத்தையுங் கொண்டுவந்து ஸமர்ப்பித்து அவரிடத்தில் ப்ரஹ்மவித்யோபதேசம் பெற்றானென்று ஓதப்பட்டிருக்கிறது. இங்ஙனம் ப்ரஹ்மஜ்ஞானத்திற்கு ஹம்ஸம் ப்ரேரகமாக இருந்ததனால் ப்ரஹ்மஜ்ஞானப்ரேரகரான எம்பெருமானாரை ஹம்ஸமென்னக் குறையில்லை.

**930** நீரையும் பாலையும் கலந்து வைத்தால் அவற்றைப் பிரிக்க வல்லமையுடையது ஹம்ஸம். "ஹம்ஸோ யதா க்ஷீரமிவ அம்புமிச்ரம்" என்பர்களே. அதுபோல், ஸாரங்களும் அஸாரங்களும் கலந்த கட்டியாயிருக்கிற சாஸ்த்ரங்களில் ஸாராஸாரங்களைப் பகுத்தறிந்துரைத்தவர் எம்பெருமானார்.

**931** "அன்னமதாயிருந்து அங்கு அறநூலுரைத்த" "அன்னமாய் நூல் பயந்தான்" என்கிறபடியே வேதசாஸ்த்ரங்களை வெளியிட்டது பகவதவதாரமான ஹம்ஸம். அதுபோலே சிஷ்யர்களைக் குறித்து சாஸ்த்ரங்களை உபதேசித்தருளினவர் எம்பெருமானார்.

**932** "நபத்நாதி ரதிம் ஹம்ஸ: கதாசித் கர்த்தமாம்பஸி" [ஹம்ஸமானது சேற்று நிலத்தில் ஒரு போதும் மனம் பொருந்தியிருக்கமாட்டாது] என்கிறபடியே ஹம்ஸம் சேற்றில் பொருந்தாது. அதுபோல "மாறன் விண்ணப்பஞ்செய்த சொல்லார் தொடையலிந்நூறும் வல்லார்—பிறப்பாம் பொல்லாவருவினைமாய வன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே அழுந்தார்" (திருவிருத்தம்) என்கிறபடியே ஸம்ஸாரமாகிற வலிய சேற்றுநிலத்திலே பொருந்தமாட்டாமல் ஸந்யஸித்தருளினவர் எம்பெருமானார்.

**933** ‘பெடையோடன்னம் பெய்வளையார் தம் பின்சென்று நடையோடியலி’ (பெரிய திருமொழி) என்று ஹம்ஸமானது ஸ்த்ரீகளின் நடையழகைக் கண்டு தானும் அப்படி நடக்கைக்காகப் பின்செல்லுமென்று சொல்லப்படுகிறது. அதுபோல ஸ்வாமி ‘அன்ன நடைய வணங்கான பிராட்டியினுடைய நடையைப் பின்செல்லுமவர்’. அதாவதென்னென்னில், பிராட்டியின் நடையாவது அவளுடைய நடத்தை. சேதநர்களைக் குறித்து எம்பெருமான் திறத்தில் புருஷகாரம் செய்வதே பிராட்டியின் ப்ரதாநக்ருத்யமாகும். அதை ஸ்வாமி அநுஸரிக்கையாவது, தாமும் அப்படி புருஷகாரக்ருத்யத்திலே ஊன்றியிருக்கையாகும். பிராட்டி புருஷகாரம் செய்யாவிடில் எம்பெருமான் முக்தி ஸாம்ராஜ்யமளிக்கமாட்டாதது போலவே எம்பெருமானார் புருஷகாரம் செய்யாவிடிலும் அதனை அளிக்கமாட்டானென்பதை ‘கத்தே ரங்கி நிஜமபிபதம் தேசிகாதேசகாங்க்ஷீ’ என்கிற ந்யாஸதிலக ஸ்ரீஸூக்தியினால் ஸ்ரீ தேசிகன் வெளியிட்டார்.

**934** ‘அன்னமென் கமலத்தணிமலர்ப்பீடத்து அலைபுனலிலைக் குடைநீழல்........வீற்றிருக்கும்’ (பெரிய திருமொழி) என்று, ஹம்ஸமானது மேலெழுந்த தாமரையிலையைக் குடையாகக்கொண்டு வீற்றிருக்குமென்றது — ‘அக்கமலத்திலைபோலுந் திருமேனியடிகள்’ என்கிற திருவாய்மொழியினால் எம்பெருமானுடைய திருமேனி தாமரையிலையாகச் சொல்லப்படுவதால் பத்மபத்ர நிபச்யாமளமான அந்தத் திருமேனியை ஸ்வாமி தமக்கு ஸம்ஸார துக்க ஆதபம் தட்டாதபடி ஒதுங்க நிழலாக வுடையராயிருந்தவர் ‘வாஸுதேவ தருச்சாயா’

**935** ‘அன்னம் செந்நெலொண் கவரியசைய வீற்றிருக்கும்’ (பெரிய திருமொழி) என்று, ஹம்ஸம் பக்வ பலமான செந்நெலின் அசைவைக் கவரியாக (சாமரமாக)க் கொண்டு வீற்றிருக்குமென்றது, ‘அஹமந்நமஹமந்நமஹமந்நம்’ என்னும்படி பரிபக்குவமான ஞானத்தையுடையரான சிஷ்யர்களைச் செந்நெற் கதிர்களாகக் கொள்ளக்கடவது; அவர்கள் சாமரை வீசுதல் முதலிய கைங்கர்ய வ்ருத்திகளைச் செய்ய சீரிய சிங்காசனத்தில் ஸ்வாமி எழுந்தருளியிருந்தபடியைச் சொல்லுகிறது.

**936** ‘சங்கமலைமுரலச் செங்கமல மலரையேறி அன்னமலி பெடையோடு மமரும்’ (பெரிய திருமொழி) என்று, ஹம்ஸமானது சங்குகளின் முழக்கத்தை இனிதாகக் கேட்டுக் கொண்டிருக்குமென்றது. சுத்த ஸ்வபாவர்களான சிஷ்யர்களைச் சங்கு என்கிறது. அன்னவர்கள் செய்யும் ஸ்துதிகோஷங்களைக் கேட்டுக் கொண்டு ஸ்வாமி எழுந்தருளியிருக்கும்படியைச் சொன்னவாறு.

### மணவாளமாமுனிகள் “ஸ்ரீமத்பராங்குச பதாம்புஜ ப்ருங்கராஜம்” என்று எம்பெருமானாரை வண்டாக அருளிச்செய்ததின் பொருத்தங்கள்

**937** வண்டு மதுவ்ரதமென்று பேர்பெற்றிருக்கும். தேன் தவிர வேறொன்றைக் கொள்ளாது என்றபடி. அதுபோல ‘உளங்கனிந்திருக்குமடியவர் தங்களுள்ளத்துளூறிய தேனை’ என்றும், ‘எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே’ என்றும், ‘தேனை நன்பாலைக் கன்னலை யமுதை’ என்றும் பலவிடங்களிலும் தேனாகச் சொல்லப்பட்ட பகவத் விஷயத்தை விரும்பி ‘ஸ்வாம்ருதஸ்யந்தி பாத

பங்கஜே நிலேசிதாத்மா கதமந்யதிச்சதி, ஸ்திதேரவிந்தே மகரந்த நிர்ப்பரே மது வ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே" என்று ஆளவந்தா ரருளிச்செய்தபடியே மற்றொன்றைக் கண்ணெடுத்துப் பாராமல் இதனை யநுபவிப்பதையே விரதமாகக் கொண்டிருந்தவர் எம்பெருமானார்.

**938** "வரிவண்டு தேதெனவென்றிசைபாடும்" யாழினிசை வண்டினங்கள் ஆளம்வைக்கும் "வண்டினங்கள் காமரங்களிசைபாடும்" என்கிறபடியே எப்போதும் முரல்வதே வண்டுகளுக்குப் பணி. அதுபோல "மச்சித்தா மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம், கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச" என்று கீதாசார்யன் பணித்தபடியே அநவரதமும் எம்மானைச் சொல்லிப் பாடுவதையே போது போக்காகக் கொண்டவரும், "யாழினிசை வேதத்தியலான திருவாய்மொழியைப் பாடிக்களிப்பவருமான எம்பெருமானாரைச் சொல்லுகிறது "அறுகால் வரிவண்டுகள் ஆயிரநாமஞ்சொல்லிச் சிறுகாலைப் பாடும்" என்றும், "எல்லியம்போது இருஞ்சிறைவண்டு எம்பெருமான் குணம்பாடி" என்றும் அருளிச்செய்த பெரியாழ்வார் ஸ்வாபதேசப் பொருளையே வெளியிட்டருளினராயிற்று. எம்பெருமானுடைய திருநாமங்களையும் திருக்குணங்களையும் பாடுகிறவண்டு காட்டில் திரியும் வண்டாக இருக்கமுடியாதன்றே.

**939** வண்டு சஞ்சரீகமென்று பேர்பெற்றிருக்கும்; ஓரிடத்தில் தங்கியிராது மதுவுள்ளவிடமெங்கும் பறந்து திரியும். அதுபோல, "தண்டியூரரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லை யென்கிற திருப்பதிகள்தோறும் மண்டி, "எண்டிசையும் பேர்த்தகரம் நான்குடையான் பேரோதிப் பேதைகாள்! தீர்த்தகரராமின் திரிந்து" என்று பூதத்தாழ்வார் நியமித்தபடியே "கொங்குங் குடந்தையுங் கோட்டியூரும் பேருமெங்குந் திரிந்து"பதியேபரவித்தொழும் தொண்டராயிருந்தவரன்றே எம்பெருமானார். "ஸ்ரீரங்கம் கரிசைலமஞ்ஜநகிரிம் த்யாதி.

**940** வண்டு எந்த ஸமயத்தில் எங்குச் செல்லவேணுமென்று நினைத்தாலும் அதற்குத் தடை கிடையாது ஸந்நிதிகளில் கர்ப்பக்ருஹங்களினுள்ளும் எம்பெருமான் திருமுடிமீதும் தாராளமாகப் புகக் காணாநின்றோம்; அதுபோல "பின்னிட்ட சடையானும் பிரமனு மிந்திரனும் துன்னிட்டுப் புகலரிய" என்றும் "சுந்தரர் நெருக்க விச்சாதரர் நூக்க" என்றும் சொல்லுகிறபடியே திருவாசல்களிலே ஸேவாபரரானவர்கள் நிறைந்து தலை நுழைக்க வொண்ணாதபடி நெருக்க அதிகாரச் செல்வத்துடனே தடையும் சங்கையுமொன்றுமின்றிக்கே உள்ளேபுகுந்து "ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்து வாழ்ந்தவர் எம்பெருமானார். "அப்பனுக்குச் சங்காழி யளித்தருளும்போது வண்டு போலவன்றோ திருமலையில் உட்புக்கது. இந்த ப்ரஸங்கத்தில் ஆண்டாளநுபவமும் சேர்.

## ஆண்டாளுடைய மேகவிடுதூதின் விசேஷார்த்தங்கள்

**941** நாச்சியார் திருமொழியில் எட்டாவது பதிகம் "விண்ணீலமேலாப்பு" என்பது. இதில் ஆண்டாள் மேகத்தைத் தூதுவிடுகிறாளென்பது "மேகத்தை வேங்கடக்கோன் விடுதூதில் விண்ணப்பம்" என்கிற தீகமணப் பாசுரந்

னாலும் தெளிவாகும். தூது செல்வதற்கு யோக்யதையற்றதான மேகத்தைத் தூதனுப்புதல் பொருந்துமோ? என்று ஒரு சங்கை தோன்றும். மேகஸந்தேசமென்கிற வடமொழி நூலொன்றை இயற்றிய காளிதாஸ மஹா கவியானவர் — *தூமஜ்யோதிஸ் ஸலில மருதாம்* என்கிற ச்லோகத்தில் இத்தகைய சங்கையைத் தோற்றுவித்துக் கொண்டு — "காமார்த்தா ஹி ப்ரக்ருதிக்ருபணா: சேதநாசேதநேஷு" என்று ஒருவாறு ஸமாதான முரைத்து வைத்தார். காமத்தின் மிகுதியினால் சேதந அசேதநவிவேகமின்றிக்கே யொழிந்ததென்று காட்டினாராயிற்று. இதனால், அந்த மேகத்தை அசேதநமென்றே ஸித்தாந்தம் செய்ததாகத் தேறிற்று. ஆண்டாள் தூதுவிட்ட மேகம் அசேதநமன்று. அறிவில் தலைநின்ற பரமாசாரியரையே தூதுவிட்டாள். அதாவது ஆசார்ய ஸார்வபௌமரான ஸ்வாமி எம்பெருமானாரைத் தமையே என்று உணரவேணும். இராமானுச நூற்றந்தாதியில் "குணந்திகழ் கொண்டல் இராமானுசன் எங்குலக்கொழுந்தே" என்று எம்பெருமானாரை மேகமாகக் கூறியிருப்பதுங் காண்க. (கொண்டல் — மேகம்.) *விண்ணீலமேலாப்பு என்கிற இப்பதிகத்தில் பாசுரந்தோறும் ஆண்டாள் மேகத்திற்கு இடுகிற அடைமொழிகள் எம்பெருமானார்க்கு மிகவும் பொருத்தமாயிருக்கின்றனவென்பதை கண்டு நிரூபிப்போம்.

**942** முதற்பாட்டில், * மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்! * என்றுள்ளது. மேலாப்பாவது மேற்கட்டு; விதான மெனப்படும். அது எப்படியிருக்குமென்றால் விசித்திரமான வர்ணங்கள் அமையப்பெற்றிருக்கும். ஸுதர்சந சதகத்தில் ஜ்வாலா வர்ணனத்தில் ஐந்தாவது ச்லோகம் *ச்யாமம் தாமப்ரஸ்ருத்யா த்வசநபகவத:* என்பது. அதனால் விதானமென்பது நாநாவகையான வர்ணங்கள் அமையப்பெற்றிருக்குமென்று அறியத்தக்கது. எம்பெருமானாருடையபடியும் இதுவேயாகும். *சொலலார் தமிழொரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லா அறநெறி யாவும் தெரிந்தவன்* என்று இராமானுச நூற்றந்தாதியில் அருளிச்செய்கிறபடியே எம்பெருமானார் திறத்தில் ஸகல சாஸ்த்ர விஜ்ஞானமும் நிரம்பியிருத்தலால் அதுகொண்டு நாநாவர்ணமுடைமை உணரத்தக்கது. அன்றிக்கே, மேலேயெடுத்துக்காட்டிய ஸுதர்சந சதக ச்லோகரத்நத்தில் ஸ்ரீ ஸுதர்சந ஜ்வாலையே விதானமாகச் சொல்லப்பட்டிருப்பதனால் இங்கு மேலாப்பு என்கிற சொல்லால் ஸ்ரீ ஸுதர்சநாழ்வானையே விவக்ஷிக்கவும் குறையில்லை. இராமானுச நூற்றந்தாதியில் *அடையார்கமலத் தலர்மகள் கேள்வன் கையாழியென்னும் படையோடு... இராமானுசமுனியாயின இந்நிலத்தே* என்கிற பாசுரத்தாலும், யதிராஜஸப்ததியில் *அப்ருதக்ப்ரதிபந்நயந்மயத்வை: வவ்ருதே பஞ்சபிராயுதை: முராரே:* என்ற ச்லோகத்தாலும் எம்பெருமானார் பஞ்சாயுதாழ்வார்களின் தோற்றமென்று காட்டப்பட்டது. சரித்திரவகையில், ஸ்வாமி சேஷாவதாரர் என்கிற தத்துவம் இருக்கச்செய்தேயும் ப்ரபாவ விசேஷங்களை நோக்கிப் பலபடியாகவும் உல்லேகிக்க ஔசித்ய முண்டாகையாலே பஞ்சாயுதாழ்வார்களின் தோற்றமாக உல்லேகித்ததும் ஒக்கும். *அஸ்த்ரக்ராமாக்ரேஸரம்* என்று பட்டரும் *அஸ்த்ரக்ராமஸ்ய க்ருத்ஸ்நஸ்ய ப்ரஸூதிம் யம் ப்ரசக்ஷதே, ஸோவ்யாத் ஸுதர்சநோ விச்வம்

ஆயுதை: ஷேர்ட்சாயுத:" என்று தேசிகனும் பணித்தபடியே ஆயுதத்தலைவர் திருவாழியாழ்வானேயாதலாலும் அந்தத் திருவாழியாழ்வான் (ஸுதர்சந சதகத்தில்) விதானமாக வருணிக்கப்பட்டிருப்பது கீழ் விவரிக்கப்பட்டிருத்தலாலும் இங்கு ஆண்டாள் பாசுரத்தில் மேலாப்பு என்றது உடையவர் திருவாழி யாழ்வான் தோற்றமென்று உத்ப்ரேக்ஷிக்கவுரியர் என்பதைக்காட்டுவதாகக் கொள்ளத்தகும். "கொடுத்து மேல்விதானமாய பௌவநீராரவணை" என்ற மழிசையர்கோன் பாசுரப்படியே திருவனந்தாழ்வானை விதானமாகக்கொண்டு ஸ்வாமியின் சேஷாவதாரத்வம் தெரிவிக்கப்பட்டதாகக் கொள்ளுதல் மிக நன்று.

**943** [2. மாமுத்தநிதிசொரியும் மாமுகில்காள்] எம்பெருமானாராகிற காளமேகம் நவநிதிகளைச் சொரிந்தருளிற்று. அதாவது, ஸ்வாமி திருவாய்மலர்ந்தருளின திவ்ய க்ரந்தங்கள் ஒன்பது; (1) ஸ்ரீபாஷ்யம், (2) வேதாந்த தீபம், (3) வேதாந்தஸாரம், (4) வேதார்த்த ஸங்க்ரஹம், (5) கீதாபாஷ்யம், (6) நித்யமென்கிற பகவதாராதன ப்ரயோகம், (7) சரணாகதிகத்யம், (8) ஸ்ரீரங்ககத்யம், (9) ஸ்ரீவைகுண்ட கத்யம், இவ்வொன்பது திவ்ய க்ரந்தங்களும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குச் சேமவைப்பான நிதிகளாதலால் "மாமுத்த நிதி சொரியும் மாமுகிலென்றது மிக்க பொருத்தமாயிற்று. நிதி சொரியும் என்றது நிதியான எம்பெருமானுடைய ஸ்வரூபரூப குணவிபூதிசேஷ்டிதங்களை யெல்லாம் "தாழாதே சார்ங்கமுதைத்த சரமழைபோல் சிஷ்யர்களுக்கு வர்ஷித்தவர் என்றபடியுமாம்.

**944** மூன்றும் பாட்டில் "அளியத்த மேகங்காள்!" என்பது விளி; தயைபண்ணுமியல்வுடைய மேகங்களே! என்றபடி. க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யரென்று ஸ்வாமி எம்பெருமானார்க்கே ப்ரஸித்தியாதலால் இது மிக்க பொருந்துமாகும்! ஆசார்யஹ்ருதயத்தில 'நண்ணுதார் மெய்யிலூனுளை நிர்வேதத்தோடே' என்று தொடங்கி ''தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடிபணிந்தவர்க்குமே இவையுள்ளது'' என்றருளிச்செய்தது இங்கே அநுஸந்தேயம். 'இவரடி பணிந்தவர்'—உடையவர்.

**945** நாலாம் பாட்டில் "மின்னாகத் தெழுகின்ற மேகங்காள்!" என்பது விளி; மின்னல் தோன்றப்பெறுத மேகம் அவ்வளவாக வர்ஷிக்கமாட்டாது. மின்னலுள்ளபோது கனத்தவர்ஷம் அணித்தென்று நிச்சயிக்கும்படி யிருக்கும். ஸுதர்சந சதகத்தில் "க்ருஷ்ணாம்போதஸ்ய பூஷா" என்கிற ச்லோகத்தில் "ப்ராப்தாம் ஆவேதயந்தீ உத்படாம் வ்ருஷ்டிம் சஞ்சலா" என்றதும் காண்க. ஆகவே பெய்யாத வெறும் மேகமன்றிக்கே நன்கு பெய்யும் மேகமே! என்றபடியாய் எப்போதும் அர்த்தங்களை வர்ஷித்துக்கொண்டேயிருக்கும் எம்பெருமானாரைச் சொல்லிற்றாகிறது. "ஓராண்வழியாயுபதேசித்தார் முன்னோர்" என்று மாமுனிகளருளிச்செய்தபடியே, உபதேசத்திலே ஸங்குசிதர்களான முன்னோர்களைப்போலன்றியே அதில் அபிநிவேசம் மிக்கவர் எம்பெருமானாராதலால் இது மிக்கப்பொருந்தும். அன்றியே, ஆகத்து-திருமார்பிலே, மின் எழுகின்ற - மின்னற்கொடிபோன்ற யஜ்ஞஸூத்ரம் விளங்கப்பெற்ற எம்பெருமானாரே! என்றதாகவுமாம். மதாந்தர ஸம்ந்யாஸிகளைப் போலே யஜ்ஞோபவீதத்தை அறுத்துப்போகடுகை யன்றிக்கே உபவீதிதம் மிக

லோபவீதம்மஇலங்கிய மின்னூல் (முந்நூல்) வாழி" என்கிறபடியே அந்த யஜ்ஞோபவீதம் மிக அழகாக விளங்குந்தன்மை வக்தவ்யமேயாகும். "ஸௌதாமநீஸவர்ண ஸௌவர்ண யஜ்ஞஸூத்ரம்" ஆகையாலே மின்னலாகச் சொல்லிற்று அன்றிக்கே, ஆகத்து-திருமேனியிலே, மின் எழுகின்ற-மின்னல்போல் பளபளவென்று திகழ்கின்ற காஷாயம் காட்சி தரப்பெற்ற எம்பெருமானாரே! என்றதாகவுமாம். "காஷாயேண க்ருஹீதபீதவஸநா" என்றார் தேசிகன்.

**946** ஐந்தாம்பாட்டில் "வான்கொண்டு கிளர்ந்தெழுந்த மாமுகில்காள்!" என்று விளியுள்ளது. வான் என்று பரமபதம்; அதைக் கையிலே கொண்டு கிளர்ந்தெழுந்த மேகமாம் எம்பெருமானார். இவ்விடத்தில் "ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடொறும் நைபவர்க்கு வானங்கொடுப்பது மாதவன், வல்வினையேன் மனத்தி லிகைங்கடிந்த இராமானுசன் தன்னை யெய்தினர்க்கு அத்தானங்கொடுப்பது தன்தகவென்னுஞ் சரண்கொடுத்தே" என்கிற நூற்றந்தாதிப் பாசுரம் எமது விரிவுரையோடுங் காணத்தக்கது. அன்றிக்கே, சரணாகதிகத்யத்தில் "அஸ்து தே. தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே" என்றவிடத்திற்கு ச்ருதப்ரகாசிகாசார்யர் இட்டருளின வியாக்யானத்தின்படியே, "வான்கொண்டு—பரமபதத்தை தமக்கும் தம்மடியார்க்கும் உரித்தாகப் பெற்றுக்கொண்டு. கிளர்ந்தெழுந்த எம்பெருமானாரே! என்றபடியுமாம். அன்றிக்கே, "ஸோயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம் யத்ஸம்பந்தாத் அமநுத கதம் வர்ண்யதே கூரநாத:" என்கிற சுலோகத்திலமைந்த ஐதிஹ்யத்தின்படியே கூரத்தாழ்வான் ஸம்பந்தத்தாலே தமக்குப் பரமபதம் கரஸ்தமென்று கொண்டு, கிளர்ந்தெழுந்த—பெருமகிழ்ச்சி யெய்தின எம்பெருமானாரே! என்றதாகவுமாம்.

**947** ஆறாம்பாட்டில் "சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த தண்முகில்காள்!" என்று விளியுள்ளது. ஜலம் என்கிற வடசொல் சலமெனத் திரிவது போலவே ச்சலம் என்கிற வடசொல்லும் சலமெனத் திரியும். ச்சலமாவது கபடம். யாதவப்ரகாசனுடைய கபடத்தை, கொண்டு — யாத்திரை வழியில் தெரிந்துகொண்டு, கிளர்ந்தெழுந்த—தென்திசைநோக்கிப் புறப்பட்ட ஸ்வாமியே! என்றபடி. அங்ஙனம் திருமஞ்சனக்கைங்கர்யத்தில் தேவப்பெருமாளுக்கு விடாய்தீரத் தீர்த்தமளித்ததனால் சாலக்கிணற்றில் நின்றும் தீர்த்தங்கொண்டெழுந்த தண்முகிலெனவுமாம்.

**948** ஏழாம்பாட்டில் "சங்கமாகடல் கடைந்தான் தண்முகில்காள்!" என்று விளியுள்ளது. கடல்கடைந்து அமுதங் கொண்டவனான எம்பெருமானுடைய ஸம்பந்தம் பெற்ற மேகமே! என்று அந்யாபதேசத்தில் சொன்னபடி. ஸ்வாபதேசத்தில் "மறைப்பாற் கடலைத் திருநாவின் மந்தரத்தாற்கடைந்து, துறைப்பால் படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமிர்தம், கறைப் பாம்பணைப்பள்ளியான் அன்பரீட்டங்களித்தருந்த நிறைப்பான்" என்று பிள்ளைப்பெருமாளையங்கார் (கலம்பகத்தில்—காப்பு) பணித்தபடியே மறைப்பாற்கடலைக்கடைந்து அமுதமளித்தவரான நம்மாழ்வாருடைய ஸம்பந்தம்பெற்ற எம்பெருமானாரே! என்றபடி; "பாமன்னுமாறனடி பணிந்துய்ந்தவன்—இராமானுசன். "பராங்குசபாதபக்தம் ராமாநுஜம்" என்றீரே ஸ்வாமிக்கு நிரூபகம்.

**949** எட்டாம் பாட்டில் "கார்காலத்செழுகின்ற கார்முகில்காள்!" என்று விளியுள்ளது. மழை காலத்தில் எழுகின்ற மேகமே! என்றபடி. "அவிவேக கநாந்த திங்முகே பஹுதா ஸந்ததுக்கவர்ஷிணி, பகவந் பவதுர்திநே" என்று ஆளவந்தாரருளிச்செய்த ஸம்ஸாரமழைகாலத்திலே தோன்றிய எம்பெருமானாரே! என்றபடி.

**950** ஒன்பதாம்பாட்டில் "மதயானைபோலெழுந்த" என்றதைக்கொண்டே இராமாநுச நூற்றந்தாதியில் "பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட எங்களிராமாநுச முனிவேழம்" என்று அமுதனாருளிச்செய்தார். வேழம்–யானை. இரண்டாந் திருவந்தாதியில் "பெருகுமத வேழம்" என்ற பாசுரத்தின் உள்ளுரை பொருள் காண்க. ஆக ஒன்பது பாசுரங்களிலுமுள்ள விசேஷண ஸ்வாரஸ்யத்தை நன்குநோக்குமிடத்து ஆண்டாள் எம்பெருமானாரையே மேகமாக விளித்துத் தூதுவிட்டாளென்னுமிடம் தெளிவாகுமென்பது சுருக்கமாக நிரூபிக்கப்பட்டதாயிற்று.

## உபதேச ரத்தினமாலையில் நின்றுமெடுத்த எம்பெருமானார் திருநாள் பாசுரங்கள் முதலானவை

**951** இன்றுலகீர்! சித்திரையில் ஏய்ந்த திருவாதிரைநாள்
என்றையிலு மின்றிதனுக் கேற்றமெனதான்?—"என்றவர்க்குச்
சாற்றுகின்றேன் கேண்மின் எதிராசர்தம்பிறப்பால்
நாற்றிசையும் கொண்டாடும் நாள். (27)

உலகத்தவர்களே! இந்நாள் சித்திரை மாதத்தில் பொருத்தம்பெற்ற திருவாதிரை நக்ஷத்திரம்; மற்றுமுள்ள தினங்களைக் காட்டிலும் இற்றை நாளுக்குச் சிறப்பு என்கொல்? என்று கேட்பவர்களுக்கு விடை கூறுகின்றேன்; உடையவருடைய திருவவதாரத்தினால் நாலு திசைகளிலுமுள்ளவர்கள் கொண்டாடும் நன்னாளிது.

**952** ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாட்களினும்*
வாழ்வானநாள் நமக்கு மண்ணுலகீர்!—"ஏழ்பாரு
முய்யவெதிராசருதித்தருளும் "சித்திரையில்
செய்ய திருவாதிரை. (28)

ஆழ்வார்கள் திவ்யப்ரபந்தங்களை யருளிச்செய்த மாத்திரமே; அவற்றைப் பலபடிகளாலும் வளர்த்தருளினவர் எம்பெருமானாரே யாதலாலும், இவ்விஷயத்தை அக்காலத்திலேயே "தமிழ்மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்தவிதத்தாய் இராமாநுசன்" என்பவை முதலான தனியன்களால் பூருவர்கள் வெளியிட்டிருந்ததனாலும், பெற்றவர்களைக் காட்டிலும் வளர்த்தவர்களுக்கே பெருமை பொருந்துமாதல்பற்றி இப்பாசுரம் மிகப்பொருத்தமானது.

**953** எந்தையெதிராசர் இவ்வுலகி லெங்கமக்கா
வந்துதித்த நாளென்னும் வாசியினால் —"இந்தத்
திருவாதிரைதன்னின் சீர்மைதனைநெஞ்சே!"
ஒருவாம லெப்பொழுதுமோர். (29)

ஆதிசேஷன் திருநாட்டிலிருப்பை விட்டுப் பலபலகஷ்டங்களுக்கு ஆஸ்பதமான இவ்விருள்தருமாஞாலத்திலே அவதரித்தருளினது நித்யஸம்ஸாரிகளான நம்போல்

வாரைப் பிறவிக் கடலில்நின்றும் கைகொடுத்தெடுப்பதற்காகவேயென்று அநு ஸந்திக்கவேணும்.

954 ஓராணவழியா யுபதேசித்தார் முன்னோர்
ஏரா ரெதிராச ரின்னருளால்—"பாருலகில்
ஆசையுடை யோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று
பேசி வரம்பறுத்தார் பின். (37)

"நாதமுனி முதலாம் நம் தேசிகரை" என்றருளிச் செய்தவர் எம்பெருமானாரை விசேஷித்து எடுத்துக் கூறவேண்டி இப்பாசுரமும் அருளிச்செய்கிறார். எம்பெருமானாரைப்பற்றி ஆர்த்திப் பிரபந்தத்தில் 'மாறனுரை செய்த தமிழ் மறைவளர்த்தோன் வாழியே'' என்று மாமுனிகள் தாமே அருளிச்செய்தவராதலால் அவ்வெம்பெருமானார் தமிழ்மறையை வளர்த்தருளினபிரகாரங்களில் மிகமுக்கியமானதொரு பிரகாரத்தை இப்பாசுரத்தில் அருளிச்செய்கிறார். ஸ்ரீமந்நாதமுனிகள் முதலான பூருவாசாரியர்கள் திவ்யப் பிரபந்த வியாக்கியானங்களை இட்டருளவல்லவர்களாயிருந்தும் ஒருவரும் இட்டருளவில்லை; உபதேசித்துவந்தார்களத்தனை; அப்படி உபதேசித்ததும், ஸ்ரீவைஷ்ணவர்களை ஒரு திரளாகக் கூட்டி உபதேசித்தமையில்லை. ஒரு ஆசிரியர் ஒரு சிஷ்யர்க்கு உபதேசிப்பது என்கிற முறையில் ஓராண்வழியடைவாகவே உபதேசம் நிகழ்ந்து வந்தது. எம்பெருமானார் காலம் வரையில் இங்ஙனே நடந்து வந்ததாயிற்று. இதில் குறைகண்ட எம்பெருமானார், இங்ஙனே வரம்பு இருக்கத் தகாது; இதனால் நம் ஸ்ரீவைஷ்ணவதர்சநம் ஸங்குசிதமாகிறதே யல்லது விரிவு பெறுகின்றதில்லை; இந்த வரம்பை அறுத்தேயாகவேணும்'' என்று திருவுள்ளம்பற்றி, பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று பேசி வரம்பறுத்தாராம்; அதனாலேயே திருவாய்மொழிக்கு வியாக்கியானங்கள் விசேஷமாக அவதரிக்க இடமுண்டாயிற்றென்று இப்பாசுரத்தினால் தெரிவித்தவாறு.

955 எம்பெருமானார் தரிசனமென்றேயிதற்கு*
நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார்—*அம்புவியோர்
இந்தத் தரிசனத்தை யெம்பெருமானார் வளர்த்த*
அந்தச் செயலறிகைக்கா. (38)

இப்பாட்டில் எம்பெருமானாருடைய திருவுள்ளத்தின் வைசால்யத்தை அருளிச்செய்த ப்ரஸங்கத்திலே அவ்வெம்பெருமானாருடைய திருநாமத்தையிட்டே நமது ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்தை வ்யபதேசிக்க நேர்ந்த பெருமையையும் வெளியிட வேண்டி இப்பாசுரமருளிச் செய்கிறார். கலியுகாதியில் திருவவதரித்த நம்மாழ்வாரது காலத்திற்கு முன்னமே அநாதியாக விளங்கிவருவதான இந்தத் தர்சனத்தை 'ஸ்ரீராமாநுஜதர்சனம்' என வழங்கி வருவானேன்? இத்தரிசனம் ஸ்ரீராமாநுஜரால் நூதனமாக நிருமிக்கப்பட்டதா என்ன? என்று சிலர் சங்கிப்பதுண்டு. அந்த சங்கைக்குப் பரிஹாரமும் இப்பாசுரத்தினால் செய்ததாகிறது. ஸ்ரீ ராமாநுஜ தர்சனமென்று வழங்கிவரும்படி நியமித்தருளினவர் ஸ்ரீரங்கநாதர். அப்படி அவர் நியமித்ததற்குக் காரணம் இத்தர்சனத்தை ஸ்ரீராமாநுஜர் பலபடிகளாலும் வளர்த்தருளினரென்பதுதான். திவ்யப் பிரபந்தங்களை வளர்த்தருளினது முக்கியமானது.

956 இந்த வுபதேச ரத்தின மாலைதன்னை*
சிந்தைதனில நாளும் சிந்திப்பார்*—எந்தை
எதிராச ரின்னருளுக் கென்று மிலக்காகி*
சதிராக வாழ்ந்திடுவர்தாம். (73)

எம்பெருமானார் திருவுள்ளத்திற்கு உகப்பான விஷயங்களையே தொடுத்து இயற்றியுள்ள இந்தச் சொல்மாலையைச் சிந்தையிலே அணிந்து கொள்ளுமவர்க்கு எம்பெருமானாருடைய பரமகிருபையே பேறாகுமென்று பலனருளிச்செய்து தலைக்கட்டிற்றாயிற்று. எம்பெருமானார் எழுபத்துநான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளை நியமித்தருளினவராதலால் அந்தக்கணக்கிலே எழுபத்துநான்கு பாசுரமாக இத்திவ்யப் பிரபந்தத்தை இயற்றியருள வேணுமென்று மணவாள மாமுனிகள் திருவுள்ளம் பற்றி யிருந்தாராம்; அப்போது மாமுனிகளையே தெய்வமாகக் கொண்டவொரு மஹாசார்யர் 'மன்னுயிர்காளிங்கே மணவாளமாமுனிவன்' என்கிற பாசுரத்தைப் பணித்து இந்தப் பாசுரம் உபதேசரத்தினமாலையோடு சேர்ந்தே அநுஸந்திக்கப் படுமாறு அருள்புரியவேணுமென்று பெரியபெருமாள் திருவடிகளிலே வணங்கி வழிபட்டுப் பிரார்த்திக்க அப்படியே பகவந்நியமனமாயிற்றென்று பெரியார் பணிக்கக் கேட்டிருக்கை, ஆனது பற்றியே எழுபத்துமூன்று பாட்டளவிலே தலைக்கட்டினர்.

ஸ்ரீ

## திருமலை அனந்தாழ்வான் அருளிச்செய்த

# ஸ்ரீ ராமாநுஜ சதுச்ச்லோகி

கோயில் திருமலை பெருமாள்கோயில் திருநாராயணபுரம் ஆகிய நான்கு திருப்பதிகளிலும் எம்பெருமானாருடைய வெற்றிக்குப் பல்லாண்டுபாடும் ச்லோகங்கள்.

957 அநிசம் பஜதாமநந்யபாஜாம்
சரணம்போருஹமாதரேண புஂஸாம் ।
விதரந் நியதம் விபூதிமிஷ்டாம்
ஜய ராமாநுஜ! ரங்கதாம்நி நித்யம். (1)

எம்பெருமானாரே! (உமது) திருவடித்தாமரையை அன்போடு எப்போதும் ஆச்ரயித்திருக்கின்ற அநந்யகதிகளான அடியார்களுக்கு எந்தவிபூதி இஷ்டமோ அந்த விபூதியைத் திண்ணமாக அளித்துக்கொண்டு திருவரங்கம் பெரியகோயிலிலே என்றென்றும் வாழக்கடவீர்.

958 புவி நோ விமதாந் த்வதீயஸூக்தி:
குலிசீபூய குத்ருஷ்டிபிஸ் ஸமேதாந் ।
சகலீகுருதே விபச்சிதீட்யா
ஜய ராமாநுஜ! சேஷசைலச்ருங்கே. (2)

எம்பெருமானாரே! வித்வான்கள் போற்றத்தக்க தேவரீது ஸ்ரீஸூக்தியானது வஜ்ராயுதம் போன்று இப்பூமியிலுள்ள குத்ருஷ்டிகளுட்பட நமது பிரதிட்ஷிகள்

யாவரையும் பொடிபடுத்துகின்றது. (இப்படிப்பட்ட பெருமைவாய்ந்த ஸ்ரீஸூக்திகளை யருளிய தேவரீர்) திருவேங்கட மலையுச்சியில் பல்லாண்டு பல்லாண்டாக வாழ்ந்தருள வேணும்.

959 ச்ருதிஷு ஸ்ம்ருதிஷு ப்ரமாணதத்த்வம்
க்ருபயாலோக்ய விசுத்தயா ஹி புத்த்யா ।
அகரோஸ் ஸ்வத ஏவ பாஷ்யரத்நம்
ஜய ராமாநுஜ! ஹஸ்திதாம்நி நித்யம். (3)

எம்பெருமானாரே! நிர்ஹேதுகக்ருபையினாலே ச்ருதிஸ்ம்ருதிப்ரமாண வுண்மையை யாராய்ந்து மாசற்றமதியினால் மிகச்சிறந்து ஸ்ரீபாஷ்யத்தை அநுக்ரஹித்தருளிற்று; (இப்படிப்பட்ட தேவரீர்) ஸ்ரீஹஸ்திகிரியில் நித்யஸ்ரீயாக விளங்கவேணும்.

960 ஜய மாயிமதாந்தகாரபாநோ!
ஜய பாஹ்ய ப்ரமுகாடவீக்ருசாநோ! ।
ஜய ஸம்ச்ரிதஸிந்துசீதபாநோ!
ஜய ராமாநுஜ! யாதவாத்ரிச்ருங்கே. (4)

மாயாவாதிகளின் மதங்களாகிற இருளுக்கு இரவி போன்றவரே! பாஹ்யர்கள் முதலானவர்களாகிற காட்டுக்குத் தீப்போன்றவரே! அடியார்களாகிற கடலுக்குச் சந்திரன் போன்றவரே! எம்பெருமானாரே! தேவரீர் யாதவாத்ரியில் நித்யஸ்ரீயாக நீடூழி விளங்கவேணும்.

961 ராமாநுஜசதுச்ச்லோகீம் ய: படேந்நியதஸ் ஸதா ।
ப்ராப்நுயாத் பரமாம் பக்திம் யதிராஜபதாப்ஜயோ: ॥

நித்யாநுஸந்தேயமாக நிருமிக்கப்பட்ட இந்த ராமாநுஜ சதுச்ச்லோகியை நியமத்துடன் நித்யாநுஸந்தானம் பண்ணுவார்க்கு எம்பெருமானாரது திருவடித்தாமரைகளிலே பக்திமிகுதியே கைகண்டபலனாகுமென்று பயனுரைத்துத் தலைக்கட்டிற்று.

ஸுபம்

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர்களின் திருவடித் தாமரைகளைச் சிந்தனை செய்துகொண்டு

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய
ஸ்ரீவைஷ்ணவ தாஸன் தொகுத்த
எம்பெருமானார் தொள்ளாயிரத்தறுபது திருநக்ஷத்ர பூர்த்தி
நினைவு மலரான

## ஸ்ரீராமாநுஜ பக்த ஹஸ்தாபூஷணம்

— முற்றுப் பெற்றது. —

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.